# செங்கை மாவட்ட ஊர்ப் பெயர்கள்

டாக்டர்
கரு. நாகராசன்



# செங்கை மாவட்ட ஊர்ப்பெயர்கள்

டாக்டர் கரு. நாகராசன்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
டி. டி. டி. ஐ., தரமணி, சென்னை-600 113

# BIBLIOGRAPHICAL DATA

| | |
|---|---|
| Title of the book | **Chengai M̄avatta Ūrppeyarkal** |
| Author | Dr. Karu. Nagarajan M A; Ph· D; Asst. Professor, Guru Nanak College, Madras-32. Research Scholar, International Institute of Tamil Studies, Madras-113. |
| Publisher | International Institute of Tamil Studies, Madras - 113. |
| Publication number | 108 |
| Language | Tamil |
| Edition | First |
| Date of Publication | March, 1985 |
| Paper used | White Printing |
| Size of the book | 21 × 18 cms. |
| Printing types used | 10 points |
| Number of copies printed | 1200 copies |
| Number of pages | 320+XVI=336 |
| Price | Twenty five only |
| Printer | Meeraa Press, AE-103 Anna Nagar, Madras - 600 040. |
| Binding | Paper back |
| Subject | Place Names in chengalpattu District |

டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்
இயக்குநர்
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113.

# அணிந்துரை

உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் பல நோக்குகளோடு தமிழகத்தின் பெருமையை உலகுக்கு உணர்த்துவதற்காகச் செயல் பட்டுக்கொண்டு இருக்கின்றது. அவற்றுள் ஒன்று 'ஊர்ப்பெயர் ஆய்வு'. ஊர்ப்பெயர் ஆய்வு தொடர்பாகக் குறைந்தது 20 நூல் களாவது வெளிவரவேண்டும் என்பது நிறுவனத்தின் நோக்கம். ஏற்கெனவே, 'கல்வெட்டில் ஊர்ப்பெயர்கள்', 'தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்கள்', 'இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள்' தொகுதி ஒன்று, 'இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் தொகுதி' இரண்டு என நான்கு நூல்கள் வெளிவந்துள்ளன. இன்னும் தமிழகத்தில் உள்ள மாவட்டங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒரு நூல் வெளிவரவேண்டும். இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் மூன்றாவது தொகுதியும் வெளி வரவேண்டும் இவைகள் உருவாகிக்கொண்டு இருக்கின்றன.

'செங்கற்பட்டு மாவட்ட ஊர்ப்பெயர்கள்' பற்றிய ஆய்வினை டாக்டர். கரு.நாகராசன் அவர்கள் இரண்டு ஆண்டுகளுக்கு முன்பே மேற்கொண்டார். நன்கு முயன்று உழைத்து, எந்த அளவுக்கு முடியுமோ அந்த அளவுக்குச் செய்திகள் அனைத்தை யும் தொகுத்து, வகுத்து, முறைப்படுத்தி இந்த ஆய்வினைச் செய்துள்ளார். அவருடைய அரிய முயற்சியும், நுணுகிய அறிவும், மிகுந்த திறனும் நூலின் ஒவ்வொரு பக்கமும் பேசப் படுகிறது. ஒரு மாவட்ட ஊர்ப்பெயர்கள் ஆய்வு, இது போன்று அமைந்தால் சிறப்பாக இருக்கும் என்ற உணர்வை இந்த நூல் தருகிறது. அவரைப் பாராட்டிப் போற்றி, வாழ்த்தி மகிழ்கின் றேன்.

இந்த நிறுவனப் பணிகள் அனைத்திற்கும் ஆக்கமும் ஊக்கமும் தருகின்ற மாண்புமிகு கல்வி அமைச்சர் செ. அரங்க நாயகம் அவர்களுக்கு எங்கள் நன்றி என்றும் உரித்தாகுக.

அன்புள்ள,
ச. வே. சுப்பிரமணியன்

டாக்டர் சா. ஜெகத்ரட்சகன் எம். ஏ., டி. லிட்.,
செங்கைப் பாராளுமன்ற உறுப்பினர்,
செங்கை மாவட்டத் திருக்குறள்
பேரவைக் காப்பாளர்.

# மதிப்புரை

சான்றோர்கள் பலர் தோன்றிய பெருமைக்குரியது தொண்டை நன்னாடு. அந்நாட்டின் ஒரு பகுதியாக இன்று விளங்குகிறது செங்கை மாவட்டம். இம்மாவட்டத்தின் பல் வேறு சிறப்பியல்புகளையும், இங்குள்ள ஊர்ப்பெயர்களை மையமாகக்கொண்டு ஆய்ந்து கூறியுள்ள இந்த அரிய முயற்சி போற்றுதற்குரியது.

தமிழகத்தினுடைய வரலாற்றையும், அந்தந்தப் பகுதியில் வாழ்ந்த மக்களுடைய வாழ்க்கை முறைகளையும் இன்று நாம் உணர்வதற்கு ஊர்ப் பெயர்களைப் பற்றிய ஆராய்ச்சி பெரிதும் துணை செய்கிறது. இந்த எண்ணம், உலகின் பிற பகுதியில் வாழ்ந்தவர்களிடமும் மேலோங்கியுள்ளதைப் பிறமொழிகளில் ஊர்ப்பெயர்கள் பற்றி வெளிவந்துள்ள நூல்கள் மூலம் உணர முடிகிறது. தமிழகத்தைப் பொறுத்தவரையில் இம்முயற்சி அவ் வளவாக மேற்கொள்ளப்படவில்லை என்றே கூறவேண்டும். அறிஞர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் இம்முயற்சிக்கு முன்னோடி என்றால், அறிஞர் சோ. ம. லெ. அவர்களும் வேறு சிலரும் அச்சீரிய முயற்சிப் பயணத்தில் சிறிது தூரம் சென்றுள் ளனர். எனினும், ஒவ்வொரு மாவட்ட ஊர்ப் பெயர்களைப் பற்றியும் விரிவான ஆய்வு வெளியாகவில்லை என்ற நீண்டகால மனக்குறை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் மூலம் தற் போது நீங்கி வருகிறது. அந்நிறுவனத்தின் அரிய முயற்சிக்கோர் எடுத்துக்காட்டாகச் ''செங்கை மாவட்ட ஊர்ப்பெயர்கள்'' அமைந்திருப்பது மகிழ்ச்சியையும் மன நிறைவையும் தருகிறது.

இந்நூலாசிரியர், டாக்டர் கரு. நாகராசன் அவர்கள் கடந்த பன்னிரண்டு ஆண்டு காலமாக இம்மாவட்டத்தில் வாழ்ந்து வருபவர். இம்மாவட்டத்தின் பெரும்பாலான ஊர்களை, குறிப் பாக, இலக்கிய அமைப்புகள் உள்ள எல்லா ஊர்களையுமே

வர் நன்கு அறிந்தவர். அத்துடன், பல்வேறு பொது அமைப்புகளுடனும், பொது வாழ்வில் ஈடுபட்டுள்ளவர்களுடனு நெருங்கிய தொடர்புடையவராக இந்நூலாசிரியர் வாழ்ந்து வருவதால், இம்மாவட்டத்தைப் பற்றி ஆய்வு செய்வதற்குரிய அனைத்துத் தகுதிகளும் அமைந்தவராக இவர் காணப்படுகிறார்.

"இதனை இதனான் இவன்முடிக்கும் என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல்"

என்ற குறள் நெறிக்கேற்ப இந்நூலாசிரியரிடம் தரப்பட்ட வாய்ப்பு, சரியாகப் பயன்படுத்தப் பட்டுள்ள தன்மையை இந் நூலின் ஒவ்வொரு பக்கமும் உணர்த்துகிறது

அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சில ஊர்களை மட்டுமே தேர்ந்தெடுத்து, அவ்வூர்ப் பெயர்கள் எவ்வாறு அமைந்தன என் பதைமட்டுமேஇந்நூலாசிரியர் காட்டிச் செல்லவில்லை. இம் மாவட்டத்தில் உள்ள எல்லா ஊர்ப் பெயர்களைப் பற்றியும் ஆய்ந்து,சிலபுதியசெய்திகளைத் துணிந்து எடுத்துக் காட்டுகிறார். ஏறத்தாழ மூவாயிரம் ஊர்கள் இம்மாவட்டத்தில் உள்ளன. அனைத்து ஊர்களையும் தனித்தனியாக ஆராய முற்பட்டால் நூலின் பக்கங்களும் ஆயிரக் கணக்கில் நீளும். அதனால், பொதுக்கூறு, சிறப்புக்கூறுகளின் அடிப்படையில் எல்லா ஊர் களையும் வகைப்படுத்தி இவர் மேற்கொண்டிருக்கும் ஆய்வு, ஊர்ப்பெயர்களிடையே காணப்படும் சில ஒருமைப்பாட்டுத் தன் மைகளை நாம் உணர்வதற்குத் துணை செய்கிறது.

தொடக்க காலத்தில் ஊர்ப்பெயர்கள் எவ்வாறு சூட்டப் பட்டன; காலப்போக்கில் அச்சிந்தனை எவ்வாறெல்லாம் மாற்றமடைந்துள்ளன; இன்று புதிதாகத் தோன்றும் ஊர்கள் எந்தெந்த அடிப்படையில் பெயர்களைப் பெறுகின்றன என்பன போன்ற விளக்கங்களை, "ஊர்ப்பெயர்களின் தோற்றமும் வளர்ச்சியும்" என்ற பகுதியில் விரிவாக எடுத்துக்காட்டுகிறார் ஆசிரியர்.

ஊர்ப்பெயர்களால் உணரப்படும் உண்மைகள் என்னென்ன என்பதைப் பொதுவாகவும், செங்கை மாவட்டப் ஊர்ப்பெயர் களால் உணரப்படும் செய்திகள் எவை என்பதைச் சிறப்பாகவும் 'ஊர்ப்பெயர்களால் உணரப்படுவன' என்ற பகுதியில் இவர் எடுத்துக் காட்டும் முறை, இம்மாவட்டத்தைப் பற்றிய பல செய்திகளை நாம் உணரப் பயன்படுகிறது.

செங்கை மாவட்டத்தின் பல்வேறு நிலைகளை, பூகோள அடிப்படையிலும், சரித்திர அடிப்படையிலும் ஆய்ந்து, பல துறைகளில் இம்மாவட்டம் எவ்வாறு சிறந்து விளங்கியுள்ளது என்பதைச் சான்றுகளுடன் எடுத்துக்காட்டி, இன்று இம் மாவட்டம் பெற்று வரும் வளர்ச்சிகளையும் அறிமுகப்படுத்து கிறார், 'செங்கை மாவட்டம் ஓர் அறிமுகம்' என்ற பகுதியில். தேவையான செய்திகளுடன், அறிமுகம் அளவோடு அமைகிறது.

இம்மாவட்ட ஊர்ப்பெயர்களில் அமைந்துள்ள பொதுக் கூறுகளையும், சிறப்புக்கூறுகளையும் வகைப்படுத்தி, அடுத் தடுத்த இரண்டு பகுதிகளில் இவர் எடுத்துக்காட்டும் முயற்சியே அரிய முயற்சி என்று கூற வேண்டும். பல்வேறு ஊர்ப்பெயர் களின் உண்மை வடிவங்களையும், அப்பெயரால் உணரப்படும் அரிய செய்திகளையும் இவ்விரு பகுதிகளிலும் விரிவாக எடுத் துக் காட்டுகிறார் ஆசிரியர். ஊர்ப்பெயர்களை வகைப்படுத்திய விதமும், உண்மை கண்டு, காட்டிய திறமும் பாராட்டிற்குரியன.

தனித்தனிப் பெயர்களைப் பெற்றுள்ள ஊர்களையும் இவர்விட்டுவைக்கவில்லை. அவ்வூர்களின் பெயர்கள் எவ்வாறு அமைந்துள்ளன என்பதையும் ஓர் தனிப் பகுதியில் ஆய்ந்து கூறுகிறார்.

சில ஊர்ப்பெயர்களைப் பற்றிய இவரது ஆய்வு சிலருக்குப் புதுமையாகத் தோன்றலாம்; சிலர் தாம் எதிர்பார்த்தவாறு இல் லையே என்று ஆதங்கப்படலாம். மற்றவர்களது எதிர்பார்ப் பைப் போலவே ஆய்வுகள் அமைய வேண்டும் என்பது கட்டாயமல்ல. ஒவ்வொருவரின் தனிப்பட்ட சிந்தனைப் போக் கிற்கும் ஏற்ப ஆய்வின் போக்குகளும் வேறுபடவே செய்யும். உண்மைகாண முற்படும் ஆர்வமும், அவற்றுக்கான உழைப்பும் போற்றப்பட வேண்டும். அவ்வகையில், இந்நூலாசிரியர், டாக்டர் கரு. நாகராசன் அவர்களைப் பெரிதும் போற்றுகிறேன்.

இதுபோன்ற அரிய நூல்கள் பலவற்றை இவர் மேலும் படைத்து, நாட்டுக்கும் மொழிக்கும் நற்றொண்டுகள் புரிய வேண்டும் என்பதுவே என் பேரவா.

இன்றைய நிலையில், தூய தமிழ்ப் பணியைத் தொடர்ந்து செய்து வரும் பெருமை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திற்கு உண்டு. அப்பணிகளுக்கெல்லாம் மூலகாரணமான, நிறுவன இயக்குநர், டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் அவர்களை வணங்கிப் பாராட்டுவதும் என் கடமை.

அன்புடன்,

சா. ஜெகத்ரட்சகன்.

# என்னுரை

நான் பிறந்து வளர்ந்தது இராமனாதபுரம் மாவட்டமாக இருந்தாலும், கடந்த பதினான்கு ஆண்டுகாலமாக நான் வாழ்ந்து வருவது செங்கை மாவட்டத்தில். நான் தமிழ்ப்பணி யாற்றியதும், இன்று வரை இடையறாது இலக்கியப் பணிகளை ஆற்றிவருவதும் இந்த மாவடடத்தில் தான். இம்மாவட்டத்தில் உள்ள இலக்கிய அமைப்புகள் பலவற்றில் என் பாதச்சுவடுகள் பதிந்துள்ளன. இங்கு வாழ்த்துவரும் பல்வேறு துறையைச் சார்ந்த அறிஞர்களும் என் உள்ளத்துக்கு உரமூட்டியுள்ளார்கள். சுருங்கக் கூறுவதெனில், அறிவுப் பூர்வமாக என்னை ஆளாக்கிய பெருமை இம்மாவட்டத்திற்கு உண்டு. அத்தகைய மாவட்டத்திற்குச் செலுத்தும் நன்றியாகவே, இம்மாவட்ட ஊர்ப் பெயர்கள் பற்றிய ஆய்வை மேற்கொண்டுள்ளேன்

ஊர்ப்பெயர்களைப்பற்றி ஆய்வதால் பல்வேறு உண்மைகளை உணர முடியும் என்ற உணர்வைச் 'செங்கை மாவட்ட ஊர்ப்பெயர்கள்' ஊட்டியுள்ளது. காலந்தோறும் இம்மாவட்டம் பெற்றுள்ள மாற்றங்களையும், வளர்ச்சிகளையும் ஊர்ப்பெயர்களால் நன்கு உணரமுடிகிறது. இப்பகுதியில் வாழ்ந்துள்ள மக்களின் மனநிலை. மற்றும் சமுதாய நிலைகளையும் ஊர்ப் பெயர்கள் எடுத்துக்காட்டுகின்றன.

ஊர்ப்பெயர்கள் தொடர்பாக, இதற்கு முன்பு வெளியாகியுள்ள தமிழ் நூல்களையும், சில ஆங்கிலநூல்களையும் படித்துணர்ந்த பின்பே இந்நூல் எழுதப்பட்டுள்ளது எனவே, முந்து நூலாசிரியர்களின் சில அடிப்படைக்கோட்பாடுகளும் இவ் ஆய்விற்குப் பயன் பட்டுள்ளன.

இம்மாவட்டத்தில் உள்ள அனைத்து ஊர்ப்பெயர்களையுமே ஆராயவேண்டும் என்பது என் பேரவா. எனவே, பலவாறாகப் பகுத்துக்கொண்டு ஊர்ப்பெயர்களை வகைப்படுத்தி அவ்வடிப் படையில் ஆய்ந்து கூறியுள்ளேன். ஒவ்வொரு ஊரைப்பற்றியும், தலபுராணம் போன்று பொதுச் செய்திகளைக் கூறுவது இவ்

ஆய்வின் நோக்கமாகக் கொள்ளவில்லை. எந்த அடிப்படையில் அவ்வூர்ப்பெயர் அமைந்துள்ளது என்பதையும், அவ்வூர்ப் பெயரின் உண்மை வடிவம் எதுவாக இருக்கும் என்பதையும் ஆய்ந்து கூறுவதே இவ்ஆய்வின் நோக்கம்.

சில ஊர்ப்பெயர்களின் மூலவடிவம் பலவாறாகக் கூறப்படு கின்றன. எனினும், அவ்வூரின் அமைவிடம், அவ்வூர் தோன்றிய சூழல், ஊர்ப்பெயருக்கான பொருத்தமான காரணம் போன்ற அடிப்படைகளில் சிந்தித்து உணர்ந்தே மூல வடிவத்தைக் காண வேண்டியுள்ளது. 'ஒரகடம்' என்று இன்று கூறப்படும் ஒருஊரின் பழைய வடிவம் 'உரோடகம்' என்றும், அவ்வூரில் சங்கப்புலவர் ஒருவர் வாழ்ந்தார் என்றும் கூறப்படுகிறது. உரோடகம் என்ற சொல்லுக்குத் தெளிவான பொருள் புலப்படாதிருப்பதுடன், இம்மாவட்டத்தில் ஒரகடம் என்ற பெயரில் உள்ள மூன்று ஊர் களுக்குமே மூலவடிவம் உரோடகம் தானா என்ற ஐயத்தை யும், மூன்று ஊர்களில் எங்கு சங்கப்புலவர் வாழ்ந்தார் என்ற சங்கடத்தையும் நாம் உண்டாக்கிக் கொள்ள வேண்டி யுள்ளது. எனவேதான், ஒரகடம் என்பதன் பழைய வடிவம் எதுவாக இருக்கும் என்று அறிவிற்குப் பொருந்துமாறு ஆய்ந்து கூறப்பட்டுள்ளது. இந்நிலை இன்னும் சில ஊர்களுக்கும் பொருந்தும்.

சில ஊர்ப்பெயர்கள் இடைக்காலத்தில் பலவாறாகத் திரிந்துள்ளன. வேறு சில ஊர்களின் பெயர்களுக்கு வேறுபட்ட விளக்கங்கள் இன்று தரப்படுகின்றன. சில செவிவழிச்செய்தி களின் அடிப்படையிலும் ஊர்ப்பெயர்களுக்கான காரணங்களை ஊகம் செய்து உரைப்போர் உண்டு. இந்நிலைகளைக்கடந்து, இம்மாவட்டத்தின் பல்வேறு அடிப்படைத்தன்மைகளை மனத்துட்கொண்டே இவ்ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

''எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப(து) அறிவு''

என்ற திருக்குறள் நெறியே இவ்ஆய்வின் அடிப்படை எனலாம்

அறிஞர் ரா.பி சேதுப்பிள்ளை, அறிஞர் சோ. ம. லெ போன்றவர்கள் இம்மாவட்ட ஊர்ப்பெயர்களில் சிலவற்றைப் பற்றி ஏற்கெனவே ஆய்ந்து கூறியுள்ளனர். அவர்கள் சிந்தனை களில் ஏற்புடையதாகப் பட்டவைகள் ஏற்றுக் கொள்ளப்பட்டுள் ளன; பொருந்துமாறு அமையாதவைகள் மறுக்கப்பட்டுள்ளன. எனினும், ஏற்பு, மறுப்பு யாவும் தக்க காரணங்களின் அடிப்

படையிலேயே அமைந்துள்ளன. எனவே, நாம் எதிர்பார்த்த வாறு ஆய்வு அமையவில்லையே என்று எண்ணுவோர், உண்மை காண முற்பட்டுள்ள முயற்சியை உணர்ந்து போற்றுவது கடமை யாகும்.

ஊர்ப்பெயரின் உண்மை வடிவம் பொருளுடையதாகவும், அவ்வூர் அமைந்துள்ள சூழலுக்குப் பொருத்தமுடையதாகவுமே உறுதியாக அமைந்திருக்கும். ஆனால், இன்று வழங்கப்படும் நிலையில் சில ஊர்ப்பெயர்களின் உண்மை வடிவம் பொருளு டையதாகவோ, சூழலுக்குப் பொருத்தமுடையதாகவே காணப் படவில்லை. அந்நிலையில், அதன் உண்மை வடிவம் வேறாகவே இருக்க வேண்டும் என்ற முடிபிற்கே வரவேண்டியுள்ளது. அம் முடிபின் அடிப்படையிலும் சில ஊர்ப்பெயர்களின் உண்மை வடி வங்கள் ஆய்ந்து கூறப்பட்டுள்ளன.

மானாமதி என்று இன்று அழைக்கப்படும் ஊரின் பழைய வடிவம் வானவன் மாதேவி மங்கலம் என்று கூறப்படுகிறது. இவ் விளக்கம் மானாமதி என்று பெயர் பெற்றுள்ள எல்லா ஊர் களுக்குமே பொருந்தும் என்று கூறமுடியாது. குறிப்பிட்ட ஓர் ஊருக்கு மட்டுமென்றால் பொருந்துவதாகக் கூறமுடியும். எனவே, மானாமதி என்ற ஊரின் பழைய வடிவம் வேறாகவே இருக்க வேண்டும்; அவ்வடிவம் எல்லா மானாமதிக்கும் ஏற்புடைத்தாக அமையவேண்டும். இவ்வடிப்படையிலும் சில ஊர்ப்பெயர்கள் ஆராயப்பட்டுள்ளன.

ஊர்ப்பெயர்களில் அமைந்துள்ள பொதுக்கூறு, சிறப்புக்கூறு களே அவ்வூர்களைப் பற்றிய பல்வேறு செய்திகளையும் உணர்த்து கின்றன. எனவே, அந்த அடிப்படைகளிலேயே பெரும்பாலான ஊர்ப்பெயர்கள் ஆய்ந்து கூறப்பட்டுள்ளன. அதிலும், உட்பிரிவு கள் என்ற நிலையில் பல்வேறு பகுதிகளில், இம்மாவட்ட ஊர்ப் பெயர்கள் விரிவாக ஆராயப்பட்டுள்ளன. அப்பகுதிகளில் அடங் காத சில ஊர்களும் உண்டு. அவைகள் 'தனிக்கூறுடைய ஊர் கள்' என்ற தனிப்பகுதியில் ஆய்ந்து கூறப்பட்டுள்ளன. மொத்தத் தில், இம்மாவட்ட ஊர்ப்பெயர்கள் அனைத்துமே இந்நூலில் ஆய்விற்குட்பட்டுள்ளன. வருவாய்த்துறைக் குறிப்பில் இடம் பெறாத சில புதிய ஊர்கள் வேண்டுமானால் விடுபட்டிருக்க வாய்ப்புண்டு.

இம்மாவட்டத்தைப் பற்றிய சில பொதுவான செய்திகள் 'செங்கை மாவட்டம் - ஓர் அறிமுகம்' என்ற பகுதியில் சுருக்க

மாகத் தரப்பட்டுள்ளன. ஊர்ப்பெயர் ஆய்விற்குத் தேவையான செய்திகள் என்ற நிலையிலேயே அவை எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. அங்கு எடுத்துக்காட்டப்பட்ட புள்ளிவிவரங்கள், பெரும்பாலும், வருவாய்த் துறையினரின் மூலம் கேட்டறிந்தே குறிப்பிடப்பட்டுள்ளன. அச்செய்திகளில் பெரும்பாலும் திருத்தம் இருக்க வாய்ப்பு இல்லை. ஆனால், இம்மாவட்டத்தில் 18 சட்டப் பேரவைத் தொகுதிகள் இருப்பதாகக் குறிப்பிடப்பட்டுள்ள செய்தி மட்டும் திருத்தத்திற்குரியதாக அமைந்து விட்டது. கடம்பத்தூர் தொகுதி என்பது பிரிக்கப்பட்டு, பிற தொகுதிகளுடன் இணைக்கப்பட்டு விட்டதால் தற்போது 17 சட்டப் பேரவைத் தொகுதிகள் மட்டுமே உள்ளன என்று தெரிய வருகிறது.

அரசியல் தலைவர்கள் என்ற நிலையில், ஆட்சிப் பொறுப் பேற்ற அமைச்சர்களின் பெயர்கள் மட்டுமே குறிப்பிடப்பட்டுள்ளன. அத்துறையில் செல்வாக்குப் பெற்ற பலர் இம்மாவட்டத்தில் வாழ்ந்துள்ளனர். விரித்துக் கூறினால் பெருகும். அது போன்றே இலக்கியப் படைப்பாளர்களும்.

இம்மாவட்டத்தில்உள்ள ஊர்ப்பெயர்களைப்பற்றிய ஆய்வே இங்கு முதன்மை பெறுவதால் பிற செய்திகள் அத்துணை இன்றியமையாமையினைப் பெறவில்லை எனலாம். முதன்மைக்குரிய பகுதி முழுமையாக ஆராயப்பட்டுள்ளது.

இந்நூல் உருவாவதற்கு மட்டுமல்லாது, நான் ஓர் ஆய்வாளனாக உருவாவதற்கே மூல காரணமாக இருந்தவர்; இருந்து வருபவர், பேராசிரியப் பெருந்தகை டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் அவர்கள் என் வளர்ச்சியில் பெரிதும் அக்கறை கொண்டுள்ள அவர்கள் இந்நூலுக்கும் அணிந்துரை வழங்கி வாழ்த்தியுள்ளார்கள். அவர்களுக்கு என் அன்பான நன்றியைக் காணிக்கையாக்குகிறேன்.

இம்மாவட்டத்தைச் சேர்ந்த இரண்டு பாராளுமன்றத் தொகுதிகளில் செங்கைத் தொகுதியும் ஒன்று. அத்தொகுதிப் பாராளுமன்ற உறுப்பினர், டாக்டர் சா. ஜெகத்ரட்சகன் அவர்கள், அரசியல் குளத்தில் பூத்த இலக்கியத் தாமரை. ஓர் இலக்கியவாதி என்ற நிலையில் இந்நூலை ஆய்ந்து, திறனாய்வு நோக்குடன் மதிப்புரை தந்துள்ள அவர்களுக்கும் என் இனிய நன்றி.

செங்கை மாவட்ட ஊர்ப்பெயர்கள் பற்றிய பல குறிப்பு களைத் தந்து உதவிய, வட்டாட்சியர்கள் திரு. பா. சு. மணி அவர்கள், திரு. ஜே. சுப்பிரமணியன் அவர்கள், திரு. கோமதி நாயகம் அவர்கள், துணை வட்டாட்சியா திரு. நடராசன் அவர் கள் ஆகியோருக்குப் பெரிதும் நன்றிக் கடப்பாடுடையேன்.

ஊர்ப்பெயர்களை வகைப்படுத்துவதில் எனக்குப் பெரிதும் துணை செய்த, எங்கள் கல்லூரி வணிகவியல் துணைப் பேராசி ரியர் திரு ம.வெ. அருளாளன் அவர்களுக்கும் என் இனிய நன்றி.

குறிப்பிட்ட காலத்தில் இந்நூலை உருவாக்கித் தந்த மீரா பிரஸ் அச்சகத்தார்க்கு என் பணிவான நன்றியை உரித்தாக்கு கின்றேன்.

அன்புள்ள,
கரு. நாகராசன்.

# உள்ளே...

# ஊர்ப்பெயர்களின் தோற்றமும் வளர்ச்சியும்

மனிதஇன வரலாற்றிற்கும் ஊர்ப்பெயர்களின் தோற்றத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. காட்டு மிராண்டிகளாய் மனிதன் அலைந்து கொண்டிருந்த காலத்தில் அவனுக்கென்று நிலையான உறைவிடங்கள் இருந்திருக்க முடியாது. எங்கெங்கெல்லாம் தங்க முடிகிறதோ அங்கெல்லாம் அவன் தங்கியிருப்பான். மனிதனின் தொடக்ககால நோக்கம் எப்படியாவது வயிற்றை நிரப்புவது என்ற அளவோடுதான் இருந்திருக்கவேண்டும். எங்கெல்லாம் உணவு கிடைத்திருக்குமோ அங்கெல்லாம் அவன் வாழ்ந்திருப்பான். வாழ்க்கைப் போராட்டத்தில் இயற்கையின் தாக்குதல்களுக்கும் விலங்குகளைப் போன்ற பிறவகை உயிரினங்களின் துன்புறுத்தலுக்கும் பல நிலைகளில் மனிதன் ஆளாகியிருக்க வேண்டும்.

தனக்கென்று உறைவிடங்களை அமைத்துக் கொள்ள வேண்டும் என்று மனிதன் முற்பட்டதற்கு மூலகாரணம் அவனுக்குப் பல நிலைகளில் ஏற்பட்ட இடையூறுகளே எனலாம். தேவையின் அடிப்படையிலேயே உற்பத்திகள் அமைகின்றன என்ற பொதுவான கோட்பாடு ஆங்காங்கு அலைந்து கொண்டிருந்த மனிதன் ஓரிடத்தில் நிலையாகத் தங்குவதற்கு உறைவிடங்களை அமைத்த நிலைமைக்கும் பொருந்தும். தொடக்க காலத்தில் இயற்கையாக அமைந்திருந்த குகைகள், பொந்துகளிலேயே மனிதன் தங்கியிருப்பான். காலப்போக்கில் அவனுக்குக் கிடைத்த அனுபவங்கள், பெற்ற ஆற்றல்களால் சுயமுயற்சியில் உறைவிடங்களைத் தோற்றுவித்திருக்கவேண்டும். மனித இன வரலாற்றில் இரண்டாவது நிலையாகவும் வளர்ச்சிப் போக்கில் முதல் நிலையாகவும் இதனைக் குறிப்பிடலாம்.

ஒவ்வொரு மனிதனும் உறைவிடங்களை உருவாக்கவேண்டும் என்று எண்ணிய, அந்நிலையிலும்கூட அவன் தனித்தனியாகவே

வாழ்ந்திருப்பான். அதனால் இயற்கையுடன் போராடிவென்று, தான் வாழும் இடத்திலேயே வாழ்வதற்கு வேண்டிய எல்லா வாய்ப்புகளையும் உருவாக்கக் கூடிய ஆற்றல் அவனிடம் அமைய வில்லை. அதனால் அப்படிப்பட்ட வாய்ப்புகள் எங்கெல்லாம் கிடைக்கிறதோ அங்கெல்லாம் உறைவிடங்களை மாற்றியமைத் துக் கொண்டே சென்றிருப்பான். நாடோடி வாழ்க்கை என்று அந்நிலையைக் கூறலாம்.

காலப்போக்கில் மேலும் பல புதிய அனுபவங்களையும் பெற்ற மனிதன் இயற்கையை எதிர்த்துப் போராடி வாழ முற் பட்டான். தொடக்க காலத்தில இவன கண்டு அஞ்சி ஓடிய விலங்குகளையும் பிறஉயிரினங்களயும் அடக்கி ஆள முடியும் என்ற நம்பிக்கை அவனுக்குப் பின்பு ஏற்படுகிறது. இந்நம்பிக்கை ஏற்படுவதற்கு மூல காரணம் மனிதன் ஒருவனோடு மற்றவன் உறவாடி வாழ்ந்ததுவேயாகும். பிரிந்து கிடந்த மனித ஆற்றல ஒன்று சேரும் போதுதான் எவ்வித எதிர்ப்பையும் வென்று வாழ முடியும் என்ற நம்பிக்கை ஒளி அவர்கள் வாழ்வில் வீசத் தொடங்குகிறது. தனித்தனியாக வாழ்ந்தபோது வாழ்வதற் கேற்ற சூழல் எங்கே கிடைக்கும் என்று அலைந்த மனிதன் கூடி வாழத் தலைப்பட்ட போது எவ்வித இடத்திலும் வாழ்க்கைச் சூழலை அமைத்துக் கொள்ள முடியும் என்று எண்ணினான். மனித உள்ளங்கள் பண்பட்டதால் ஏற்பட்ட நாகரிகத்தின் விளைவு என்று இதனைக் குறிப்பிடலாம்.

தனித்தனியாக வாழ்ந்த மனிதன் சேர்ந்து வாழ முற்பட்ட போது தான் நிலையான உறை விடங்களையும் அமைக்கத் தொடங்கினான். அப்படி அவனால் அமைக்கப்பட்ட பல உறை விடங்களின் தொகுப்பே ஊர்கள் என்று உருப்பெறத் தொடங் கின. மனித இன வரலாற்றில் மூன்றாவது நிலையாகவும், வளர்ச்சிப் போக்கில் இரண்டாவது நிலையாகவும் ஊர்களின் தோற்றங்களைக் குறிப்பிடலாம்.

"மனித இனம் ஓரிடத்தில் நிலைத்து வாழத் தொடங்கிய காலத்திலேயே இடப்பெயர்களும் தோற்றுவிக்கப் பெற்றிருத்தல் வேண்டும்."[1] ஆனால் அந்நிலையிலேயே ஊர்களுக்குப் பெயர்

---

1. Place Names of Coimbatore District, k. Nachimuthu

களைச் சூட்டியிருப்பர் என்று எண்ணமுடியாது. ஆங்காங்கு சிற்சில உறைவிடங்கள் சேர்ந்து ஒன்றாக இருந்திருக்கும். தனித் தனியாக எதனையும் சாதித்து வந்தவர்கள் ஒன்றுபடுவதால் பெரிய விளைவுகளை ஏற்படுத்த முடியும் என்ற எண்ணத்தை பல உறைவிடங்கள் ஒருங்கிணைந்து அமைந்த ஊர்கள் அன்றைய மனிதர்களுக்கு உணர்த்தியிருக்கும்.

**ஊர்ப்பெயர்களின் தோற்றம் :**

சிற்சில உறைவிடங்கள் சேர்ந்து ஊர்கள் உருவாகிய நிலை படிப்படியாக வளர்ச்சியடைந்திருக்க வேண்டும். அதன் விளைவால் ஆங்காங்கு பல ஊர்கள் தோன்றியிருக்கும். தனிமனிதர்கள் தம் விருப்பப்படி உறைவிடங்களை அமைத்து ஆங்காங்கு வாழ்ந்த நிலை மாறி, பலரும் ஒன்று சேர்ந்து வாழ்ந்ததுபோல், ஆங்காங்குள்ள பல ஊர்களும் தங்களுக்குள் தொடர்புகளை ஏற்படுத்திக் கொண்டு ஒன்றுகூடி வாழ முற்பட்டிருக்க வேண்டும். மனித நாகரிகத்தின் வளர்ச்சியில் இரண்டாவது கட்டமாக இதனைக் குறிப்பிடலாம். அந்நிலையிலேயே ஊர்களுக்குப் பெயர் சூட்டியாக வேண்டிய கட்டாயம் அன்றைய மனிதர்களுக்கு ஏற்பட்டுள்ளது.

ஆங்காங்கு பல ஊர்கள் காணப்பட்டதால் அவ்வூர்களை வேறுபடுத்தியுணர வேண்டிய கட்டாயம் நிச்சயம் அவர்களுக்கு நேர்ந்திருக்கும். குறிப்பிட்ட சில ஊரைக் குறிப்பிடுவது எப்படி என்ற சிக்கல் அவர்களிடம் தோன்றியிருக்கும். அச்சிக்கலுக்குத் தீர்வு காணவேண்டும் என்ற முயற்சியின் பயனாகவே ஊர்ப் பெயர்கள் தோன்றியிருக்க வேண்டும்.

அன்றைய மனிதனுக்கு மொழியறிவோ அன்றி இயற்கையைப் பற்றிய தெளிவான சிந்தனைகளோ இருந்திருக்கமுடியாது. எனவே எவ்வித அடிப்படைக் காரணமும் இல்லாமல், தான் உணர்ந்தவாறு ஊர்களுக்குப் பெயர் சூட்டியிருப்பான். அவ்வாறு சூட்டப்பட்ட பெயர்கள் அனைத்தும் பெரும்பாலும் இடுகுறிப் பெயர்களாகவே இருந்திருக்க வேண்டும்.

"ஆரம்ப காலத்தில் எவ்விதக் காரணமும் இன்றிச் சில அனுமானக் குறியீடுகளால் அறியத் தொடங்கிய பெயர்கள், காலம் செல்லச் செல்ல மொழி வளர்ச்சியாலும் நாகரிக வளர்ச்சியாலும் தெளிவு பெற்றுச் செப்பனிட்ட ஒரு வடிவத்தைப் பெற்றது. மொழி, இனம், நாடு இவற்றின் மாறுபாட்டிற்கு

ஏற்ப ஒரு குறிப்பிட்ட பொருள் வேறு வேறு பெயர்கள் பெறுதல் உண்டு.[1] அனுமானக் குறியீடுகள் பின்பு காரணப் பெயர் களாகக் காட்டப்பட்டுள்ளன. ஒரு சில ஊர்ப்பெயர்கள் அன்றைய மனிதன் உணர்ந்த காரணத்தின் அடிப்படையிலும் தோன்றியிருக்க வாய்ப்பு உண்டு. மொழியறிவு இன்மையால் அக்காரணமும் கூட அம்மனிதர்களது உள்ளத்து உணர்ச்சி வெளிப்பாடாகவே அமைந்திருக்கும். மொழியறிவுக் கண் கொண்டு நோக்குவோர்க்கு அப்பெயர்களும் கூட இடுகுறிப் பெயர்களாகவே காணப்படும்.

தமிழில் உள்ள பெயர்ச் சொற்களை இடுகுறிப் பெயர், காரணப் பெயர் என்று வகைப்படுத்துவர் இலக்கண நூலார். இவ்விரு பெயர்களிலும் இடுகுறிப்பெயர்களே காலத்தால் முந் தியவை. மொழியறிவு, இலக்கண அறிவெல்லாம் தோன்று வதற்கு முன்பிருந்தே தொன்று தொட்டு வழங்கப் படும் பெயர் கள் இடுகுறிப் பெயர்கள். அவ்விடுகுறிப் பெயருடன் புதிது புதி தான காரணப் பெயர்கள் இன்று படைக்கப்படுகின்றன. நீர் என்ற இடுகுறிப் பெயருடன் தண்மை, வெம்மை என்ற காரணப் பெயர்களைச் சேர்த்துத் தண்ணீர், வெந்நீர் என்ற சொற் களைப் படைத்துள்ளனர். இயற்கைக் கூறுபாடுகளையுணர்த்தும் சொற்கள் யாவும் இடுகுறிப்பெயர்களாகவே உள்ளன. இன்று அச்சொற்களில் சில காரணப் பெயர்களாகக் காட்டப்படு கின்றன. ஒருவேளை இன்று நாம் இடுகுறிப் பெயர்களாகக் கருதும் பெயர்களும் கூட அன்று ஏம்தனும் ஒரு காரணத்தின் அடிப்படையில் தோன்றியிருக்கலாம். ஊர்ப்பெயர்களாக அன்று அமைந்த இடுகுறிப் பெயர்களுக்கும் இந்நிலை பொருந்தும்.

**வளர்ச்சி நிலைகள்:**

மனித சமுதாயம் காலந்தோறும் வளர்ச்சி பெற்று வருகிறது. அவ்வப்போது பெற்ற அனுபவம், சிந்தனைத் தெளிவு, மொழி யைப் பயன்படுத்திப் பெற்ற அறிவு நலம் ஆகியவை வாழ்வில் பல நிலைகளில் மனிதனுக்கு நலங்களை விளைவித்துள்ளன. மனிதனது வாழ்வு செப்பனிடப்பட்டது போலவே அவன் பேசிய மொழியும் செப்பமடைந்தது. அதனால் வாழ்ந்த ஊர்களுக்கும்

---

1. சுசீந்திரம் கல்வெட்டுகளில் பெயராய்வு:மா. நயினார் பக். 28

செப்பமடைந்த பெயர்களைச் சூட்டியுள்ளான். அந்நிலையிலும் கூடப் பெரும்பாலும் இடுகுறிப் பெயர்களாகவே ஊர்களுக்குச் சூட்டப்பட்டாலும் அவ்வூர்ப் பெயர்கள் மொழியால் உச்சரிக்கப் பட்டமையால் இலக்கிய, இலக்கணங்களில் நிலைத்த இடம் பெற்றுவிட்டன. தமிழக ஊர்ப்பெயர்களைப் பற்றிய ஆய்வுப் பயணம் இந்நிலையிலிருந்தே தொடங்குகிறது.

தமிழ் மொழியில் இன்றுள்ள நூல்களில் காலத்தால் பழமை யானது தொல்காப்பியம். அவ்விலக்கண நூலிலேயே ஊர், தேயம், பதி ஆகிய சொற்களின் வழக்கைக் காணமுடிகிறது.

"ஊரும் பெயரும் உடைத்தொழில் கருவியும்
யாருஞ் சார்த்தி அவையவை பெறுமே"[1]

என்ற மரபியல் நூற்பாவில் யாவர்க்கும் உரியன எவையென்று கூறுமிடத்து ஊர், இயற்பெயர், சிறப்புப் பெயர், தத்தம் தொழி லுக்கேற்ற கருவி ஆகியன எல்லாரையும் சார்த்தி வரப்பெறும் என்று கூறுகிறார் தொல்காப்பியர். எல்லோருக்கும் உரியன என்று குறிப்பிடும் அவர் முதலில் ஊரைக் குறிப்பிடுவதிலிருந்து ஊர் என்ற பெயர் அந்நாளிலேயே பெருவழக்காக இருந்துள்ளது என்பதனையும், எல்லோருமே ஏதேனும் ஓர் ஊரில் வாழ்ந்துள் ளார்கள் என்பதனையும் உணரமுடிகிறது.

ஊர் என்ற சொல் இடுகுறிப் பெயரா அன்றி காரணப் பெயரா என்பது தெளிவாகப் புலப்படவில்லை. பொதுவாக இடு குறிப் பெயர் என்றே பலரும் கருதுகின்றனர். ஆனால் மொழி ஞாயிறு. தேவநேயப் பாவாணர் அவர்கள் ஊர், நகர் என்ப தெல்லாம் காரணப் பெயர்கள் என்று எடுத்துக் காட்டுகின்றார். ஊர்தல் என்ற தொழில் பெயரின் அடிப்படையில் ஊர் என்ற சொல்லும் நகர்தல் என்ற தொழில் பெயரின் அடிப்படையில் நகர் என்பதும் அமைந்திருக்க வேண்டும் என்பது பொதுவான கருத்து. டல நிலைகளிலும் வசதிகள் குறைந்த ஊரானது மெதுவாகவே வளர்ச்சியடையுமாதலால் அவ்வளர்ச்சி ஊர்ந்து செல்வது போலவும், வாய்ப்பு வசதியின் மிகுந்து காணப்படும் நகர்ப்புறங் களின் வளர்ச்சி, ஊர்களைக்காட்டிலும் விரைவாக அமையுமாத

---

1. தொல்காப்பியம், மரபியல்-நூற்பா: 75

லால் அது நகர்ந்து செல்வது போலவும் அமையும் என்றும் கொள்ளலாம்.

இக் கருத்தை உறுதிப்படுத்துவது போலவே இன்று ஊர்களில் புதிய வீடுகள் கட்டும் பணிகளோ, பிறவளர்ச்சிப் பணிகளோ மெதுவாகத்தான் நடைபெற்று வருகின்றன. ஆனால் நகர்ப் புறங்களில் பல்வேறு வளர்ச்சிப் பணிகளும், நகரின் விரிவாக்கப் பணிகளும் விரைந்து நடைபெறுவதைக் காண முடிகிறது. நகை என்றால் விளங்குதல் என்று பொருள். அச் சொல்லடியாக நகர் என்பதும், பொருந்துதல் என்ற பொருள் தரும் உரு என்பதன் அடிப்படையில் ஊர் என்பதும் அமைந்தவை என்பது பாவாணர் கருத்து. ஊர், நகர் என்ற பெயர்களுக்குப் பாவாணர் தரும் விளக்கங்கள் நடைமுறை யிலும் பொருந்துமாறே அமைந்துள்ளன.

இந்நிலையில் வேறோர் சிக்கலும் தோன்றுகிறது. ஊரையும் நகரையும் இன்று நாம் வேறுபடுத்திக் காணமுடிவதால் இப் பெயர்களுக்கிடையில் உள்ள பொருள் வேறுபாட்டையும் பகுத்துக் காணமுடிகிறது. ஆனால் தொல்காப்பியம் இயற்றப் பட்ட காலத்தில் இவ்வேறுபாடு இருந்திருக்க முடியாது என்று தான் கூறவேண்டும். இன்று நகர் என்று நாம் கருதுவதும் கூட அன்று ஊர் என்றே உரைக்கப்பட்டுள்ளது. அதனால் தான் இங்கு எடுத்துக்காட்டப்பட்ட மரபியல் நூற்பாவில் ஊர் என்ற சொல்லுக்கு நகர் என்று உரையாசிரியர்கள் பொருள் எழுதியுள் ளார்கள். நகர் என்பதும் ஊர் என்பதும் ஒன்றாகவே அன்று கருதப்பட்டுள்ளது. நகர் என்ற சொல்லாட்சி தொல்காப்பியத் தில் இடம் பெறாமலிருப்பதும் இவ்வுண்மையை உறுதிப்படுத்து கிறது.

சங்க இலக்கியங்களில் ஊர் என்ற சொல்லாட்சியைப் பல இடங்களில் காணமுடிகிறது. அக இலக்கியங்கள், புற இலக்கியங் கள் யாவற்றிலுமே பெரும்பாலும் ஊர் என்ற சொல்லாட்சியைக் காண முடிகிறது.

"அரவச் சீறூர் காண"[1]

என்ற அகநானூற்று அடியும்,

"சான்றோர் பலர்யான் வாழும் ஊரே"[2]

---

1. அகநானூறு — பாடல் 160-17
2. புறநானூறு — பாடல் 191-7

என்ற புறநானூற்றுப்பாடல் அடியும் சான்றுகளாக அமையும். பிற அக, புற இலக்கியங்களில் ஊர் என்ற சொல் இடம் பெற்றிருப்பதனைக் காணலாம். தலைமகனை உணர்த்துவதற்கு ஊர் என்ற சொல்லே பயன்பட்டுள்ளது.

ஐங்குறுநூறு, புறநானூறு போன்ற இலக்கியங்களில் எடுத்துக் காட்டப்பட்டுள்ள ஊர்கள் யாவு இன்றுள்ள கிராமப் புறங்கள் போல் இருந்திருக்கும் என்று எண்ண முடியாது. ஒரு ஊரைக் குறிப்பிட்டு அவ்வூரைச் சேர்ந்த தலைவனை 'ஊரன்' என்று சிறப்பித்துள்ளார்கள் என்றால் அவ்வூர் பெருமைக்குரிய, இன்றைய நகரத்தைப் போன்ற ஊராகவே இருந்திருக்க வேண்டும். எனவே தொல்காப்பியத்திலும், சங்க இலக்கியங்களிலும் ஊர் என்ற சொல், இன்று நகர் என்ற சொல் உணர்த்தும் பொருளை உணர்த்தியிருக்க வேண்டும் என்று கருத முடிகிறது.

நாகரிகத்தின் விளைவால் புதிதாகத் தோன்றிய ஊர்கள் நகர்கள் என்ற பெயரைப் பெற்றுள்ளன. இச்சொல்லாட்சியே பின்னர் தான் தோன்றியிருக்க வேண்டும். புதிதாகத் தோன்றிய ஊர்கள் நகர்கள் எனப்பட்டுள்ளதால், நகரங்களாகவும் விளங்கிய ஊர்கள் என்ற சொற்கள் பின்பு பொருளளவில் சுருங்கி விட்டன. இன்று கிராமப்புறப்பகுதியில் உள்ளவை ஊர்கள் என்றும், நவீன வாய்ப்பு வசதிகளைப் பெற்றவை நகரங்கள் என்றும் பிரித்துக் கூற வேண்டிய அளவிற்கு இரண்டிற்கும் இடையில் வேறுபாடுகள் தோன்றிவிட்டன.

சுமார் மூவாயிரம் ஊர்களையுடைய செங்கற்பட்டு மாவட்டத்தில் நானூற்றி அறுபத்திரண்டு ஊர்கள் ஊர் என்ற பொதுக்கூறைப் பெற்றுள்ளன. ஆனால் ஒன்பது ஊர்கள் மட்டுமே நகர், நகரம் ஆகிய பொதுக் கூறுகளைப் பெற்றுள்ளன. அவ்வூர்களிலும் கூட சில ஊர்கள் அண்மைக் காலத்தில் தோன்றியவைகளாகவே உள்ளன. எனவே இன்று நகர் எனப்படுவது அன்று ஊர் எனப்பட்டுள்ளது என்பது ஐயமின்றித் தெளிவாகிறது. உறையூர், தகடூர் போன்ற புகழ் பெற்ற ஊர்களெல்லாம் கூட ஊர் என்ற பொதுக் கூறு பெற்றே அமைந்துள்ளதும் எண்ணிப்பார்ப்பதற்குரியது.

தேயம் என்ற சொல் நாடு என்ற பொருளிலும், உலகம் என்ற பொருளிலும் தொல்காப்பியத்தில் இடம் பெற்றுள்ளது.

"சென்ற தேஎத்து உழப்பு நனிவிளக்கி"[1]

என்ற இடத்தில் தேயம் என்பது நாட்டைக் குறிக்கிறது. நாடு என்ற பொருளை இச்சொல் புலப்படுத்துமாறே பல இடங்களில் தொல்காப்பியத்தில் இது இடம் பெற்றுள்ளது. நாடு என்ற சொல் உணர்த்தும் பொருளைத் தேயம் என்ற சொல் உணர்த்தி யிருப்பதுடன் நாடு என்பதைக் காட்டிலும் தேயம் என்பதுவே பெருவழக்கிற்குரிய சொல்லாகவும் அன்று இருந்துள்ளது.

"இமையோர் தேஎத்தும் எறிகடல் வரைப்பினும்"[2]

என்ற தொல்காப்பிய நூற்பா அடியில் தேயம் என்பது உலகம் என்ற பொருளைப் புலப்படுத்தும் சொல்லாக அமைந்துள்ளது.

பல ஊர்கள் சேர்ந்த ஒரு அமைப்பினையே நாடு தேயம் போன்ற சொற்களால் உணர்த்தியுள்ளனர். பல வீடுகள் ஒன்று சேர்ந்து ஒரு ஊரானது அடிப்படையென்றால் அதன் வளர்ச் சியே பல ஊர்கள் ஒன்று சேர்ந்து ஒரு நாடானது என்று கூற லாம். எனவே நாடு, தேயம் ஆகிய சொற்கள் மனித நாகரிகத் தின் வளர்ச்சியைக் காட்டும் என்று கூறலாம்.

முன்னூறு ஊர்கள் சேர்ந்த பெரும்பகுதியே பறம்பு நாடு என்று கபிலர் குறிப்பிடுவதிலிருந்து பல ஊர்கள் சேர்ந்து அமைவதே நாடு என்ற கருத்து அன்றே நிலவியுள்ளது புலனாகும். இன்றும் அதே பொருளிலேயே நாடு என்ற சொல் வழங்கி வரு கிறது. அதனால்தான் செங்கற்பட்டு மாவட்ட ஊர்ப்பெயர் களில் நூற்றி ஒன்பது பொதுக்கூறுகள் அமைந்திருந்தபோதும் நாடு என்ற பொதுக்கூறையுடைய ஊர் ஒன்றுகூடக் காணப்பட வில்லை. பல ஊர்கள் சேர்ந்த பகுதியே நாடு எனப்படும் என்ற எண்ணத்தை இம்மாவட்ட ஊர்ப்பெயர்களும் உறுதிப்படுத்து கின்றன.

பதி என்ற சொல்லும் ஊரையே குறிக்கும். இச்சொல்லாட்சி யையும் தொல்காப்பியத்திலேயே காணமுடிகிறது.

"யாறும் குளனும் காவும் ஆடிப்
பதி இகந்து நுகர்தலும் உரிய என்ப"[3]

---

1. தொல்காப்பியம் — கற்பியல் - நூற்பா: 52
2. ,, ,, — பொருளியல் - நூற்பா; 52
3. ,, ,, — கற்பியல் - நூற்பா: 50

என்ற நூற்பா அடியில் ஊரை உணர்த்துமாறு பதி என்ற சொல் எடுத்தாளப்பட்டுள்ளது. இன்னும்கூட பதி என்ற சொல்லைப் பொதுக் கூறாகப் பெற்ற ஊர்கள் காணப்படுவதையுணரலாம். தமிழ்நாட்டின் வடஎல்லையாக அன்றிருந்த வேங்கடமலை திருப்பதி என்றே அழைக்கப்படுகிறது.

செங்கற்பட்டு மாவட்ட ஊர்ப்பெயர்களில் பதி என்ற பொதுக்கூறு பெற்ற ஊர்கள் எதுவும் இல்லை. ஆனால் மானாமதி என்ற பெயரில் இரண்டு ஊர்கள் உள்ளன. அவ்வூர்ப் பெயர்களில் உள்ள மதி என்ற பொதுக்கூறு பதி என்பதன் திரிபாகவும் இருத்தல் கூடும். பதி என்ற சொல் சங்க இலக்கியங்களிலும் எடுத்தாளப்பட்டுள்ளது. ஆனால் ஊர் என்ற சொல்லைப் போன்று பெருவழக்காக இடம் பெறவில்லை.

ஊர், பதி, தேயம் ஆகிய சொற்களைத் தவிர ஊர்ப்பெயர்களையோ நாட்டையோ உணர்த்துமாறு பிற சொற்கள் ஏதும் தொல்காப்பியத்தில் இடம் பெறவில்லை. தொல்காப்பியத்தில் காணப்பட்ட அடிப்படையிலேயே சங்க இலக்கியங்களிலும் ஊரை உணர்த்தும் பெயர்கள் இடம்பெற்றுள்ளன. ஆனால் சங்க இலக்கியங்கள் படைக்கப்பட்ட காலத்தில் தனிப்பட்ட ஊர்களின் பெயர்களும் தோன்றிவிட்டமையால் ஊர், பதி போன்ற பொதுவான சொற்களுடன் தனிப்பட்ட ஊர்ப்பெயர்களும் அவ்விலக்கியங்களில் இடம் பெற்றுவிட்டன.

## பொதுப் பெயர்களும் தனிப்பட்ட பெயர்களும்:

தமிழகத்தைப் பொறுத்தவரையில் ஊர்களைப்பற்றிய பொதுப் பெயர்களே தொடக்க காலத்தில் தோன்றியிருக்க வேண்டும். பொதுப் பெயர்களின் அடிப்படையில் தனிப்பட்ட பெயர்கள் பின்னர்த் தோன்றியிருக்கக்கூடும். சங்க இலக்கியப் பாடல்களில் பெரும்பாலும் பொதுப் பெயர்களின் அடிப்படையிலேயே தலைவன், தலைவியர் சுட்டப்படுகின்றனர்.

> "அலைக்கும் ஊரன்" [1]
> "சாரல் நாட" [2]

---

1. அகநானூறு — பாடல்; 186-6
2. குறுந்தொகை — பாடல்: 69-5

''குன்ற நாட''[1]

''பெருந்தேனிழைக்கும் நாடன்''[2]

இச்சான்றுகளில் ஊர், நாடு என்ற பொதுக் கூறுகளையே காண முடிகிறது அப்பொதுப் பெயர்களின் மூலமாகவே தலைவன் சுட்டப்படுகிறான். ஆனால் அப்பொதுப் பெயர்களுக்கிடையிலும் நுட்பமான வேறுபாடு காட்டப்பட்டுள்ளது. நாட்டிற்கு உரியவன் நாடன் என்ற அடிப்படையில் மட்டுமே தலைவன் சுட்டப்பட்டிருந்தால் பல நாடுகளுக்குரிய பல தலைவர்கள் நாடன் என்று கூறப்பட்டிருப்பர். அப்போது அவர்களுக்குள் குறிப்பிட்ட நாடனைப் பிரித்துக் காண்பதில் இடர்ப்பாடு ஏற்பட வாய்ப்பு உண்டு. அதனால் தான் நாடன் என்று கூறும் போதே அந்நாட்டிற்குரிய தனித்தன்மையும் முன் ஒட்டுகளாகச் சேர்த்துக் கூறப்படுகின்றது.

சாரல, குன்றம் போன்ற முன் ஒட்டுச் சொற்கள் நாடுகளுக்கிடையில் வேறுபாட்டைச் சுட்டுகின்றன. நாடு என்ற பொதுப் பெயரை மட்டும் காணும் போது ஏற்படும் மயக்கம் சாரலை யுடைய நாடு, குன்றுகளையடுத்துள்ள நாடு என்ற முன் ஒட்டு விளக்கங்களையுணரும் போது மாறுகிறது. சில இடங்களில சாரல், குன்றம் போன்ற முன் ஒட்டுச் சொற்களை மட்டுமே குறிப்பிடாமல், அங்கு நிகழும செயலை விளக்கி அதன மூலமாக வும அவ்வூர் அல்லது நாடு குறிப்பிடப்படும். 'பெருந்தேனிழைக் கும் நாடன்' என்பதில் அம்மலையில் உள்ள குறிஞ்சி மலர் தொடர்பானசெயல் குறிப்பிடப்படுகிறது. அச்செயல் அம்மலை யைப் பிற மலைகளிலிருந்து பிரித்துணரத்துணை செய்யும. இம் முறையை எலலாப்பாடலகளிலுமே காணலாம.

ஊர், நாடு என்ற பொதுப் பெயர்களுடன் முன் ஒட்டுகளாக அமைந்த சொற்களும், செயல்களுமே பின்னர் தனிப்பட்ட ஊர்ப்பெயர்கள் தோன்றக் காரணமாகி விட்டன.. நாடு என்ற ஒரு பொதுப்பெயரின அடிப்படையில் பல முன் ஒட்டுகள் சேரும் போது பல நாடுகளைப் பற்றியறிய முடிகிறது. முன் ஒட்டுகள் இல்லையென்றால் எல்லாமும் ஒன்றே என்ற எண்ணம்தான் ஏற்படும். இவ்வாறு அனறிருந்த சில பொதுப் பெயர்களுடன் முன் ஒட்டுகளாகச் சேர்ந்த பல சொற்களும செயல்களும பல்

1. அகநானூறு — பாடல்: 172-14
2. குறுந்தொகை — பாடல்: 3.4

வேறு தனிப்பட்ட ஊர்ப் பெயர்கள் தோன்றக் காரணமாகியுள்ளன என்பதையுணர முடிகிறது.

**பொதுக்கூறும் சிறப்புக்கூறும்:**

ஊர், பதி, தேயம், நாடு போன்ற சில பொதுப் பெயர்களே ஊர்ப்பெயர் தொடர்பான பெயர்களாக முன்பு இருந்துள்ளன. அப்பொதுப் பெயர்களை வேறுபடுத்திக் காட்டும் விதத்தில் முன் ஒட்டுகள் இடம் பெற்றதனால் மேலும் சில ஊர்களைப் பற்றியும் அறியமுடிந்தது. அந்நிலை காலப்போக்கில் மேலும் வளர்ச்சியடைந்தது அதன் பயனாய்ப் பல பொதுப் பெயர்கள் தோன்ற தொடங்கின: ஒவ்வொரு பொதுப்பெயரின் அடிப்படையிலும் பல தனிப்பட்ட பெயர்கள் முன் ஒட்டுகளாக அமையத் தொடங்கின. அதனால் பல ஊர்ப்பெயர்கள் தோன்றத் தொடங்கி விட்டன.

பொதுப்பெயர், தனிப்பட்ட பெயர் என்று கூறுவதையே ஊர்ப்பெயர் பற்றிய ஆராய்ச்சியாளர்கள் பொதுக்கூறு, சிறப்புக் கூறு என்று குறிப்பிடுவர். பொதுக்கூறுகள் இடுகுறிப் பெயர்களைப் போன்று தொடக்க காலத்தில் தோன்றியவை. பொதுவான அடிப்படையில் தோன்றும் பெயர்கள் அவை. ஆனால் சிறப்புக்கூறுகள் அவ்வப்போது புதிது புதிதாகத் தோன்றுபவை. பொதுக்கூறுகள் குன்று, காடு, ஏரி, குளம் என்று இயற்கையோடு ஒட்டிய பெயர்களாக அமைந்திருக்கும். எனவே அவைகளில் இடுகுறிப் பெயர்களாகவே சில இருத்தலும் உண்டு. ஆனால் சிறப்புக்கூறுகள் காலத்திற்குக் காலம் காரணங்களுக்கேற்ப மாறியமைந்து கொண்டே செல்லும். இவை அனைத்தும் காரணப் பெயர்களாகவே காணப்படும்.

ஒரு நாடு, அல்லது மாவட்ட ஊர்ப்பெயர்களில் அமைந்துள்ள பொதுக்கூறுகளைக் கொண்டு அங்குள்ள இயற்கைவளம், நிலம், நீர் பற்றிய பல திறப்பட்ட செய்திகள், குன்றுகள், காடுகள், ஐந்திணையடிப்படையில் ஊர்கள் அமைந்துள்ள விதம் போன்ற அடிப்படையான செய்திகளையறிந்து கொள்ளமுடியும். ஆனால் சிறப்புக் கூறுகளைக் கொண்டு அங்குள்ள மக்களின் வாழ்க்கை முறை, தொழில்கள், சாதிகள், அவர்களது உணவுப் பொருள்கள், உற்பத்திகள், அவர்கள் அணியும் ஆபரணங்கள் போன்ற செய்திகளை உணர்வதுடன், அங்குள்ள காடு, குன்றுகள் ஏரிகளில் வாழும் உயிரினங்களையும் அறிய முடிகிறது. மேலும் மாறிவரும் பல்வேறு அரசியல், சமய, சமுதாய மாற்றங்

களுக்கேற்ப எவ்வாறெல்லாம் புதுப்புது ஊர்கள் அமைகின்றன என்புதைச் சிறப்புக் கூறுகளைக் கொண்டே உணர முடிகிறது.

பொதுக்கூறுகளைக் கொண்டு, பொதுவான இயற்கையமைப்பைக் கொண்ட ஒரு நாட்டைப் பற்றிய பொதுவான செய்திகளை அறியலாம். அதனால்தான் ஒரே வகைப்பட்ட பொதுக் கூறைத் தமிழகத்திலுள்ள பல மாவட்ட ஊர்ப்பெயர்களிலும் காணமுடிகிறது. ஆனால் சிறப்புக்கூறுகள் அப்படிப் பட்டவையல்ல. அவை மாவட்டங்கள்தோறும் மாறும் தன்மையன. அந்தந்த மாவட்டங்களின் தனித்தன்மைகளுக்கேற்பச் சிறப்புக் கூறுகளும் மாறிக் காணப்படும். இவ்வகையில் நோக்கினால் ஒரு மாவட்டத்தைப் பற்றிய ஊர்ப்பெயர் ஆய்வில் பொதுக்கூறு களைக் காட்டிலும் சிறப்புக் கூறுகளே பெரிதும் பயன்படும் என்பதையுணரலாம்.

செங்கை மாவட்ட ஊர்ப்பெயர்களில் காணப்படும் நூற்று ஒன்பது பொதுக்கூறுகளில் பல, வேறு சில மாவட்ட ஊர்ப்பெயர் களிலும் காணப்படுகின்றன. இதே இயற்கையமைப்பு வேறு சில இடங்களிலும் இருப்பதே இவ்வொற்றுமைக்குக் காரணம். ஆனால் இங்குள்ள ஊர்ப்பெயர்களில் காணப்படும் சிறப்புக் கூறு களில் பலவற்றை வேறு மாவட்டங்களில் உறுதியாகக் காணமுடி யாது. எனவே மாவட்டத்தின் தனித்தன்மையையுணரச் சிறப்புக் கூறுகளே பெரிதும் பயன்படும் என்பதை யுணரலாம்.

தொடக்க காலத்தில் சில ஊர்களே இருந்திருக்கும். மக்கள் தொகைப் பெருக்கத்திற்கும் தேவைக்கும் ஏற்ப பல ஊர்கள் அவ்வப்போது தோன்றியுள்ளன; இன்னும் தோன்றிக் கொண்டு இருக்கின்றன. இதனால் ஆங்காங்கு காடுகள் நாடாக்கப் பட்டுள்ளன; ஏரிகளும் குளங்களும் ஊர்களாக உரு மாறியுள்ளன. இப்படித் தோன்றும் புதிய ஊர்கள் சில பொதுக் கூறுகளின் அடிப்படையில் புதிய புதிய சிறப்புக் கூறுகளைப் பெற்று அமைந்துள்ளன,

ஊர்ப்பெயர்களில் முன் ஒட்டாக அமைவது சிறப்புக்கூறு. அச்சிறப்புக்கூறு பலவிதப் பெயர் அடைகளால் அமைவது. அப் பெயரடைகளின் தோற்றம், வளர்ச்சி முதலியனவற்றை ஆய் வதன் மூலமே ஊர்ப்பெயர்களில் காணப்படும் பல்வேறு வளர்ச்சி நிலைகளையும், கால மாறுதலுக்கேற்ப ஊர்ப்பெயர்களில் ஏற் பட்டுள்ள மாறுதல்களையும் தெளிவாக உணரமுடியும்.

செங்கற்பட்டு மாவட்ட ஊர்ப்பெயர்களில் அமைந்துள்ள சிறப்புக் கூறுகளும் மேற்கண்ட உண்மைகளை உணரத் துணை செய்கின்றன. பொதுவாக ஊர்ப்பெயர்களின் தோற்றம், வளர்ச்சி முதலியன ஒரு நாட்டளவில் எந்நிலையில் அமைந்திருக்குமோ அந்நிலையிலேயே இம்மாவட்ட ஊர்ப்பெயர்களின் நிலையும் அமைந்துள்ளது. எனவே, இம்மாவட்ட ஊர்ப்பெயர்களின் சிறப்புக்கூறுகளில் இடம் பெற்றுள்ள பெயர் அடைகளையும் மையமாகக் கொண்டு, பொதுவாக ஊர்ப்பெயர்களில் அமைந்துள்ள பெயரடைகளின் தோற்றம், வளர்ச்சி பற்றி இனிக் காணலாம்.

பலவிதப் பெயரடைகள்:

ஊர்ப்பெயர்களின் சிறப்புக் கூறுகளில் இடம் பெறும் பெயரடைகள் பலவிதப்படும். எனினும் அவைகளை மூன்று பெரும் பிரிவிற்குள் அடக்குவர் ஊர்ப்பெயர் ஆய்வாளர்கள் (1) விளக்கப் பெயர் அடை (2) ஆட்பெயர் அடை (3) இவ்விரண்டிலும் அடங்காத பிறவகைப் பெயர் அடை என்பன அவை. இம்மூலவகைப் பெயர் அடைகளிலும் இயற்கையமைப்பை மையமாகக் கொண்டு அமைந்துள்ள விளக்கப் பெயர் அடைகளே காலத்தால் முந்தியவைகளாக இருத்தல் வேண்டும். இயற்கையின் கூறுபாடான நிலத்தில் உற்பத்தியாகும் பலவித மரங்கள், செடிகள், காய்கள், மலர்கள் முதலியனவற்றைப் பற்றியும், இயற்கையின் கூறுபாடான காடுகள், மலைகளில் வாழும் பல்வேறு விலங்கினங்கள், பறவைகள் பற்றியும் விளக்கப்பெயர் அடைகள் மூலமாகவே உணரமுடிகிறது. அதன் பிறகே ஆட்பெயர் அடைகளும், பிறவகைப் பெயர் அடைகளும் தோன்றியிருக்க வேண்டும். அரசியல் செல்வாக்கு மிக்குள்ள இன்றைய நிலையில் மீண்டும் ஆட்பெயர் அடைகளே ஊர்ப்பெயர்களில் மிகுதியாக இடம்பெற்று வருகின்றன. இன்று புதிதாகத் தோன்றும் ஊர்களில் விளக்கப் பெயர் அடைகளையோ, அன்றிப் பிறவகைப் பெயர் அடைகளையோ உறுதியாகக் காணமுடியாது. ஏனெனில் ஆட்பெயர்களை வைப்பதற்காகவே இங்கு புதிய ஊர்கள் தோற்றுவிக்கப்படும் சூழ்நிலை அண்மைக்காலத்தில் தோன்றி நிலைத்துவிட்டது.

இனி, தொடக்ககாலத்திலிருந்து ஊர்ப்பெயர்களில் எவ்வித அடிப்படையில் பெயரடைகள் தோன்றியிருக்கமுடியும் என்பதை சில வரையறைகளைக் கொண்டு நோக்கலாம்.

**ஐந்திணையமைப்பு:**

இயற்கையோடு ஒட்டி வாழ்ந்தவன் தமிழன். எனவே, தான் தொடக்க காலத்தில் உறைவிடங்களை அமைத்து வாழத் தொடங்கிய இயற்கை நிலங்களின் பெயர்களையேதான் அமைத்த ஊர்ப்பெயர்களுக்குப் பெயர் அடைகளாக அமைத்துள்ளான். இவ்வமைப்பு முறையைத் தமிழகத்திலுள்ள அனைத்து மாவட்ட ஊர்ப்பெயர்களிலும் காண முடிகிறது. செங்கை மாவட்ட ஊர்ப் பெயர்களில் மிகப் பழமையான ஊர்ப்பெயர்களை நோக்கினால் அவைகள் பெரும்பாலும் ஐந்திணையமைப்பின் அடிப்படையில் அமைந்த பெயர் அடைகளையே பெற்றிருத்தலை யுணரலாம்.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய திணைப் பெயர்களை நேரடியாகவோ, அல்லது அவைகளைப் பிற பெயர் வடிவங்களிலோ உணர்த்துமாறு அமைந்த பல ஊர்கள் செங்கை மாவட்டத்தில் உள்ளன. குன்று, மலை, பாறை, வரை போன்ற பல பெயரடைகள் குறிஞ்சி நில அமைப்பை உணர்த்துமாறு ஊர்ப்பெயர்களில் அமைந்துள்ளன. பிற நிலவகைகளிலும் இது போன்ற பெயரடை அமைப்பைக் காண முடிகிறது. சில ஊர்ப் பெயர்கள் நேரடியாக குறிஞ்சி, முல்லை என்று உணர்ந்தாவிட்டாலும் அந்நிலத்து ஊர்கள் எவ்வாறு சங்க இலக்கியங்களில் உணர்த்தப்பட்டுள்ளனவோ அவ்வடிப்படையில் உணர்த்தப் பட்டுள்ளன.

மருதநில ஊர்கள் ஊர் என்னும் பொதுக்கூறு பெற்றும் நெய்தல் நில ஊர்கள் பாக்கம் என்னும் பொதுக்கூறு பெற்றும் இது போன்றே பிற திணைகளைச் சார்ந்த ஊர்ப்பெயர்களும் பல பொதுக்கூறுகளைப் பெற்றும் அமைந்திருப்பது போன்று இவ்வூர்களில் காணப்படும் பெயர் அடைகளும் திணைப் பெயர் களை வேறுபடுத்தியறியுமாறே அமைந்துள்ளன.

**நிலமும் நீரும்:**

குறிஞ்சி முதலான ஐந்திணைகளில் நெய்தல் மட்டுமே நீர் நிலை தொடர்பானது. ஏனைய நான்கு திணைகளும் ஒழுக்கத் தின் அடிப்படையிலும், வேறு பிற வகைகளிலும் வேறுபட்டிருந் தாலும் நிலம் என்ற அமைப்பில் ஒன்றுபடுகின்றன. இந்நான்கு திணைக்குட்பட்ட நிலங்களையும் உணர்த்துமாறு பல ஊர்ப் பெயர்கள், ஏற்ற பெயர் அடைகளைப் பெற்று, செங்கை மாவட் டத்தில் உள்ளதைக் காணமுடிகிறது.

குன்று, காடு, கோடு, வண்டல், செய், மலை, கான், பாலை, கரம்பை, மணல், கல், கோட்டை, தோட்டம், கழனி, பள்ளி, மடம், பள்ளம், குழி, மேடு போன்ற பல பெயர் அடைகளைப் பெற்ற பல ஊர்கள் இம்மாவட்டத்தில் உள்ளன. இப்பெயர் அடைகள் யாவும் பலவகைப்பட்ட நிலத்தின் வகை, தன்மை, மண்ணின் நிலை ஆகியனவற்றைத் தெளிவாக எடுத்துக்காட்டு கின்றன. இப்பெயர் அடைகளைப் பெற்ற ஊர்கள் யாவும் தொடக்க காலத்தில் தோன்றியவைகளாகவே இருக்கும் என்று உறுதியாக நம்பலாம். பல்வேறு பொதுக் கூறுகளிலும் இப்பெயர் அடைகள் காணப்பட்டாலும் அப்பொதுக் கூறுகளும் கூட நால் வகை நில அமைப்பின் அடிப்படையிலேயே அமைந்துள்ளன என்பதனையும் ஊர்ப்பெயர்களால் உணரமுடிகிறது.

நிலத்தை அடிப்படையாகக் கொண்டே ஊர்ப்பெயர்கள் தொடக்காலத்தில் தோன்றியிருக்க வேண்டும். அதனால்தான் அப்படிப்பட்ட பல பெயர் அடைகளை இம்மாவட்ட ஊர்ப் பெயர்களில் காணமுடிகிறது. நிலத்தின் பல்வேறு நிலைகளையும் பெயர் அடைகளால் குறிப்பிட்டதுபோன்று நிலங்களின் பல்வேறு அமைப்புகளையும், ஒப்புமைக் கூறுபாடுகளையும் கூடப் பெயர் அடைகள் புலப்படுத்துகின்றன.

கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு ஆகிய எல்லைகளின் அடிப்படையில் ஒப்புமை காணுமாறு பல ஊர்ப் பெயர்கள் இம் மாவட்டத்தில் உள்ளன. அதுபோன்றே சிறிய பெரிய போன்ற அளவின் அடிப்படையில் நிலங்களை ஒப்புமைப்படுத்திக் காணு மாறும், கருமை, வெம்மை, செம்மை போன்ற நிறங்களின் அடிப் படையில் நிலங்களை ஒப்புமைப்படுத்திக் காணுமாறும் பல பெயர் அடைகளைப் பெற்றுப் பல் ஊர்கள் இம்மாவட்டத்தில் அமைந்துள்ளன. இவ்வாறு நிலங்களை ஒப்புமைப்படுத்திக் காணும் நிலை நிலம் தொடர்பான ஊர்ப்பெயர் அமைப்பில் பின்னர் ஏற்பட்ட வளர்ச்சி என்று கூறலாம்.

நெய்தல் நிலம் என்பது கடலும் கடல் சார்ந்த பகுதியும் ஆகும். கடல் சார்ந்த பகுதியில் அமைந்த ஊர்களே பாக்கம் என்னும் பொதுக்கூறு பெற்று அமைந்திருந்தன. அது ஆரம்ப கால நிலை. காலப்போக்கில் கடல், ஏரி, குளம் போன்ற நீர் நிலைப் பெயர்களையே ஊர்ப்பெயர்களில் அடையாகப் பெற்றும் ஊர்கள் தோன்றத் தொடங்கிவிட்டன. நீர் நிலைப் பெயர்களில் இவ்வாறு அமைந்த நிலையை ஓர் வளர்ச்சி நிலை என்றே கூற லாம்.

ஆறு, குளம், கடல், பொய்கை, துறை, ஏரி, கயம், கூவம், ஊற்று போன்ற பல பெயர் அடைகளைப் பெற்றுப் பல ஊர்கள் செங்கை மாவட்டத்தில் அமைந்துள்ளன. இவைகளேயன்றி நீர், வெள்ளம், சமுத்திரம் போன்ற பல பெயர் அடைகளும் ஊர்ப் பெயர்களில் காணப்படுகின்றன. எவ்வெவ்விடங்களில் எல்லாம் நீர் நிலைகள் காணப்படுமோ அவையனைத்தும் ஊர்ப்பெயர் களில் அமைந்துள்ளதை உணர முடிகிறது. நிலங்களின் அடிப் படையில் ஊர்ப்பெயர்கள் அமைந்ததைத் தொடர்ந்து நீர் நிலைகளின் அடிப்படையிலும் அமைந்துள்ளன என்று கருத முடி கிறது

தாவரமும் பிற உயிரினங்களும் :

நிலத்தின் அடிப்படையிலும், நீர்நிலைகளின் பெயர்கள் அடிப் படையிலும் ஊர்ப்பெயர்களை அமைத்த நிலை படிப்படியாக வளர்ந்த போது சில மாறுதல்களையும் பெறத் தொடங்கி யுள்ளன. பொதுவாக நிலத்தின் தன்மை, வகை, அமைப்பு ஆகியவற்றை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு ஊர்ப் பெயர்களை அமைத்ததிலிருந்து வளர்ச்சியடைந்து அந்நிலத்தில் காணப்படும் பல்வேறு மரங்கள், செடிகள், பூவகைகள், காய்கள், கனிகள் ஆகியவற்றின் அடிப்படையிலும் ஊர்ப்பெயர்கள் அமைக்கத் தொடங்கியுள்ளனர். இவ்வளர்ச்சி நிலைகளையும் செங்கை மாவட்ட ஊர்ப் பெயர்களால் உணர முடிகிறது.

ஆல், கடம்பு, நாவல், பனை, வேம்பு, விளம்பு, கொடுங் கை, போந்து, இலுப்பை, புங்கம், அத்தி, காஞ்சி, ஆரி, ஊதை, வேண், வெங்கு, ஈச்சம், புளி மா, முருங்கை, பேரீச்சை, விளிஞ் சை, விளாம், களாம், புன்னை, மூங்கில், கமுகு, ஒதியம், பாக்கு, கருவேலம், இலந்தை, சவுக்கு போன்ற பல மரங்களின் பெயர் அடைகளைச் சிறப்புக்கூறுகளாகப் பெற்ற ஊர்ப்பெயர்கள் இம் மாவட்டத்தில் காணப்படுகின்றன. இம்மரங்கள் பல் வேறு வகைப்பட்ட நிலங்களிலும் உற்பத்தியாகக் கூடியவை என்பதை யுணரலாம்.

பல்வேறு மரப்பெயர்கள் ஊர்ப்பெயர்களில் காணப்படுவது போன்று பல்வேறு செடிகளின் பெயர்களையும் இம்மாவட்ட ஊர்ப்பெயர்களால் உணர முடிகிறது. முள்ளி, பிரந்தை, அவுரி, கொட்டி, பருத்தி, கீரை, புல், துளசி, நெல், தூதுவிளம், சூரை, கொள்ளு, பீர்க்கை, எட்டி, நொச்சி, பாகல், மஞ்சள், எருக்கு,

பருது, ஏலக்காய், பூண்டு, வெள்ளரி, காரை, கொடிவலசை போன்ற செடி, கொடிகளின் பெயர் அடைகளை ஊர்ப்பெயர்களில் சிறப்புக்கூறுகளாகப் பெற்றுப்பல ஊர்கள் இம்மாவட்டத்தில் உள்ளன.

அவை போன்றே தாழம்பூ, காஞ்சி, தாமரை, செங்கழுணீர், பல்லி, பருது, குவளை, சாவி, முல்லை. அல்லி, பிச்சிப்பூ, காந்தள் ஆகிய மலர்களின் பெயர்களை அடையாகப் பெற்றும் பல ஊர்கள் இங்கு அமைந்துள்ளன.

இங்குக் குறிப்பிடப்பட்ட மரம், செடி, கொடி, பூவினங்கள் ஆகியனவற்றுள் பல, நிலத்தில் உற்பத்தியாவனவாகவும் வேறு சில நீரில் உற்பத்தியாவனவாகவும் உள்ளதையுணரலாம். இவ்வாறு நிலம், நீர் நிலைகளில் உற்பத்தியாகும் தாவரங்கள் தொடர்பான பெயர் அடைகளைப் பெற்று ஊர்ப்பெயர்கள் அமைந்ததைத் தொடர்ந்து நிலத்தில் வாழும் விலங்கினங்கள், பறவைகளின் பெயர் அடைகளைப் பெற்றும், நீரில் வாழும் மீன் போன்ற உயிரினங்களின் பெயர் அடைகளைப் பெற்றும் பல ஊர்ப் பெயர்கள் அமைந்துள்ளன. ஊர்ப்பெயர்களின் அமைப்பில் பின்னர் ஏற்பட்ட மாறுதல் என்று இதனைக் குறிப்பிடலாம். இம்மாறுதல்களைப்புலப்படுத்தும் விதத்திலும் பல ஊர்ப்பெயர்கள் இம்மாவட்டத்தில் உள்ளன.

ஆ, ஆடு, நரி, பசு, கரடி, ஆன், எருமை, வேழம், குதிரை, புலி, ஏனம், சிங்கம் போன்ற பல விலங்கினங்களின் பெயர் அடைகளைப் பெற்ற பல ஊர்கள் இம்மாவட்டத்தில் உள்ளன. வல்லூறு, உள்ளா, சம்பாதி, தாரா, தூக்கணாம்குருவி, காக்கை, நாரை, கோழி, விட்டில், தேனீ, அன்னம், கிளி போன்ற பறவைகளின் பெயர்களை அடையாகப் பெற்றும் பல ஊர்கள் அமைந்துள்ளன. அவை போன்றே, மீன், விரால், முதலை போன்ற நீரில் வாழும் உயிரினங்களைப் பெற்றும் பல ஊர்கள் அமைந்துள்ளதைக் காணமுடிகிறது. மீன், சேல் போன்ற பெயர் அடைகளைப் பெற்றுப்பல ஊர்கள் இம்மாவட்டத்தில் உள்ளன.

ஊர்ப்பெயர்களின் அமைப்பு நிலம், நீர் அடிப்படையில் முதலில் தொடங்கி, பின்பு அவ்விடங்களில் காணப்படும் தாவரங்களின் பெயர்களைப் பெற்று, அதன் பின்னர் அவ்விடங்களில் வாழும் உயிரினங்களின் பெயர்களை உணர்த்துமாறு வளர்ச்சி பெற்று வந்துள்ளதையுணர முடிகிறது. இவ்வளர்ச்சி

முறையில் ஏற்பட்டுள்ள மாறுதல்களுக்குச் சங்க இலக்கியப் பாடல்களிலேயே தொடர்பு உள்ளதையும் உணர முடிகிறது.

ஐந்திணைகளையும் குறிப்பிட்டவர்கள் அங்குள்ள மரம், செடிகள் பற்றியும் கருப்பொருள்கள் என்ற நிலையில் குறிப்பிட்டுள்ளார்கள். மேலும், திணைப்பெயர்கள் அனைத்தும் அங்குள்ள மலர்களின் பெயர்களைப் பெற்றே அமைந்துள்ளன. அச்சிந்தனைகளின் வளர்ச்சியே பின்னர்த் தோன்றிய ஊர்ப் பெயர்கள் மரம், செடி, கொடி, பூ போன்ற பெயர் அடைகளைப்பெற்று அமைவதற்குக் காரணமாயின. அதுபோன்றே ஒவ்வொரு நிலத்திலும் வாழும் விலங்குகள் பற்றியும் இலக்கண நூலார் முன்னரேயே வரையறுத்துள்ளனர் மேலும், சங்க இலக்கியங்களில் பெரும் பாலும் விலங்குகள், பறவைகளின் செயல்கள் மூலமாகவே தலைவனின் நாட்டுவளம், குன்றின் நிலை முதலியன விளக்கப்பட்டுள்ளன. இந்நிலையே காலப்போக்கில் வளர்ச்சியடைந்து விலங்கினங்கள் போன்ற பல உயிரினங்களின் பெயர்களை ஊர்ப்பெயர்களில் அடைகளாக அமைக்கும் அளவிற்கு வந்துள்ளது என்று கருதுவது பொருத்தமாகப்படுகிறது.

இவ்வடிப்படையிலேயே உலகில் பெரும்பாலான ஊர்கள் அமைந்துள்ளன. இம்மாவட்ட ஊர்ப்பெயர்களிலும் பெரும் பாலானஊர்கள் இங்கு எடுத்துக்காட்டப்பட்ட பெயர் அடைகளைப் பெற்றே அமைந்துள்ளன.

**சமய அடிப்படையில் கடவுள் பெயர்கள்:**

வரலாற்றில் ஏற்படும் மாற்றங்களுக்கேற்பவே ஊர்ப்பெயர்களின் அமைப்பிலும் மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. சங்க காலம் இயற்கையோடு இயைந்த நிலையில் தமிழர் வாழ்ந்த காலமாதலால் அக்காலத்தில் தோன்றிய ஊர்ப்பெயர்களும் அந்நிலையிலேயே அமைந்திருந்தன. தமிழக வரலாற்றில் இருண்ட காலம் எனப்படும் களப்பிரர் ஆட்சிக்காலத்திற்குப் பின்பு பக்தி இயக்கங்கள் தமிழ் நாட்டில் பரவத் தொடங்குகின்றன. அந்நிலையில் இம்மாவட்டம் உள்ளடங்கிய தொண்டை மண்டிலம் பல்லவப் பேரரசர்களின் ஆட்சிக்குட்பட்டிருந்தது. சமண, பௌத்த சமயங்கள் அந்நிலையில் வெகுவாகப் பரவியிருந்தன. அச் சமயங்கள் செல்வாக்கை இழக்கச் செய்து, சைவ, வைணவ சமயத்தை இப்பகுதியில் பரப்பும் பணியில் நாயன்மார்களும் ஆழ்வார்களும் தீவிரமாகச் செயல் பட்டுள்ளார்கள். இது வர

லாறு உணர்த்தும் உண்மை. இவ்வரலாற்றை நிரூபிக்கும் வகையில் பல ஊர்ப்பெயர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன.

சமண, பௌத்த சமயங்கள் இம்மாவட்டத்தில் பரவியிருந்த நிலையை உணர்த்துமாறு பல ஊர்ப்பெயர்கள் காணப்படுகின்றன. பள்ளி என்ற பொதுக் கூறு பெற்று இங்குக் காணப்படும் ஊர்கள்யாவும் அச்சமயங்களின் அடிப்படையில் அமைந்தனவேயாகும். சமணம், பௌத்தம் என்ற சமயப்பெயர்களையே பெயர் அடைகளாகப் பெற்றும் பலஊர்கள் இம்மாவட்டத்தில் உள்ளன.

அச்சமயங்களுக்கு மாற்றுச்சமயங்களாக இப்பகுதியில் பரவிய சைவ, வைணவ சமயங்களின் அடிப்படையில் பல ஊர்கள் இங்குக் காணப்படுகின்றன. பல பொதுக் கூறுகளில் சைவ, வைணவம் தொடர்பான கட்வுளர் பெயர்கள் இடம் பெற்றுள்ளதைக் காண முடிகிறது.

அம்மன், அரி, விஷ்ணு, நரசிங்கம், சிவன், பர்வதராஜன், ஆதிவராகன், ஆஞ்சநேயன், தரணிவராகன், துவாரகன், கோபால கிருஷ்ணன், சத்ருஞ்சயன், ஸ்ரீகாளி, ஸ்ரீகிருஷ்ணா, வெங்கடப்பெருமாள், வேணுகோபாலன், விநாயகர், சூரியன், திருமால், பெருமாள், அரன், பிடாரி, சிங்கப்பெருமாள், செல்லப்பிள்ளையார், ருத்ரகோடி, மால் போன்ற பல கடவுளர்களின் பெயர் அடைகளைப் பெற்றுப் பல ஊர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன.

இங்கு எடுத்துக்காட்டப்பட்ட கடவுள் பெயர் அடைகள் பலவாக இருப்பினும் பெரும்பாலும் சிவன், திருமால் ஆகிய இருவர் தொடர்பான பெயர்களாகவே அவை உள்ளதையுணரலாம். சிவன் தொடர்பான பெயர்களைக் காட்டிலும் திருமால் தொடர்பான பெயர்களே மிகுதியாகக் காணப்படுவது, வைணவ சமயம் இப்பகுதியில் பெற்றிருந்த மிகுந்த செல்வாக்கைப் புலப்படுத்தும். இக்கடவுளர் பெயர்களில் சில பிற்காலத்தில் தோன்றியவைகளாகவும் இருத்தல் கூடும். பெண் கடவுளர்களில் கொற்றவைவழிபாடு பழமையானது என்பதை சிலப்பதிகாரம் முதலாகவே உணரமுடிகிறது. சூரியன் போன்ற தேவர்களின் பெயர்களிலும் சில ஊர்கள் அமைந்துள்ளன.

### தனிமனிதப் பெயர்கள்:

பக்தி இயக்கங்கள் தமிழ் நாட்டில் பரவிய போது கடவுளைப்பற்றிய சிந்தனைகள் எங்கும் காணப்பட்டன. நாளடை

வில் அந்நிலையில் சிறிது மாற்றம் ஏற்படத் தொடங்கியது. சிறு பிரபந்தங்கள் தோன்றும் சூழல தமிழ் இலக்கிய உலகில் தோன்றியபோது தெய்வங்களைப்பற்றி மட்டுமே பாடல்கள் எழுதப்பட்ட நிலையிலிருந்து சிறிது மாற்றம் பெற்று மன்னர்கள், செல்வர்கள போன்ற தனிமனிதர்களைப் பற்றியும் பாடல்கள் எழுதப்படும் நிலை உருவாகியது. ஊர்ப்பெயர்களின் அமைப்பிலும் அத்தகைய மாற்றங்கள் ஏற்பட்டுள்ளதை உணர முடிகிறது.

சைவம், வைணவம் ஆகிய சமயங்களின் அடிப்படையில் கடவுளர்களின் பெயர்கள் ஊர்ப்பெயர்களில் அடைகளாக இடம் பெற்ற நிலையில் சிறுமாற்றம் ஏற்பட்டு பல தனி மனிதர்களின் பெயர்களும் ஊர்ப்பெயர்களில் அடைகளாக அமையத் தொடங்கின. பக்தி இயக்கங்கள் தோன்றிய காலத்திற்குப் பின்பு ஏற்பட்ட இந்நிலை பலநூற்றாண்டுகள் தொடர்ந்து நிலவியுள்ளதைக் காண முடிகிறது. அவ்வப்போது ஏற்பட்ட ஆட்சி மாற்றங்களுக்கேற்பப்பல புதுப்பெயர்களும் ஊர்ப்பெயர்களில் இடம் பெற்றுள்ளன.

சைவ, வைணவ சமயங்கள் இந்நாட்டு மக்களால் தொன்று தொட்டுப் பின்பற்றப்படும் சமயங்கள். காலப்போக்கில் கிறித்துவம், இசுலாம் போன்ற பிறநாட்டுச் சமயங்களும் இம் மண்ணில் பரவத் தொடங்கியுள்ளன. அதன் விளைவால் அச் சமயங்களைச் சேர்ந்த சில தனியனிதர்களின் பெயர்களும் ஊர்ப் பெயர்களில் அடைகளாக இடம் பெற்றுள்ளன.

தனிமனிதப் பெயர்கள் பல திறப்பட்டனவாக உள்ளன. கடவுளர் பெயர்களையே பெரும் பாலும் மனிதர்கள் சூட்டிக் கொள்ளும் மரபு இங்கு நிலவிவருவதால் அவ்வடிப்படையில் பல பெயர்கள் அமைந்துள்ளன. பல்வேறு ஆட்சியாளர்களின் பெயர்கள், பல சமயங்களின் பெயர்கள், மனிதர்கள் சார்ந்துள்ள சாதிகள், செய்த தொழில்கள், உறவுகள், மற்றும் மனித வாழ்வில் தொடர்புடைய பல பொருள்கள் ஆகியவற்றின் பெயர்கள் முதலிய அடைகளைப் பெற்றும் ஊர்ப்பெயர்கள் அமைந்துள்ளன. இம்மாற்றங்கள் அனைத்தையும் எடுத்துக்காட்டும் விதத்தில் செங்கற்பட்டு மாவட்ட ஊர்ப்பெயர்கள் அமைந்துள்ளதை உணரமுடிகிறது.

தாவரம், பிற உயிரினங்கள் தொடர்பான பெயர் அடைகள் அனைத்தையும் சேர்த்து நோக்கும் போது இம்மாவட்ட ஊர்ப்

பெயர்களில் மிகுதியானவை அவ்வாறு அமைந்துள்ளமை புலனாகும். ஆனால் தனிப்பட்டமுறையில் நோக்கும் போது இம் மாவட்ட ஊர்ப்பெயர்களில் ஆட் பெயர் அடைகளைப் பெற்ற ஊர்ப்பெயர்களே மிகுதியாக உள்ளன. பல் வேறு ஆட்சி மாற்றங்கள் இம்மாவட்டம் உள்ளடங்கிய பகுதியில் நிகழ்ந்துள்ளமை இவ்வாறு தனி மனிதப்பெயர்கள் மிகுந்து காணப்படுவதற்கு மூல காரணம் எனலாம்.

**சாதிப்பெயர்களும் தொழில் பெயர்களும்:**

ஆட் பெயர்களை நேரிடையாகவே உணர்த்தும் விதத்தில் பல பெயர் அடைகள் இம்மாவட்ட ஊர்ப்பெயர்களில் காணப்படுகின்றன. அப்பெயர் அடைகளில் பல ஆண்களின் பெயர் அடைகளாகக் காணப்படுவதுடன் சில பெயரடைகள் பெண்களின் பெயர்களையும் உணர்த்துகின்றன. பெண்களும் சமூகத்தில் மதிக்கப்படும் நிலையில் வாழ்ந்துள்ளனர் என்பதை அப் பெயர் அடைகள் தெளிவு படுத்துகின்றன.

அவ்வாறு இடம் பெற்றுள்ள பெயர் அடைகள் மட்டுமேயன்றி மனிதர்களின் சாதிப்பெயர்களைக் குறிப்பிடுமாறும், அவர்கள் செய்துள்ள பல்வேறு தொழில்களை உணர்த்துமாறும் பல ஊர்ப்பெயர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன.

இடையர், வன்னியர், சாணார், குயவர், ஆரியர், வில்லியர், சோழியர், பிள்ளை, அய்யங்கார், ஒட்டர், நாயக்கர், நாயுடு, ரெட்டி, செட்டி, கம்மாளர், தட்டார், முதலியார், வண்ணார், வலையர் போன்ற சாதிப்பெயர்களுடன் துலுக்கர், மொகலாயர், ராவுத்தர், பரங்கியர் போன்ற சாதிப்பெயர்களும் இம்மாவட்ட ஊர்ப்பெயர்களில் காணப்படுகின்றன. குறிப்பிட்ட சில சாதிப் பெயர்கள் பல பொதுக்கூறுகளிலும் காணப்படுவதால் அச்சாதிகளின் பெயரிலேயே பல ஊர்கள் காணப்படுகின்றன.

இம்மாவட்ட ஊர்ப்பெயர்களில் பல்வேறு சாதிப்பெயர்கள் இடம் பெற்றிருந்தாலும் மிகுதியான செல்வாக்குப் பெற்றிருப்பது அந்தணச்சாதியேயாகும். ஆரியர், ஐயர், ஐயங்கார், பார்ப்பான் போன்ற பல பெயர் அடைகளைப் பெற்றுப் பல ஊர்கள் இம்மாட்டத்தில் அமைந்துள்ளன, அகரம், அஹ்ரகாரம், மங்கலம் போன்ற பொதுக் கூறுகளில் அடங்கிய ஊர்களெல்லாம் குறிப்பிட்ட அச்சாதியினருக்காக அமைந்தவையேயாம்.

வேட்டையாடுதல், ஆசிரியத் தொழில், கூத்து, கொல்லர் தொழில், நெசவு, முரசு அடித்தல், தலையாரி, மருத்துவர், உழவு, போர்த்தொழில், பாண் இசைத்தல், நடித்தல், தச்சுத் தொழில், பட்டு உற்பத்தி, கொத்து வேலை, சங்கீதம், சதுரங்கம் ஆடுதல், காவல் காத்தல், தண்டல் போன்ற பல தொழில்களின் அடிப்படையிலும் தனிமனிதப் பெயர்கள் இம்மாவட்ட ஊர்ப் பெயர்களில் அமைந்துள்ளன. இங்குக்குறிப்பிடப்பட்ட தொழில் கள் அனைத்தும் இம்மாவட்ட மக்களால் புரியப் பட்டுள்ளன என்பதையே ஊர்ப்பெயர்களின் மூலம் உணர முடிகிறது.

ஊர்ப்பெயர்களில் இடம் பெற்றுள்ள தனிமனிதப் பெயர் களில் எவ்வித முன் ஒட்டுகளும் இல்லாமல் பெயர் அமைந்துள் ளது ஒரு நிலை; சாதிப் பெயர்களையும், தொழில் பெயர் களையும் பெயர் அடைகளாகப் பெற்று அமைந்தது முந்திய நிலைக்கு மாறுபட்ட நிலையாகும். செய்த தொழில்களின் அடிப் படையிலேயே தொடக்க காலத்தில் மனிதர்களிடையே பிரிவுகள் காணப்பட்டுள்ளன. அப்பிரிவுகளே பிற்காலத்தில் உயர்வு, தாழ்வு காணும் நிலையில் சாதிப்பெயர்களாக வடிவெடுத்துள் ளன என்பது வரலாறு கூறும் உண்மை. இம்மாற்றங்களை எடுத்துக்காட்டும் விதத்திலேயே இம்மாவட்ட ஊர்ப்பெயர்களும் அமைந்துள்ளன.

தனிமனிதர்களைச் சுட்டிக்காட்டும் விதத்தில் இடம் பெற்ற சாதிப்பெயர், தொழில் பெயர்களைப் போன்று வேறு சில அடிப் படைகளிலும் தனிமனிதர்களுடன் தொடர்புடைய பல பெயர் அடைகள் ஊர்ப்பெயர்களில் இடம் பெற்றுள்ளன.

மனிதர்கள் பயன் படுத்திய பல் வேறு உலோகப் பெயர் அடைகள், கண், கால் போன்ற மனித உறுப்புகளைப் உணர்த் தும் பெயர் அடைகள், ஒன்று, இரண்டு என்பன போன்ற எண்ணுப் பெயர் அடைகள், மனிதர் உயிர் வாழ்க்கைக்கு இன்றி யமையாத உணவுப் பெயர் அடைகள் போன்ற அடிப்படைகளி லெல்லாம் பல ஊர்ப்பெயர்கள் அடைந்துள்ளன. இவ்வமைப்பு முறைகள் அனைத்தையும் அடிப்படைகளாகக் கொண்டு அமைந்த பல ஊர்கள் இம்மாவட்டத்திலும் காணப்படுகின்றன.

உலோகம், உறுப்பு, எண், உணவு போன்ற பெயர் அடை கள், இதற்கு முன்னர் எடுத்துக் காட்டப்பட்ட பெயர் அடைகளி லிருந்து மாறு பட்டவைகளாகக் காணப்படினும், இவையனைத் தும் தனி மனித உடைமைகளையுணர்த்துமாறே காணப்படுவ

தால் தனிமனிதப்பெயர்களின் அடிப்படையில் ஊர்ப்பெயர்கள் தோன்றிய காலத்திலேயே இப்பெயர் அடைகளைப் பெற்றும் ஊர்ப் பெயர்கள் தோன்றியிருத்தல் வேண்டும் என்று எண்ண வேண்டியுள்ளது.

**அண்மைக்கால அரசியல் பெயர்கள்:**

கால மாற்றங்களுக்கேற்பக் கருத்துகளும் மாறுகின்றன. இம் மாற்றங்களின் பிரதிபலிப்பு அவ்வப்போது அமைந்த ஊர்ப்பெயர் களிலும் காணப்படுகிறது. இயற்கைப் பொருள்களின் பெயாகளை ஊர்ப்பெயர்களுக்கு வைத்தவன் மனநிலை வேறு; தெய்வங் களின் பெயர்களை ஊர்ப்பெயர்களுக்கு வைத்தவன் மனநிலை வேறு; தமது பெயர்களையே ஊர்ப்பெயர்களுக்குச் சூட்டிய பிற் கால மாந்தரின் மனநிலைவேறு. பெரும்பாலும், இடைக்காலத் தில் பல்வேறு குழப்பமான சூழ்நிலையில், போர்களில்வென்று நாடு பிடித்து வந்த மன்னர்களுக்கே தமது பெயர்களை வரலாற் றில் மட்டுமல்லாமல் வேறு பிற வடிவங்களிலும் நிலைத்திருக்கு மாறு செய்ய வேண்டும் என்ற துடிப்பு இருந்துள்ளது. அத்துடிப் பின் பயனால் பலநிலைகளில் தமது பெயர்களைப் பொறித்துச் சென்றுள்ளார்கள். அம்முயற்சிகளில் ஒன்றுதான் தங்களால் அமைக்கப்பட்ட ஊர்களையும் தங்களது பெயர் விளங்குமாறு அமையச் செய்தது.

இம்மாவட்டத்தில் பல்வேறு பிறநாட்டு மன்னர்களின் படை யெடுப்பு அடிக்கடி நிகழ்ந்துள்ளது. பிறமொழி பேசும் மன்னர் பலர் இப்பகுதியை ஆண்டுள்ளனர். அவர்களில் பெரும்பா லோர் தங்களது பெயர்கள் விளங்குமாறு ஊர்ப்பெயர்களை அமைத்துச் சென்றுள்ளனர். ஆங்கிலேயர் காலத்தில் பல ஊர் கள் அவர்களது பெயர்களைப் பெறுமாறு அமைந்துள்ளன. ஊர்ப் பெயர்களில் ஆங்கிலச் சொற்கள் இடம்பெறுமாறும் பல ஊர்கள் இங்கு அமையக் காரணமாக இருந்தது ஆங்கிலேயர் ஆட்சி.

இந்திய நாடு சுதந்திரம் பெற்ற பிறகும் ஊர்ப்பெயர்களில் தனிமனிதப் பெயர்கள் இடம்பெறும் நிலை தொடர்ந்து கொண்டே வந்தது. சுதந்திரப் போருக்கு மூல காரணமாக இருந்த மகாத்மா காந்தி, நேரு போன்ற அகில இந்திய அரசியல் தலைவர்கள் பெயர்களிலும், காமராசர், இராசாசி, கக்கன்'' பக்தவட்சலம் போன்ற தமிழகத் தலைவர்கள் பெயர்களிலும் பல ஊர்கள் தமிழ்நாட்டில் தோன்றியுள்ளன. அவையேயன்றி,

வ.உ.சி, பாரதி, திருப்பூர்க்குமரன், வாஞ்சி நாதன் போன்ற சுதந்திரப் போராட்ட வீரர்களின் பெயர்களிலும் ஆங்காங்கு சில ஊர்கள் தோன்றியுள்ளன.

அன்றைய ஆளுங்கட்சியாக காங்கிரசுக் கட்சி இருந்ததால் அக் கட்சித் தலைவர்களின் பெயர்களே பெரும்பாலும் ஊர்ப்பெயர் களாக அமைந்தன. வ.உ.சி, பாரதி, திருப்பூர்க்குமரன் போன்ற விடுதலைப் போராளிகளின் பெயர்களும், சில இடங்களில் வள்ளுவர், இளங்கோ, கம்பர் போன்ற இலக்கியப் படைப்பாளர் களின் பெயர்களும் பெரிய நகரங்களில் தெருப் பெயர்களாகவே அமைந்துள்ளன. இத்தகையோரது சேவை தெருப் பெயர்கள் சூட்டுமளவிற்குத்தான் என்று எண்ணிவிட்டார்கள் போலும்!

1967க்குப் பிறகு திராவிட இயக்கத்தைச் சேர்ந்தவர்களின் ஆட்சி தமிழகத்தில் அமையத் தொடங்கியது. இன்றளவும் அவ் வியக்கம் தொடர்பானவர்களின் ஆட்சியே தொடர்ந்துள்ளது. இவர்களது ஆட்சிக்குப் பிறகு தேசியப் பார்வை குறைந்து வட் டாரப் பார்வையே மிகுந்துள்ளதால் ஊர்ப்பெயர்களிலும் அதன் பிரதிபலிப்பைக் காணமுடிகிறது. திராவிட இனத் தலைவர்கள், தமிழ் மொழிப் படைப்பாளர்கள் போற்றப்படும் நிலை இவர் களது ஆட்சிக் காலத்தில் உருவாகியுள்ளதால் ஊர்ப்பெயர்களும் அதற்கேற்ப அமைந்துள்ளன.

தந்தை பெரியார் பெயரிலும், அண்ணா பெயரிலும், பல ஊர்கள், தெருக்கள், அமைந்துள்ளன; அமைந்தும் வருகின்றன. பெரியார், அண்ணா, கலைவாணர் என். எஸ். கே போன்ற தலைவர்கள் இயற்கை எய்திவிட்டமையால் அவர்களது சேவை யை எண்ணிப் போற்றும் விதத்தில் பல ஊர்கள், தெருக்கள், மாளிகைகள் அவர்கள் பெயர்களைப் பெற்றுள்ளன. மறைந்த தலைவர்களின் பெயர்கள் மட்டுமேயன்றி ஆளும் முதலமைச்சர் கள் பெயர்களால் ஊர்கள் அமையும் நிலையும் இந்நாட்டில் அண்மைக்காலத்தில் மிகுதியாகக் காணப்படுகிறது.

காங்கிரசு ஆட்சிக்காலத்தில் வித்திடப்பட்ட இம்முயற்சி மு. கருணாநிதி அவர்கள் முதலமைச்சராக விளங்கியபோது விருட்சமாக வளர்ந்துவிட்டது என்று கூறலாம். தந்தை பெரி யார், அண்ணா ஆகியோரது பெயர்களில் மட்டுமன்றி அன்றைய முதல்வராக இருந்த அவரது பெயரிலும் பல நகர்கள் அவரது ஆட்சிக் காலத்தில் தோன்றியுள்ளன. அவருக்குப் பின்னால்

தமிழக முதல்வராக இருந்துவரும் திரு. எம். ஜி. இராமச்சந்திரன் அவர்களது ஆட்சிக் காலத்திலும் முந்திய நிலை தொடர்ந்து கொண்டே வருவதைக் காணமுடிகிறது.

தனிப்பட்ட நோக்கம் எதுவுமின்றி, பொது நிலையில் இயற்கையமைப்பை அடிப்படையாகக் கொண்டு ஊர்ப்பெயர்கள் அமைந்த நிலை காலப்போக்கில் பல மாறுதல்களைப் பெற்று, தனிப்பட்ட நோக்கத்திற்காகவே ஊர்ப்பெயர்களை அமைப்பது என்ற நிலைக்கு இன்று வந்துள்ளது. இந்நிலையே இனியும் தொடரும் என்றே எண்ண வேண்டியுள்ளது.

**நிறைவுரை:**

ஊர்ப்பெயர்களின் தோற்றமும் வளர்ச்சியும், மனிதநாகரீகம், பண்பாடு முதலியன எவ்வாறு காலப்போக்கில் பலமாறுதல்களைப்பெற்று வளர்ந்துள்ளது என்பதை நன்கு தெளிவுபடுத்துகிறது. மனித எண்ணங்களின் வளர்ச்சிப்போக்கில் காணப்பட்ட நிறைகள், முரண்பாடுகள் முதலியனவற்றையும் கூட ஊர்ப்பெயர்களால் உணர முடிகிறது.

அண்மைக்காலம் தொட்டுத் தமிழர்களின் பொது வாழ்வு என்பது அரசியல் வாழ்வே என்று சொல்லப்படும் நிலை உருவாகியுள்ளதால் இனிமேல் இங்குப்புதிதாகத் தோன்றும் ஊர்ப்பெயர்கள் அனைத்தும் அவ்வப்போது நாட்டை ஆளும் அரசியல் கட்சிகளின் மனநிலைக்கு ஏற்பவே அமையும் என்பது உறுதி. விதிவிலக்குகள் இருப்பினும் மிகக் குறைவாகவே இருக்கும்.

# ஊர்ப்பெயர்களால் உணரப்படுவன

ஊர்ப்பெயர்கள் பற்றிய ஆய்வு பல நிலைகளில் நிகழ்ந்தப் பட்டு வருகின்றன. செங்கை மாவட்ட ஊர்ப்பெயர்களைப் பற்றியும் பலவாறு ஆய்வு செய்யப்பட்டுள்ளது. இவ்வாறு ஊர்ப்பெயர்களை ஆய்வதன் நோக்கம், அப்படிச் செய்வதன் மூலம் எந்தெந்த அடிப்படைகளில் ஊர்ப்பெயர்கள் அமைந்துள்ளன என்பதையும், ஒரு நாட்டின் பல பகுதிகளில் அமைந்துள்ள ஊர்ப்பெயர்களிடையே காணப்படும் பொருத்தப்பாடுகள், வேறுபாடுகள் எவை என்பதனையும், அவற்றுக்குக் காரணம் எவையென்பதனையும் அறிவதேயாகும்.

இம்மாவட்ட ஊர்ப்பெயர்களால் உணரப்படும் செய்திகள் பல. அச்செய்திகளில் மிகுதியானவை தமிழகத்தின் பிற மாவட்டங்களில் அமைந்துள்ள ஊர்ப்பெயர்களாலும் உணரப்படுவனவாகவே உள்ளன. ஆனால் சில செய்திகள் இம்மாவட்ட ஊர்ப்பெயர்களால் மட்டுமே உணரப்படுபவைகளாக உள்ளன. அச்செய்திகள் பிற மாவட்டங்களிலிருந்து இம்மாவட்டம் எந் நிலைகளில் வேறுபட்டுக் காணப்படுகிறது என்பதை எடுத்துக்காட்டுகிறது. இது போன்ற வேறுபாடு பிற மாவட்ட ஊர்ப்பெயர்களில் காணப்படுதல் இயல்பு.

இம்மாவட்ட ஊர்ப்பெயர்களில் அமைந்துள்ள பொதுக்கூறுகள் சிறப்புக் கூறுகள் பற்றி ஆய்ந்து கூறப்பட்ட பகுதிகளிலேயே ஊர்ப்பெயர்களால் உணரப்படும் உண்மைகள் பல விரிவாகக் கூறப்பட்டுள்ளன. ஊர்ப்பெயர்களின் தோற்றமும் வளர்ச்சியும் பற்றிப் பொது நிலையில் ஆய்ந்து கூறப்பட்ட செய்திகளின் இடையிடையே இம்மாவட்ட ஊர்ப்பெயர்கள் அவ்வடிப்படையில் எவ்வாறு அமைந்துள்ளன என்பதை எடுத்துக்காட்டி, அதன் மூலம் உணரப்படுவன யாவை என்பதும் விளக்கப்பட்டுள்ளது. செங்கை மாவட்ட ஊர்ப்பெயர்களைப் பற்றிக் கூறப்பட்ட பொதுவான அறிமுகத்திலும் மாவட்டத்திலுள்ள ஊர்ப்பெயர்கள் அவ்வாறு அமைவதற்கான மூல ஆதாரங்கள் எவை என்பதும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. எனவே, இம்மாவட்ட ஊர்ப்

பெயர்களால் உணரப்படுவன யாவை என்பதைத்தனிப்பகுதியில் எடுத்துக்காட்டவேண்டும் என்ற அவசியம் இல்லை. எனினும் இந் நூலில் ஆங்காங்கு விரவிக் கிடக்கின்ற செய்திகளை வகைப்படுத் திக் கூறும்போது தெளிவான சில உண்மைகளை உணரமுடிகிறது, அந்நோக்கிலேயே இப்பகுதி அமைக்கப்பட்டுள்ளது.

இம்மாவட்ட ஊர்ப்பெயர்கள் ஏறத்தாழ மூவாயிரம் உள் ளன. அவற்றுள் பல ஊர்கள் சில பொதுத் தன்மைகளின் அடிப் படையில் ஒன்றுபடுகின்றன. அவ்வாறு காணப்படும் ஒப்புமைக் கூறுபாடுகளின் அடிப்படையிலேயே பொதுக்கூறுகள், சிறப்புக் கூறுகள் ஆய்ந்து கூறப்பட்டன. அவ்வடிப்படைகளை நோக் கும்போது இம்மாவட்ட ஊர்ப்பெயர்களின் மூலம் சில புதிய உண்மைகளையும் உணர முடிகிறது. அவ்வுண்மைகளை உணரத் துணை செய்யும் ஊர்ப்பெயர்கள் அனைத்தையும் இங்கு எடுத் துக்காட்ட வேண்டியது அவசியம் இல்லை. அப்படிக் கூறுவது 'கூறியது கூறல்' என்னும் குற்றம் பயப்பதாக அமையும்.

பொதுவாக, இம்மாவட்ட ஊர்ப்பெயர்களால் உணரப்படும் செய்திகள் யாவை என்பது சில வகைப்பாடுகளின் அடிப்படையில் இங்கு எடுத்துக்காட்டப்படும். ஒவ்வொரு வகைக்கும் சில சான்று களே இப்பகுதியில் தரப்பட உள்ளன. அச்சான்றுகளின் அடிப் படையில் இந்நூலின் முற்பகுதியில் எடுத்துக்காட்டப்பட்ட பிற ஊர்ப்பெயர்களையும் ஒப்பிட்டு உணர்ந்து கொள்ளலாம்.

**ஊர்ப்பெயர் அமைப்பு:**

தனிப்பட்ட முறையில் ஒவ்வொரு ஊரும் எவ்வாறு அமைந் துள்ளது என்பது பொதுக்கூறு, சிறப்புக்கூறுகளின் அடிப்படை யில் ஆய்ந்து கூறப்பட்டது. பொது நிலையில் இம்மாவட்டத்தில் உள்ள ஊர்களின் பெயர்கள் எவ்வாறு அமைந்துள்ளன என் பதை நோக்கும்போது மூன்று அடிப்படையில் அவைகளை வகைப்படுத்தி அறியலாம்.

(1) இயல்பாக உள்ள பழைய பெயர்கள்
(2) மாறுதல் பெற்ற பெயர்கள்
(3) புதிதாக அமைந்த பெயர்கள்

என்று அவ்வகைப்பாடுகளைக் குறிப்பிடலாம். இயல்பாக உள்ள பெயர்களை எல்லா மாவட்டங்களிலும் பொதுவாகக் காணப்

படும். மாறுதல் பெற்ற பெயர்கள் அம்மாவட்டங்களில் ஏற்பட்டுள்ள சில மாற்றங்களுக்கேற்ப வேறுபடும். புதிதாக அமைந்த பெயர்கள் அம்மாவட்டத்தின் தனித்தன்மையைப் புலப்படுத்தும். இவ்வகைப்பாடுகளைப் பற்றிச் சிறிது விரிவாக இங்குக் காணலாம்.

1. இயல்பாக உள்ள பழைய பெயர்கள்:

பொதுவாகத் தமிழ்நாட்டின் பிற மாவட்டங்களில் பரவலாகக் காணப்படும் மிகுதியான ஊர்ப்பெயர்கள் பழைய பெயர்களாகவே உள்ளன. ஊர்ப்பெயர்கள் தமிழ் நாட்டில் தொடக்க காலத்தில் தோன்றிய நிலை, காலப்போக்கில் சமுதாய மாற்றங்களுக்கு ஏற்ப வளர்ச்சி பெற்ற நிலை ஆகியனவற்றைப் புலப்படுத்துமாறு பல ஊர்ப்பெயர்கள் செங்கை மாவட்டத்தில் அமைந்துள்ளன. ஊர்ப்பெயர்களின் தோற்றமும் வளர்ச்சியும் என்ற பகுதியில் எடுத்துக்காட்டப்பட்ட ஊர்ப்பெயர்கள் அனைத்தும் இம்மாவட்டத்தில் இயல்பாக அமைந்த பழைய ஊர்ப்பெயர்கள் ஆகும்.

'சிறப்புக் கூறுகள்' என்ற பகுதியில் விரிவாக எடுத்துக் கூறப்பட்ட ஊர்ப்பெயர்கள் அனைத்தும் இம்மாவட்டத்தில் இயல்பாக அமைந்த பழைய ஊர்ப்பெயர்களேயாகும்.

மலை, குன்று, பாறை, காடு, கழனி, மணல், கடல் போன்ற இயற்கைப் பிரிவுகளைப் பொதுக் கூறுகளாகவும் சிறப்புக் கூறுகளாகவும் பெற்று அமைந்துள்ள ஊர்ப்பெயர்கள் யாவும் இயல்பாக அமைந்த பழைய ஊர்ப்பெயர்கள் ஆகும். இவ்வடிப்படையில் அமைந்த ஊர்ப்பெயர்களே இம்மாவட்டத்தில் மிகுதியாகக் காணப்படுகின்றன. இம்மாவட்டத்தின் இயற்கையமைப்பு, இவ்வாறு ஊர்ப்பெயர்கள் அமைவதற்கு மூல காரணம் என்று கூறலாம்.

நாடு, நகரம், அகரம். அக்ரஹாரம், பட்டடை, பாளையம், பட்டணம், கோயில், பள்ளி, கோட்டை போன்ற பொதுக்கூறு, சிறப்புக் கூறுகளைப் பெற்று அமைந்த ஊர்கள் பின்னர் செயற்கையாக அமைக்கப்பட்டவையாகும். ஒவ்வொரு பொதுக்கூறும், சிறப்புக்கூறும் குறிப்பிட்ட காரணத்தின் அடிப்படையில் அமைந்துள்ளமை ஊர்ப்பெயர்களால் உணரப்படுகிறது. இவ்வாறு அமைந்த ஊர்ப்பெயர்களில் பல இயல்பாக அமைந்த பழைய ஊர்ப்பெயர்களாகவே உள்ளன.

ஊர், பாக்கம், சேரி, புரம், வாக்கம், வரம், பட்டு, குப்பம், பேட்டை போன்ற பொதுக்கூறுகளைப் பெற்ற பல ஊர்கள் இம் மாவட்டத்தில் மிகுதியாகக் காணப்படுகின்றன. இவ்வூர்ப் பெயர்கள் நேரடியாக இயற்கையமைப்பைப் புலப்படுத்தாவிட்டாலும் மருதம், நெய்தல் போன்ற இயற்கையமைப்பையொட்டி அமைந்துள்ள நிலையைப் புலப்படுத்தும். இவ்வாறு அமைந்த ஊர்களில் பல இயல்பாக அமைந்த பழைய பெயர்களையே பெற்றுள்ளன. அண்மைக் காலத்தில் தோன்றிய சில ஊர்கள் சிறிது மாற்றம் பெற்றும் அமைந்துள்ளன.

வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு ஆகிய எல்லைப் பெயர்களைச் சிறப்புக் கூறுகளாகப் பெற்று அமைந்த ஊர்ப்பெயர்களும், மேடு, பள்ளம், கரை, வேலி, குழி, ஓடை போன்ற நிலத்தின் தன்மையைப் புலப்படுத்தும் பொதுக் கூறுகளைப் பெற்று அமைந்த ஊர்ப்பெயர்களும் பெரும்பாலும் இயல்பாக அமைந்த பழைய பெயர்களாகவே உள்ளன

தாவரப் பெயர்கள், விலங்குப் பெயர்கள், பறவைகள் போன்ற உயிரினங்களின் பெயர்களைப் பெற்றும் பல ஊர்கள் அமைந்துள்ளன. சாதி, தொழில் போன்ற பல்வேறு அடிப்படையில் மனிதப் பெயர்களும் ஊர்ப்பெயர்களில் சிறப்புக் கூறுகளாக அமைந்துள்ளன. தெய்வங்களின் பெயர்களும் கூட ஊர்ப்பெயர்களில் இடம் பெற்றிருப்பது முந்திய பகுதிகளில்எடுத்துக் காட்டப்பட்டுள்ளன; இவ்வாறு அமைந்துள்ள ஊர்ப்பெயர்கள் யாவும் இயல்பாக உள்ள பழைய பெயர்கள் ஆகும்.

## 2. மாறுதல் பெற்ற பெயர்கள்:

இம்மாவட்ட ஊர்ப்பெயர்களில் சில பல்வேறு புதிய வடிவங்களைப் பெற்றுள்ளன. அவ்வூர்ப் பெயர்களின் இன்றைய வடிவங்களை நோக்கினால் அப்பெயர்கள் எவ்வடிப்படையில் அமைந்துள்ளன என்பதைப்புரிந்து கொள்ள முடியாது. ஆழ்ந்து நோக்கினால் அவ்வூர்ப்பெயர்களின் பழைய வடிவம் வேறாக உள்ளது புலனாகும். மூல வடிவத்தை நோக்கினால் அவ்வூர்ப் பெயர்கள் பொருத்தமான காரணங்களின் அடிப்படையிலேயே அமைந்துள்ளன என்பது தெளிவாகும்.

இயல்பாக அமையப் பெற்ற பழைய ஊர்ப்பெயர்களே காலப்போக்கில் இப்புதிய வடிவங்களைப் பெற்றுள்ளன. ஒரு

சில ஊர்ப்பெயர்கள் பிற்காலத்தில் தோன்றி, அதற்குள்ளாகவே அதன் மூலவடிவம் சிதைந்து அல்லது மாறுபட்டு வேறு புதிய வடிவத்தைப் பெற்றும் உள்ளன. இவ்வாறு மாறுதல் பெற்ற ஊர்ப்பெயர்களை, அவை பெற்றுள்ள மாற்றங்களின் அடிப்படையில் இரு பிரிவாக வகைப்படுத்தலாம்.

அ. சிறிது மாற்றம் பெற்ற ஊர்ப்பெயர்கள்
ஆ. பெருமளவு மாற்றம் பெற்ற ஊர்ப்பெயர்கள்

என்பன அவை. இவ்விரு பிரிவில் சிறிது மாற்றம் பெற்ற ஊர்ப் பெயர்களே இம்மாட்ட ஊர்களில் மிகுதி. முழுமையாக மாற்றம் பெற்ற ஊர்கள் சிலவே உள்ளன. அம்மாற்றங்களும் கூட ஊர்ப் பெயர்கள் பற்றிய ஆய்வாளர்களின் எண்ணங்களுக்கேற்ப வேறு படுகின்றன. இவ்விரு பிரிவில் அடங்கும் ஊர்ப்பெயர்களில் சில வற்றை, எடுத்துக் காட்டுகள் என்ற நிலையில் தனித்தனியாகக் காணலாம்.

**அ. சிறிது மாற்றம் பெற்ற ஊர்ப்பெயர்கள்:**

இவ்வூர்ப்பெயர்கள் பெரும்பாலும் இயல்பான, பழைய வடிவத்துடன் நெருங்கிய தொடர்புடையனவாகவே காணப்படு கின்றன. சிறிய அளவிலான எழுத்து மாற்றங்களையே இவை பெற்றிருப்பதால் இவ்வூர்ப் பெயர்களின் மூல வடிவம் எதுவாக இருக்கும் என்பதை எளிதில் ஊகித்து உணர்ந்துவிட முடியும். இவ்வாறு சிறு மாற்றங்களைப் பெற்ற ஊர்ப்பெயர்களில் சில இங்கு எடுத்துக்காட்டப்படுகின்றன.

**அச்சரப்பாக்கம் :** இவ்வூரின் இயல்பான பழைய வடிவம் அச்சிறு பாக்கம் என்பது. 'அ' என்பதைச் சுட்டாகக் கொண்டு அ+சிறு பாக்கம் என்று இவ்வூர் அமைந்திருக்கலாம். அச்சு+இறு+பாக்கம் என்ற அடிப்படையில் இவ்வூர்ப் பெயர் அமைந்திருப்பதாகக் கருதுவோரும் உண்டு. சிவனின் அச்சு முறிந்த புராணச் செய்தி யின் அடிப்படையில் இவ்வூர்ப் பெயர் அமைந்திருக்க வேண்டும் என்பது அவர்கள் கருத்து.

**படாளம் :** பாடலம் என்பதே இவ்வூரின் பழைய் பெயராகக் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது.[1] அது ஒரு வகை அணியைக்

---

1. செங்கற்பட்டு மாவட்டம்-சோ. ம. லெ-பக் : 196

குறிக்கும். வேறு பிற அணிகளைக் குறிக்குமாறும் சில ஊர்ப் பெயர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுவதால் பாடலம் என் பதே இவ்வூர்ப் பெயரின் பழைய வடிவம் என்று எண்ண ஏது வாகிறது.

**திருவிடந்தை :** இவ்வூர்ப் பெயரின் பழைய வடிவம் திருவிட எந்தை என்பதாகும் என்று கூறப்படுகிறது.[2] திரு என்பது திருமகளைக் குறிக்கும். திருமகளைத் தமது இடப்பாகத்திலே கொண்ட எந்தையாகிய திருமால் என்ற பொருளை உணர்த்து மாறு இவ்வூர்ப் பெயர் அமைந்துள்ளது இலந்தை என்ற மரப் பெயரின் அடிப்படையில் இவ்வூர்ப் பெயர் அமைந்திருககலாம்; அங்கு இறைவன் உறையும் பெருமை கருதி 'திரு' என்ற அடைச் சொல் சேர்ந்திருக்கலாம்; காலப்போக்கில் இலந்தை, இடந்தை யாகி இருக்கலாம் என்பது இந்நூலாசிரியர் கருத்து. திரு நெல்லிக்கா, திருநாவலூர் என்று பிற பெயர்கள் அமைந்திருப்ப தும் ஒப்பு நோக்கியறிதற்குரியது.

**அம்மணம்பாக்கம் :** சமணர் என்ற சொல் அமணர் என்றும் மருவி வழங்கப்படும். சமணர் உறையும் பாக்கம் என்ற பொருள் புலப் படுமாறு சமணம் பாக்கம் என்றிருந்த ஊர் காலப்போக்கில் அமணம் பாக்கம் என்று ஆகிப் பின்னர் அம்மணம்பாக்கம், அம்மணப்பாக்கம் என்றெல்லாம் வெவ்வேறு வடிவங்களைப் பெற்றுள்ளன.

**பொத்தேரி :** புதிய ஏரி என்ற பொருள் பயக்குமாறு புத்தேரி என்பதுவே இவ்வூரின் பழைய. இயல்பான பெயர். பின்னர் பொத்தேரி என்று மாற்றம் பெற்றுள்ளது. பொத்தகம் என்ற பழைய பெயர் புத்தகம் என்று இன்று புதுவடிவத்தைப் பெற்றுள்ளது. அதற்கு நேர்மாறான மாற்றத்தை இவ்வூர்ப் பெயர் பெற்றுள்ளது.

**காட்டாங்கொளத்தூர் :** காட்டான் குளத்தூர் என்பதுவே இவ் வூர்ப்பெயரின் பழைய வடிவம் ஆகும். காடு+ஆ+குளம்+ஊர் என்பதுவே அவ்வாறு அமைந்துள்ளது என்று கூறப்படுகிறது.[3] அவ்வாறு அமைந்திருந்தால் காட்டாக்குளத்தூர் என்றே

---

2. செங்கற்பட்டு மாவட்டம்-சோ. ம. லெ-பக் : 190
3. செங்கற்பட்டு மாவட்டம்-சோ. ம. லெ-பக் : 182

அமைந்திருக்கும். 'ஆ' என்பதற்குப்பதில் 'ஆன்' என்று சேர்த்துப்பொருள் காணவேண்டும். அப்போதுதான் காட்டான் குளத்தூர் என்ற பொருள் பொருந்தி அமையும்.

**திருப்புக்குழி :** இவ்வூர்ப் பெயரின் பழைய வடிவம் திருப்புள்குழி என்பது. புள் என்றால் பறவை என்று பொருள். இவ்வூர், பறவை இறைவனை வழிபட்ட இடமாகக் கருதப்படுவதால் அப்பெயர் அமைந்துள்ளது. திருப்புள்குழி என்பது திருப்புன் குழியாகிப்பின்னர் திருப்புக்குழியாக இன்று மாற்றம் பெற்றுள்ளது.

**ஈக்காடு:** ஈச்சமரங்கள் நிறைந்த காட்டுப் பகுதியில் அமைந்த ஊர் ஈச்சங்காடு என்று பெயர் பெற்றுள்ளது. காலப்போக்கில் ஈச்சங் காடு என்பது ஈக்காடு என்று சுருக்கமாக அமைந்துள்ளது. ஈக்கள் நிறைந்த காடு என்று பொருள் கொள்ளுமாறு ஊர்ப்பெயர் அமைய இயலாதாகையால் ஈச்சங்காடு என்பது ஈக்காடாக மாற்றம் பெற்றுள்ளது என்பதுவே பொருத்தமாக அமையும்.

**பட்டறை :** இச்சொல்லுக்கு நேரடியான பொருள் உலைக்களம் எனப்படும். அவ்வடிப்படையில் ஊர்ப்பெயர் அமைந்திருக்க இயலாது. பட்டடை என்பதுவே பட்டறை என்று மருவி வழங்கப்படுகிறது. பட்டடை என்ற சொல் கழுத்தணி என்ற பொருளையும், பட்டடைக் கழனி என்பது இறைப்புப் பாசனத் தால் பயிரிடப்படும் நிலம் என்ற பொருளையும் தரும் என்பர்.[4] இவ்விரு பொருளுமே ஏற்புடைத்தாக அமைவதால் பட்டடை என்பதுவே பட்டறை என்பதன் பழைய வடிவம் என்பது தெளி வாகும்.

**செங்கல்பட்டு :** இவ்வூர்ப் பெயர் அமைவிற்குப் பல காரணங்கள் கூறப்படுகின்றன. எனினும் பலராலும் வலியுறுத்தப்படும் இதன் பழைய வடிவம் செங்கழுணீர்ப்பட்டு என்பதுவேயாம். செங்கழுணீர்ப் பூக்கள் இவ்வூரைச் சுற்றியுள்ள ஓடைகளிலும் ஏரிகளிலும் மிகுந்து காணப்பட்ட காரணத்தின் அடிப்படையில் இப்பெயர் அமைந்துள்ளதாகக் கூறுவர். செங்கழுணீர்ப்பட்டு என்பதுவே காலப்போக்கில் குறுகி செங்கற்பட்டு என்றாகியது என்று கூறப்படுகிறது.

சான்றுக்குச் சில ஊர்களே இங்கு எடுத்துக் காட்டப்பட்டன, இன்னும் பல ஊர்கள் இவ்வாறு சிறு மாற்றங்களைப் பெற்று இம்

---

4. Tamil Lexicon-Vol-IV P: 2419

மாவட்டத்தில் அமைந்துள்ளன. அவ்வூர்கள் பொதுக்கூறுகளை விளக்கிய இடங்களில் தெளிவு படுத்தப்பட்டுள்ளமையால் இங்கு மீண்டும் கூறப்படவில்லை.

ஆ. பெருமளவு மாற்றம் பெற்ற ஊர்ப்பெயர்கள் :

எழுத்தளவில் மாற்றங்களைப் பெற்று அமைந்த ஊர்கள் சிறு மாற்றங்களைப் பெற்றவை என்று கூறப்பட்டதுபோல் சொல்லளவில் மாற்றங்களைப்பெற்று அமைந்த ஊர்கள் பெருமளவு மாற்றம் பெற்ற ஊர்களாகக் கருதப்படுகின்றன. இவ்வூர்ப்பெயர்களின் பழைய வடிவங்களை அவ்வளவு எளிதில் ஊகித்துணர முடியாது. வரலாறு, கல்வெட்டு, இலக்கியம் போன்ற பழைய சான்றுகளைக்கொண்டே உணரமுடியும்.

பெருமளவு மாற்றம் பெற்ற ஊர்ப்பெயர்களின் இன்றைய வடிவங்களைக் கொண்டு அவ்வூர்ப்பெயர்களுக்கான காரணத்தை எளிதில் உணரமுடியாது. சில ஊர்ப்பெயர்கள் பொருளற்றவை போலவும் காணக்கூடும். பழைய வடிவங்களைக் காணும் போதே உண்மை புலப்படும். இவ்வாறு அமைந்த ஊர்களில் சில இங்கு எடுத்துக்காட்டப்படுகின்றன.

**மதுராந்தகம் :** இவ்வூர்ப்பெயரின் பழைய வடிவம் மதுராந்தக சதுர்வேதி மங்கலம் என்று கூறப்படுகிறது.[5] மதுராந்தக சோழன் என்பவன் அந்தணர்களுக்கு இறையிலியாக வழங்கப்பட்ட ஊர் என்பது. சதுர்வேதிமங்கலம் என்பது கொண்டு உணர முடிகிறது. அவன், மதுரைக்கு (பாண்டியர்க்கு) அந்தகனாக விளங்கியமை கருதி இப்பெயர் அமைந்ததாகவும் கூறுவர்.

**சோகண்டி :** இவ்வூர்ப்பெயரின் பொருளை உணர்ந்து கொள்வது அரிதாக உள்ளது. எந்த அகராதியின் துணைகொண்டும் இவ்வூர்ப்பெயரை நேரடியாக உணரமுடியவில்லை. சோ என்பது வாணாசுரன் நகரைக்குறிக்கும்.[6] கண்டி என்பது சிறு கீரையை உணர்த்துகிறது.[7] எனவே இவற்றின் பழைய வடிவம் வேறாகவே இருக்கும் என்பது உறுதியாகிறது. அப்படி நோக்கும்போது, சோகண்டி

---

5. செங்கற்பட்டு மாவட்டம்:சோ. ம. லெ. பக். 188
6. Tamil Lexicon - Vol-III - Part I
7. ,, ,, Vol-IV - part III

என்பது சுந்தரபாண்டியச்சதுர்வேதி மங்கலம் என்ற ஊரின் சுருங்கிய வடிவம் என்பது தெரிய வருகிறது.[8]

**செவிலிமேடு** ; இவ்வூர்ப்பெயரின் பழைய வடிவம் செவ்வல்லி மேடு என்பதுவாகும். சிவந்த அல்லி மலர்கள் நிறைந்த குளத்தையுடைய மேட்டுப்பாங்கான ஊர் என்ற பொருளைத் தருமாறு இவ்வூர்ப்பெயர் அமைந்துள்ளது.

ஒரு மன்னன், தன் வளர்ப்புத் தாயாகிய செவிலிக்கு வழங்கப்பட்ட ஊர் இது அதனால் இப்பெயர் பெற்றது என்றும் கூறப்படுகிறது.[9] அது பொருத்தமாகப் படவில்லை. செவ்வல்லி மேடு, செவிலிமேடாக மாறியுள்ளது என்பதுவே பொருத்தமாக அமைகிறது

**நாயர்** : கேரள நாட்டைச் சேர்ந்த குறிப்பிட்ட இனத்தைச்சுட்டுவதாக இவ்வூர்ப்பெயர் அமைந்துள்ளது. இது ஊர்ப்பெயர் அமைப்பில் புதுமையாகும். தமிழ்நாட்டு இனப்பெயர்களின் அடிப்படையிலும் ஊர்கள் காணப்பட்டாலும் அத்துடன் பின் ஒட்டாகப் பொதுக்கூறும் காணப்படும். இடையன் தாங்கல் என்பது போலவே அமைந்திருக்கும். எனவே நாயர் என்பது இனத்தை நேரடியாக உணர்த்துமாறு ஊர்ப்பெயராக அமைந்திராது.

ஞாயிறு என்பதுவே நாயர் என்று மாறி அமைந்துள்ளதென்று கூறப்படுகிறது.[10] அவ்வாறு நேரடியாக ஞாயிறு, திங்கள் அல்லது சூரியன், சந்திரன் என்று குறிப்பிடுமாறும் ஊர்ப்பெயர்கள் அமைந்திருப்பதாகத் தெரியவில்லை. எனவே கோட்டையை உணர்த்தும் ஞாயில் என்பதுவே காலப்போக்கில் மருவி நாயர் என்று ஆகியுள்ளது எனக் கருதலாம்.

**திருவான்மியூர்** : 'திரு' என்ற அடைச்சொல் சிறப்பைப் புலப்படுத்துவதாக அமையும். எஞ்சிய சொல்லை நோக்கினால் வெளிப்படையாகப்பொருள் புலப்படுமாறு அமையவில்லை. எனவே இப்பெயரின் பழைய வடிவம் வேறாகவே இருக்கும் என்று எண்ணத்தோன்றுகிறது.

---

8. செங்கற்பட்டு மாவட்டம் - சோ. ம. லெ - பக். 134
9. ,, ,, - பக். 163
10 ,, ,, - பக். 89

திருவால்மீகியூர் என்பதுவே பின்னர் இவ்வாறு மாற்றம் பெற்றுள்ளதாகக் கூறப்படுகிறது.[11] சிவனும், பார்வதியும் வால்மீகிக்குக் காட்சி கொடுத்த ஊராகையால் இது அம் முனிவர் பெயரைப்பெற்று அமைந்துள்ளது என்று கூறப்படுகிறது.

பூந்தமல்லி; இவ்வூர்ப்பெயரின் பழைய வடிவம் பூவிருந்தவல்லி என்று கூறப்படுகிறது. 'வெள்ளைத்தாமரைப் பூவிலிருப்பாள்' என்ற பாரதி பாடல் அடியை உணர்த்துமாறு இவ்வூர்ப்பெயர் அமைந்துள்ளதாகக்கூறப்படுகிறது.[12] ஆனால் அவ்வாறு குறிப்பிடுவது பொருந்தாது என்பது பொதுக் கூறுகள் பற்றி விளக்கப்பட்ட இயலில் 'மல்லி' என்ற பொதுக்கூறுடைய ஊர்களுக்கான விளக்கத்தில் கூறப்பட்டுள்ளது. எனவே, பூத்தமல்லி என்ற பழையபெயர் இன்று சிறு மாற்றத்துடன் பூந்தமல்லியாகியுள்ளது என்பதுவே பொருத்தமான விளக்கமாகும். பூவிருந்தவல்லி என்பதுவே பூந்தமல்லியாகியுள்ளது என்று பலராலும் நம்பப்படுவதால் பெருமளவு மாற்றம் பெற்ற ஊர்கள் வரிசையில் இவ்வூர்ப்பெயரையும் வைத்து நோக்க வேண்டியுள்ளது.

கருங்குழி : இவ்வூரின் பழமையான பெயர் குறுங்கோழியூர் என்று கூறப்படுவதுடன், இவ்வூர்ப்பெயரை உறுதிப்படுத்த, உத்திரமேரூர் அருகே பெருங்கோழியூர் என்று பிறிதோர் ஊர் உள்ளதனையும் எடுத்துக்காட்டுவர்[14] இதுவும் பொருந்தாது என்பது 'குழி' என்ற பொதுக்கூறுகளுக்கான விளக்கத்தில் கூறப்பட்டுள்ளது. கருங்குழி என்பதுவே பழமையான பெயர். வெங்குழி என்று பிறிதோர் ஊரும் இம் மாவட்டத்தில் இருக்கும் போது கருங்குழி என்று மட்டும் ஏன் இருக்காது? இவ்வூரின் பழைய வடிவம் குறுங்கோழியூர் என்று கூறப்படுவதால் இப் பகுதியில் இவ்வூர்ப்பெயரைப் பற்றியும் குறிப்பிட வேண்டியுள்ளது.

திருவடிசூலம் : இவ்வூர்ப்பெயரும் பொருள் புரிந்து கொள்ள முடியாதவாறு அமைந்துள்ளது. சூலம் என்ற ஆயுதத்தைப் பொதுக் கூறாகப் பெற்று இவ்வூர்ப்பெயர் அமைந்திருக்கக் கூடுமோ என்று ஐயுற வேண்டியுள்ளது. ஆனால் இதன் பழைய

---

11. செங்கற்பட்டு மாவட்டம்-சோ. ம. லெ - பக் 114
12. ,, ,, - பக். 131
13. ,, ,, – பக். 193

வடிவம் திரு இடைச்சுரம் என்று கூறப்படுகிறது.[14] இடைப் பட்ட வழி என்ற பொருள்படுமாறு இடைச்சுரம் என்பது அமையுமெனினும், 'திரு' என்ற அடைச்சொல் பொருந்துமாறு அமையவில்லை. எனவே, திரு+விடை+சூலம் என்ற அடிப் படையிலேயே இப்பெயர் அமைந்திருக்க வேண்டும் என்று எண்ண வேண்டியுள்ளது. விடை, சூலம் ஆகிய இரண்டும் சிவ பெரு மானுக்குரியது. அதனால் திரு என்ற அடைச்சொல்லும் சேர்ந் துள்ளது. திருவிடைசூலம், திருவடிசூலமாக மாறியுள்ளது.

**நெமிலி :** இவ்வூர்ப் பெயரும் புரியாத புதிராகவே அமைந் துள்ளது. நெமிலி என்ற சொல்லுக்கு நேரடியான பொருள் ஏதும் புலப்படவில்லை. நென்மேலி என்பதுவே நெமிலி என்று சுருக்கமாக வழங்கப் படுவதாகக் கூறப்படுகிறது[15] நென்மேலி நெமிலியாக மாறியிருக்கக் கூடும். ஆனால் நென்மேலி என்ற சொல் உணர்த்தும் பொருள் யாது என்பதும் புலப்படவில்லை. எனவே, நெல்வேலி என்பது காலப்போக்கில் நென்மேலியாகி, பின்பு நெமிலியாகக் குறுகியிருக்கலாம் என்பதுவே பொருத்தமாக அமைகிறது.

**அகரம் :** தமிழ் மொழியின் முதல் எழுத்தை உணர்த்துவது போல் இவ்வூர்ப்பெயர் உள்ளது பல ஊர்கள் இப்பெயரைப் பெற்றிருப்பதுடன், இப்பெயரைப் பொதுக்கூறாகப் பெற்றும் சில ஊர்கள் உள்ளன. இப்பெயர் அமைப்பை நோக்கும்போது, அக்ரஹாரம் என்ற வடசொல்லே குறுகி அகரமாகியுள்ளது என்று கூறப்படுகிறது.[16] அக்ரஹாரம் என்பது அந்தணர்களின் வாழ்விடம். ஆனால் பிற சமயத்தவர்களின் பெயர்களுடனும் அகரம் என்ற பொதுக்கூறு அமைந்துள்ளதால் அது அக்ரஹாரம் என்பதன் குறுகிய வடிவம் தானா என்று ஐயுற வேண்டியுள்ளது. சில இடங்களில் வேண்டுமானால் அப்பொருளில் அமைந்திருக்கக் கூடும். ஆனால் பிறசமயத்தவர் பெயர்களைக் குறிப்பிடும் இடங்களில் நகரம் என்பதே அதன் பழைய வடிவமாக இருக்க வேண்டும் என்பது 'பொதுக்கூறுகள்' பகுதியில் விளக்கப்பட் டுள்ளது. நகரம், அகரமாக மாறியுள்ளது. அக்ரஹாரம், அகர

---

14. செங்கற்பட்டு மாவட்டம் சோ.ம.லெ—பக்: 174
15. ,, ,, பக். 174
16. ,, ,, பக். 176

மாகியுள்ளதாகக் கருதப்படுவதால் இப்பகுதியில் இவ்வூர்ப்பெயர் ஆராயப்படுகிறது.

சில ஊர்கள் இங்கு எடுத்துக் காட்டப்பட்டன. பெருமளவு மாற்றம் பெற்ற வேறு சில ஊர்கள் 'பொதுக்கூறுகள்' பற்றிக் கூறப்பட்ட பகுதியில் விளக்கப்பட்டுள்ளன. முற்றிலும் மாறுபட்ட சில ஊர்ப்பெயர்களும் உள்ளன. இன்று வேளச்சேரி என்று வழங்கப்படும் ஊரின் பழைய வடிவம், 'தினச்சிந்தாமணி சதுர்வேதி மங்கலம்' என்று கூறப்படுகிறது.[17] வேளச்சேரி என்று இன்று வழங்கப்படும் பெயரே பொருள் புரியுமாறு அமைந்திருப்பினும் அதற்கு வேறோர் பெயரும் உள்ளதை உணரமுடிகிறது. அந்தணர்களுக்கு வழங்கப்படுவதற்காக அவ்வூர் உருவாக்கப்பட்ட போது முந்திய பெயரைப்பெற்று, பின்னாளில் அந்தணர்களின் செல்வாக்குக்குறைந்த போது வேளச்சேரி என்ற பெயரைப் பெற்றிருக்கக்கூடும். மீஞ்சூர் என்று இன்று வழங்கப்படும் ஊரின பழைய பெயர் கல்லாடம் எனப்படுகிறது.[18]

இவ்வாறு முழுமையுமாக இன்று வேறு பெயர்களைப் பெற்று வழங்கப்படும் ஊர்கள் வேறு சிலவும் இம்மாவட்டத்தில் இருத்தல் கூடும்.

### 3. புதிதாக அமைந்த பெயர்கள் :

முன்னிரண்டு பிரிவில் அடங்கும் ஊர்ப்பெயர்களுக்கு இடையில் நெருங்கிய தொடர்பு உண்டு. பழைய பெயர்கள், இயல்பானவைகளாகவும் எளிதில் பொருள் உணர்ந்து கொள்ளத் தக்கனவாகவும் இருக்கும். அப்பெயர்கள் காலப் போக்கில் பெற்ற மாற்றங்களைக் காட்டுமாறு இரண்டாம் பிரிவில் அடங்கிய ஊர்ப்பெயர்கள் இருந்தன. இருபிரிவுகளுக்கும் இடையில் வேறுபாடு காணப்பட்டாலும் இவ்வூர்ப் பெயர்கள் யாவும் தமிழ்ப்பெயர்களேயாம். ஆனால் புதிதாக அமைந்த ஊர்ப் பெயர்கள் பிறமொழிச் சொற்களால் ஆனவைகளாகவும் தமிழுடன் பிற மொழிச்சொல் கலந்தனவாகவும் அமைந்துள்ளன. இப்படி அமைந்த ஊர்ப்பெயர்கள் புதிதானவைகளாகவும் புதுமையானவைகளாகவும் உள்ளன.

---

17. செங்கற்பட்டு மா வட்டம் சோ.ம.லெ—பக்: 62
18. ,, ,, 118

செங்கற்பட்டு மாவட்ட ஊர்ப்பெயர்களைப் பொறுத்த வரையில் தமிழுடன் பிற மொழிகளாகிய ஆங்கிலம், வடமொழி, தெலுங்கு போன்ற மொழிச்சொற்களும் ஊர்ப்பெயர்களில் விரவி இடம் பெற்றுள்ளன. ஆனால் ஆங்கிலப் பெயர்களைப் பெற்ற ஊர்களே புதிதாகத் தோன்றியவையாகும்.

**ஆங்கிலப் பெயர்கள் :** ஊர்ப்பெயர் முழுமையுமாக ஆங்கிலப் பெயர்களாகவும், தமிழ்ச்சொல் கலந்த ஆங்கிலப் பெயர்களாகவும் இருநிலையில் ஊர்ப்பெயர்கள் அமைந்துள்ளன.

ஜெயின்ட் தாமஸ் மவுண்ட், புலிக்கட், சட்ராஸ், மெட்ராஸ் போன்ற சில ஊர்ப்பெயர்கள் முழுமையும் ஆங்கிலத்தில் அமைந்துள்ளன. அப்படியமைந்த ஆங்கிலப் பெயர்களுக்கு இணையாகத் தமிழ்ப் பெயர்களையும் அவ்வூர்கள் பெற்றுள்ளன.

ஹாட்சன் பேட்டை, அடிசன் புரம், பிளேஸ் பாளையம், குரோம்பேட்டை, பாதர்வாடி, மதர்வாடி, சிங்கிள்பாடி. கிரீன் வேல் நத்தம், ஜங்கல் பள்ளி, பாலேஸ்வரம் போன்ற ஊர்கள் ஆங்கிலப் பெயரும் தமிழ்ப் பெயரும் விரவி அமைந்துள்ளன. பேட்டை, புரம், பாளையம், வாடி, பாடி, நத்தம், பள்ளி, வரம் போன்ற பொதுக்கூறுகள் தமிழ்ச் சொற்களாகும். ஆனால் முன் ஒட்டுகளாகிய சிறப்புக் கூறுகளாக ஆங்கிலப் பெயர்கள் இடம் பெற்றுள்ளன. இப்பெயர்கள் யாவும் சென்ற நூற்றாண்டில் ஏற்பட்டவையாகும்.

இம்முறையைப் பின்பற்றிப் பல ஊர்கள் இன்றும் தோன்றி வருகின்றன. செங்கற்பட்டு நகரைச் சார்ந்து என்.ஜி.ஓ நகர் என்ற ஓர் புதிய ஊர் அண்மையில் தோன்றியுள்ளது. எம்.ஜி.ஆர் நகர் என்ற பெயரில் பல ஊர்கள் ஆங்காங்கு தோன்றியுள்ளன. இன்று புதிதாகத் தோன்றிவரும் ஊர்களெல்லாம் பெரும்பாலும் அவை சிறு கிராமங்களாக இருப்பினும் நகர் என்ற பொதுக்கூறு பெற்றே அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**பிறவகைப் பெயர்கள் :** ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் ஆங்கிலச் சொற்களால் ஊர்ப்பெயர்கள் அமைந்துள்ளது போன்று, ஆங்கில ஆட்சிக்கு முன்னர்த் தோன்றிய இசுலாமியர் ஆட்சிக்காலத்தில் பல ஊர்ப்பெயர்கள் அவர்களது பெயர்களைக் குறிப்பிடுமாறு உருதுச் சொற்களில் அமைந்துள்ளன.

அப்துல்லாபுரம், ஒலி முகம்மதுப் பேட்டை, மாபூஸ்கான் பேட்டை, உசேன் நகரம், இப்ரஹாம்புரம், துலுக்கன் தண்டலம்,

அசனாபாத் பட்டடை, மொகல்வாடி, மொகல்பேர் ஆகிய ஊர்ப் பெயர்கள் இசுலாமியப் பெயர்களாக உள்ளன. வேறு சில பொது கூறுகளைப் பெற்ற ஊர்களிலும் இசுலாமியப் பெயர்கள் அமைந்துள்ளன.

விஜயநகரப் பேரரசின் ஆட்சிக்காலத்தில் பல பாளையங்கள் இம்மாவட்ட ஊர்ப்பெயர்களில் தோன்றியுள்ளன. தெலுங்கு மொழியமைப்பில் பல ஊர்கள் இம்மாவட்ட ஊர்ப்பெயர்களில் காணப்படுகின்றன. அவ்வூர்கள் அனைத்தும் பாளையக்காரர்களின் ஆட்சிக்காலத்தில் தோன்றியவைகளாகும். அவ்வூர்ப் பெயர்கள் பற்றி முன்னர்ப் பல இடங்களில் இந்நூலினுள் தெளிவுபடுத்தப்பட்டுள்ளன.

பல்லவர்களின் ஆட்சிக் காலத்திலிருந்தே அந்தணர்கள் செல்வாக்குப் பெற்று விளங்கியுள்ளனர். அவர்களைத் தொடர்ந்து வழிவழியாக வந்த அரசர்களும் அந்தணர்களைப் போற்றிப் பல ஊர்களை அவர்களுக்குத் தானமாக வழங்கியுள்ளமையால் வடமொழிச் செல்வாக்கு இம்மாவட்டப் பகுதியில் மிகுந்து காணப்பட்டுள்ளது. இம்மாட்ட ஊர்ப்பெயர்கள் பலவற்றில் வடமொழிச் சொற்கள் விரவிக் காணப்படுவதற்குரிய காரணம் அதுவேயாகும்.

உருது, தெலுங்கு, வடமொழி போன்ற பிறமொழிப் பெயர்களின் அடிப்படையில் ஊர்ப்பெயர்கள் தோன்றத் தொடங்கிய காலம் முந்தியவையாக இருப்பினும், அப்பெயர்களைப் போன்ற பல புது ஊர்ப்பெயர்கள் அண்மைக்காலத்திலும் இம்மாவட்டத்தில் தோன்றியுள்ளன. எனவே, ஆங்கிலம் தவிர பிறமொழிகளின் அடிப்படையில் தோன்றிய ஊர்களைப் பற்றியும் இப்பகுதியில் எண்ண வேண்டியுள்ளது.

அண்மைக்காலத்தில் அரசியல் தலைவர்களின் பெயர்களாலேயே பெரும்பாலான ஊர்களும் சில இடங்களில் விடுதலைப் போராட்ட வீரர்கள், தமிழ் இலக்கியப் படைப்பாளர் பெயர்களால் சில ஊர்களும் தோன்றிவருகின்றன. அவரவர் பெயர்களுக்கேற்ப ஊர்ப்பெயர்களில் இடம்பெறும் சொற்களின் மொழிகள் வேறுபட்டாலும், பெரும்பாலும் தமிழ்ப் பெயர்களாக ஊர்ப்பெயர்கள் அமையவேண்டும் என்ற எண்ணம் அண்மையில் வலுப்பெற்றுள்ளது.

**ஊர்ப்பெயர் உணர்த்துவன :** செங்கை மாவட்ட ஊர்களின் பெயர்கள் எவ்வாறு அமைந்துள்ளன என்பதனையும், பெயர்களிடையே காணப்படும் மாறுதல்கள், அதற்கான காரணங்கள்

முதலியனவும் விளக்கப்பட்டன. ஊர்ப்பெயர்களின் பொதுக்கூறு, சிறப்புக் கூறுகளை ஆய்ந்ததன் அடிப்படையில் சில உண்மைகள் உணரப்பட்டுள்ளன. அவைகளுக்கான அடிப்படைக் காரணங்கள் ஆங்காங்கு விளக்கப்பட்டுள்ளன. எனினும் அவைகளைத் தொகுத்து நோக்குதல், பொதுவாக மாவட்ட நிலையை ஊர்ப் பெயர்கள் மூலம் உணர்வதற்குத் துணையாக இருக்கும். அவ் வடிப்படையில் அவைகள் இங்குத் தொகுத்துத் தரப்படுகின்றன.

1. இம்மாவட்ட ஊர்களில் மிகுதியான ஊர்கள் 'ஊர்' என்ற பொதுக்கூறு பெற்றே அமைந்துள்ளன. அது மட்டுமன்றி இம்மாவட்டம் பற்றிய பல்வேறு புவியியல், வரலாறு தொடர்பான செய்திகளையும் உணர்வதற்கு 'ஊர்' என்ற பொதுக்கூறு பெரிதும் துணைசெய்கிறது. இயற்கையமைப்பு, நிலம், நீர், மண் வகை பற்றிய குறிப்பு, சாதி அடிப்படையில் மனிதர், இப்பகுதியை ஆண்ட அரசர் பற்றிய செய்திகளை இப்பொதுக்கூறு உணர்த்துகிறது.

2. ஊர் என்பதற்கு அடுத்த நிலையில் 'பாக்கம்' என்ற பொதுக்கூறு அமைந்துள்ளது. இம்மாவட்டத்தின் காடு, கழனி, கல், மரம், ஆறு முதலியவற்றை உணர்த்துவதுடன் பல்வேறு சாதிப் பெயர்களையும், கடவுளர் பெயர்களையும் இப்பொதுக்கூறு உணர்த்துகிறது.

3. பட்டு என்ற பொதுக்கூறைப் பெற்றுள்ள ஊர்களும் இம்மாவட்ட நிலையை உணரத் துணைசெய்கின்றன. பெரும்பாலும் இயற்கைத் தாவரங்களின் பெயர்களையும், சில இடங்களில் சாதிப் பெயர்களையும், சில தனிமனிதப் பெயர்களையும் இப்பொதுக்கூறு உணர்த்துகிறது.

4. சேரி என்ற பொதுக்கூறு பெற்ற ஊர்கள் பெரும்பாலும் செடிப் பெயர்களையும், மரப் பெயர்களையும் உணர்த்தவே அமைந்ததால் பிற மொழி பேசும் மக்கள் வாழும் பகுதிகளில், குறிப்பாக திருத்தணி வட்டத்தில் சேரி என்று முடியும் ஊர்கள் மிகக் குறைவு.

5. சேரியைப் போன்றே குப்பம் என்ற பொதுக்கூறும் தமிழகக் கிராமப்புறங்களில் உள்ள ஊர்ப்பெயர்களையே

உணர்த்துமாதலால், கிராமப்புறங்களில் உள்ள பல் வேறு சாதிப் பெயர்கள் ஊர்ப்பெயர்களில் உள்ளன.

6. புரம் என்று முடியும் பொதுக் கூறுகளிலும் கண்டிகை என்று முடியும் பொதுக்கூறுகளிலும் பெரும்பாலும் தனிமனிதர்களின் பெயர்களைப் பெற்றே ஊர்கள் அமைந்துள்ளன. ஆனால் இரண்டிற்கும் அடிப்படை வேறுபாடு ஒன்று உண்டு. கண்டிகை என்ற பொதுக்கூறு பெற்ற ஊர்களில் நாயுடு, ரெட்டியார், செட்டியார், ஆகிய சாதிப் பெயர்கள் தனிமனிதப் பெயர்களுடன் சேர்ந்து அமைந்துள்ளன. புரம் என்ற பொதுக்கூறு டைய ஊர்களில் இந்நிலை காணப்படவில்லை.

7. ஏரி என்ற பொதுக்கூறுடைய ஊர்கள் இம்மாவட்டத் தில் எங்கெல்லாம் உள்ளனவோ அங்கெல்லாம் புவி இயல் அடிப்படையில் நீர்நிலைகள் மிகுந்துள்ளன. திருத்தணி, திருவள்ளூர், கைதாப்பேட்டை வட்டங் களில் ஏரிகளும் இல்லை; ஏரி என்ற பெயருடைய ஊர் களும் இல்லை.

8 அக்ரஹாரம், அகரம், மங்கலம் என்ற பொதுகூறுடைய ஊர்கள் அந்தணர்கள் வாழ்விடங்களாக உள்ளன. அவைகளேயன்றி, குப்பம், குளம், சேரி, பாக்கம், ஊர் போன்ற பொதுக்கூறுகளையுடைய ஊர்களிலும் அந்தணர்களின் இனப் பெயர்கள் காணப்படுகின்றன.

9. ஊர், பாக்கம், பட்டு, மேடு, கரணை, குப்பம், சேரி, தாங்கல், பேடு, தண்டலம், பூண்டி, வாயல் ஆகிய பொதுக்கூறுகளையுடைய ஊர்களில் இயற்கைத் தாவரங்களின் பெயர்கள் மிகுந்து காணப்படுகின்றன. இயற்கையமைப்பையொட்டி இவ்வூர்கள் அமைந்துள் ளமை இதன் மூலம் புலப்படும்.

10. ஊர்ப்பெயர்களில் இடம் பெற்றுள்ள பிற மொழிக் கலப்பின் மூலம் எந்தக் காலத்தில் அவ்வூர்கள் தோன்றி யிருக்க முடியும் என்பதை உணர முடிகிறது. இயற்கைத் தாவரம், இயற்கையமைப்பு போன்றவற்றின் பெயர் களைப் பெற்ற ஊர்களில் பிறமொழிக் கலப்பு இல்லை. எனவே அவ்வூர்ப் பெயர்கள் காலத்தால் முந்தித்

தோன்றிய தமிழ்ப் பெயர்கள் என்பதை யுணர முடிகிறது.

11. இம்மாவட்ட ஊர்ப்பெயர்களில் காணப்படும் காடு, மலை, ஏரி, கழனி, தோட்டம் போன்ற பொதுக்கூறு களின் மூலம் இம்மாவட்டத்தின் புவிஇயல் அடிப்படை யிலான செய்திகள் அனைத்தையும் உணர முடிகிறது.

12. இம்மாவட்டத்தில் வாழ்ந்த மனிதர்களின் தொழில், சாதி போன்ற செய்திகளையும், கடவுளர், முனிவர், தேவர் தொடர்பான செய்திகளையும், பறவைகள், விலங்கினங்கள், மரங்கள் ஆகியனவற்றின் பெயர்களை யும் சிறப்புக்கூறுகள் விரிவாக விளக்குகின்றன.

ஒரு மாவட்டத்தின் புவிஇயல், வரலாற்று ஆய்விற்கு அம்மாவட்ட ஊர்ப்பெயர்களில் அமைந்துள்ள பொதுக் கூறுகளும், சிறப்புக் கூறுகளும் பெருந்துணை செய்யும் என்பதை இம்மாவட்ட ஊர்ப்பெயர்களால் உணரமுடி கிறது.

13. இம்மாவட்டத்தில் உள்ள நீர் நிலைகள், மண்வகை தொடர்பாகச் செய்யப்படும் ஆய்விற்கு ஊர்ப்பெயர் களின் சிறப்புக் கூறுகள் பெரிதும் பயன்படுமாறு அமைந்துள்ளன.

14 ஊர்ப்பெயர்கள் பெரும்பாலும் ஒப்புமை நோக்குட னேயே அமைக்கப்பட்டுள்ளன. கிழக்கு→மேற்கு, வடக்கு → தெற்கு, மேடு → பள்ளம், கறுமை → செம்மை அல்லது வெம்மை, மேல் → கீழ் என்ற அடிப் படையிலேயே அமைந்துள்ளன.

ஒப்புமைக் கூறுகளில் புது என்ற அடைச்சொல்லுக்கு மட்டும் ஒப்புமை கூறுமாறு பழைய என்ற அடைச்சொல் எவ்வூர்ப் பெயரிலும் இடம்பெறவில்லை.

14. ஊர்ப்பெயர்களில் தண்டல் கழனி, காவல் கழனி என்றெல்லாம் காணப்படுவது, வரிவசூலித்தல், ஊர் காவல் செய்தல் போன்ற தொழில்களுக்கெல்லாம் நிலங் கள் அன்பளிப்பாக அல்லது கூலியாக விடப்பட்டுள்ள நிலையைப் புலப்படுத்தும்.

16. செட்டி புண்யம்பேடு, அன்னதானவாக்கம், ஈகுவார் பாளையம் போன்ற ஊர்ப்பெயர்களை நோக்கும்போது அறப்பணி இம்மாவட்ட மக்களால் சிறப்பாகச் செய்யப் பட்டுள்ள தன்மையை உணரமுடிகிறது.

17. ஊர்ப்பெயர்களின் அமைப்பில் நல்லூர், புத்தூர் ஆகிய முடிவுகளைப் பெற்றுள்ள ஊர்கள் அண்மைக் காலத்தில் தோன்றியுள்ளமை புலப்படுகிறது.

18. ஊர்ப்பெயர்களின் அமைப்பில் சிறப்புக் கூறுகளும் பொதுக்கூறுகளும் தொடர்புடையனவாகவே காணப் படுகின்றன. விலங்கு, பறவைகளின் பெயர்கள் சிறப்புக் கூறுகளில் காணப்படுகின்றன. வேடு, வேடந்தாங்கல் போன்ற பொதுக்கூறுகள் மேற்கண்ட சிறப்புக் கூறுகளு டன் தொடர்புடையனவாக அமைந்துள்ளன.

19. பல மொழிகளைப் பேசும் பல்வேறு இனத்தைச் சேர்ந்த மக்கள் இம்மாவட்டம் உள்ளடங்கிய பகுதியில் வாழ்ந் துள்ளனர். உழவு, நெசவு, வேட்டையாடுதல் போன்ற பல திறப்பட்ட தொழில்களும் இம்மாவட்ட மக்களால் புரியப்பட்டுள்ளன. ஊர்ப்பெயர்களின் சிறப்புக் கூறு களால் இவற்றை யுணர முடிகிறது.

20. செங்கை மாவட்டம் உள்ளடங்கிய தொண்டை நாடு பல்வேறு காலகட்டங்களில் பல்வேறு ஆட்சியாளர் களால் ஆளப்பட்டுள்ளது. ஆட்சிபுரிந்த அனைவரையும் நினைவுபடுத்துமாறு அவ்வக் காலங்களில் பல ஊர்கள் தோன்றியுள்ளன.

**நிறைவுரை :**

பொதுவாகத் தமிழகத்திலுள்ள எல்லா மாவட்டங்களின் ஊர்ப்பெயர்களிலும் ஒப்புமைக் கூறுபாடுகளே மிகுந்துள்ளன. பிற மாவட்ட ஊர்ப்பெயர்களைப் போன்றே செங்கை மாவட்ட ஊர்ப்பெயர்களும் பெரும்பாலும் அமைந்துள்ளன. எனினும், இங்கு ஏற்பட்ட ஆட்சி, அரசியல் மாற்றங்களுக்கேற்ப ஊர்ப் பெயர்களின் அமைப்பும் சிறிது மாற்றம் பெற்றுள்ளது.

இம்மாவட்ட ஊர்ப்பெயர்களில் இயல்பான, பழைய பெயர் அடைகளைப் பெற்ற ஊர்களே மிகுதி. மாற்றம் பெற்ற ஊர்ப் பெயர்களும், புதிதாக, அண்மைக்காலத்தில் தோன்றிய ஊர்ப் பெயர்களும் குறைவாகவே காணப்படுகின்றன.

# செங்கை மாவட்டம் - ஓர் அறிமுகம்

'தொண்டை நன்னாடு சான்றோருடைத்து' என்று கூறுவர். சான்றோர் பலரை ஈன்றெடுத்த தொண்டை நாட்டின் ஒரு பகுதியாக அமைவது செங்கற்பட்டு மாவட்டம். தமிழக வரலாற்றில் தனிச் சிறப்புப் பெற்று விளங்கும் மாவட்டங்களில் இம் மாவட்டமும் ஒன்று. இலக்கியச் சிறப்பாலும், கலைப் பணியாலும், அரசியல் தொண்டாலும் ஆன்மீகப் பயிர் வளர்த்த மேன்மையாலும் இம்மாவட்டம் உலகம் போற்றும் உயர் சிறப்பைத் தமிழகத்திற்குப் பெற்றுத் தந்துள்ளது.

தமிழகத்தின் கிழக்குக்கரையில் அமைந்துள்ள இம்மாவட்டம் இயற்கையமைப்பால் இயல்பாகவே சிறந்து விளங்குகிறது. ஆழ்கடல் ஒரு பக்கம் அணி செய்ய, அழகிய குன்றுகள் ஆங்காங்கு காட்சிதர, நெல் விளையும் கழனிகள், நீர்வளம் கொண்ட ஏரிகள், முல்லை நிலக்காடுகள் என்று ஐவகை நிலப்பிரிவையும் பெற்று இம்மாவட்டம் சிறப்புற்று ஓங்குகிறது. பிறநாட்டார் பலரும் இம்மாவட்டம் உள்ளடங்கிய பகுதியை ஆட்சி செய்துள்ளனர். குறிப்பாகச் சொல்ல வேண்டுமென்றால், தமிழகத்தின் ஒரு பகுதியான இம்மாவட்டத்தைத் தமிழர்கள் ஆண்ட காலத்தைக் காட்டிலும் பிற நாட்டினர் ஆண்ட காலமே அதிகம். தெலுங்கு மொழி பேசப்படும் ஆந்திர மாநிலத்திற்கு அண்மையில் இம்மாவட்டம் அமைந்துள்ளதால் அம்மொழியின் செல்வாக்கும், அம்மாநிலத்தினரின் பண்பாட்டின் சாயல்களும் இம் மாவட்ட மக்களை வெகுவாகப் பாதித்துள்ளது. எனினும் தன்னியல்பில் மாறாது பல நிலைகளிலும் இம்மாவட்டம் தமிழகத்திற்கே வழிகாட்டியாக அமைந்து விளங்குகிறது.

கல்லெல்லாம் சிலை வடித்த பல்லவப் பேரரசின் ஆட்சிக்குட்பட்ட பகுதி இம்மாவட்டம், பல்லவ மன்னர்கள் ஆண்டதற்கு அடையாளச் சின்னங்களைப் பெற்றிருப்பதுடன் அவர்கள் ஆண்டதால் பல அரும் சிறப்புக்களையும் இம்மாவட்டம் பெற்றுச் சிறப்படைந்துள்ளது. அன்று தொட்டு இன்று வரை பெருமைக்குரிய மாவட்டங்களில் ஒன்றாகத் திகழ்ந்து வரும்

செங்கற்பட்டு மாவட்டத்தைப் பற்றிய சில இன்றியமையாத செய்திகள் இங்கு எடுத்துக் காட்டப்படுகின்றன.

**செங்கற்பட்டு - பெயர்க்காரணம்;**

இம்மாவட்டத்தின் தலைநகராக இன்று காஞ்சிபுரம் விளங்குகிறது ஆனால் இம்மாவட்டம் அமைக்கப்பட்ட நாளிலிருந்து மாவட்டத் தலைநகராக விளங்கிய சிறப்பு செங்கற்பட்டு நகருக்கே உரியது. செங்கற்பட்டு நகரம் இன்று தன் பழம் பெருமையை இழந்து மாவட்டத்திலுள்ள பிற நகரங்களில் ஒன்றாக விளங்கினாலும் ஒரு காலத்தில் விஜயநகர அரசர்களின் தலைநகராக விளங்கிய பெருமை இந்நகருக்கு உண்டு.[1] விஜயநகர அரசர்கள் கட்டிய கோட்டையும் கூட இந்நகரில் இருந்துள்ளது. இன்று அக்கோட்டை சிதைவுற்று, இருந்ததற்கான அறிகுறியை மட்டுமே பெற்றுள்ளது.

செங்கற்பட்டு என்ற பெயர் இந்நகருக்கு ஏன் ஏற்பட்டது என்பது பற்றி அறிஞர்களிடையே மூன்று விதமான கருத்துகள் நிலவுகின்றன.

1 இந்நகரிலே மட்டுமன்றி மாவட்டத்தின் பெரும் பகுதியில் தாமரை, அல்லி, போன்று நீர்வாழ் செடியாகிய செங்கழுணீர்ப் பூக்கள் கழனிகளில் மிகுந்து காணப்படுவதால் இவ்வூர் 'செங்கழுணீர்ப்பட்டு' என்ற பெயரை முதலில் பெற்றுப் பின்னர் செங்கல்பட்டாகியுள்ளது. இக்கருத்துப் பொதுவாகப் பலராலும் வலியுறுத்தப்படுகிறது.

2. இங்குள்ள மண்ணினால் சிறந்த செங்கல் அறுக்கப்படுவதால் இப்பெயரை இவ்வூர் பெற்றுள்ளது. பற்று என்பது பட்டாயிற்று என்றும் கூறப்படுகிறது.[2]

3. விஜயநகர அரசர்கள் இந்நகரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டுள்ளனர். அவ்வரிசையில் செங்கல் வராயன் என்பவர் இப்பகுதியில் ஆட்சி புரிந்தமையால்

---

1 செங்கற்பட்டு மாவட்டம் [பத்தாண்டுச் சாதனைகள்] தமிழ்நாடு அரசாங்க செய்தித் துறை வெளியீடு -பக் ;13

2 செங்கற்பட்டு மாவட்டம் -சோ. ம. செ -பக்: 173

செங்கல்வராயன்பட்டு என்பது காலப்போக்கில் செங்கற் பட்டு என்றாகி இருக்கக் கூடுமோ என்றும் ஐயுற வேண்டியுள்ளது.

இங்கு எடுத்துக்காட்டப்பட்ட மூன்று காரணங்களுமே இந்நகருக் கான பெயர்க் காரணத்திற்குப் பொருந்தி அமைவதாகவே உள்ளது. செங்கழுநீர்ப்பூக்கள் இம்மாவட்டமெங்கும் உள்ளதை உணர்த்துமாறு வேறு சில ஊர்களின் பெயர்களும் அமைந்துள்ள தைக் காணமுடிகிறது.

செங்கற்பட்டுக்கு அண்மையில் உள்ள ஊர் திருக்கழுக்குன்றம் கழுகு வடிவில் முனிவர்கள் வந்து இரையுண்டு செல்வதால் அவ் வூர் அப்பெயரைப் பெற்றது என்றும், அங்குள்ள மலை கழுகு வடிவில் அமைந்துள்ளமையால் அப்பெயர் அவ்வூருக்கு அமைந் தது என்றும் கூறப்படுகிறது. ஆனால் இரண்டு காரணங்களுமே பொருந்தாது என்பது இந்நூலாசிரியர் கருத்து. செங்கழுநீர்ப் பூக்களால் செங்கற்பட்டு என்ற பெயர் அமைந்தது போன்று கழு நீர்ப் பூக்கள் மலர்ந்த சுனைகளுடன் (அல்லது கழனிகளுடன்) குன்றையும் அவ்வூர் பெற்றிருந்தமையால் கழுநீர்க்குன்றம் என்று பெயர் அமையப் பெற்றுப் பின்னர் அது கழுக்குன்றமாகி யிருக்க வேண்டும் என்பது இந்நூலாசிரியர் கருத்து.

செங்கழுநீர்ப் பிள்ளையார் கோயில்கள் இம்மாவட்ட மெங்கிலும் காணப்படுவதும் செங்கற்பட்டு என்ற பெயர், செங்கழுநீர்ப்பட்டு என்பதிலிருந்தே அமைந்திருக்க வேண்டும் என்ற கருத்தை அரண்செய்கிறது.

செங்கல் அறுப்பதற்கு ஏற்ற மண்ணாக இந் நகர்ப்பகுதியில் உள்ள மண் அமைந்துள்ளதென்பதும் ஏற்புடைத்தாகவே உள் ளது. இன்றுங்கூட இந்நகரிலும், இம்மாவட்டத்தின் பல பகுதி களிலும் செங்கல் அறுத்துச் சூளை போட்டு விற்பதென்பது ஒரு பரவலான தொழிலாகவே செய்யப்படுகிறது. மேலும் செங்கல் புத்தூர் அக்ரஹாரம் என்ற பிறிதோர் ஊர் திருத்தணி வட்டத் தில் உள்ளதும், செங்கலின் பெயரால் இந்நகர் செங்கற்பட்டு என்று ஆகியிருக்கக் கூடுமோ என்று எண்ணத் தூண்டுகிறது.

செங்கல்வராயன் என்ற அரசரின் பெயரால் இவ்வூருக்கு இப்பெயர் அமைந்திருக்கவும் வாய்ப்பு உண்டு. வேறு சில அரசர் களின் பெயரிலும் சில ஊர்கள் இம்மாவட்டத்தில் அமைந்திருப் பது இக்கருத்தை உறுதிப்படுத்துகிறது. செங்கல்வபுரம் அக்ர

ஹாரம் என்றோர் ஊர் திருத்தணி வட்டத்தில் காணப்படுகிறது. செங்கல்வராயன் பெயரிலேயே அவ்வூரும் அமைந்திருக்க வேண்டும் என்று எண்ணத் தோன்றுகிறது.

மேற்கண்ட மூன்று காரணங்களுமே பொருந்துவதாகப் படினும், முதற்காரணமே பெரிதும் ஏற்புடையதாகத் தோன்றுகிறது. செங்கற்பட்டு நகருக்கு மட்டுமேயன்றி இம்மாவட்டத்திலுள்ள பல ஊர்களுக்கும் பொருந்துமாறும் அக்காரணமே அமைவதால், செங்கழுணீர்ப்பட்டு என்பதுவே காலப்போக்கில் மாற்றம் பெற்று, செங்கற்பட்டாயிற்று என்று கொள்ளலாம்.

**மாவட்டத்தின் அமைப்பு :**

பிரிக்கப்படாத இன்றைய மாவட்டங்களில் பெரிய மாவட்டமாகத் திகழும் செங்கற்பட்டு மாவட்டம் எல்லையமைப்புகளால் தமிழகத்தின் பிற மாவட்டங்களிலிருந்து வேறுபட்டுள்ளது.

இம்மாவட்டத்தின் வடக்கு எல்லையாக ஆந்திர மாநிலத்தின் நெல்லூர் மாவட்டம் அமைந்துள்ளது. தெற்கில் தென்னார்க்காடு மாவட்டமும், மேற்கில், வடார்க்காடு, சித்தூர் மாவட்டங்களும் அமைந்துள்ளன. கிழக்கில் வங்காள விரிகுடா அமைந்துள்ளது. அண்மையில் உள்ள தமிழகத்தின் தலைநகரான சென்னை மாநகர், இம்மாவட்டத்தால் மூன்று புறங்களிலும் சூழப்பட்டுள்ளது. இம்மாவட்டப் பரப்பில் சுமார் 115 மைல் நீளத்திற்குக் கடற்கரை அமைந்துள்ளது. 1961ஆம் ஆண்டின் அரசுக் குறிப்பின்படி சுமார் 3, 188 சதுர மைல் பரப்பளவில் இம்மாவட்டம் அமைந்துள்ளது.[3] இன்று சில சதுர மைல்கள் வேண்டுமானால் வேறுபட்டு அமையலாம்.

**அருவா நாடும் தொண்டை நாடும் :**

தெலுங்கு பேசும் மக்கள் தமிழை அரவம் என்றும், தமிழ் மொழி பேசுபவர்களை அரவாளர், அருவாளர் என்றும் கூறி வந்துள்ளனர். ஆந்திரத்தையொட்டிய தமிழ் நாட்டுப பகுதியை அரவ நாடு, அருவா நாடு என்றும் கூறிவந்துள்ளனர். திருத்தணி வட்டத்தில் அரவாசிப் பட்டடா என்றோர் ஊர்ப்பெயர் அமைந்

3 செங்கற்பட்டு மாவட்டம் [பத்தாண்டுச் சாதனைகள்] பக்; 15

துள்ளது. தெலுங்கு மொழிப் பெயராக அவ்வூர்ப் பெயர் காணப்படினும். அப்பகுதியில் வாழ்ந்த தமிழர்களையே அர வாசி என்று குறிப்பிட்டுள்ளனர் என்பதை அவ்வூர்ப் பெயரின் மூலம் உணரமுடிகிறது.

இம்மாவட்டம் உள்ளடங்கிய பகுதி அன்று காடாகக் கிடந்த தாகவும், காட்டுப் பகுதியில் வாழ்ந்த அருவாளர் புலிவேட்டை போன்ற பல்வேறு வேட்டையாடி, காடு திருத்தி நாடாக்கி வாழ்ந்தனர் என்றும் கூறப்படுகிறது.[4] இவ்வரலாற்றுச் செய்தியை உறுதிப்படுத்துமாறு இம்மாவட்டத்தின் பல ஊர்ப்பெயர்கள் அமைந்துள்ளன. புலிப்பாக்கம், புலியூர் போன்ற ஊர்ப்பெயர்கள் காணப்படுவதுடன், வேடு என்ற பொதுக் கூறுகளைப் பெற்ற ஊர்களும் காணப்படுவது, அவ்வூர்களில் வேடர்கள் வாழ்ந்துள்ளனர் என்பதையும் உறுதிப்படுத்துகிறது.

தொண்டை மண்டலம் என்பது அருவாநாடும் அருவா வட தலை நாடும் சேர்ந்தபகுதி. இப்பகுதி பல நூற்றாண்டுகள் காடாகவே கிடந்துள்ளது என்பதை இம்மாவட்ட ஊர்ப்பெயர் களில் காடு என்ற பொதுக்கூறு பெற்றுப்பல ஊர்கள் அமைந் திருப்பதன் மூலம் உணரலாம். ஈக்காடு, ஆர்க்காடு, பழவேற் காடு, ஆலங்காடு, வெளிக்காடு, கோட்டைக்காடு, தோட்டக்காடு, ஊத்துக்காடு, முதுகாடு, ஓதிக்காடு போன்ற பல ஊர்கள் காடு என்று முடியுமாறு இம்மாவட்டத்தில் அமைந்துள்ளன. இக்காடு கள் பின்பு சழனிகளாகவும் தோட்டங்களாகவும் மாற்றப் பட்டுள்ளன.

காட்டுப் பகுதிகளாகத் தொண்டை மண்டலம் ஒருகாலத்தில் இருந்திருந்தாலும், மண்வளம் இல்லாத இப்பகுதியில் மனவளம் மிக்க சான்றோர்கள் தோன்றியுள்ளதை உணர முடிகிறது.

''நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே''[5]

---

4 செங்கற்பட்டு மாவட்டம் -சோ. ம. லெ-பக்; 19
5. புறநானூறு - பாடல்: 187

என்ற ஔவையார் பாடல் சான்றோர் பிறந்த தொண்டை மண்டலத்தை எண்ணியே பாடப் பட்டதோ என்று எண்ணத் தோன்றுகிறது.

தொண்டை மண்டலம் முற்காலத்தில் சோழ நாட்டின் ஒரு பகுதியாக இருந்துள்ளது. கரிகாற்சோழனுக்குப் பின்பு வெண்வேற்கிள்ளி என்ற சோழ அரசனின் மகனாகிய தொண்டையான் இளந்திரையன் காஞ்சிபுரத்தைத் தலை நகராகக் கொண்டு ஆண்டான் என்றும், அவன் பெயரே இந்நாட்டிற்கு வந்ததென்றும் கூறப்படுகிறது.[6]

தொண்டை மண்டலம் என்ற பெயரை இம்மண்டலம் பெறுவதற்குக் காரணமாக வேறு சில நிகழ்ச்சிகளும் கூறப்பட்டாலும் தொண்டைமான் இளந்திரையன் பெயராலேயே அமைந்திருக்க வேண்டும் என்ற கருத்து பலராலும் வலியுறுத்தப்படுவதால் அப்பெயரே பொருந்தும் என்று கருதலாம்.

**தொண்டைநாடும் செங்கை மாவட்டமும்:**

தொண்டை மண்டலத்தில் 24 கோட்டங்கள் இருந்துள்ளன. அவற்றுள் 13 கோட்டங்கள் உள்ளடங்கிய பகுதியே செங்கற்பட்டு மாவட்டமாக அமைந்துள்ளது. அக்கோட்டங்களாவன:

1. புலியூர்க் கோட்டம்: சென்னை, சைதாப்பேட்டை வட்டங்கள் அடங்கிய பகுதி.
2. புழல் கோட்டம்: பொன்னேரி வட்டத்தின் கடலோரப் பகுதிகள்.
3. செங்காட்டுக் கோட்டம்: ஸ்ரீபெரும்புதூரும் அதன் சுற்றுப்புறமும்
4. ஆமூர்க் கோட்டம்: மாமல்லபுரமும் அதன் சுற்றுப் புறமும்.
5. களத்தூர்க் கோட்டம்: திருக்கழுக்குன்றம், பொன்விளைந்த களத்தூர், அச்சிறுபாக்கம் பகுதிகளும், மதுராந்தகம் ஊரும்.

---

6. செங்கற்பட்டு மாவட்டம் (பத்தாண்டுச் சாதனைகள்) பக்: 11

6. செம்பூர்க் கோட்டம் : மதுராந்தகம் வட்டத்தின் கிழக்குப் பகுதி.

7. ஈக்காட்டுக் கோட்டம் : திருவள்ளூர் வட்டம்.

8. எயில் கோட்டம்: காஞ்சிபுரம் நகர்ப்பகுதி.

9. தாமல் கோட்டம் : காஞ்சிபுரம் வட்டம் அடங்கிய பகுதி.

10. ஊத்துக் காட்டுக் கோட்டம் : செங்கற்பட்டு நகரும் அதன் சுற்றுப்புறமும்.

11. பையூர்க் கோட்டம் : பொன்னேரி வட்டத்தின் சில பகுதிகள்.

12. திருத்தடிகைக் கோட்டம் : திருத்தணி வட்டம் அடங்கிய பகுதிகள்.

13. காலியூர்க் கோட்டம் : உத்திரமேரூர்ப் பகுதி.

இன்று இம் மாவட்டத்தில் உள்ள வட்டங்களின் பெயர் எதுவும் கோட்டங்களின் பெயர்களாக இடம் பெறவில்லை. அன்றியும், இம் மாவட்டத்தில் உள்ள முக்கியமான நகரங்களின் பெயர்களும் கூடக் கோட்டப் பெயர்களாக இடம் பெறவில்லை இதனை நோக்கும் போது. கோட்டங்கள் பிரிக்கப்பட்ட காலத்தில் இவ்வூர்களெல்லாம் செல்வாக்குப்பெற்ற சிறந்த ஊர்களாக விளங்கவில்லையா, அல்லது சிற்றூர் வடிவில் இருந்தனவா என்றெலாம் ஐயுற வேண்டியுள்ளது.

மாவட்டப் பெயருக்குக் காரணமான செங்கற்பட்டு நகரம் அன்று ஊத்துக்காட்டுக்கோட்டத்தில் இருந்துள்ளது. ஊத்துக் காடு என்பது இன்று காஞ்சீபுரம் வட்டத்தில் உள்ள ஒரு சிற்றூர். அச்சிற்றூரின் பெயர் ஒரு கோட்டப்பெயராக அமைந்துள்ளது. அது போன்று, சிற்றூர்களாக இன்று காணப்படும் பல ஊர்களே அன்று கோட்டங்களின் பெயர்களைப் பெற்றுள்ளன. ஒரு வேளை, அன்று இவ்வூர்கள் பேரூர்களாக விளங்கினவா, அல்லது ஒவ்வொரு கோட்டத்தின் எல்லையும் தொடங்கப்படும் இடத்தில் இருந்த ஊர்களையே கோட்டத்தின் பெயர்களாக அமைத்தனரா என்பது விளங்கவில்லை.

இன்றைய வருவாய்க் கோட்டப்பிரிவுகளும், பிற நிர்வாகப் பிரிவுகளும் பின்னர் விளக்கப்படும்.

**தொண்டை நாட்டில் பல்வேறு ஆட்சிகள் ;**

செங்கை மாவட்டத்தின் இன்றைய நிலையை நோக்குமுன்பு வரலாற்று அடிப்படையில் எவரெவரின் ஆட்சிகளெல்லாம் இம் மாவட்டம் உள்ளடங்கிய தொண்டை நாட்டில் நடைபெற்றுள்ளது என்பதைக் காண வேண்டியது அவசியமாகிறது. அப்போது தான் எவரெவரின் ஆட்சிக்காலத்தில் எந்தெந்த ஊர்கள் இங்குத் தோன்றியுள்ளன என்பதை உணரமுடியும். அவ்வடிப்படையில் தொண்டை நாட்டில் நடைபெற்ற பல்வேறு ஆட்சிகளும், அவ்வாட்சிக்காலங்களில் தோன்றிய பல்வேறு ஊர்ப்பெயர்களும் சுருக்கமாக இங்குக் கூறப்படுகின்றன. ஒவ்வொரு ஆட்சிக்காலத்திலும் தோன்றிய சில ஊர்கள் சான்றுகளாகத் தரப்படுகின்றன.

**சோழர் ஆட்சி :**

காட்டுப் பகுதியாகக் கிடந்த தொண்டை நாட்டைச் சீர் செய்து, நாடு, நகரங்களை ஆக்கிய பெருமை சோழ அரசர்களையே சேரும். "தொண்டை நாட்டுக் காட்டின் செழுமையையும், கடலின் கொழுமையையும் கண்டு, சோழர்கள் சிலகாலம் இப்பகுதியை ஆண்டனர்"[7] என்று கூறப்படுகிறது. 24 கோட்டங்களாகத் தொண்டை நாட்டைப் பிரித்தவர்களும் சோழ அரசர்களேயாம். கோட்டங்கள் பிரிக்கப்பட்ட காலத்தில் பல பகுதிகள் காடுகளாகவே இருந்துள்ளன என்பதை, சில கோட்டங்களின் பெயர்களே காடுகளாக உள்ளதிலிருந்து உணர முடிகிறது.

இருவேறு காலக்கட்டங்களில் சோழர் ஆட்சி தொண்டை நாட்டில் நடைபெற்றுள்ளது. தொண்டைமான் இளந்திரையன் சங்க காலச் சோழர் மரபைச் சேர்ந்தவன். எனவே, சங்க காலத்திலேயே இப்பகுதியைச் சோழர்கள் ஆண்டுள்ளனர் என்று தெரியவருகிறது. அதன் பிறகு ஏற்பட்ட ஆட்சி மாற்றங்களால் இப்பகுதி களப்பிரர்களாலும் சில காலம் ஆளப்பட்டுள்ளது. பின்பு களப்பிரரையும் வென்று சிம்மவிஷ்ணு என்ற பல்லவ மன்னன் பல்லவப் பேரரசை இப்பகுதியில் நிறுவினான்.

---

7. செங்கற்பட்டு மாவட்டம் சோ. ம. லெ-பக்: 21

அபராஜிதன் என்ற பல்லவ மன்னனை விசயாலய சோழன் என்ற பிற்காலச் சோழர் மரபைச் சேர்ந்த அரசன் கொன்று மீண்டும் தொண்டை நாட்டில் சோழப் பேரரசை நிறுவினான். கி.பி. 9ஆம் நூற்றாண்டு முதல் 13ஆம் நூற்றாண்டு வரை ஏறத்தாழ 400 ஆண்டுகள் இப்பகுதியில் பிற்காலச் சோழர் ஆட்சி நடைபெற்றுள்ளது.

சங்க காலச் சோழர் இப்பகுதியை ஆட்சி செய்த காலம் குறைவு. மேலும் காடாகக் கிடந்த பகுதியை நாடாக மாற்றுவதற்கே அவர்களது ஆட்சிக் காலத்தில் பெரும்பகுதியைச் செலவிட வேண்டியதிருந்திருக்கும். அன்றியும், அப்போது தோன்றிய ஊர்கள் பெரும்பாலும், சங்ககால அமைப்பில் இயற்கைத் தாவரம், நிலம் முதலியவற்றின் பெயர்களையே பெற்று அமைந்திருக்கும். எனவே, பிற்காலச் சோழர் காலத்திலேயே சோழர்களது பெயர்களைப் பெற்றுப் பல ஊர்கள் இம்மாவட்டத்தில் அமைந்துள்ளன என்பது உணர்தற்குரியது.

சோழவரம், சோழன் தாங்கல், வளவன் தாங்கல், மதுராந்தகச் சோழ சதுர்வேதி மங்கலம், சேந்தமங்கலம், தொண்டைமான் நல்லூர், வீரகாவேரி ராஜபுரம், செம்பியன்வளி போன்ற பல ஊர்கள் சோழப் பேரரசின் நினைவுச் சின்னங்களாக இப்பகுதியில் அமைந்துள்ளன.

சோழர்கள் ஆர்த்திமாலையை அணிந்தவர்கள். ஆர்க்காடு, ஆர்ப்பாக்கம், ஆரணி போன்ற ஊர்ப்பெயர்கள் ஆர்த்திப் பூவைச்சுட்டுமாறு அமைந்துள்ளன. சோழர்களின் புலிக்கொடியைச்சுட்டுமாறு புலிப்பாக்கம், புலியூர் போன்ற ஊர்கள் அமைந்திருக்கக்கூடும் என்றும் கருத இடம் உண்டு.

நேரடியாகத் தம் இனப்பெயரையோ, மாலை, கொடி, ஆறு முதலியவற்றின் பெயர்களையோ குறிப்பிடாமலும் கூடப் பல ஊர்களைச் சோழ மன்னர்கள் தோற்றுவித்திருக்கக்கூடும். சோழர்கள் இப்பகுதியை ஆட்சி செய்த காலத்தில் அந்தணர்கள் பலர் வேதம் ஓதுவதற்காகவும், கோயில் வழிபாடு நிகழ்த்துவதற்காகவும் இப்பகுதியில் குடியமர்த்தப்பட்டுள்ளனர். அப்படி அமர்த்தப்பட்டவர்களுக்கு இறையிலியாகப் பல ஊர்களையும் சோழ அரசர்கள் வழங்கியுள்ளனர் என்பதனையும் உணர முடிகிறது.

அகரம், அக்ரஹாரம், மங்கலம், தேவதானம் போன்ற பொதுக் கூறுகளைப் பெற்றுப்பல ஊர்கள் இம்மாவட்டத்தில்

அமைந்துள்ளன. அவ்வூர்களில் பெரும்பாலானவை அந்தணர்களின் குடியிருப்புகளாகவே காணப்படுகின்றன. அவையாவும் அந்தணர்களுக்காகச் சோழ அரசர்களால் உண்டாக்கப்பட்ட புதிய ஊர்கள் என்று எண்ண வேண்டியுள்ளது. இவ்வாறு பல நிலைகளிலும் சோழர் ஆட்சிக்காலத்தில் தோற்றுவிக்கப்பட்ட ஊர்கள் இன்றைய செங்கற்பட்டு மாவட்டத்தில் காணப்படுகின்றன.

பல்லவர் ஆட்சி :

தொண்டை மண்டலம் உருவாவதற்குக் காரணமாகச் சோழர்கள் விளங்கினாலும் இந்நாடு பல்லாற்றானும் சிறந்து விளங்கக் காரணமாக இருந்தவர்கள் பல்லவர்களேயாவர் இவர்களது ஆட்சிக் காலத்தின் போது கட்டிடம், சிற்பம், ஓவியம் போன்ற அருங்கலைகள் சிறந்து விளங்கின. ஏற்கெனவே உள்ள நகர்களிலும், ஊர்களிலும் தமது கலைச் சிறப்பைக் காட்டியதுடன், தமது கலையாற்றலை வெளிப்படுத்துவதற்காகவே பல புதிய ஊர்களையும் பல்லவர்கள் உருவாக்கியிருப்பது குறிப்பிடத்தக்கது.

கி.பி. 575இல் சிம்மவிஷ்ணு என்ற பல்லவப் பேரரசனால் தோற்றுவிக்கப்பட்ட பல்லவர் ஆட்சி கி.பி. 880 வரை சிறப்பாக நடைபெற்றுள்ளது. ஏறத்தாழ மூன்று நூற்றாண்டுகள் பல்லவர் ஆட்சி இப்பகுதியில் நடைபெற்றுள்ளதால் அப்பேரரசை நினைவூட்டுமாறு பல ஊர்கள் செங்கற்பட்டு மாவட்டத்தில் இன்றும் காட்சி தருகின்றன.

பல்லவ மன்னர்கள் பலர் இப்பகுதியை ஆட்சி புரிந்திருந்தாலும் சில மன்னர்களே சிறப்பாகக் குறிப்பிடப்படுகின்றனர். அச்சில மன்னர்களே தங்கள் பெயர்கள் விளங்குமாறு புதிய ஊர்களைத் தோற்றுவித்துச் சென்றுள்ளார்கள். அப்படித் தோற்றுவிக்கப்பட்ட சில ஊர்கள் வரலாற்றுப் புகழுடைய கலைக்கோயில்களாகவும் இன்று விளங்கி வருகின்றன.

பல்லவர்களது ஆட்சிக் காலத்தில் உருவாக்கப்பட்ட ஊர்களில் இன்று செங்கை மாவட்டத்தில் உள்ள சில ஊர்கள் இங்கு எடுத்துக்காட்டப்படுகின்றன.

மாமல்லபுரம், பல்லவபுரம், நந்தியம்பாக்கம், நந்திமேடு, நந்திவரம், பல்லவமேடு, பரமேசுவர மங்கலம் போன்ற ஊர்கள்

பல்லவர் மரபையும், குறிப்பிட்ட சில அரசர்களது பெயர்களையும் குறிப்பிடுமாறு இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன.

நேரடியாகத் தம்மைப்பற்றியோ, தம் மரபைப்பற்றியோ குறிப்பிடாமல் பொதுப்படையாகவும் சில ஊர்களைக் குறிப்பிட்டுப் பல்லவர்கள் உருவாக்கியிருக்கவும் கூடும். அப்படி அவர்களால் உருவாக்கப்பட்ட பல ஊர்கள் இம்மாவட்டத்தில் காணப்படலாம். சங்ககாலச் சோழர் ஆட்சிக்குப் பிறகு பல்லவர் ஆட்சியே இப்பகுதியில் நிலையாகவும், சிறந்ததாகவும் விளங்கியுள்ளது. அதனால் சங்ககாலச் சோழர்களைப் போன்று இயற்கையமைப்பையொட்டிய பெயர்களாகப் பல ஊர்களுக்குப் பல்லவர்களும் சூட்டியிருப்பதற்கு வாய்ப்பு உண்டு.

பல்லவர்களது ஆட்சிக்காலத்தில் சமணம், பௌத்தம் ஆகிய இரு புறச் சமயங்களும் தொண்டை நாட்டில் வளர்ச்சி பெற்று வந்துள்ளது. சில பல்லவ மன்னர்களே சமண சமயத்தினராகி, அச்சமயம் வளர்ச்சியடைய அரும்பணியாற்றியுள்ளனர் என்றும் வரலாறு எடுத்துக்காட்டுகிறது. அவ்வடிப்படையில் சமண, பௌத்த சமயப் பெயர்களை உணர்த்துமாறு இப்பகுதியில் இடம் பெற்றுள்ள ஊர்களும் பல்லவர்களது ஆட்சிக்காலத்தில் தோன்றியவைகளேயாம்.

அமணம் பாக்கம், முக்கரம் பாக்கம், பள்ளிப் பட்டு, பள்ளிக்கரணை போன்ற ஊர்ப்பெயர்கள் பௌத்த, சமண சமயப் பெயர்களாக உள்ளன. அம்மணம்பாக்கம், அமணப்பாக்கம் என்ற பெயர்களிலும் வேறு சில ஊர்கள் காணப்படுகின்றன. பள்ளி என்ற பொதுக்கூறு பெற்ற ஊர்கள் யாவும் சமண, பௌத்த சமயங்களைக் குறிப்பிடுமாறே அமைந்துள்ளன. சோழர்களைப் போன்றே பல்லவப் பேரரசர்களும் அந்தணர்களைப் போற்றி, அவர்களுக்காகச் சில ஊர்களையும் வழங்கியுள்ளனர் என்பதை வரலாற்றின் மூலம் உணரமுடிகிறது. எனவே, அந்தணர்கள் இனப்பெயர்களைக் குறிப்பிடுமாறு அமைந்துள்ள சில ஊர்கள் பல்லவர்களது ஆட்சிக் காலத்திலும் தோன்றியிருக்க வாய்ப்பு உண்டு. இவ்வாறு பல நிலைகளிலும் பல்லவர்களது ஆட்சிக்காலத்தில் பல ஊர்கள் இம்மாவட்டத்தில் தோன்றியுள்ளன.

**முசுலிம் ஆட்சி :**

கி.பி. 9ஆம் நூற்றாண்டு முதல் 13ஆம் நூற்றாண்டு வரை பிற்காலச் சோழப் பேரரசு தொண்டை நாட்டில் சிறந்து விளங்கி

யுள்ளது. 13ஆம் நூற்றாண்டின் இறுதியில் சோழப் பேரரசு செல்வாக்கிழக்கத் தொடங்குகிறது. அதற்குக் காரணமாக அமைந்தது மாலிக்காபூர் படையெடுப்பு. அதனைத் தொடர்ந்து சுமார் ஒரு நூற்றாண்டு காலம் முசுலிம் ஆட்சி தொண்டை நாட்டில் நிலவியுள்ளது,

சோழ, பல்லவப் பேரரசர்களைப் போன்று தொண்டை நாட்டின் வளர்ச்சிக்கு முசுலிம்கள் பெரும் தொண்டாற்றியுள்ளதாக வரலாற்றில் காணமுடியவில்லை. ஆனால் அவர்களது மதம் இப்பகுதியில் பரவுவதற்கும், தமிழில் உருதுச் சொற்கள் பல கலப்பதற்கும் முசுலிம் ஆட்சி வழிவகுத்துள்ளது என்று கூறப்படுகிறது.[8]

முசுலிம் மதப்பெயர்களையும், சில குறிப்பிட்ட மனிதர்களது பெயர்களையும் நினைவுபடுத்துமாறு சில ஊர்கள் செங்கை மாவட்டத்தில் காணப்படுகின்றன. அத்துடன் அவர்களது தெய்வமாகிய அல்லாவைக் குறிப்பிடுமாறும் சில ஊர்கள் அமைந்துள்ளன.

அல்லாவூர், ராவுத்த நல்லூர், நயினார் குப்பம், துலுக்கன் தண்டலம், அப்துல்லாபுரம், ஒலி முகம்மதுப் பேட்டை, மாபூஸ் கான் பேட்டை, நிஜாம்பட்டு, உசேன் நகரம், ஷாம்ஷேர் பகதூர் பேட்டை போன்ற பல ஊர்கள் முசுலிம் ஆட்சியைச் சுட்டிக் காட்டுமாறு இடம் பெற்றுள்ளன.

செங்கற்பட்டு மாவட்டத்தில் பரவலாக முசுலிம் மக்களைக் காணமுடிகிறது. இன்று சில ஊர்களே முசுலிம் மக்களைப் பெரும்பாலும் கொண்டு அமைந்துள்ளதைக் காணமுடிகிறது. மேலும், பேட்டை என்ற பொதுக்கூறு பெற்று அமைந்துள்ள ஊர்கள் யாவுமே முசுலிம்களின் ஆட்சிக் காலத்தில், முசுலிம்களின் உறைவிடங்களாக அமைக்கப் பெற்றவை என்பதும் உணர்தற்குரியது.

**விஜயநகர ஆட்சி :**

கி.பி 13ஆம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து 14ஆம் நூற்றாண்டின் இறுதி வரை முசுலிம்களின் ஆட்சி நடந்து முடிவுற்ற

---

8. செங்கற்பட்டு மாவட்டம்-சோ. ம. லெ - பக். 24

பின் விஜயநகரப் பேரரசின் ஆட்சி தொண்டை நாட்டில் தொடங்கியுள்ளது. கி.பி. 17ஆம் நூற்றாண்டின் தொடக்கம் வரை விஜயநகரப் பேரரசு இப்பகுதியில் ஆட்சி செலுத்தியுள்ளது. பல்லவப் பேரரசர்களது ஆட்சிக்குப் பிறகு தொண்டை நாட்டில் நிலையான ஆட்சியாக அமைந்திருந்தது விஜயநகரப் பேரரசின் ஆட்சியேயாம். செங்கை மாவட்டத்தின் பல ஊர்ப்பெயர்கள் விஜயநகரப் பேரரசின் அடையாளம் காட்டும் விதத்தில் இன்றும் அமைந்துள்ளன.

சோழப் பேரரசின் ஆட்சிக் காலத்திலும் பல்லவர்களது ஆட்சிக் காலத்திலும் அந்தணர்களது செல்வாக்கு இப்பகுதியில் ஏற்பட்டதால் வடமொழியின் செல்வாக்கும் ஓங்கத் தொடங்கியது. இம்மாவட்ட ஊர்ப்பெயர்களில் பல, வடமொழிப் பெயர்களாக அமைந்தது அவ்விரு பேரரசர்களது ஆட்சிக் காலத்தில்தான். முசுலிம் அரசர்களது ஆட்சிக் காலத்தில் பல ஊர்ப் பெயர்களில் உருதுச் சொற்கள் இடம்பெறத் தொடங்கின. அவர்களுக்குப் பின் அமைந்த விஜயநகரப் பேரரசின் ஆட்சிக் காலத்தில் தெலுங்கு மொழிச் சொற்களின் ஆதிக்கம் ஊர்ப் பெயர்களில் இடம் பெறத் தொடங்கின.

இம்மாவட்டத்தில் இன்று தெலுங்கு மொழிப் பெயர்களாக அமைந்த ஊர்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன. அவைகளேயன்றிப் பல தெலுங்குப் பெயர்களையுடைய தனிமனிதர்களின் பெயர்களிலும் பல ஊர்கள் இம்மாவட்டத்தில் உள்ளதை உணர முடிகிறது. பாளையம் என்ற பொதுக்கூறையுடைய ஊர்கள் அனைத்துமே விஜயநகரப் பேரரசின் ஆட்சிக் காலத்தில்தான் தோன்றியுள்ளன. சிற்றரசர் பலரைப் பாளையக்காரர் என்ற பெயர்களுடன் தென்பகுதிகளை ஆட்சி புரிவதற்காக விஜயநகர அரசர்கள் நியமித்துள்ளனர். அப்பாளையக்காரர்கள் தங்கள் பெயர் விளங்குமாறு அமைத்துக் கொண்ட ஊர்களே பாளையங்கள் எனப்படும். செங்கற்பட்டு மாவட்டத்தில் பாளைம் என்று முடியும் ஊர்கள் பல உள்ளன.

இம்மாவட்டம் தமிழ்நாட்டின் ஒரு பகுதியான விளங்கினாலும் தெலுங்கு மொழி பேசும் மக்கள் மிகுதியாக இங்கு வாழ்ந்து வருகின்றதற்கு மூலகாரணம் விஜயநகர ஆட்சியேயாம். செட்டியார், ரெட்டியார், நாயுடு போன்ற சில குறிப்பிட்ட சாதியினர், தங்கள் தாய் மொழியாகவே தெலுங்கு மொழியைக் கொண்டு இம்மாவட்டத்தின் சில பகுதியில் மிகுதியாக வாழ்ந்து வருவதை இன்றும் காணலாம்.

சோழப் பேரரசர் காலத்தில் அந்தணர்கள் இங்கு குடியேறப் படுவதற்காகப் பல புதிய ஊர்கள் உருவாக்கப்பட்டது போன்று விஜயநகரப் பேரரசர் காலத்தில் தெலுங்கர்களை இங்கு குடியேற்றுவதற்சாகப் பல புதிய ஊர்கள் உருவாக்கப்பட்டுள்ளன.[9] அவ்வாறு உருவாக்கப்பட்ட புதிய ஊர்கள் தெலுங்குச் சாயலைப் பெற்றிருப்பதை எளிதில் உணர்ந்து கொள்ளலாம்.

கும்மிடிப்பூண்டி, கவரப்பேட்டை, நசரத்வாடா, நாயக்கன் பேட்டை, ராமகிருஷ்ணராஜு பேட்டை, திருமலராயன் தோட்டம், சின்னதிம்மராஜு பட்டடை, பொம்மராஜ புரம், உத்தண்ட மகாராஜபுரம், திருமால் ராஜபுரம், திம்மராசன் பேட்டை, திம்மையன் பேட்டை, லிங்கப்பையன் பேட்டை, பொம்மராஜுப் பேட்டை, வில்வராயனூர் போன்ற பல ஊர்கள் விஜயநகரப் பேரரசர் ஆட்சிக்காலத்தில் தோன்றிய ஊர்களாக இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன.

பூண்டி, பட்டடை, கண்டிகை, பாளையம் போன்ற பொதுக் கூறுகளைப் பெற்று அமைந்த ஊர்கள் அனைத்துமே விஜயநகரப் பேரரசின் ஆட்சிக் காலத்தில் தோன்றியவை என்று கூறலாம்.

ஆடவர் பெயர்களாகவும், மகளிர் பெயர்களாகவும், அரசர் பெயர்களாகவும் பல ஊர்ப்பெயர்கள் தெலுங்கு மொழிச் சாயலுடன் இம்மாவட்டத்தில் காணப்படுவதுடன், கடவுளர் பெயர்களிலும் கூட தெலுங்கு மொழிச் சாயல் காணப்படுமாறு பல ஊர்கள் இங்குக் காணப்படுகின்றன. அவ்வூர்கள் அனைத்தும் விஜயநகரப் பேரரசர் ஆட்சிக் காலத்தில் தோன்றியவைகளேயாம்.

**வேறு பிற ஆட்சிகள்:**

நிலையான ஆட்சிகளை இப்பகுதியில் நடத்திய அரசர்கள் சிலரே. எனினும் பல்வேறு அரச பரம்பரையைச் சேர்ந்தவர்கள் இப்பகுதியை ஆண்டுள்ளதாகக் கூறப்படுகிறது. சேரர், பாண்டியர், களப்பிரர்களெல்லாம் இப்பகுதியை ஆட்சி செய்துள்ளனர் என்று கூறப்படுகிறது.[10] களப்பிர் அரசர் பெயர்களைச் சுட்டுமாறு ஊர்கள் எதுவும் இன்று காணப்படவில்லையெனினும்

9. செங்கற்பட்டு மாவட்டம்சோ. ம. லெ - பக். 24
10. ,, ,, - பக். 18

பல்லவர்களுக்கு முன்பு அவர்களே இப்பகுதியை ஆண்டுள்ளனர் என்பது வரலாறு உணர்த்தும் உண்மை.

அரையர் என்பது சேர அரசர்களைக் குறிக்கும். அரையர் பாக்கம், அத்தரையர் பக்கலர் என்ற ஊர்ப்பெயர்கள் இம் மாவட்டத்தில் காணப்படுவதால் சேரர் ஆட்சி இப்பகுதியில் சில காலம் நிலவியிருக்கக் கூடும் என்று எண்ணவேண்டியுள்ளது.

சோகண்டி என்று இன்று அழைக்கப்படும் ஊரின் பழைய பெயர் சுந்தர பாண்டியச் சதுர்வேதி மங்கலம் என்று கூறப்படு கிறது.[11] அப்பாண்டிய மன்னன் அப்பகுதியை ஆட்சி செய்த போது அவ்வூரை அந்தணர்களுக்கு வழங்கியிருத்தல் வேண்டும். மேலும், பாண்டியர் தலைநகரான மதுரையின் பேர் பெற்றுச் சில ஊர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுவதும் இப்பகுதியில் பாண்டியர் ஆட்சி நடைபெற்றிருக்கக்கூடும் என்ற எண்ணத்தை வலிமைப்படுத்துகிறது.

அதிகமனூர் என்ற ஓர் ஊர்ப்பெயர் காணப்படுவது, அதிய மான் என்ற மன்னனை நினைவூட்டுகிறது. தொண்டைமானை வென்ற அதியமான் சிறிது காலம் இப்பகுதியை ஆண்டிருக்கக் கூடுமோ என்ற எண்ணத்தை அவ்வூர் ஏற்படுத்துகிறது. ஊர்ப் பெயர்கள் மூலம் இவ்வெண்ணங்கள் தோன்றுகின்றனவேயன்றி வரலாற்று அடிப்படையில் இவ்வாட்சிகள் எப்போது நடைபெற் றன என்பதை வரையறுத்துக் கூற முடியவில்லை.

கி.பி 17ஆம் நூற்றாண்டின் தொடக்கம் வரை விஜயநகரப் பேரரசின் ஆட்சிக்குட்பட்டிருந்த தொண்டை நாடு, கி.பி. 1646இல் கோல் கொண்டா இசுலாமியர்களின் ஆட்சியின் கீழும் மாறத் தொடங்குகிறது. அதன் பிறகு ஔரங்கசீப்பின் தளபதி ஜுல்பிகர்கான் என்பவனால் காஞ்சிபுரம் கைப்பற்றப்படுவதால் அவர்களது ஆட்சி இப்பகுதியில் பரவத் தொடங்குகிறது. ஔரங்கசீப்பின் ஆட்சியும் சில காலமே இப்பகுதியில் நிலை பெற் றுள்ளது. கி.பி. 1780-க்குப் பிறகு ஆங்கிலேயர்களின் ஆட்சி செல்வாக்குப் பெறத் தொடங்கிவிட்டதால் தொண்டை மண்ட லம் அன்னிய நாட்டினரான ஆங்கிலேயரின் ஆளுகைக்கு உட்படத் தொடங்கிவிட்டது.

---

11. செங்கற்பட்டு மாவட்டம்-சோ. ம. லெ- பக். 133

விஜயநகரப் பேரரசிடமிருந்து கோல் கொண்டா இசுலாமியர்கள் தொண்டை நாட்டைக் கைப்பற்றியதிலிருந்து இப்பகுதியில் நிலையான ஆட்சி நடைபெறவில்லை. அதனால் அதன் பிறகு இங்கு ஆட்சி செய்த அரசர்களைச் குறிப்பிட்டுக் கூறுமாறு இப்பகுதியில் சாதனைகள் எதுவும் நிகழ்த்தப்படவில்லை. அவ்வாறு ஆட்சி செய்த அவர்களைக் குறிப்பிடுமாறு ஊர்களும் மிகுதியாகத் தோன்றவில்லை. ஆனால் ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் பல புதிய ஊர்கள் இங்குத் தோன்றியுள்ளன. அப்படித் தோன்றிய ஊர்ப்பெயர்களில் சில ஆங்கிலப் பெயர்களாகவும், வேறுசில ஆங்கிலமும் தமிழும் விரவியதாகவும் காணப்படுகின்றன.

நிஜாம் பட்டு, வாலாஜாபாத், வாலாஜா பேட்டை, அசனாபாத் பட்டடை, மோகல்வாடி, மொகல்பேர் போன்ற ஊர்கள் மொகலாயர் ஆட்சி இங்கு நடைபெற்றுள்ளதை உறுதிப்படுத்துகின்றன.

ஜெயின்ட் தாமஸ் மவுண்ட், புலிக்கட், சட்ராஸ், மெட்ராஸ் போன்று முழுமையுமாக ஆங்கிலப் பெயர்களைப் பெற்ற ஊர்களும், ஹாட்சன் பேட்டை, அடிசன்புரம், பிளேஸ் பாளையம், குரோம் பேட்டை, பாதர் வாடி, மதர் வாடி போன்று ஆங்கிலமும் தமிழும் விரவி அமைந்த ஊர்களும் ஆங்கிலேயர்களும், டச்சுக்காரர்களும் இப்பகுதியை ஆண்டதால், தோன்றிய ஊர்களாகும்.

டச்சுக்காரர்களின் ஆட்சிக்குட்பட்டிருந்த புலிக்கட் என்ற ஊர் பழவேற்காடு என்றும், சட்ராஸ் என்றஊர் சதுரங்கப் பட்டணம் என்றும் இன்று அழைக்கப்படுகின்றன. அதுபோல் ஆங்கிலேயர் ஆட்சிக்குட்பட்டிருந்த மெட்ராஸ் என்ற ஊர் சென்னைப் பட்டணம் என்றும், செயின்ட்தாமஸ மவுண்ட் என்ற ஊர் பறங்கிமலை என்றும் இன்றுக் குறிப்பிடப்படுகின்றன

சங்ககாலம் தொடங்கிப் பல் வேறு காலக் கட்டங்களில் பல் வேறு அரச பரம்பறையினரால் ஆளப்பட்டு வர்தமதொண்டை நாடு, ஆங்கிலேயர் ஆட்சி இம்மண்ணிலிருந்து அகற்றப்பட்ட போது பழைய அமைப்பு முறைகளும் நீக்கப்பட்டன. இன்று தொண்டை மண்டலம் என்ற பெயரில் நாட்டில் பிரிவு ஏது இல்லை. இன்றையத்தமிழகம் பல மாவட்டங்களாகப் பிரிக்கப் பட்டுள்ளன. அப்பிரிவில் செங்கற்பட்டு மாவட்டமும் ஒன்று. இம்மாவட்டத்தில் அடங்கியுள்ள பகுதிகள், அன்றையத்

தொண்டை மண்டலத்திலிருந்த 24 கோட்டங்களில் 13 கோட்டங்கள் ஆகும் என்பது முன்னர்க் கூறப்பட்டது.

இன்றைய செங்கற்பட்டு மாவட்டம் எவ்வாறெல்லாம் கோட்டங்களாகவும், வட்டங்கள், ஒன்றியங்களாகவும் பிரிக்கப்பட்டுள்ளன என்பதை இனிக் காணலாம்.

**இன்றைய கோட்டங்களும் வட்டங்களும்**

மாவட்ட ஆட்சித் தலைவரின் ஆளுகைக்கு உட்பட்ட இம் மாவட்டம் வருவாய்த் துறை அடிப்படையில் நான்கு கோட்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

1. செங்கற்பட்டுக் கோட்டம்
2. சைதாப்பேட்டைக் கோட்டம்
3. திருவள்ளூர்க் கோட்டம்
4. காஞ்சிபுரம் கோட்டம்

என்பனவே அந்நான்கு பிரிவுகளுமாகும். ஒவ்வொரு கோட்டத்திற்கும் கோட்ட ஆட்சி அலுவலர் அல்லது வருவாய்க் கோட்ட அலுவலர் எனப்படும் அலுவலர் ஆட்சியாளராக இருந்து வருகிறார்.

ஒவ்வொரு கோட்டத்திற்கும் வருவாய் அடிப்படையிலான ஆட்சியாளராக கோட்டாட்சி அலுவலர் (ஆர். டி. ஓ) இருப்பது போன்று வளர்ச்சியில் பணிகளையாற்றுவதற்கு கோட்ட வளர்ச்சி அலுவலர் (டி. டி. ஓ.) என்ற வேறோர் அலுவலரும் உள்ளார்.

இந்நான்கு கோட்டத்திலுமாக மொத்தம் பன்னிரண்டு வட்டங்கள் இம்மாவட்டத்தில் உள்ளன. ஒவ்வொரு கோட்டத்திலும் அடங்கிய வட்டங்களாவன:

**செங்கற்பட்டுக் கோட்டம்:**

1. செங்கற்பட்டு வட்டம்
2. மதுராந்தகம் வட்டம்

**காஞ்சீபுரம் கோட்டம்**

1. காஞ்சீபுரம் வட்டம்:
2. உத்திரமேரூர் வட்டம்
3. ஸ்ரீ பெரும்புதூர் வட்டம்

சைதாப்பேட்டைக் கோட்டம்:

1. சைதாப் பேட்டை வட்டம்
2. பொன்னேரி வட்டம்
3. கும்மிடிப்பூண்டி வட்டம்
4. ஊத்துக் கோட்டை வட்டம்

திருவள்ளூர்க் கோட்டம்:

1. திருவள்ளூர் வட்டம்
2. திருத்தணி வட்டம்
3. பள்ளிப் பட்டு வட்டம்

ஒவ்வொரு வட்டங்களுக்கும் ஆட்சியாளராக வட்டாட்சிஅலுவலர் உள்ளார். அவருக்கு உதவியாகத் துணைவட்டாட்சியர்களும் உள்ளனர். கோட்டாட்சி அலுவலகங்களும் வட்டாட்சி அலுவலகங்களும் அந்தந்த ஊர்களையே தலைமையிடங்களாகக் கொண்டு செயல்பட்டு வருகின்றன.

செங்கற்பட்டு மாவட்டம் என்ற பெயரைப் பெற்ற இம் மாவட்டத்தின் தலைநகர் மட்டும் செங்கற்பட்டாக இல்லாமல் காஞ்சிபுரமாக இருந்து வருகிறது. தி. மு. க. ஆட்சிக் காலத்தில் ஏற்பட்ட மாற்றமாகும் இது.

ஊராட்சி ஒன்றியங்கள் :

வளர்ச்சிப்பணிகள் ஒவ்வொரு ஊரிலும் நன்கு நடைபெற வேண்டும் என்ற நோக்குடன் சிறு கிராமங்கள் சில ஒன்று சேர்ந்து ஊராட்சிகளாகவும், பல ஊராட்சிகள் ஒன்று சேர்ந்து ஊராட்சி ஒன்றியங்களாகவும் அமைக்கப்பட்டுள்ளன.

கோட்டாட்சி அலுவலரின் ஆட்சியின் கீழ் வட்டாட்சியர்கள் செயல் படுவது போல் கோட்டவளர்ச்சி அலுவலரின் ஆட்சியின் கீழ் ஒன்றிய ஆணையாளர்கள் (பி. டி. ஓ.) ஒவ்வொரு ஊராட்சி ஒன்றிய அலுவலகத்திலும் செயல்பட்டு வருகின்றனர். இம் மாவட்டத்தில் 27 ஊராட்சி ஒன்றியங்கள் உள்ளன. ஒவ்வொரு கோட்டத்திலும் அடங்கிய ஊராட்சி ஒன்றியங்களாவன:

செங்கற்பட்டுக் கோட்டம்:

1. அச்சிறுபாக்கம் ஒன்றியம்
2. மதுராந்தகம் ஒன்றியம்

3. லத்தூர் ஒன்றியம்
4. சித்தாமூர் ஒன்றியம்
5. காட்டாங் குளத்தூர் ஒன்றியம்
6. திருக்கழுக்குன்றம் ஒன்றியம்
7. திருப்போரூர் ஒன்றியம்

காஞ்சீபுரம் கோட்டம்:

1. சிறுகாவேரிப் பாக்கம் ஒன்றியம்
2. வாலாஜாபாத் ஒன்றியம்
3. உத்திரமேரூர் ஒன்றியம்
4. ஸ்ரீ பெரும்புதூர் ஒன்றியம்
5. பூவிருந்த வல்லி ஒன்றியம்
6. படப்பை ஒன்றியம்

திருவள்ளூர்க் கோட்டம்:

1. திருவாலங்காடு ஒன்றியம்
2. கடம்பத்தூர் ஒன்றியம்
3. பூண்டி ஒன்றியம்
4. பள்ளிப்பட்டு ஒன்றியம்
5. ஆர். கே. பேட்டை ஒன்றியம்
6. திருத்தணி ஒன்றியம்
7. ஈக்காடு ஒன்றியம

சைதாப்பேட்டைக் கோட்டம்:

1. சிட்லப் பாக்கம் ஒன்றியம்
2. மாதவரம் ஒன்றியம்
3. கும்மிடிப் பூண்டி ஒன்றியம்
4. மீஞ்சூர் ஒன்றியம்
5. வில்லிவாக்கம் ஒன்றியம்
6. எல்லாபுரம் ஒன்றியம்
7. சோழவரம் ஒன்றியம்

இம் மாவட்டத்திலுள்ள பெருநகரங்களெல்லாம் நகராட்சிகளாக உயர்த்தப்பட்டுள்ளமையால சிறுநகரங்களும். பேரூர்களுமே ஊராட்சி ஒன்றியங்களின் தலைநகரங்களாக அமைக்கப் பட்டுள்ளன. மாவட்டத்தின் பேருக்குக் காரணமான செங்கற்பட்டு, காட்டாங் குளத்தூர் ஒன்றியத்தில் அடங்கிய பகுதியாக,

ஆனால் நகராட்சியாக அமைந்துள்ளது மாவட்டத் தலைநகரம் அமைந்துள்ள காஞ்சீபுரம் சிறுகாவேரிப் பாக்கம் ஒன்றியப்பகுதியில் உள்ளது. ஆனால் அந்நகர் தனிநகராட்சியாக உள்ளது. இவ்வாறே இம் மாவட்டத்தில் பல பெருநகரங்கள் தனி நகராட்சிகளாக விளங்கி வருகின்றன.

தோன்றிய சான்றோர்கள்:

சான்றோர் பலர் பிறந்த நாடு தொண்டை நாடு அத்தொண்டை நாட்டின் ஒரு பகுதியாக உள்ள செங்கை மாவட்டத்திலும் பல சான்றோர்கள் தோன்றியுள்ளனர். இலக்கியம், சமயம், தத்துவம், அரசியல், கலை போன்ற பல நிலைகளிலும் இம்மாவட்டத்தின் பெருமையைத் தமிழக அளவில் மட்டுமல்லாது அகில இந்திய அளவிலும், உலக அளவிலும் உயர்த்திய பெருமைக்குரிய பலர் இங்குத் தோன்றியுள்ளனர். சில நாடுகள் சில காலக்கட்டத்தில் தான் சிறந்த சான்றோர்களைத் தோற்றுவித்த பெருமையைப் பெறும். ஆனால் இம்மாவட்டம் அன்றிலிருந்து இன்றுவரை பல நிலைகளிலும் சிறந்த சான்றோர்களைப் பெற்றெடுத்த பெருமையைத் தொடர்ந்து பெற்றுக் கொண்டே வருகிறது என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**தத்துவம் :** வடக்கு மாநிலத்தில் அன்று அமைந்திருந்த நாளந்தா பல்கலைக்கழகம் அகில இந்திய நிலையில் தத்துவக் கோட்டமாக விளங்கியுள்ளது. அப் பல்கலைக் கழகத்துணை வேந்தராக விளங்கிய தர்மபாலர் என்பவர் காஞ்சி மாநகரைச் சேர்ந்தவர். காஞ்சிமாநகரில் பல்வேறு சமயங்களின் தத்துவங்களையும் விளக்கிக் கூறும் தத்துவநிலையங்கள் இருந்தன என்பதைச் சாக்கிய நாயனார் புராணத்தில் சேக்கிழார் எடுத்துக் காட்டுகிறார்.[12]

இந்த நூற்றாண்டில் வாழ்ந்தவரும் இந்தியக் குடியரசுத் தலைவராக விளங்கிய வருமான டாக்டர் இராதாகிருட்டிணன் இம் மாவட்டத்தைச் சேர்ந்த திருத்தணி வட்டத்தில் தோன்றியவர். அவரது தத்துவக் கோட்பாடுகள் உலகில் உள்ள அனைத்துத்தத்துவ அறிஞர்களாலும் போற்றிப் புகழப்படுகின்றன.

சைவம், வைணவம், சமணம், பௌத்தம் போன்ற பல்வேறு சமயங்களும் இப் மாவட்டத்தில் இருந்துள்ளன என்பதைப் பல

---

12. பெரியபுராணம் – சாக்கிய நாயனார் - பாடல்: 5

ஊர்ப் பெயர்களால் உணர முடிகிறது. சீன நாட்டைச் சேர்ந்த பௌத்தசமயத் தத்துவப் பேரறிஞரான யுவான் சுவாங் என்பவர் காஞ்சிமா நகரத்திற்கு வந்து தமிழகத் தத்துவங்களைப் பற்றி ஆய்ந்து சென்றதாகப் பல்லவர் வரலாற்றின் மூலம் உணரமுடிகிறது.

**சமயம் :** சைவம், வைணவம் போன்ற இந்நாட்டுச் சமயங்களுடன் சமணம், பௌத்தம் போன்ற புறச்சமயங்களும் இம் மாவட்டம் உள்ளிட்ட தொண்டை நாட்டில் அன்று செல்வாக்குப் பெற்று விளங்கியுள்ளன. அபணப் பாக்கம், புத்தவேடு போன்ற ஊர்களும், பள்ளி என்று முடியும் ஊர்களும் இம்மாவட்டத்தில் அன்று சமண, பௌத்த சமயங்கள் பெற்றிருந்த செல்வாக்கைக் காட்டும். சைவ, வைணவக் கடவுளர் பெயர்களில் இங்கு அமைந்துள்ள ஊர்கள் அச்சமயங்களின் செல்வாக்கைப் புலப்படுத்தும்.

சமண, பௌத்த சமயங்கள் இன்றும் நிலைத்து நிற்கும் நிலையில் இல்லாததால் அச்சமயங்களைச் சேர்ந்த சான்றோர்கள் என்று எவரையும் குறிப்பிட முடியவில்லை ஆனால் சைவ, வைணவ சமயத்தைச் சேர்ந்த சான்றோர் பலர் இம்மாவட்டத்தில் தோன்றியுள்ளதை உணர முடிகிறது.

பெரிய புராணம் அருளிய சேக்கிழார் இம் மாவட்டத்திலுள்ள குன்றத்தூரிலும், சுந்தர மூர்த்தி நாயனாரின் மனைவியாரான சங்கிலிநாச்சியார் ஞாயிறு என்ற ஊரிலும், இராமானுசர் ஸ்ரீ பெரும் புதூரிலும், கூரத்தாழ்வார் என்பவர் கூரம் என்ற ஊரிலும், திருமழிசையாழ்வார் என்பவர் திருமழிசையிலும் தோன்றியுள்ளனர். எம்பார் எனப்படும் வைணவச் சான்றோர் மதுரமங்கலம் என்ற ஊரில் பிறந்தவர். பிரதிவாதி பயங்கரம் அண்ணங்காச்சாரியார் காஞ்சியில் பிறந்தவர். சங்கராச்சாரியார், காஞ்சியில் சமயப்பணியாற்றி வருகிறார்.

**இலக்கியம்:** சமயச் சான்றோர்களாக விளங்கிய பலர் இலக்கியப் படைப்பாளர்களாகவும் விளங்கியுள்ளனர். தனிப்பட்ட சமயத் தொடர்பற்ற பல்வேறு அறிஞர்களும் இம் மாவட்டத்தில் தோன்றித் தமிழ்ப் பணியாற்றியுள்ளனர். செய்யுள், உரை, உரைநடை என்ற பலநிலைகளில் இலக்கியப்பணியாற்றிய சான்றோர் பலர் இம் மாவட்டத்தில் தோன்றியுள்ளனர்.

பாரதம் பாடிய பெருந்தேவனார் திருக்குறள் உரையாசிரியர்களில் சிறந்தவரான பரிமேலழகர் போன்றோர் இம்மாவட்டம் பெற்றெடுத்த பேரறிஞர்களாவர். வெண்பாவில் சிறந்தவரான புகழேந்திப் புலவர் பொன் விளைந்த களத்தூர் என்ற ஊரில் தோன்றியுள்ளார். சதக நூல்களில் முதல் நூலான தொண்டை மண்டல சதகம் என்ற நூலைப் படைத்த படிக்காசுப் புலவர் இம்மாவட்டத்தில் தோன்றியவர்.

மீஞ்சூர் எனப்படும் ஊர் கல்லாடம் எனப்படுகிறது. இங்குத் தோன்றியவர்கள் கல்லாடனார் எனப்பட்டுள்ளனர். அப்பெயரில் மூன்று புலவர்கள் வாழ்ந்துள்ளனர். சங்கப் புலவர் கல்லாடனார், கல்லாடம் எனப்படும் நூலைப் படைத்த கல்லாடனார், தொல்காப்பிய உரையாசிரியர் கல்லாடனார் ஆகியோர் இவ்வூரில் தோன்றியுள்ளனர்.

சிவஞான முனிவரின் மாணவர்களில் ஒருவரான தொட்டிக் கலை சுப்பிரமணிய முதலியார் என்பவர் தொண்டிக் கலை என்ற ஊரில் பிறந்தவர். கச்சிக்கலம்பக நூலாசிரியர் பூண்டி அரங்கநாத முதலியார் என்பவர் பூண்டியில் பிறந்தவர்.

இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் என்றபுலவர் நத்தா நல்லூர் என்ற ஊரில் பிறந்தவர் என்று கருதப்படுகிறது. துண்டலம் என்ற ஊரில் திரு வி. கலியாண சுந்தரனார் தோன்றியுள்ளார் மறைமலையடிகளார் பல்லவபுரத்தில் பிறந்தவர். காஞ்சிபுரத்தில் தோன்றிய மகாவித்துவான் சபாபதி முதலியார் என்பவர் திருக்கழுக்குன்றச் சிலேடை வெண்பா நூலைப் படைத்த பெருமைக்குரியவர். அட்டாவதானிகளான பூவை. கலியாணசுந்தரனார், அரங்கநாதக் கவிராயர், இராமானுசக் கவிராயர் பொய்யா மொழிப் புலவர் போன்றோரும் இம்மாவட்டத்தில் பிறந்தவர்களேயாவர். அந்தக் கவி வீரராகவரும் இம்மாவட்டத்தில் பிறந்தவரே. அவதானிகளாக விளங்கிய பல புலவர்களும், தனிப்பாடல்களைப் படைத்த பல சான்றோர்களும் இம்மாவட்டத்தில் தோன்றியுள்ளனர். காஞ்சிமாநகரில் தோன்றிய அரசியல் மேதையாக விளங்கிய அறிஞர் அண்ணா அவர்கள் பல நாடகங்களையும், உரை நடை நூல்களையும் படைத்து இலக்கியப் பணியாற்றியுள்ளார். தமிழ் நாடக உலகின் தந்தையாக விளங்கி, பல அரிய நாடகங்களைப் படைத்த பம்மல் சம்பந்த முதலியார் அவர்கள் இம்மாவட்டத்தில் தோன்றியவரேயாவர்.

**கலைகள் :** பல்வேறு சிறப்புப் பெற்ற இம் மாவட்டத்தில் பல கலைஞர்களும் தோன்றிக்கலைப்பயிரை வளர்த்துள்ளனர். டி. ஏ. மதுரம், தாம்பரம் லலிதா. நடிகரும் எழுத்தாளருமான 'சோ' இராமசாமி, திரைப்பட எழுத்தாளர்களும், இயக்குநர்களுமான கே. ஸ்ரீதர், கோபு, சி. வி. இராசேந்திரன் போன்ற பலர் இம் மாவட்டத்தைச் சேர்ந்தவர்கள்.

இசையுலகில் புகழ் பெற்ற டி. கே. பட்டம்மாள் என்பவர் இம் மாவட்டத்தைச் சேர்ந்த தாமல் என்ற ஊரில் பிறந்தவர். அவதானம் என்ற அருங்கலையையும் இப் மாவட்டத்தில் பிறந்த பலர் வளர்த்து வந்துள்ளனர். பல்வேறு நாடகக்குழுக்கள் இம் மாவட்டத்திலுள்ள பல ஊர்களிலும் அமைக்கப்பட்டுச் சிறந்த நாடகங்கள் அவ்வப்போது நடத்தப்படுகின்றன. காஞ்சீபுரம், செங்கற்பட்டு, மதுராந்தகம் போன்ற வட்டங்களைச் சார்ந்த சிற்றூர்களில் பல கிராமீயக் கலைகள், கிராம விழாக்களின் போது இன்றும் சிறப்பாக நடத்தப்பட்டு வருகின்றன. புராணக் கதைகளையும், அந்தந்த வட்டாரத்தில் புகழோடு வாழ்ந்து மறைந்தவர்களின் வாழ்க்கையினையும் கிராமீயப் பாடல் வடிவில் இசையோடு பாடும் வழக்கம் இம் மாவட்டத்திலுள்ள பல சேரிப்புறங்களிலும் பரவலாகக் காணப்படுகிறது. அக்கதைப் பாடல்களில் பல பரம்பரையாகவே நிகழ்த்தப்படுகின்றன.

**அரசியல் :** பிற துறைகளில் இம் மாவட்டம் சிறந்து விளங்குவது போன்று அரசியல் துறையிலும் தமிழகத்திற்கே வழிகாட்டிய பெருமை இம் மாவட்டத்திற்கு உண்டு. பிற நாட்டைச் சேர்ந்த பல்வேறு ஆட்சியாளர்கள் இம் மாவட்டம் உள்ளடங்கிய தொண்டை நாட்டை ஆட்சிசெய்துள்ளனர். அவர்களில் பலரது பெயர்கள் ஊர்ப்பெயர்களாக இன்னும் உச்சரிக்கப்பட்டு வருகின்றன. சோழ, பல்லவர்களது ஆட்சி இம்மாவட்டத்தில் சிறந்து ஓங்கியதை வரலாற்றாலும், இலக்கியங்களாலும் உணர முடிகிறது.

கலிங்கத்துப்பரணியில் குறிப்பிடப்படும் கருணாகரத் தொண்டைமான் பிறந்த வண்டலூர் என்ற ஊர் இம்மாவட்டத்தில் உள்ளது. சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்ட பல தலைவர்கள் இம்மாவட்டத்தில் தோன்றியுள்ளனர்.

முன்னால் முதலமைச்சர் மீ. பக்தவத்சலம், அவர்கள் இம் மாவட்டத்தைச் சேர்ந்த மீஞ்சூர் என்ற ஊரில் பிறந்தவர்.

முன்னாள் மத்திய அமைச்சராக இருந்த ஓ. வி. அளகேசன் அவர்கள் ஒழலூர் என்ற ஊரில் பிறந்தவர்.

முன்னாள் முதலமைச்சரும், திராவிட முன்னேற்றக் கழக நிறுவனருமான சி என். அண்ணாதுரை அவர்கள் காஞ்சிபுரத்தில் தோன்றியவர். தி.மு.க. ஆட்சியின்போது அமைச்சராயிருந்த சி.வி.எம். அண்ணாமலை அவர்களும், இன்றைய அ.தி. அ.தி.மு.க ஆட்சியில் அமைச்சராயிருக்கும் ஆனூர். ஜெகதீசன் அவர்களும் இம்மாவட்டத்தைச் சேர்ந்தவர்களே. இம்மாவட்டத்திலுள்ள திருக்கழுக்குன்றம் என்ற ஊரிலேயே முதன்முதல் தி. மு. க. கழகம் தோற்றுவிக்கப்பட்டுள்ளது. அ. இ. அ. தி. மு. கழகம் தோற்றுவிக்கப்பட்ட பின்பு நடைபெற்ற முதல் அரசியல் பொதுக்கூட்டம் அதே திருக்கழுக்குன்றத்தில் தான் நடைபெற்றுள்ளது.

பல்வேறு அரசியல் கட்சிகளும் செல்வாக்குப் பெற்றுள்ள இம்மாவட்டத்தில் இரண்டு பாராளுமன்றத் தொகுதிகளும், பதினெட்டு சட்டமன்றத் தொகுதிகளும் உள்ளன. அத்தொகுதிகளின் பெயர்களாவன:

**பாராளுமன்றத் தொகுதிகள் :**

| | |
|---|---|
| 1. செங்கற்பட்டு | 2. ஸ்ரீபெரும்புதூர் |

**சட்டமன்றத் தொகுதிகள் :**

| | |
|---|---|
| 1. செங்கற்பட்டு | 2. திருப்போரூர் |
| 3. மதுராந்தகம் | 4. அச்சரப்பாக்கம் |
| 5. உத்திரமேரூர் | 6. காஞ்சிபுரம் |
| 7. ஸ்ரீ பெரும்புதூர் | 8. பூந்தமல்லி |
| 9. தாம்பரம் | 10. ஆலந்தூர் |
| 11. வில்லிவாக்கம் | 12. திருவொற்றியூர் |
| 13. பொன்னேரி | 14. கும்மிடிப்பூண்டி |
| 15. திருவள்ளூர் | 16. கடம்பத்தூர் |
| 17. திருத்தணி | 18. பள்ளிப்பட்டு |

**தொழில் வளம் :**

பல்வளமும் பல்கிப் பெருகிய இம்மாவட்டத்தில், நாட்டில் நடைபெறும் பல தொழில்கள் சிறப்பாக நடைபெற்று வருகின்றன. பட்டு வேலை, நெசவு போன்ற தொழில்களில் பிற மா

வட்டங்களைக் காட்டிலும் இம்மாவட்டம் சிறந்து விளங்குகிறது. உழவுப், கோழிவளர்ப்பு. ஆடுவளர்ப்பு போன்ற பல்வேறு தொழில்கள் இம்மாவட்டத்தில் அன்று முதல் இன்றுவரை நன்கு நடைபெற்று வருகின்றன.

**உழவு:** இம்மாவட்டத்தில் வேளாண்மையே தலையாய தொழிலாக உள்ளது. மாவட்ட மக்கள் தொகையில் 85% மக்கள் உழவுத் தொழிலையே செய்து வருகின்றனர். காஞ்சிவட்டத்தில் சிறுகாவேரிப்பாக்கத்திலும், பூண்டி வட்டத்தில் கொழுந்தலூரிலும், ஊத்துக்கோட்டையிலும் அரசாங்க விதைப் பண்ணை நிலையங்கள் உள்ளன. திடூரில் அரிசி ஆராய்ச்சி நிலையமும் உள்ளது. பல்வேறு புதுமுறைகள் இம்மாவட்டமெங்கும் செயல் படுத்தப்பட்டு, உழவுத்தொழில் சிறக்கப்புதிய ஏரிகள் சிலவும் வெட்டப்பட்டுள்ளதால் இத்தொழில் பலன்தரும் தொழிலாகப் பலராலும் விரும்பிச் செய்யப்படுகிறது

**மாதவரம் பால் பண்ணை:** சென்னைக்கு வடக்கே 7 மைல் தொலைவில் உள்ளது மாதவரம். அங்கு 703.23 ஏக்கர் புஞ்சை நிலத்தில் இப்பால் பண்ணை அமைக்கப்பட்டுள்ளது. 4000 மாடுகளும், மாட்டுச் சொந்தக்காரர்களும் தங்குவதற்கு இங்கு வசதி செய்து தரப்பட்டுள்ளது.

மாதவரம் பால் விநியோக திட்டத்தின் கீழ் பல சங்கங்கள் மாவட்டமெங்கும் செயல்பட்டு வருகின்றன. மாம்பாக்கம், படாளம், மாமண்டூர், கண்ணபிரான்புரம், புளியம்பாக்கம், சேர்க்காடு. சீயமங்கலம், அவளூர், தம்மானூர், நாயக்கன் பேட்டை, வில்லிவாக்கம். தாமல், முரசவாக்கம், திருப்புக்குழி ஆகிய ஊர்களில் பால் விநியோக சங்கங்கள் மாதவரம் திட்டத்தின் கீழ்செயல் பட்டு வருகின்றன.

காட்டுப்பாக்கத்தில் ஆடு வளர்ப்பு ஆராய்ச்சி நிலையம் சிறப்பாகச் செயல் பட்டு வருகிறது. பல ரக ஆடுகளும் இங்கு வளர்க்கப்பட்டு வருகின்றன.

செங்கற்பட்டிலும், போரிலாக்கத்திலும் கோழி வளர்ப்பு விஸ்தரிப்பு நிலையங்கள் அரசாங்கத்தினால் நடத்தப்பட்டு வருகின்றன. இவை தவிர மாவட்டமெங்கிலும் 292 தனியார் கோழிவளர்ப்பு நிலையங்களும் உள்ளன.

வண்டலூரில் உள்ள ஸ்டாண்டர்டு மோட்டார் தொழிற்சாலை இம்மாவட்டத்தின் சிறப்பிற்குக் காரணமாக உள்ள

தொழில் நிறுவனங்களில் ஒன்று. 12 ஏக்கர் பரப்பளவில் இத் தொழிற்சாலை அமைந்துள்ளது. ஆண்டிற்கு சுமார் 3000 சிறு கார்கள் இங்கு உற்பத்தி செய்யப்படுகின்றன.

அம்பத்தூரில் அமைந்துள்ள, டி.ஐ. சைக்கிள்ஸ் ஆப் இந்தியா, என்ற சைக்கிள் உற்பத்தித் தொழிற்சாலையும் இம் மாவட்டத் திலுள்ள முக்கியத் தொழில் நிறுவனமாகும். ஆண்டொன்றுக்கு சுமார் மூன்று லட்சம் சைக்கிள் இங்கு உற்பத்தி செய்யப் படுகின்றன.

மதுராந்தகம் சர்க்கரை ஆலை படாளத்தில் அமைந்துள்ளது. 102 ஏக்கர் பரப்பளவில் அமைந்துள்ள இந்த ஆலையில், நாள் ஒன்றுக்கு சுமார் 1000 டன்வரை கரும்புச்சாறு பிழியப் பட்டு வருகிறது.

திருவொற்றியூரில் தீப்பெட்டித் தொழிற்சாலை அமைந்துள் ளது. அந்தமானிலிருந்து கொண்டு வரப்படும் மரங்களிலிருந்து தீக்குச்சி மற்றும் மருந்து தடவிய பெட்டிகள் இங்கு தயாரிக் கப்படுகின்றன.

கிண்டித் தொழிற் பண்ணையில் தோல் பொருள் உற்பத்தி நிலையம் இன்று அமைந்துள்ளது. இந்நிலையம் பல ஆண்டுக ளாகப் பல்லவ புரத்தில் செயல் பட்டு வந்தது.

மாமல்லபுரத்தில் அமைந்துள்ள சிற்பக் கலைக் கூடம் தமிழ் நாட்டிற்கே பெருமை சேர்க்கும் கூடமாக அமைந்துள் ளது. பல கலைஞர்கள் அங்கு பயிற்சி பெற்று வருகின்றனர். அங்கு உருவாக்கப்படும் சிற்பங்கள் உலகினர் அனைவராலும் விரும்பி வாங்கப்படுகின்றன.

காஞ்சிபுரத்தில் பல்வேறு உற்பத்திகள் செய்யப்படுகின்றன. காஞ்சிபுரம் பட்டுச் சேலைகள் உலகப் புகழ்பெற்றவை. கைத்தறி நெசவுத் தொழில், பல குடும்பங்களில் உணவூட்டும் தொழிலா கச் செய்யப்படுகிறது. மேலும், சுருட்டு செய்யும் தொழில், கயிறு செய்யும் தொழில், பாத்திரம் உற்பத்தி செய்தல் போன்ற பல தொழில்கள் இந் நகரில் செய்யப்பட்டு வருகின்றன.

ஊத்துக்கோட்டையில் தச்சு வேலைப் பயிற்சி நிலையம் உள்ளது. அங்கு பயிற்சி பெற்றவர் தச்சுத் தொழிலில் சிறந்து விளங்கி வருகின்றனர்.

ஸ்ரீபெரும்புதூரில் மறை ஆணிகளும், திருகுவில்லைகளும் தயாரிக்கும் தொழில் கூட்டுறவு சங்கம் நன்முறையில் செயல் பட்டு வருகிறது. கடம்பத்தூர் வளர்ச்சி வட்டாரத்தில் தொழில் வினைஞர் கூட்டுறவு சங்கம் அமைக்கப்பட்டுச் செயல் பட்டு வருவதால் பல தொழில்களும் அப்பகுதியில் நன்கு செய்யப் படுகின்றன. காஞ்சி வட்டம் செவிலி மேடு, கிராமத்தில் தச்சு கொல்லு வேலை நிலையம் ஒன்று அமைந்துள்ளது. அங்கும் பலர் பயிற்சி பெற்றுப் பயனடைந்து வருகின்றனர்.

ஆவடி, ஆயுதப் போலீஸ் முகாமில் ஊசி மருந்தடைப்புக் கண்ணாடிக் குப்பிகள் செய்யும் கூட்டுறவு சங்கம் அமைந்துள் ளது. இங்கு பலர் தொழில் செய்து பயன் பெற்று வருகின்றனர்.

குடுமியாண்டித் தோப்பு என்ற ஊரில் பாய்நெசவாளர் கூட்டுறவு சங்கத்தின் மூலம் பாய் உற்பத்தி செய்யும் தொழில் பரவலாகச் செய்யப் படுகிறது.

பழவேற்காட்டில் பனையோலைப் பொருட்கள் தயாரிக்கும் கூட்டுறவு சங்கம் உள்ளது. இச் சங்கத்தின் மூலம் பனையோ லைத் தொழில்கள் சிறப்பாகச் செய்யப்படுவதுடன், பல குடும் பங்களும் பயனடைந்து வருகின்றன.

ஓதிக்காடு என்ற ஊரில் செங்கல் தயாரிக்கும் கூட்டுறவு சங்கம் அமைந்துள்ளது. அவ்வூரிலுள்ள பலர் அத்தொழிலில் ஈடு பட்டுப் பயன்பெற்று வருகின்றனர்.

மீஞ்சூரில் பெண்களுக்கு தையல் மற்றும் பூ வேலைப் பாட்டுப் பயிற்சி தருவதற்குப் பயிற்சி நிலையம் ஒன்று செயல் பட்டு வருகிறது. அப்பகுதியில் உள்ள பல பெண்கள் அங்கு பயிற்சி பெற்றுக் கைத்தொழில்களாக அத் தொழில்களைச் செய்து பயன் பெற்று வருகின்றனர். ஆர்ப்பாக்கம், ஈக்காடு போன்ற ஊர்களிலும அது போன்ற பயிற்சி நிலையங்கள் செயல் பட்டுவருகின்றன.

உத்திரமேரூர், பெருநகர், ஒரக்காட்டுப்பேட்டை ராள்ள பாடி, திருமழிசை ஆகிய ஊர்களில் கதர்நூல் நெசவுப்பயிற்சி நிலையங்கள் அமைந்துள்ளன. அப்பயிற்சி நிலையங்கள் மூலம் அப்பகுதியில் உள்ள மக்கள் நன்கு பயன்பெற்று வருகின்றார்கள்.

இங்குக் குறிப்பிடப் பட்ட தொழிற்சாலைகள், தொழிற் பயிற்சி நிலையங்கள் தவிர மேலும் பல சிறு தொழிற் சாலை

களும் மாவட்டத்தில் உள்ள பல ஊர்களில் ஆங்காங்கு செயல் பட்டு வருகின்றன பெரும்பாலான சிறு தொழில்கள் கூட்டுறவு முறையிலேயே செய்யப்பட்டு வருவது இம்மாவட்டத்தின் தொழில் வளத்துக்கு அடிப்படைக் காரணம் எனலாம்.

**சமூக நிலை :** வேற்றுமையில் ஒற்றுமை காண்பது போன்று இம் மாவட்டம் அமைந்துள்ளது. பிற நாட்டினர் பலர் இம் மாவட்டம் உள்ளடங்கிய பகுதியை ஆண்டுள்ளதால், இப் பகுதியை ஆட்சிபுரிந்தவர்களின் இனத்தைச் சேர்ந்த பலர் இன்றும் இங்கு வாழ்ந்து வருகின்றனர். ஆந்திர மாநிலம் அண் மையில் உள்ளதால் அம்மாநிலத்தில் வாழும் பல சாதியினரின் உறவினர்கள் இம் மாவட்டத்தில் வாழ்ந்து வருகின்றனர்.

சைவர், வைணவர்களாகிய இந்து மதத்தைச் சேர்ந்தவர் கள் தவிர கிறித்துவர், இசுலாமியர் ஆங்கிலோ இந்தியர், ஆந்திர, கேரள மாநிலத்தைச் சேர்ந்தவர்கள் என்று பல தரப் பட்ட மக்கள் இம்மாவட்டத்தில் வாழ்ந்து வருகின்றனர். தமிழ கத்தின் பிற மாவட்டங்களைச் சேர்ந்த பலர் பல்வேறு அலு வல்களை இப் பகுதியில் ஆற்றிவருவதால் இம்மாவட்ட மக்க ளைப் போன்று இப் பகுதியிலேயே உறைவிடங்களை அமைத் துக் கொண்டு வாழ்ந்து வருகின்றனர் சென்னை நகரில் பணி யாற்றும் பலரும் இம்மாவட்ட ஊர்களிலேயே தங்கியுள்ளனர். அவ்வகையில் தமிழகத்தின் அனைத்து மாவட்ட மக்களும் தங்கி வாழ்ந்து வருகின்ற பெருமைக்குரிய மாவட்டம் என்று செங்கை மாவட்டத்தைக் கூறலாம்.

அண்மையில் இம் மாவட்டத்தில் குடியேறியவர்கள் தவிர ஏனையவர்கள் நெடுங்காலமாகவே இங்கு வாழ்ந்துவருகின்றனர். தமிழ், தெலுங்கு மொழி பேசுபவர்களே மிகுதி என்றாலும் மலையாளம், கன்னடம், உருது, ஆங்கில மொழி பேசுபவர்களும் பரவலாக வாழ்ந்து வருகின்றனர். வடமொழியைத் தங்கள் வழிபாட்டு மொழியாகக் கொண்டவர்களும் பெருமளவில் வாழ்ந்து வருகின்றனர்.

செட்டியார், ரெட்டியார், நாயுடு, தச்சர், கொல்லர், தேவர், பிள்ளைமார், இடையார், சாணார், வில்லியர், முசுலிம், கிறித்துவர் போன்ற பல இனமக்களுடன் அந்தணர்களும் இம் மாவட்டத்தில் வாழ்ந்து வருகின்றனர். இவ்வினங்கள் அனைத்தையும் சுட்டிக்காட்டுமாறு பல ஊர்ப் பெயர்கள் இங்கு அமைந்துள்ளன.

சோழப் பேரரசு இப்பகுதியை ஆண்டபோது பெருமளவில் அந்தணர்கள் இங்குக் குடியேற்றப்பட்டதாலும் ? விஜயநகரப் பேரரசு இப்பகுதியை ஆட்சி செய்தபோது தெலுங்கர்கள் பலர் இங்குக் குடியேற்றப்பட்டதாலும் அவ்விரு இனத்தவரின் செல்வாக்கு இம்மாவட்டத்தில் பரவலாகக் காணப்படுகிறது. பல சாதியினர் தெலுங்கு மொழி பேசுபவர்களாக இங்கு வாழ்ந்து வருகின்றனர்.

பல்வேறு இனங்களைச் சேர்ந்த, பல மொழிகளைப் பேசக் கூடிய, பல நாடுகளிலிருந்தும், பிறமாவட்டங்களிலிருந்தும் வந்து குடியேறிய மக்கள் பலர் இங்கு வாழ்ந்து வந்தாலும் அனைவரும் இம் மாவட்ட மக்கள் என்ற உணர்வுடன் வாழ்ந்து வருவது இம் மாவட்டத்திற்குப் பெருமையாகும்.

**காணவேண்டியஇடங்கள் :**

பல நிலைகளிலும் புகழ் பெற்ற இம் மாவட்டத்தில் வரலாற்றுப் புகழ் பெற்ற இடங்களும், காண்பவர் கண்ணைக் கவரும் இயற்கை எழில் வாய்ந்த இடங்களும் கூட உள்ளன. வெளிநாட்டார் பலர் இவ்விடங்களைப் பார்ப்பதற்காகவே தமிழ் நாட்டிற்கு வந்து செல்கின்றனர். இறையுணர் வூட்டும் ஆலயங்கள், இயற்கை எழில் கொஞ்சும் சுற்றுலா மையங்கள், அறிவியல் சிறப்பை எடுத்துக்காட்டும் ஆய்வு நிறுவனம் எனப் பல நிலைகளில் இம் மாவட்டத்தில் பல இடங்கள் காணத் தகுந்த இடங்களாக உள்ளன. அவற்றுள் குறிப்பிடத்தக்க சிலவற்றை இங்குக் காணலாம்.

**மாமல்லபுரம் :** வரலாற்றுச் சிறப்பு மிக்க இந்நகரம் பல்லவ மன்னன் மகேந்திரவர்மனால் கி. பி 7ஆம் நூற்றாண்டில் தோற்றுவிக்கப் பட்டது. பல்லவர்களின் கலைத் தொண்டிற்கு நிலையான சான்றாக உள்ள இந்நகரம் சிற்பக்கலையின் பல திறப்பட்ட கூறுகளை நன்கு தெளிவுபடுத்துகின்றது. ஐந்து ரதங்கள் கல்லில் அமைக்கப்பட்டுள்ள நிலை, அர்ச்சுனன் தவம் செய்வது போல் செதுக்கப்பட்டுள்ள சிற்பங்கள், கடற்கரையில் எழுப்பப்பட்டுள்ள கோயில் என்று பல சான்றுகளை அந்நகரின் மேன்மைக்கு எடுத்துக் கூறலாம்.

பல்லவர்களின் கலைப்பணி தொடர வேண்டும் என்ற நோக்குடன் சிற்பக் கலைஞர்களை உருவாக்கும் பயிற்சி நிலையம் ஒன்று அந்நகரில் இன்று சீரியமுறையில் செயல்பட்டு வருகிறது.

அங்கு செய்யப்படும் சிற்பங்கள் உலகோர் அனைவராலும் உவந்து பாராட்டப்படுகின்றன.

காஞ்சீபுரம் : சரித்திரப் புகழும், சமயப் பெருமையும் பெற்ற நகரம் காஞ்சிபுரம். பல்லவர், சோழர், விஜயநகர மன்னர்கள் காலங்களில் தலைநகரமாக விளங்கிய பெருமை இந்நகருக்கு உண்டு. பல நூற்றாண்டுகளுக்கு முற்பட்ட காலத்திலிருந்தே சமய அறிஞர்கள் பலர் இந் நகரில் வாழ்ந்துள்ளனர் என்பது முன்னர் விளக்கப்பட்டது.

சைவம், வைணவம் ஆகிய இருசமயங்களுமே இன்றும் இந் நகரில் தழைத்து ஓங்கி வருகின்றன. இந்நகரின் இருபிரிவுகள் சிவ காஞ்சி, விஷ்ணு காஞ்சி என்றே இன்றும் குறிப்பிடப் படுகின்றன. ஏகாம்பரேஸ்வரர் ஆலயம், வரதராசப் பெருமாள், ஆலயம், காமாட்சியம்மன் ஆலயம், குமரக்கோட்டம் போன்ற பல ஆலயங்கள் இந் நகரில் அமைந்துள்ளன.

செங்கை மாவட்டத்தின் தலைநகராக விளங்கும் இந்நகரில் காச நோய் மருத்துவ நிலையம், புற்று நோய் ஆராய்ச்சி நிலையம் ஆகியன இருப்பதுடன், இரண்டு கலைக் கல்லூரிகள் ஒரு தொழில் நுட்பப் பள்ளியுடன் பல உயர் நிலைப் பள்ளிகளும், பல தொடக்கப் பள்ளிகளும் உள்ளன.

திருத்தணி : முருகப் பெருமான் எழுந்தருளியுள்ள அறுபடை வீடுகளில் இதுவும் ஒன்று. தொடக்ககாலத்தில் இத் திருத்தலம் ஆந்திர மாநிலத்தில் இருந்து சிலம்புச் செல்வர் ம. பொ. சிவஞானம் அவர்களது முயற்சியால் தற்போது தமிழகப் பகுதி யாக உள்ளது. இயற்கை எழில் கொஞ்சும் குன்றின்மேல் அமைந் துள்ள இக்கோயில் அருணகிரிநாதர் உள்ளிட்ட பல அருளாளர் களால் பரவப்பட்டது. இவ்வூரின் அமைவிடமும் இயற்கைச் சூழல் மிக்கதாய் உள்ளது. அதனால் பலரது கண்ணையும் கருத்தையும் கவரும் பெருமைக்குரிய தலமாக இது விளங்கி வருகிறது.

ஒரு கலைக்கல்லூரி, பல உயர் நிலைப் பள்ளிகள், பல்வேறு அரசு அலுவலகங்கள் ஆகியனவும் இவ்வூரில் அமைந்துள்ளன.

**திருக்கழுக்குன்றம் :** செங்கற்பட்டு மாவட்டத்தில் மாமல்ல புரம் செல்லும் வழியில் அமைந்துள்ள இவ்வூர், இறையுணர்வும் தமிழுணர்வும் மிகுந்த பெருமக்கள் பலர் வாழ்ந்த ஊர், வாழும்

ஊர். உயர்ந்த மலையின் மீது அமைந்த ஆலயம் இங்குள்ளது. இங்குள்ள இறைவனைப்பற்றித் திருஞானசம்பந்தர் உள்ளிட்ட பல அருளாளர்கள் பாடிப் பரவியுள்ளனர்.

கழுகு வடிவில் உள்ள இரண்டு முனிவர்கள் தினமும் இங்கு வந்து உணவு அருந்திச் செல்வதாகக் கூறப்படுகிறது அச்செய்தியின் அடிப்படையிலேயே இவ்வூர் திருக்கழுகுக் குன்றம் என்று முன்னர் அமைந்து, பின்வர் திருக்கழுக் குன்றமாகியது என்று கூறுவர். இயற்கைச் சூழலில் அமைந்துள்ள இவ்வூர் காண்பவர் கண்ணைக்கவரும் பான்மைமிக்கது.

**வேடந்தாங்கல் :** இம்மாவட்டத்தின் சிறப்பிற்குக் காரணமான இடங்களில் இதுவும் ஒன்று. கடப்ப மரங்கள் நிறைந்த சுமார் 75 ஏக்கர் பரப்புள்ள ஏரியின் பரப்பில் உலகின் பல நாடுகளில் உள்ள பறவைகள் வந்து தங்குகின்றன. செப்டம்பர் முதல் மார்ச் மாதம் வரை பறவைகள் இங்குத் தங்கியுள்ளதைக் காணலாம். அதற்குள் குஞ்சுகளுக்குச் சிறகு முளைத்து விடுமாதலால் பின்பு அவை தம் நாடுகளுக்குப் பறந்து சென்றுவிடும்.

ஆண்டுதோறும் இங்கு பறவைகள் வந்து தங்குவது கண்கொள்ளாக்காட்சியாக உள்ளதால் அக்காட்சியைக் கண்டு மகிழ நாட்டின் பல பகுதிகளிலும் இருந்து மக்கள் வந்து கொண்டே இருப்பார்கள். வெளிநாட்டுப் பயணிகளும் கூட இக்காட்சியை விரும்பிக்காண வருவர்.

**கல்பாக்கம் ;** ஆலயங்கள் மிருந்துள்ள இம் மாவட்டத்தில் அறிவியல் மேம்பாட்டையும் எடுத்துக் காட்டும் விதத்தில் அமைந்துள்ள ஊர் கல்பாக்கம். இங்குள்ள அனுமின் நிலையம், கடல் நீரிலிருந்து மின்சாரம் எடுக்கும் அரிய பணியை ஆற்றிக் கொண்டிருக்கிறது. தமிழ் நாட்டிற்கு மட்டுமேயன்றிபிறமாநிலங்களுக்கும் ஒளியூட்டும் நகராக விளங்கிவரும் இந்நகரம் கடற்கரையையொட்டி வரிசையொழுங்குடன் அமைக்கப்பட்டுள்ளதால் காண்பவர்கள் கண்களை இந்நகரின் அமைப்பே கவர்கிறது.

பொறியியல் வல்லுநர்களின் கூட்டு முயற்சியால் இங்கு செயல் பட்டு வரும்' கல்பாக்கம் கலை அறிவியல் மன்றம்' சிறந்த தமிழ்ப்பணியைத் தொடர்ந்து செய்து வருகிறது.

**தங்கக் கடற்கரை :** இன்றைய தமிழக மக்களால் வி. ஜி. பி. என்ற மூன்றெழுத்துகளையும் அவ்வளவு எளிதல் மறந்துவிட

முடியாது. வணிக நோக்குடன் பல தொழில்களையும் அவர்கள் புரிந்து வந்தாலும் கலையுணர்வும், தமிழுணர்வும் வெளிப்படும் விதத்தில் சில அரிய பணிகளையும் அவர்கள் ஆற்றிவருகிறார்கள். அவர்களது கலையுணர்வைப் புலப்படுத்தும் விதத்தில் அமைக்கப்பட்ட அழகுக் கூடம் தான் வி. ஜி. பி. தங்கக்கடற்கரையாகும்.

சோழர் காலக் கட்டிட, சிற்பக் கலைச் சிறப்பை மீண்டும் புது வடிவில் எடுத்துக் காட்டுவது போன்று அற்புதமான வேலைப் பாடுகளுடன் அமைக்கப்பட்ட இத் தங்கக்கடற்கரை, புது உலகம் போன்று உள்ளே புகுந்து காண்பவர்களைக் கவர்கிறது. வளர்ச்சிப் பணிகள் இன்றும் அங்கு தொடர்ந்து கொண்டிருக்கின்றன. இந்தியாவின் சிறப்பிற்குரிய இடங்களில் தங்கக் கடற்கரையும் ஒன்றாக விரைவில் உயரும். இச்சகோதர்களால் நடத்தப்படும் தமிழ் விழாக்கள் இக் கடற்கரையிலேயே நடத்தப்படுகின்றன.

இம் மாவட்டத்தைச் சேர்ந்த எண்ணூரில், இந்தியாவில் இதுவரை வேறெங்கும் இல்லாத விதத்தில் அதிசய உலகம் ஒன்றை உருவாக்க வி. ஜி. பி. சகோதரர்கள் முற்பட்டுள்ளனர். அப்பணி நிறைவுறும்போது இம் மாவட்டத்தின் பெருமை உலகெங்கும் பேசப்படும் நிலை உருவாகும்.

செங்கை மாவட்டத்திலுள்ள குறிப்பிட்ட சில இடங்களே இங்கு எடுத்துக்காட்டப்பட்டன. தொழில் நிறுவனங்கள் அமைந்துள்ள இடங்கள், பல்வேறு சமயத்தவரின் ஆலயங்கள் அமைந்துள்ள திருத்தலங்கள், சமயச் சான்றோர்கள், அரசியல் மேதைகள், அருந்தமிழ்ப் புலவர்கள் முதலானோர் அவதரித்த பெருமைக்குரிய ஊர்கள் ஆகியன யாவும் கண்டு மகிழ்வதற்கும் தொட்டுத் துதிப்பதற்கும் உரியனவேயாம்.

**நிறைவுரை :** சில மாவட்டங்களில் சில விதச் சிறப்பியல்புகளே அமைந்திருக்கக் கூடும். ஆனால் அன்று முதல் இன்று வரை பல நிலைகளிலும் சிறப்பியல்புகளைப் பெற்றுள்ள இம்மாவட்டம் தமிழகத்தின் பெருமைக்குரிய மாவட்டங்களில் ஒன்றாக அமைந்துள்ளது. நாட்டின் தலைநகரான சென்னை மாநகரம் இம்மாவட்டம் உள்ளடங்கிய பகுதியையும் இணைத்

துக் கொண்டிருப்பதால் இம்மாவட்டத்தில் வளர்ச்சிப் பணிகள் பெருகுவதற்கு வாய்ப்புகள் மிகுந்துள்ளன.

கலை, இலக்கியம் போன்ற துறைகளில் இன்றும் இம் மாவட்டம் சிறந்திருப்பது இதன் பழம் பெருமை தொடர்ந்து போற்றி வளர்க்கப்படுவதை உணர்த்தும். பல நிலைகளில் இன்னும் வளர்ச்சியடையப் போகும் மாவட்டங்களில் செங்கை மாவட்டம் சிறப்பிடம் பெறும்.

# ஊர்ப்பெயர்களின் பொதுக்கூறுகள்

மனிதர்களில் ஒருவருக்கொருவர் பலநிலைகளில் வேறுபாடு உடையவர்களாகவே காணப்படுகின்றனர். அவ் வேறுபாடுகளே பிறரிலிருந்து ஒருவரைப் பிரித்தறியத் துணை செய்கின்றன. பொதுவாகப் பல வேறுபாடுகள் காணப்படினும் குறிப்பிட்ட சிலரை ஒப்பு நோக்கும் போது சில ஒற்றுமைத் தன்மைகளையும் காணமுடிகிறது. அவ்வொற்றுமைகளின் அடிப்படையிலேயே அத்தகையோரின் உறவு முறைகள, இனங்கள் முதலியன உணரப் படுகின்றன. அவ்வொற்றுமைத் தன்மைகளைப் பொதுக் கூறுகள் என்று கூறலாம்.

மனிதர்களில் காணப்படும இப்பொதுக் கூறுகளை ஊர்ப் பெயர்களின் அமைப்பிலும் உணரமுடிகிறது. பல நிலைகளில் மனிதர்கள் வேறு படுவது போன்றே ஊர்களும் அதன் இயற்கை அமைப்பு, மண்வளம் போன்றவற்றால் வேறுபடுகின்றன. எனினும், அவ்வேறுபாடுகளுக்குள்ளும் ஒற்றுமைத்தன்மைகளைப் பல ஊர்களினிடையில் காணமுடிகின்றது. அவ்வொற்றுமைத் தன்மைகள் ஊர்களுக்கிடையில் காணப்படும் பொதுக்கூறுகள் என்று கூறப்படுகின்றன.

ஊர்களுக்கிடையில் காணப்படும் ஒருமைப்பாட்டுத் தன்மையை ஒரு மாவட்ட அளவிலும் உணரலாம்; பல மாவட்டங்கள் சேர்ந்த மாநில அளவிலும் உணரலாம். குறிப் பிட்ட சில ஊர்ப்பெயர்களைப் பல மாவட்டங்களிலும் காண முடிகிறது. மேட்டுப்பாளையம் என்ற ஊர் நான்கு மாவட்டங் களில் காணப்படுகிறது. செங்கற்பட்டு மாவட்டத்திற்கே உரிய தாகவும், பெருமைக்குரியதாகவும் கருதப்படும் வேடந்தாங்கல் என்ற ஊர்ப்பெயர் வடார்க்காடு மாவட்டத்திலும் காணப் படுகிறது. இது போன்று பல சான்றுகளைக் காட்டலாம். ஊர் களின் பொதுக்கூறுகள் பல இடங்களிலும் ஒத்துக் காணப்படு வதையே இப்பெயர்ப்பொருத்தங்கள் உணர்த்துகின்றன.

ஒரு மாவட்டத்திற்குள்ளேயே பல இடங்களில் ஒரே ஊர்ப் பெயரைக் காணமுடிகிறது. அச்சிறுபாக்கம், வல்லம், மாம் பாக்கம் போன்ற பல ஊர்ப்பெயர்கள் செங்கற்பட்டு மாவட்டத் தின் பல வட்டங்களிலும் இடம் பெற்றுள்ளன. மாவட்ட அளவில் ஊர்களுக்குள் காணப்படும் ஒற்றுமைத் தன்மைகளையே பன்முறை இடம் பெற்றுள்ள ஊர்ப்பெயர்கள் உணர்த்துகின்றன. ஏற்கெனவே அம்மாட்டத்தில் அப்பெயரில் ஓர் ஊர் இருக்கும் போது அதேபெயரை மீண்டும் வைக்காமல் பிறிதோர் பெயரைப் புதுஊருக்குச் சூட்டி இருக்கமுடியும். அப்படிச் செய்யாதது ஏனென்பதுவே ஊர்ப்பெயர் ஆயவிற்குப் பெரிதும் துணை செய்யும் சிந்தனைக்குரிய செய்தியாகும்:

தெளிவான காரணங்களின் அடிப்படையில் ஊர்ப்பெயர் களைச் சூட்டியுள்ளனர் தமிழர். முன்பு ஓர் ஊர்ப்பெயர் சூட்டப் பட்டற்குரிய அதே காரணம் பிறிதோர் ஊருக்கும் பொருந்து மென்றால் அதே பெயரையே புது ஊருக்கும் சூட்டல் வேண்டும் என்று அவர்கள் எண்ணி இருத்தல் வேண்டும். அதனால் தான் ஒரே ஊர்ப்பெயர் ஒரு மாவட்டத்திற்குள் பல இடங்களிலும், சிலபோது பல்வேறு மாவட்டங்களிலும் கூடக் காணப்படுகிறது. இவ்வகையில் தம் பிள்ளைகளுக்குப்பெயர் சூட்டியதை விடத் தாம் வாழும் ஊர்களுக்குப் பொருத்தமாக ஆய்ந்தே தமிழர் பெயர் சூட்டியுள்ளனர் என்பதை உணர முடிகிறது.

ஊர்களுக்கிடையில் காணப்படும் பொதுக் கூறுகளை அவ்வூர்ப் பெயரின் பின் ஒட்டாக அமைத்துக் கூறியுள்ளனர். கடற்கரையைச் சார்ந்த சிற்றூர்ப் பகுதிகளைப் பாக்கம் என்று குறிப்பிட்டனர். அவ்வாறு கடற்கரையைச் சார்ந்த சிற்றூர்ப் பகுதிகள், அல்லது நீர்நிலையுடன் தொடர்புடைய, ஆனால் கடற்கரைச் சிற்றூர்ப்பகுதி போன்ற அமைப்புடைய ஊர்கள் எங் கெல்லாம் காணப்படுகின்றனவோ அவ்வூர்களையெல்லாம் ஒப் புமை, அதாவது பொதுத்தன்மை கருதிப் பாக்கம் என்றே குறிப் பிட்டனர். எல்லா ஊர்களுமேபாக்கம் என்று குறிப்பிடப்பட்டால் பிறித்துணர்வதில் இடர்ப்பாடுகள் எழக்கூடும். அவ்விடர்ப்பாடு களைத் தவிர்ப்பதை முதற்காரணமாகவும், அவ்வப்பகுதிகளுக் குரிய சிறப்புத்தன்மைகளையும் ஊர்ப்பெயரோடு இணைத்துக் கூறுவதைத் துணைக் காரணமாகவும் கொண்டு பாக்கம் என்ற பொதுக் கூறுபாட்டிற்கு முன் ஒட்டாகச் சிறப்புக்கூறு பாட்டினையும் ஊர்ப்பெயரில் சேர்த்து வழங்க முற்பட்டுள்ளனர்.

மீன் உற்பத்தி மிகுந்திருந்த ஊர் மீனம்பாக்கம் என்றும், தேன் மிகுதியாகக் கிடைத்த பகுதி தேனம்பாக்கம் என்றும் வழங்கப்பட்டிருப்பது, பொதுக் கூறுகள், சிறப்புக்கூறுகள் ஆகியன எவ்வெவ் அடிப்படையில் அமைகின்றன என்பதை எடுத்துக்காட்டும்.

ஊர்ப்பெயர் ஆய்விற்கு, முன் ஒட்டாக அமையும் சிறப்புக் கூறு, பின் ஒட்டாக அமையும் பொதுக்கூறு ஆகிய இரண்டுமே பயன்படுமெனினும் பெரிதும் பயன்படுவது பொதுக்கூறுகளே என்பது இதுகாறும் கூறப்பட்ட விளக்கங்களாலும் சான்றுகளாலும் நன்கு விளங்கும்.

ஊர்ப்பெயர்களின் அமைப்பில் பொதுக்கூறுகளே முதலில் தோன்றியிருக்கவேண்டும். சிறப்புக்கூறுகள் பின்னர்த் தோன்றியவைகளாகவே உள்ளன. காலந்தோறும் புதிது புதிதாகச் சிறப்புக் கூறுகள் தோற்றுவிக்கப் படுகின்றன; தோன்றிக் கொண்டே உள்ளன. புரம் என்ற பொதுக்கூறு பல்லாண்டுகளுக்கு முன்பாகவே தோன்றியுள்ளது. காஞ்சிபுரம் என்பது பழைய ஊர்ப் பெயர். பல்லவர் ஆட்சிக்காலத்தில் பல்லவபுரம், மாமல்லபுரம் போன்று புதுச்சிறப்புக் கூறுகளுடன் தோன்றிய புது ஊர்கள் உருவாயின. ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் அட்சன் என்பவர் பெயர் விளங்குமாறு அட்சன்புரம் என்ற ஊரும் தோன்றியுள்ளது. இது போன்றே எல்லாப் பொதுக்கூறுகளிலும் அவ்வப் போது பல சிறப்புக்கூறுகள் தோன்றி இணைந்து புதுப்புது ஊர்கள் உருவாகி வருவதைக் காணமுடிகிறது.

ஊர்ப்பெயர் அமைப்பில் பொதுக் கூறுகள் நிலையானவை; வரம்பு போன்றவை. ஏதேனும் ஒரு கால கட்டத்தில், காரணங்கள் விளங்குமாறு அமையும் தன்மையுடையது பொதுக்கூறு. மொழிக்கு இலக்கணம் போன்று அமைந்தது ஊர்ப்பெயருக்குப் பொதுக்கூறுகள் எனலாம். பொதுக்கூறுகளின் இலக்கணத்திற்குப் பொருந்துமாறு புதிய ஊர் அமைகிறது; அமையும் இடச்சூழலுக் கேற்பச் சிறப்புக் கூறாகிய முன் ஒட்டு அதனுடன் இணைகிறது.

புதியஊர் தோன்றும் இடத்தில் சிறப்புக் கூறுபாடாகக் குறிப்பிடுமாறு எவ்விதக் குறிப்பும் இல்லை என்றால் முன் ஒட்டாகிய சிறப்புக் கூறு இல்லாமலேயே ஊர்கள் தோன்றி விடுகின்றன. பாக்கம் என்ற பெயரில் செங்கற்பட்டு மாவட்டத்தில் பல ஊர்கள் உள்ளன. இவ்வூர்ப் பெயரில் பொதுக் கூறாகிய பின் ஒட்டு மட்டுமே உள்ளது. இவ்வாறு பொதுக்

கூறுமட்டுமே பெற்றுள்ள ஊர்கள் செங்கற்பட்டு மாவட்டத்தில் பல உள்ளன. எனவே, சிறப்புக்கூறு இல்லாமலும் ஊர்கள் அமையமுடியும் என்பதும், பொதுக் கூறு இல்லாமல் ஊர்கள் அமையமுடியாது என்பதும் தெள்ளிதில் புலனாகும்.

வரலாற்றுச் சிறப்புமிக்க செங்கற்பட்டு மாவட்டத்தில் 10) பொதுக் கூறுகள் உள்ளன. சில பொதுக்கூறுகள் மற்ற பொதுக் கூறுகளுடன் நெருங்கிய தொடர்புடையனவாகவும் உள்ளன. தண்டலை என்ற பொதுக்கூறு, தண்டரை என்ற பொதுக் கூறுடனும், பூண்டி என்பது பூடி என்பதுடனும் வாடி என்பது வாடா என்பதுடனும் தொடர்புடையவன. இது போன்று தொடர்புடைய பொதுக்கூறுகள் இன்னும் சிலவும் இம்மாவட்டத்தில் உள்ளன. தொடர்புடையனவாகக் கருதப்படினும் ஒவ்வொரு பொதுக்கூறின் முடியும் அமையுமாறு பல ஊர்கள் உள்ளன என்பதும் உணர்தற்குரியது. எடுத்துக்காட்டாகத் தண்டலை என்ற பொதுக்கூறு பெற்று 23 ஊர்களும், தண்டரை என்ற பொதுக்கூறு பெற்று 6 ஊர்களும் உள்ளதைக் குறிப்பிடலாம்.

இவ்வாறு வழங்கப்படும் சில ஊர்களை மரூஉ எனக் கருதி வேறுபடுத்தாது விட்டாலும் கூட நூற்றுக்கு மேற்பட்ட பொதுக் கூறுகளைக் கொண்ட ஊர்கள் செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ளதையுணரலாம். சொல்லாய்வின் அடிப்படையில் அப் பொதுக்கூறுகளைப் பகுத்து நோக்கினால் செங்கற்பட்டு மாவட்டத்தின் பல்வேறு சிறப்பியல்புகளையும் உணரலாம். சில பொதுக்கூறுகள் தமிழகத்தின் எல்லாப்பகுதிகளிலும் காணக் கூடியதாக அமையும். புவியியல் அடிப்படையில் அமையும் இயற்கையமைப்பையொட்டிய ஊர்கள் தமிழகத்தில் பல பகுதிகளிலும் ஒருமைப்பாட்டுத் தன்மையுடையதாக அமைதல் இயல்பு. ஆனால் வரலாற்று அடிப்படையில் அமையும் ஊர்களின் பொதுக்கூறுகள் வேறுபாடுடையதாகவே அமையும்.

இனி, செங்கற்பட்டு மாவட்டத்தில் இடம் பெற்ற ஊர்களின் பொதுக்கூறுகளையும், அப்பொதுக்கூறுகளால் உணரப்படும் செய்திகளையும் காணலாம். மிகுதியான ஊர்களைப் பெற்றுள்ள பொதுக்கூறுகளின் அடிப்படையில் வரிசையமைக்கப்பட்டுள்ளது.

1. ஊர் 462
2. பாக்கம் 254
3. புரம் 173
4. சேரி 92
5. வாக்கம் 86
6. பட்டு 84
7. குப்பம் 78
8. மங்கலம் 50
9. கண்டிகை 50
10. பேடு 43
11. தாங்கல் 38
12. காரணை 33
13. காடு 32
14. பேட்டை 29
15. மேடு 24
16. தண்டலம் 23
17. அகரம் 23
18. வரம் 22
19. ஏரி 22
20. குளம் 19
21. பூண்டி 19
22. வாயல் 16
23. விளாகம் 14
24. குன்றம் 13
25. வாடி 11
26. பட்டடை 11
27. பாளையம்-11
28. வாய்-11
29. வேடு-11
30. பள்ளம்-10
31. சமுத்திரம்-10
32. அக்ரகாரம்-10
33. பாடி-10
34. நகரம்-9
35. கழனி-9
36. கோட்டை-7
37. கரை-7
38. வாடா-7
39. வேலி-7
40. பேர்-7
41. குழி-6
42. கால்-6
43. கோயில்-6
44. தண்டரை-6
45. பட்டணம்-5
46. நெம்மிலி-5
47. மல்லி-4
48. வசலை-4
49. மதுரை-4
50. பூடி-4
51. வலம்-4
52. மலை-4
53. மேனி-4
54. நத்தம்-4
55. தேவதானம்-4
56. தோட்டம்-4
57. வேடல்-3
58. பள்ளி-3
59. சோழி-3
60. பறை-3
61. கல்-3
62. துறை-3
63. வளி-3
64. வனம்-3
65. குன்னம்-3
66. பல்லி-3
67. கட்டு-3
68. மணி-3

69. வெள்ளரை-3
70. நெல்லி-3
71. ஓரகடம்-3
72. பந்தல்-3
73. நிலை-3
74. குணம்-3
75. மந்தை-2
76. குமிளி-2
77. நெய்குப்பி-2
78 சட்டளை-2
79. கொறடு-2
80. சூலம்-2
81. மடம்-2
82. தேமம்-2
83. நீராடி-2
84. கண்டை-2
85. மதி-2
86. திருத்தி-2
87. மணலி-2
88. மாகரல்-2
89. காலி-2
90. போகம்-2
91. ஓடை-2
92. நாவல்-2
93. சோகண்டி-2
94. கிளாய்-2
95. மருதம்-2
96. மரம் 2
97. அம்பி-2
98. வல்லார்-2
99. புலம்-2
100. மணல்-2
101. விடந்தை-2
102. இரும்பிலி-2
103. கிரி-2
104. வெண்மணி-2
105. கோடி-2
106 கூடல்-2
107. துளி-2
108- கடல்-2
109. தோப்பு-2

மேற்கண்ட 109 பொதுக்கூறுகளின் அடிப்படையில் அமைந்த ஊர்களேயன்றி, தனித்தனியாக அமைந்த 152 ஊர்களும் செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ளன. அவை ஒவ்வொன்றும் தனித்தனியான கூறுகளைக் கொண்டுள்ளன. அக்கூறுகளில் சில இங்குக்குறிப்பிடப்பட்ட பொதுக்கூறுகளுடன் சொல்லளவிலும், வேறு சில பொருளளவிலும் தொடர்புடையனவாக அமைதலை உணரமுடிகிறது. கிராமம், நாடு என்ற பொதுக்கூறுகள் பெற்ற ஊர்களும் கூட ஒவ்வொன்றுதான் உள்ளது. சில தனிப்பட்ட பொதுக்கூறுகள் வெளிப்படையாகப் பொருள் புலப்படுத்தும் வண்ணம் அமைந்துள்ள போதும் பல தனிப்பட்ட பொதுக்கூறுகள் பொருள் புரியாவண்ணம் பிறமொழிச்சொல்லாகஅமைந்துள்ளதைக் காணமுடிகிறது. சில பெயர்கள் இயல்பு நிலையிலிருந்து திரிந்தும், மருவியும் வேற்றுவடிவங்களைப் பெற்றிருக்கவும் கூடும். இப்பெயர்கள் குறித்துப் பின்னர் விரிவாக விளக்கப்படும்.

தனித்தனிப் பெயரில் அமைந்த ஊர்கள் பெரும்பாலும் பிற்காலத்தில் தோன்றியவைகளாகவே இருத்தல் வேண்டும். அவ்வூர்ப் பெயரில் அமைந்த பொதுக்கூறினது அடிப்படையில் பிறிதோர் ஊர் தோன்றாமலிருப்பதுவே அவ்வூர் புதிதாகத் தோன்றியமையினைப் புலப்படுத்தும். பொருள் புரியாப் பெயர்களாக அவைகளில் பல உள்ளமை அக்கருத்தை மேலும் உறுதிப்படுத்தும். இவ்வியலின் இறுதியில் இவ்வாறு அமைந்த ஊர்ப்பெயர்களில் உள்ள பொதுக்கூறுகளைப் பற்றிக் காணலாம்.

செங்கை மாவட்ட ஊர்ப்பெயர்களில் நூற்றுக்கு மேற்பட்ட பொதுக்கூறுகள் காணப்படினும் ஏழு பொதுக்கூறுகளின் அடிப்படையிலேயே மிகுதியான ஊர்கள் அமைந்துள்ளன. ஊர், பாக்கம், புரம், சேரி, வாக்கம், பட்டு, குப்பம் என்பனவே அவை. இவ்வேழு பொதுக்கூறுகளையும் பொதுநிலையில் நோக்கும் போதே செங்கை மாவட்டத்தின் இயற்கை அமைப்பு, மக்கள் வாழ்க்கை ஆகியனபற்றியுணர முடிகிறது.

கடற்கரைப் பகுதிகளையொட்டி இம்மாவட்டத்தின் பல ஊர்கள் அமைந்துள்ளன என்பதைப் பாக்கம், வாக்கம், குப்பம் போன்ற பொதுக்கூறுகள் உணர்த்தும். பல்வேறு இனத்தைச் சேர்ந்த, உழைக்கும் மக்கள் மிகுந்துள்ள நிலையை ஊர், சேரி, பட்டு போன்ற பொதுக்கூறுகள் உணர்த்தும். நகர்ப்புரங்களும் ஆங்காங்கு இம்மாட்டத்தில் உண்டு என்பதை புரம் என்ற பொதுக்கூறு உணர்த்தும். மிகுந்துள்ள பொதுக்கூறுகளின் அடிப்படையில் மாவட்டத்தைப்பற்றிய பொதுவான கண்ணோட்டம் இது.

இனி, ஒவ்வொரு பொதுக்கூறினையும் தனித்தனியாக ஆய்ந்து. அப்பொதுக்கூறுகளால் உணரப்படும் செய்திகளையும், எந்தெந்தப் பொதுக்கூறுகள் மாவட்டத்தின் எந்தெந்தப் பகுதியில் மிகுந்துள்ளன அல்லது குறைந்துள்ளன என்பதனையும், அம்மிகுதி, குறைவுகளுக்கான காரணங்கள் என்ன என்பதனையும், அப்பொதுக்கூறுகள் எவ்வெக்காலங்களில் தோன்றியிருத்தல் கூடும் என்பதனையும், அதனையொட்டிய பிற செய்திகளையும் விரிவாகக் காணலாம்.

## 1. ஊர் :

மக்கள் கூடி வாழும் பகுதியை உணர்த்தும் ஒரு சொல்லாக ஊர் என்பது தொல்காப்பியர் காலம் தொட்டே குறிப்பிடப்

பட்டுள்ளது. மக்கள் வாழும் பகுதியை முதன்முதலில் தமிழர் ஊர் என்றே உணர்ந்திருத்தல் வேண்டும். இப்பொதுக்கூறு தமிழகத்தின் எல்லா மாவட்டங்களிலுமே மிகுந்து காணப்படுவதிலிருந்து இவ்வுண்மையை உணரலாம்.

''ஊரும் பெயரும் உடைத்தொழிற் கருவியும்
யாருஞ் சார்த்தி அவையவை பெறுமே''[1]

என்ற தொல்காப்பிய நூற்பாவிலிருந்து இச்சொல்லின் பழமையை உணரமுடிகிறது. ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பிருந்து இன்றுவரை ஊர் என்ற சொல் தமிழர் வாழ்விடத்தை உணர்த்தும் ஒரு பொதுச்சொல்லாகக் கருதப்பட்டு வருகிறது. ஆனால், மருதநிலத்தில் உள்ள குடியிருப்புகளை மட்டுமே ஊர் என்ற சொல் உணர்த்தும் என்று பொதுவாகக் கூறப்படுகிறது. மருதநிலத்தலைவன் 'ஊரன்' என்று விளிக்கப்பட்டிருப்பது கொண்டு இம்முடிவு அமைந்துள்ளது.

''அலைக்கும் ஊரன்''[2]

என்று அகநானூறு குறிப்பிட்டிருப்பது போல் பிறஅகஇலக்கியங்களிலும் மருத நிலத்தலைவன் ஊரன் என்றே குறிப்பிடப்பட்டுள்ளான் என்பதனையும் உணர முடிகிறது. இக்கூற்றில் உண்மை இருப்பதை உணரமுடிகிறதுயெனினும் ஊர் என்பது மக்கள் வாழும் குடியிருப்பை உணர்த்தும் ஓர் பொதுச்சொல்லாகக் கருதப்படுவதே சரியாக அமையும்.

சங்க இலக்கியக் குறிப்புகளின்படி நோக்கினால் பிறநிலப் பகுதிகளைக் காட்டிலும் மருதநிலம் மக்கள் வாழ்விற்குப் பெரிதும் ஏற்றதாக அமைந்துள்ளது. தமிழ் நாட்டவரின் உயிர்த்தொழிலாகிய உழவுத்தொழிலைப் புரிபவர்கள் மருதநில மக்களாகவே குறிப்பிடப்பட்டுள்ளனர். அந்த அடிப்படையில் நோக்கினால் இன்றும் தமிழ் நாட்டில் பெரும்பான்மையோர் புரியும் தொழில் உழவுத் தொழிலாகவே உள்ளமையும், அவர்கள் வாழும் பகுதி ஊர் என்றே பெரும்பாலும் அழைக்கப்படுவதையும் உணரலாம். இவ்வுண்மையின் அடிப்படையில் சிந்தித்தால் இன்று தமிழ் நாட்டின் பெரும்பகுதி மருதநில மாகவே உள்ளதுபோல் புலப்படும். ஆனால் அப்படியல்ல பிற நிலப்பகுதிகளும் கூட ஊர் என்று

---

1. தொல்காப்பியம் — மரபியல் - நூற்பா: 75
2. அகநானூறு - பாடல்: 186-6

இன்று குறிப்பிடப்படுவதைக் காண முடிகிறது. சங்க இலக்கியக் கால நிலைக்கு ஊர் என்பது மருத நிலக்குடியிருப்பை மட்டுமே உணர்த்திருத்தல் கூடும்.

"நால்வகை நிலங்களிலும் பொதுவாகத் தமிழ்மக்கள் குடியிருந்து வாழ்ந்தாரேனும் மருதநிலமே சிறப்பாகக் குடியிருப்புக்கு ஏற்றதாகக் கொள்ளப்பட்டது. ஆதலால் ஊர் என்னும் பெயர் மருதநிலக்குடியிருப்பைக் குறிக்கும்"[3]

அறிஞர் ரா.பி.சேதுப்பிள்ளையின் இக்கருத்து மருதநிலக் குடியிருப்புப் பகுதிகள் ஊர் என்று அழைக்கப்பட்டிருப்பதற்கான காரணத்தைத் தெளிவு படுத்துகிறது. ஆனால் சங்க இலக்கியப் புறப்பாடல்களில் குறிஞ்சி நிலப்பகுதியில் உள்ள குடியிருப்புகளையும் ஊர் என்றே குறிப்பிட்டுள்ளதனையும் காண முடிகிறது.

"முந்நூறு ஊர்த்தே தண்பறம்பு நன்னாடு"[4]

என்று பறம்புமலைக் கோமான் பாரியின் நாட்டில் முந்நூறு ஊர்கள் இருந்தமையைக் குறிப்பிடுகிறார் கபிலர். எனவே மக்கள் வாழ்விற்கு ஏற்ற இடம் எதுவாக இருப்பினும் அப்பகுதி ஊர் என்று கருதப்பட்டுள்ளது என்ற முடிபிற்கே வர முடிகிறது. மருதநிலம் பெரிதும் ஏற்றதாக அமைந்துள்ளதால் பெருமை கருதி அப்பகுதித்தலைவன் ஊரன் என்று விளிக்கப்பட்டிருக்கலாம்.

மக்கள் வாழ்விடத்தைப் பொதுவாக ஊர் என்று குறிப்பிட்டதனால் தான் சிறிய ஊர்களைச் 'சிற்றூர்' என்றும் பெரிய ஊர் 'பேரூர்' என்றும் அழைக்கும் நிலை உருவாகியுள்ளது. மேலும் 'உள்ளூர்' 'வெளியூர்' என்ற வழக்காறுகளும் ஊரின் அடிப்படையிலேயே அமைந்துள்ளதனையும் எண்ண வேண்டியுள்ளது.

"பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால்"[5]

என்று திருவள்ளுவர் உள்ளூர் என்று குறிப்பிட்டுள்ளதனையுணர முடிகிறது. வெளியூர் என்பது அயலூர் என்றும் பின்னர்க் குறிப்பிடப்பட்டுள்ளது.

---

3. ஊரும் பேரும் - டாக்டர். ரா.பி. சேதுப்பிள்ளை-பக்: 29
4. புறநானூறு - பாடல்: 110-3
5 திருக்குறள் - ஒப்புரவறிதல் - குறள்: 216

இதுகாறும் கூறப்பட்ட விளக்கங்களிலிருந்து உழவுத்தொழி லும் பிற தொழில்களும் புரிந்து கூடி வாழ்ந்த தமிழ் மக்களின் வாழ்விடங்கள் ஊர் என்று குறிப்பிடப்பட்டுள்ளது என்பது நன்கு விளங்கும். தொல்காப்பியத்திலிருந்தே இச்சொல் வழக்கி லிருப்பதால் ஆரியர் வருகைக்கு முன்னர் தமிழ மக்கள் வாழ்விட மாகக் கருதப்பட்ட பகுதி ஊர் என்பதும் புலனாகும்.

ஊர் என்ற சொல் தமிழ்ச் சொல்லே. இச்சொல்லிற்கான விளக்கம் முன்னர் கூறப்பட்டது. உழவுத் தொழில் போன்ற பல தொழில்களைப் புரியும் மக்கள் வாழ்வதற்குரிய இயற்கை வள மும் மண் வளமும் அமைந்த பகுதிகள் தொடக்கத்தில் ஊர் என்று குறிப்பிடப்பட்டிருக்கும். காலப்போக்கில் அந்நிலை மாற்றம் பெற்றிருத்தல் கூடும்.

இயற்கையமைப்பையொட்டி நிலப் பாகுபாடுகளையும், அந் நிலங்களுக்குகேற்ப ஒழுகலாறுகளையும் வரையறுத்து வாழ்ந்த வன் தமிழன். எனவேதான் ஊர்ப்பெயர்களும் கூட இயற்கையை யொட்டி அமைந்துள்ளன. பெரும்பாலும் இயற்கைப் பொருட் களான மரம், செடி, கொடி போன்றவற்றின் பெயர்களையோ மலை, கடல், ஆறு போன்றவற்றின் பெயர்களையோ தான் ஊர்ப்பெயர்கள் பெற்றுள்ளன. இன்றும அந்நிலையைக் காண முடிகிறது.

செங்கற்பட்டு மாவட்டத்தின் எல்லா வட்டங்களிலும் ஊர் என்ற பொதுக்கூறினைப் பெற்ற ஊர்களைக் காண முடிகிறது. இம்மாவட்டம் பல்வேறு நிலப்பகுதிகளைக் கொண்டது. கடற் கரைப் பகுதியும் உண்டு; கழனிகள் நிறைந்த வளமான பகுதி களும் உண்டு. மலைப் பகுதிகள் உண்டு; முல்லை நிலக்காட்டுப் பகுதிகளும் உண்டு. ஆனால் ஊர் என்ற பொதுக் கூறினைப் பெற்ற ஊர்கள் எல்லாப் பகுதிகளிலும் உள்ளன. இம்மாவட்டத் தில் ஊர் என்ற பொதுக் கூறுடைய ஊர்ப்பெயர்களில் பல இயற்கையமைப்பையொட்டியதாக உள்ளதையுணர முடிகிறது.

| | |
|---|---|
| கடம்பூர் | பாக்கூர் |
| கரும்பூர் | சேப்பூர் |
| காட்டூர் | வேம்பனூர் |
| | விளங்கனூர் |
| நாவலூர் | அரசூர் |
| பனையூர் | பெருங்காலூர் |

தாழம்பூர் கொடுங்கையூர்
அத்தியூர் மாத்தூர்
புங்கத்தூர் இறுப்பூர்

மேற்கண்ட ஊர்ப்பெயர்களில் தாவரப் பெயர்கள் இடம் பெற்றுள்ளதைக் காணலாம். இங்கு எடுத்துக் காட்டப்பட்ட மரங்கள் மேலும் பலவாறு விளக்க அடைச் சொற்களைப் பெற்று ஊர்ப் பெயர்களாக அமைந்துள்ளன. எடுத்துக்காட்டாக, கடம்பூர் என்பது பெரிய கடம்பூர், பெத்த கடம்பூர், கடம்பத்தூர், சின்னக் கடம்பூர் எனப் பலவாறாக வழங்கப்படுகின்றன. குறிப்பிட்ட மரப் பெயருடைய ஊர் பல மாவட்டங்களிலும் இடம் பெற்றுள்ளன. காட்டூர், கரும்பூர், அத்தியூர், இலுப்பூர் போன்ற ஊர்ப்பெயர் நான்கைந்து வட்டங்களில் இடம் பெற்றுள்ளன.

ஆத்தூர் பாலையூர்
குன்னத்தூர் மணலூர்
நீர்வளூர் கடலூர்
கடமலைப் புத்தூர்
பொய்கை நல்லூர்
மண்ணூர்
வண்டலூர்

போன்ற பெயருடைய பல ஊர்கள், மலை, கடல், நீர், மண் போன்ற இயற்கைப் பொருட்களை ஊர்ப்பெயராகக் கொண்டுள்ளன. இத்தகைய தன்மையுடைய ஊர்கள் பலவாறு, வேறுபட்ட விளக்க அடைச்சொற்களுடன் மாவட்டம் முழுமையும் இடம் பெற்றுள்ளன.

விலங்கின் பெயர்களைக் கொண்டு ஊர் என்ற பொதுக்கூறு பாட்டினையும் கொண்ட ஊர்கள் இம்மாவட்டத்தில் மிகுதியாக உள்ளன.

புலியூர் நரியூர்
சேலூர் கரடிப்புத்தூர்
எருமையூர் மாவூர் பசும்பூர்
விடையூர் ஆட்டுப்புத்தூர்
ஆவூர் ஆனூர்

போன்ற பல ஊர்கள் காணப்படுகின்றன. ஒரு விலங்கின் பெயர் பல வடிவங்களிலும் காணப்படுகின்றன. புலியூர் என்ற பெயர் நான்கு வட்டங்களிலும், ஒரு வட்டத்திலேயே இரண்டு, மூன்று முறைகளும் கூடக் காணப்படுவதுடன் இரும்புலியூர், சின்னப் புலியூர், பெரும்புலியூர் போன்ற மாற்று வடிவங்களிலும் ஊர்ப் பெயர்களாக அமைந்துள்ளன.

இயற்கைப் பொருட்களின் அடிப்படையில் ஊர்ப்பெயர்களை அமைத்த நிலை சிறிது மாறுபட்டு விலங்கின் பெயர்களை ஊர்ப்பெயர்களாக அமைக்கும் நிலை உருவாகியது. அந்நிலையுடன் காலப்போக்கில், சமுதாயத்தில் நிலவிய சாதிப் பெயர்களின் அடிப்படையிலும் ஊர்ப்பெயர்கள் உருவாகத் தொடங்கி விட்டன. அந்நிலையினையும் செங்கற்பட்டு மாவட்டத்தில் காண முடிகிறது.

| | |
|---|---|
| தாசிரி குன்னத்தூர் | வில்வராயநல்லூர் |
| இடையம்புதூர் | சாணாபுத்தூர் |
| தேவானூர் | தச்சூர் |
| ராவுத்த நல்லூர் | கொசப்பூர் |
| வன்னிய நல்லூர் | சலையனூர் |
| வடுகி நல்லூர் | ஆரியத்தூர் |
| | சோளிங்க நல்லூர் |

போன்ற ஊர்ப்பெயர்களைச் சான்றாகக் குறிப்பிடலாம். ஆரியர் வருகைக்குப் பின்னர்தான் தமிழகத்தில் சாதிகள் தலையெடுக்கத் தொடங்கின என்பது வரலாறு உணர்த்தும் உண்மை. இடையர், தேவர், வன்னியர், சாணார், தச்சர், குயவர் போன்ற தமிழினத்தைச் சேர்ந்த சாதிப் பெயர்களுடன் ஆரியர் பேரிலும் ஊர் அமைந்துள்ளது, அவ்வினத்தின் செல்வாக்கு இம்மாவட்டத்தில் உள்ள நிலையையுணர்த்தும். முகவீம் இனத்துப் பெயரான ராவுத்தர் பேரிலும் ஊர் உள்ளது முகலிம் ஆட்சி இம்மாவட்டத்தில் பரவியிருந்த நிலையையுணர்த்தும். வடுகர், சோளிங்கர் போன்ற பிற இனத்தவர் பெயரிலும் ஊர்கள் உள்ளன.

அதிகமான், தொண்டைமான் பேர்களைக் குறிப்பிடும் விதத்தில் அதிகமநல்லூர், தொண்டமா நல்லூர் போன்ற ஊர்களும் செங்கை மாவட்டத்தில் உள்ளன.

சிறப்பிற்குரிய ஊர்கள் 'நல்' என்ற அடைச்சொல் பெற்று வழங்கியுள்ள நிலையை இம்மாட்டமெங்கும் காணமுடிகிறது.

| | |
|---|---|
| அதிகம நல்லூர் | ராவுத்த நல்லூர் |
| காங்கேய நல்லூர் | சம்பாதி நல்லூர் |
| அம்மையப்ப நல்லூர் | தொண்டமா நல்லூர் |
| நந்தா நல்லூர் | உத்தம நல்லூர் |
| இருசாம நல்லூர் | வன்னிய நல்லூர் |
| காய நல்லூர் | வில்வராய நல்லூர் |
| கொள்ளத்த நல்லூர் | பாடிய நல்லூர் |
| பாப்ப நல்லூர் | பெரம்ப நல்லூர் |
| பரச நல்லூர் | நுங்க நல்லூர் |
| பொய்கை நல்லூர் | சோளிங்க நல்லூர் |
| கிர நல்லூர் | பால நல்லூர் |
| கொடம நல்லூர் | கோபரச நல்லூர் |
| சொக்க நல்லூர் | வயலா நல்லூர் |
| அமிதா நல்லூர் | காட நல்லூர் |
| வடுகி நல்லூர் | பழுவ நல்லூர் |
| வேதங்கி நல்லூர் | பெரும நல்லூர் |
| வீரக நல்லூர் | புலவ நல்லூர் |

ஆகிய ஊர்களுடன் நல்லூர் என்ற பெயரில் பல ஊர்களும் நல்லாத்தூர் என்ற பெயருடன் சில ஊர்களும் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. பெரும்பாலும் இப்பெயர்கள் காலத்தால் பிந்தியதாகவே இருத்தல் வேண்டும். ஊர் என்ற பொதுக் கூறுடன் அமையும் பெயர்களே தொடக்க காலத்தவை. மனிதர் களைச் சிறப்பித்துக் கூறுவது போன்று, சிறப்புடையோர் வாழும் ஊர்களையும் "நல்" என்ற அடைச்சொல்லுடன் சிறப்பிக்கும் நிலை பிற்காலத்தில் தோன்றியதேயாகும். ஊர்ப்பெயர்களில் அமைந்துள்ள முன் ஒட்டுக்களாகிய சிறப்புக்கூறுகள் இவ்வுண்மை யை உறுதிப்படுத்துவனவாம்.

ஊர் என்ற தமிழ்ச் சொல்லைப் போன்று ஊர்ப்பெயர்களாக இடம் பெற்ற சொற்களும் பெரும்பாலும் தமிழ்ச்சொற்களாகவே உள்ளன. சில சொற்களே பொருள் மயக்கம் தரும் பிறமொழிச் சொற்களாக உள்ளன. லட்டூர், லத்தூர், மசூர், மெதூர், மெனல்லூர், புட்லூர், வதட்டூர், போன்ற ஊர்களை இவ் வகைக்குச் சான்றுகளாகக் கூறலாம். பிறமொழியாளர் இம்மா வட்டத்தில் குடியமரும் நிலை ஏற்பட்டபோது அவர்தம்

மொழிச் சொல்லும் நிலை பேறடைந்து ஊர்ப் பெயராகி விட்டது. முன் ஒட்டாக, வந்தவர் மொழிச்சொல் அமைய, பின் ஒட்டாகிய பொதுக் கூறாகத் தமிழ்ச்சொல் அமைந்து விட்டது. பிற மொழியாளர் தொடர்பு பல்வேறு காலகட்டங்களில் மிகுந்திருந்த மாவட்டங்களில் செங்கற்பட்டும் ஒன்று என்பதை இம்மாவட்ட ஊர்ப்பெயர்களின் மூலம் நன்கு உணரலாம்.

ஊர் என்ற பொதுக் கூறுடைய இம்மாவட்டத்தின் பிற ஊர்களைப்பற்றிய சிறப்பான செய்திகளை ஊர்ப்பெயரின் சிறப்புக்கூறுகளில் விரிவாகக்காணலாம் ஊர் என்ற பொதுககூறு முதன்மையானதும் இன்றியமையாததுமாகக் கருதப்படுவதால் அப்பொதுக்கூறினைப் பெற்றுள்ள ஊர்களைப் பற்றிச் சிறிது விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

2. பாக்கம்:

ஊர் என்ற பொதுக் கூறினை அடுத்து செங்கை மாவட்டத்தில் மிகுதியாக உள்ள ஊர்களின் பொதுக்கூறு பாக்கமேயாகும். இம்மாவட்டத்தின் எல்லா வட்டங்களிலுமே பாக்கம் என்ற பொதுக் கூறினைப் பெற்ற ஊர்களைக்காணமுடிகிறது.

'பகு' என்ற வேர்ச்சொல்லினடியாகப் பாக்கம் என்ற சொல் அமைந்திருக்கவேண்டும். பகு←பகுதி←பக்கம்←பாக்கம் என்று அமைந்திருத்தல் கூடும். இன்றும் கூடக் குறிப்பிட்ட இடத்தைச் சுட்டுவதற்கு 'அந்தப்பகுதி', 'அந்தப் பக்கம்' என்று குறிப்பிடப் படுவதையறியலாம். இரண்டு முறையிலும் குறிப்பிட்ட ஒரு பொருளே தொனிப்பதையுணரலாம். 'எல்லை பிரிக்கப்பட்ட இடம்' என்ற பொருளை உணர்த்துமாறு பாக்கம் என்ற பொதுக்கூறு அமைந்துள்ளது.

"கடற்கரைச் சிற்றூர்கள் பாக்கம் என்று பெயர் பெறும்"[6]

என்ற கருத்து பொதுவாக அனைவராலும் ஏற்றுக் கொள்ளப் படுகிறது. கடற்கரைக்குப்பக்கத்தில் உள்ள பகுதிகளாகவே பெரும்பாலும் பாக்கங்கள் அமைந்துள்ளன.

செங்கைமாவட்டத்தில் பொதுவாக எல்லா வட்டங்களிலும் பாக்கம் என்ற பொதுக் கூறுடைய ஊர்கள் காணப்பட்டாலும்

6. ஊரும் பேரும் - டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை-பக்: 36

பெரும்பாலும் கடற்கரையைச் சார்ந்த பகுதிகளிலேயே மிகுதியான ஊர்கள் காணப்படுகின்றன. திருத்தணி வட்டம் கடற்கரையினின்றும் வெகுதூரம் தள்ளி அமைந்துள்ள பகுதியாக உள்ளது. அதனால் பாக்கம் என்ற பொதுக்கூறுடைய நான்கு ஊர்களையே அவ்வட்டத்தில் காணமுடிகிறது. அதே சமயம் செங்கற்பட்டு வட்டம் கடற்கரையை ஒட்டி அமைந்துள்ளதால் பாக்கம் என்ற பொதுக்கூறுடைய மிகுதியான ஊர்களை அங்குக் காணமுடிகிறது இம்மாவட்டத்தில் பாக்கம் என்ற ஊர்கள் இடம் பெற்றுள்ள நிலையை நோக்கும் போது கடற்கரையைச் சார்ந்த சிற்றூர்களே அவை என்பது நன்கு தெளிவாகிறது.

சங்க இலக்கியங்களிலிருந்தே பாக்கம் என்ற சொல்லாட்சியைக் காணமுடிகிறது. கடற்கரையைச் சார்ந்த ஊராகவே பாக்கம் அவ்விலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.

''புலாஅல் மறுகிற் சிறுகுடிப் பாக்கத்து''[7]

என்ற அகநானூறு, நெய்தல் திணைப்பாடல், பாக்கம் என்பது கடற்கரையைச் சார்ந்த ஊர் என்பதை விளக்குவதுடன் அவ்வூரின் நிலை, அங்கு வாழ்பவரின் வாழ்க்கைத்தரம் ஆகியவற்றையும் எடுத்துக்காட்டுகிறது. சிலப்பதிகாரத்தில் பட்டினப் பாக்கம், மருவூர்ப்பாக்கம் ஆகியவற்றைப் பற்றிய விரிவான செய்திகளை உணரமுடிகிறது.

சங்க இலக்கியங்களிலிருந்து குறிப்பிடப்பெறும் பாக்கம் என்ற பொதுக்கூறுடைய ஊர்கள் செங்கைமாவட்டத்தில் மிகுதியாக இடம் பெற்றுள்ளதை உணரமுடிந்தாலும் சமுதாய மாற்றம், ஆட்சி மாற்றங்களுக்கேற்ப புதுப்புதுப் பாக்கங்கள் உருவாகியுள்ளதையும் உணரமுடிகிறது. கடற்கரைப் பகுதியில் தோன்றிய ஊர் பாக்கம் என்ற பழைய அமைப்பு முறை போற்றப்பட்டு, காலமாற்றங்களுக்கேற்ப புதிதுபுதிதாகப் பல பாக்கங்கள் வரையறையின்றித் தோற்றுவிக்கப்பட்டுள்ளன.

கடற்கரையைச் சார்ந்த பகுதிகளாகப் பாக்கங்கள் இருந்தாலும் பெரும்பாலும் இயற்கைப் பொருட்களான மரம், செடி போன்றவற்றின் பெயரிலேயே பல பாக்கங்கள் செங்கற்பட்டு மாவட்டத்தில் அமைந்துள்ளன. அம்மரங்களில் பல கடற்கரைப்

---

7. அகநானூறு-பாடல்: 270-12

பகுதியையொட்டி வளரக் கூடியவைகளாகவே உள்ளன. சில எடுத்துக்காட்டுகளை இங்குக் காணலாம்.

| | |
|---|---|
| காட்டுப்பாக்கம் | புளியம்பாக்கம் |
| மாம்பாக்கம் | முருக்கம்பாக்கம் |
| முள்ளிப்பாக்கம் | சிறுவிளம்பாக்கம் |
| பனங்காட்டுப்பாக்கம் | இலுப்பாக்கம் |
| ஊதையம்பாக்கம் | தினைப்பாக்கம் |
| வேம்பாக்கம் | ஒட்டியம்பாக்கம் |
| ஆர்ப்பாக்கம் | தாமரைப்பாக்கம் |
| ஈஞ்சம்பாக்கம் | காரம்பாக்கம் |
| வேலப்பாக்கம் | கிளாம்பாக்கம் |
| விளாம்பாக்கம் | கீரப்பாக்கம் |
| விளிஞ்சம்பாக்கம் | |

மேற்கண்ட மரம், செடிப்பெயர்கள் பல வடிவங்களில் அடைச் சொற்களைப் பெற்று பல ஊர்களாக மாவட்டமெங்கும் உள்ளன. குறிப்பிட்ட சில ஊர்ப்பெயர்கள் ஒரே வட்டத்தில் இரண்டு, மூன்று என அமைந்துள்ளதையும் இம்மாவட்டத்தில் காண முடிகிறது.

மரம், செடிகளேயன்றி ஏனைய இயற்கைப் பொருட்களின் பெயரிலும் பல பாக்கங்கள் இம்மாவட்டத்தில் உள்ளன.

| | |
|---|---|
| கழனிப்பாக்கம் | ஆத்துப்பாக்கம் |
| கல்பாக்கம் | வெள்ளம்பாக்கம் |
| குளப்பாக்கம் | மலையம்பாக்கம் |
| மணல்பாக்கம் | சேத்துப்பாக்கம் |
| மேலேரிப்பாக்கம் | மணிப்பாக்கம் |
| | காணியம்பாக்கம் |

போன்ற ஊர்களைச் சான்றாகக் காட்டலாம். இவ்வூர்ப் பெயர் களில் பெரும்பாலன நேரடியாகக் கடற்கரையுடன் தொடர் புடையனவாக இல்லாவிட்டாலும் கூட நீர்ப்பாசனத்தொடர்பு புடைய ஊர்களாகப் பெயர்களில் குறிப்பிடப்படுவதால் கடற் கரைப் பகுதியையடுத்த ஊர்ப்பெயர்களே இவை என்பது புலனாகும். ஆத்துப்பாக்கம், கல்பாக்கம், கழனிப்பாக்கம் என்ற பெயரில் பல ஊர்கள் இம்மாவட்டத்தில் உள்ளன.

விலங்கின் பேராலும் பிறஉயிரினங்களின் பேராலும் பல பாக்கங்கள் செங்கை மாவட்டத்தில் அமைந்துள்ளதையும் காணமுடிகிறது.

| | |
|---|---|
| நாரைப்பாக்கம் | மீனம்பாக்கம் |
| புலிப்பாக்கம் | ஆட்டுப்பாக்கம் |
| விரால்பாக்கம் | ஏனம்பாக்கம் |
| நரியம்பாக்கம் | புள்ளம்பாக்கம் |
| கயல்பாக்கம் | |

போன்ற ஊர்கள் பல உள்ளன. புலிப்பாக்கம், நரியம்பாக்கம் என்ற பெயரில் நான்கைந்து ஊர்கள் இம்மாவட்டத்தில் ஆங்காங்கு உள்ளன. விரால் என்ற மீனின் பெயரிலும், கயல், மீன் என்ற பெயர்களிலும் பாக்கங்கள் உள்ளமை அவ்வூர்கள் கடற்கரையையடுத்து உள்ளன என்பதைக் காட்டுகின்றன. புலி, நரி போன்ற விலங்கினங்கள் கடற்கரைப் பகுதியில் உள்ள காடுகளில் வாழக்கூடியனவேயாம்.

ஊர் என்ற பொதுக்கூறுகளில் காணப்பட்டது போல் பாக்கம் என்ற பொதுக்கூறுகளிலும் பல இனப்பெயர்கள், சாதிப்பெயர்கள் காணப்படுகின்றன.

| | |
|---|---|
| கருமாறப்பாக்கம் | வள்ளுவப்பாக்கம் |
| வில்லியம்பாக்கம் | கொல்லம்பாக்கம் |
| ஆரியப்பாக்கம் | சின்ன சோழியம்பாக்கம் |
| தேவரியம்பாக்கம் | நெசப்பாக்கம் |
| கோயம்பாககம் | ஒட்டியம்பாக்கம் |
| பிள்ளைப்பாக்கம் | இடையர்பாக்கம் |
| | கூத்திரம்பாக்கம் |

மேற்கண்ட சாதி, இனப்பெயர்களை உடையவர்கள் செங்கற்பட்டு மாவட்டத்தின் கடற்கரைப் பகுதிகளைச் சார்ந்த ஊர்களில வாழ்ந்துள்ளார்கள் என்பது ஊர்ப்பெயர்களால் உணரப்படுகிறது. வள்ளுவர், கொல்லர், கூத்தர் என்பன செய்யும் தொழிலால் பெற்ற பெயர்கள். அத்தொழிலை மிகுதியாகச் செய்பவர்கள் இன்றும் இம்மாவட்டத்தில் உள்ளனர்.

தேவர் என்பது இனப்பெயராகக் கருதப்படுவதுடன் வானில் உள்ள தேவர் என்றும் கருதவாய்ப்புண்டு. வானிலுள்ள தேவர்

களைக் கடற்கரைப் பகுதியில் உள்ளவர்கள் கோயில் கட்டி வழி பட்டிருக்கக்கூடும். அதனாலும் அவ்வூர் அப்பெயரைப் பெற்றி ருக்க முடியும். 'கோயிலம் பாக்கம்' என்ற பெயரில் வேறு சில ஊர்களும் இம்மாவட்டத்தில் உள்ளமை, இறைவழிபாட்டில் இப்பகுதி மக்களுக்குள்ள ஈடுபாட்டைக் காட்டுவதாக அமையலாம்.

வானிலுள்ள தேவர்களுக்கு மாறுபட்டவர்களாகக் கருதப் படுபவர்கள் அரக்கர்கள். அந்த அரக்கரின் பெயரில் 'அரக்கம் பாக்கம்' என்ற ஊரும் இப்பகுதியில் உள்ளது. தேவர்கள், அரக் கர்கள் என்ற மாறுபட்ட சிந்தனைகளை இம்மண்ணில் விதைத்தவர்கள் ஆரியர்களே. அவர்கள் செங்கைமாவட்டத்தின் கடற்கரைப் பகுதி ஊர்களிலும் மிகுந்த செல்வாக்குடன் வாழ்ந்துள்ளமை ஆரியம்பாக்கம். ஆரியப்பெரும்பாக்கம் என்ற பெயர்களில் பல ஊர்கள் உள்ளமை கொண்டு உணரமுடிகிறது.

சமண மதத்தின் செல்வாக்கு செங்கற்பட்டு மாவட்டத்தில் குறிப்பாகக் கடற்கரைப் பகுதி ஊர்களில் மிகுந்துள்ளது என்பது அம்மணம்பாக்கம் (அமணப்பாக்கம்) என்ற பெயரில் பல ஊர்கள் உள்ளமை கொண்டு உணரமுடிகிறது. ஒரு வட்டத்திலேயே இரண்டு மூன்று அம்மணம்பாக்கங்களைக் காணமுடிகிறது.

சமண மதத்தின் செல்வாக்கும் ஆரியர்களின் செல்வாக்கும் இம்மாவட்டப் பகுதிகளில் வேரூன்றக்காரணமாக இருந்தவர்கள் இம்மாவட்டம் உள்ளடங்கிய பகுதிகளை ஆட்சிசெய்த பல்லவ மன்னர்களேயாம் அவர்கள் ஆட்சிக்காலத்தில் பல புதிய ஊர்கள் தோன்றியிருக்கக்கூடும். அப்படித் தோன்றிய ஊர்களில் பல கடற்கரைப் பகுதிகளிலும் தோன்றியிருத்தல் வேண்டும். பல்லவ மன்னர்களில் ஒருவரான நந்திவர்மனின் பெயரில் நந்தியம் பாக்கம் என்ற ஓர் ஊரும் தோன்றியுள்ளமை இச்சிந்தனையை உறுதிப்படுத்துகிறது.

தூய தமிழில் தோன்றியுள்ள பல பாக்கங்களுக்கிடையில் கான்றம்பாக்கம், நெட்ரம்பாக்கம், காட்ரம்பாக்கம், அட்சம் பாக்கம் போன்ற புதிர்களான பாக்கங்களும் உள்ளன. பாயசம் பாக்கம் என்ற வினோதமான ஊர்ப்பெயரும் இங்கு உள்ளது.

3. புரம்:

செங்கை மாவட்ட ஊர்ப்பெயர்களில் புரம் என்ற பொதுக் கூறினைப்பெற்ற ஊர்களும் ஓரளவு மிகுதியாகவே காணப்படு கின்றன. எல்லா வட்டங்களிலும் இப்பெயரில் ஊர்கள் உள்ளன.

புரம் என்பது இடத்தைக் குறிக்கும் சொல்லாக நெடுநாள் வழக்கில் உள்ளது. அந்தப்புரம், சந்தைப்புரம் போன்ற வழக்குகளையும் காணமுடிகிறது. கபாடபுரத்தில் இரண்டாம் தமிழ்ச் சங்கம் இருந்ததாகவும் அது கடலுள் மறைந்து விட்டதாகவும் அறிஞர் கூறுவர். அவ்வூர்ப் பெயரை நோக்கினால் புரம் என்ற பொதுக் கூறினது தொன்மையும் அப்பெயரில் பல ஊர்கள் முன்னர்த் தமிழ்நாட்டில் இருந்திருக்கவேண்டும் என்ற உண்மையும் புலப்படும்.

''புரம் என்ற சொல்லும் சிறந்த ஊர்களைக் குறிப்பதாகும்.''[8]

''புரம் என்பது புரி எனவும் வழங்கப்படும்''[9]

என்ற குறிப்புகள் இவ்வூர்ப் பெயர்களைப்பற்றி உணரத் துணை செய்கின்றன.

புரம் என்பது தமிழ்ச் சொல்லாகவும், தமிழக ஊர்ப்பெயர்களில இடம்பெற்ற பொதுக்கூறினை உடையதாகவும் காணப்பட்டாலும் கூட செங்கற்பட்டு மாவட்டத்தைப் பொறுத்த வரையில் இப்பொதுக்கூறில் முடியும் பல ஊர்கள் இடைக்காலத்தில் தோன்றியவைகளாகவே காணப்படுகின்றன. காரணம், இப்பொதுக்கூறுடன் இணைந்துள்ள முன் ஒட்டாகிய சிறப்புக் கூறுகள் பெரும்பாலும் வடமொழிச் சொல்லாகவும், புராணத் தொடர்புடையவைகளாகவும் காணப்படுவதேயாம்.

மாமல்லபுரம் என்று இன்று அழைக்கப்படும் மஹாபலிபுரம் போன்ற சில ஊர்கள் கடற்கரையைச் சார்ந்த ஊர்களாகக் காணப்பட்டாலும் பெரும்பாலும் கடற்கரையிலிருந்து தொலை தூரத்தில் உள்ள ஊர்களே புரம் என்ற பொதுக்கூறைப் பெற்றுள்ளன. செங்கை மாவட்டத்தில் திருத்தணி வட்டத்தில் தான் புரம் என்று முடியும் ஊர்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன. அதே சமயம் கடற்கரைக்கு மிகவும் நெருக்கமாக உள்ள செங்கற்பட்டு, மதுராந்தகம், சைதாப் பேட்டை போன்ற வட்டங்களில் புரம் என்று முடியும் ஊர்கள் மிகவும் குறைவே. சைதாப் பேட்டை வட்டத்தில் இரண்டே ஊர்கள்தான் உள்ளன. எனவே, கடற்கரையிலிருந்து ஒதுங்கி, உள்நாட்டில் அமைந்

8. ஊரும் பேரும் - டாக்டர் ரா.பி. சேதுப்பிள்ளை - பக். 49
9 ,, ,, பக்: 50

துள்ள ஊர்களே புரம் என்று செங்கற்பட்டு மாவட்டத்தில் அமைந்துள்ளது என்று வரையறுத்துக் கூறலாம்.

ஊர், பாக்கம் என்ற பொதுக் கூறுகளுக்கும் புரம் என்ற பொதுக்கூறுக்கும் அடிப்படை வேறுபாட்டை அவ்வூர்ப் பெயர் களால் உணர முடிகிறது. முன்னிரண்டு பொதுக் கூறுகளில் பெரும்பாலும் இயற்கைப் பொருட்கள், விலங்குகள், சாதிப் பெயர்கள் போன்றனவற்றைக் காணமுடிந்தது. ஆனால் புரம் என்று முடியும் ஊர்களில், அவைகளில் எதனையும் காண முடிய வில்லை. மாறாக,

தனி மனிதப் பெயர்கள்
அரசர்களின் பெயர்கள்
தெய்வங்களின் பெயர்கள்

ஆகியனவற்றையே இப்பொதுக்கூறு உணர்த்துகின்றன. காஞ்சி புரம், நாஞ்சீபுரம், கவுணிபுரம் போன்ற மிகச் சில ஊர்களே மேற்கண்ட வரையறைக்குள் அடங்காதவை. எனினும் அவ்வூர் களும் கூட தெய்வத் தொடர்புடையவையாகவும் அரசர்களின் தொடர்புடையவையாகவுமே உள்ளன.

| | |
|---|---|
| ஹனுமந்தபுரம் | ஹரிச்சந்திராபுரம் |
| வேதநாராயணபுரம் | காசிநாதபுரம் |
| வெங்கடாபுரம் | இரகுநாதபுரம் |
| இப்ரஹாம்புரம் | இராஜரத்தினபுரம் |
| கஸ்பாபுரம் | இராமச்சந்திராபுரம் |
| ராமானுஜபுரம் | இராமலிங்கபுரம் |
| அட்சன்புரம் | வெங்கடப்பெருமாள் ராஜு புரம் |
| கோபாலபுரம் | |
| ஆப்ரஹம்புரம் | வேணுகோபாலபுரம் |

இப்பெயர்கள் தனிமனிதப் பெயர்களாக இருந்தாலும் தெய்வங்களின் பெயர்களாக உள்ளமையினையும் உணரமுடி கிறது. தெய்வப்பெயர்களாகத் தங்களுக்குச் சூட்டிக்கொள்ளும் முறை தமிழ்நாட்டில் உண்டு. பக்தி இயக்கங்கள் தோன்றி வளர்ந்தபின் அம்முறையும் தோன்றி இன்றளவும் நிலைத்து விட்டது. செங்கற்பட்டு மாவட்டத்தில் அந்நிலை மிகுதியாக உள்ளமை ஊர்ப்பெயர்களால் உணரப்படுகிறது.

இப்ரஹாம் என்ற இசுலாமியர் பெயரிலும் ஆப்ரஹாம் என்ற கிறித்துவர் பெயரிலும் அட்சன் என்ற ஆங்கிலேயர் பெயரிலும்கூட புரம் என்ற பொதுக்கூறுடைய ஊர்கள் தோன்றியுள்ளமை, அவ்வூர்கள் அண்மைக்காலத்தில் தோன்றியுள்ளதை உணர்த்தும்.

| | |
|---|---|
| பொம்மராஜபுரம் | காவேரி ராஜபுரம் |
| கம்பராஜபுரம் | கேவலராஜபுரம் |
| பர்வதராஜபுரம் | குமாரபொம்மராஜபுரம் |
| சிக்கராயபுரம் | இராஜகலஹாபுரம் |
| திருமலராஜபுரம் | இராஜபத்மாபுரம் |
| செங்கல்வபுரம் | வீரகாவேரிராஜபுரம் |

போன்ற ஊர்கள் அரசர்களின் பெயரில் அமைந்தவைகளாக உள்ளன. செங்கைமாவட்டம் ஆந்திரமாநிலத்தையொட்டி அமைந்துள்ளதால் தெலுங்கு மொழி பேசக்கூடியவர்கள் இம்மாட்டத்தில் பரவலாக வாழ்ந்து வருகின்றனர். திருத்தணி வட்டம் ஆந்திரமாநிலத்திலிருந்து தமிழகத்துடன் பிற்காலத்தில் இணைந்த பகுதியாகும். எனவே திருத்தணி வட்டத்திலுள்ள பல ஊர்ப்பெயர்கள் தெலுங்குப்பெயர்களாகவே உள்ளன. புரம் என்ற பொதுக்கூறுடன் முன் ஒட்டுகளாகத் தெலுங்குப் பெயர்கள் இணைந்துள்ள நிலையைத் திருத்தணி வட்டத்தில் மிகுதியாகவும் பிறவட்டங்களில் பரவலாகவும் காணமுடிகிறது.

தெலுங்கு மொழி பேசும் அரசர்கள் செங்கை மாவட்டப் பகுதிகளில் ஆட்சி நடத்தியுள்ளமையால் தங்கள் பெயர்கள் விளங்குமாறு ஊர்களுக்கும் பெயர் சூட்டியுள்ளனர் என்பதை ஊர்ப்பெயர்களால் உணரமுடிகிறது. ராயர் என்றும் ராஜா என்றும் அவர்கள் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

| | |
|---|---|
| ஜானகிபுரம் | ஆஞ்சநேயபுரம் |
| லட்சுமிநாராயணபுரம் | பாலகிருஷ்ணாபுரம் |
| ஜெகன்னாதபுரம் | சுந்தபுரம் |
| கனகவல்லிபுரம் | கார்த்திகேயபுரம் |
| கிருஷ்ணாபுரம் | கோதண்டராமபுரம் |
| லஷ்மிபுரம் | சுப்பிரமணியபுரம் |
| நரசிங்கபுரம் | வள்ளியம்மாபுரம் |
| சிவபுரம் | விநாயகபுரம் |

ஸ்ரீனிவாசபுரம் சீதாபுரம்
ஆதிவராஹபுரம் மருதவல்லிபுரம்
காசிநாதபுரம்

போன்ற பல ஊர்கள் இறைவன் பெயரால் அமைந்துள்ளதை இம்மாவட்டத்தில் காணமுடிகிறது. குறிப்பிட்ட சில பெயர்கள் ஒருவட்டத்திற்குள்ளேயே பல முறை ஊர்ப்பெயர்களாக இடம் பெற்றுள்ளன. புரம் என்ற பொதுக்கூறைப்பெற்றுள்ள ஊர் களில் பெரும்பாலன இறைவன் பெயரில் அமைந்துள்ளதாகவே காணப்படுகின்றன.

இறைவன் பெயர்களிலும்கூட பெரும்பாலான வைணவ சமயத்து இறைவன், இறைவியர் பெயர்களாகவே அமைந்துள்ள தனையும் உணரமுடிகிறது. தெலுங்கு மொழி பேசும் இனத்த வர்கள் பெரும்பாலும் வைணவ சமயத்தினராகவே உள்ளனர். அம்மொழி பேசும் மக்கள் இம்மாவட்டத்தில் பெற்றிருந்த செல் வாக்கினையே வைணவ சமயக் கடவுளரின் பெயர்கள் உணர்த்து கின்றன. திருமால் அவதாரங்களைக் காட்டும் விதத்திலும், திருமாலின் மனைவியாகிய லட்சுமியின் அவதாரங்களை உணர்த் தும் விதத்திலுமே பல ஊர்ப்பெயர்கள் உள்ளன. சைவ சமயக் கடவுளாகிய சிவனின் பெயரில் மிகச் சில ஊர்களும், திருத்தணி வட்டத்தில் முருகனின் பெயர்த் தொடர்புடைய சில ஊர்களும் காணப்படுகின்றன.

விலாசம் என்பது நாடக வகைகளுள் ஒன்று. அவ்விலாசம் என்ற பொதுக்கூறுடைய சந்திர விலாசபுரம், கூர்ம விலாசபுரம், லட்சுமி விலாசபுரம், மச்சவிலாசபுரம் போன்ற ஊர்களும் இம் மாவட்டத்தில் உள்ளன. ஒருவேளை, அந்நாடகங்களை நடித்த கலைஞர்களுக்குப் பரிசாகத் தரப்பட்ட ஊர்களாகவும் இவை இருக்கலாம்.

## 4. சேரி:

செங்கை மாவட்ட ஊர்ப்பெயர்களில் பல சேரி என்னும் பொதுக்கூறு பெற்று அமைந்துள்ளன. மாவட்டத்தின் எலலா வட்டங்களிலுமே சேரி என்று முடியும் ஊர்கள் உள்ளன. புரம் என்று முடியும் ஊர்கள் எந்தெந்த வட்டங்களில் மிகுந்து காணப் படுகின்றனவோ அங்கெல்லாம் சேரி என்று முடியும் ஊர்களும் மிகுந்து காணப்படுகின்றன.

சேரி என்பது தூய தமிழ்ச்சொல். மக்கள் சேர்ந்து வாழும் இடங்கள் சேரிகள் என்று அழைக்கப்பட்டுள்ளன. பெரும்பாலும் கடற்கரையையொட்டிய பகுதிகளிலேயே சேரிகள் அமைந்துள்ளன. சில ஊர்கள் உள்நாட்டிலும், கடற்கரையில்லாத பகுதிகளிலும் கூட அமைந்திருக்கலாம்.

சங்க இலக்கியங்களில் சேரி என்ற சொல் வழக்குக் காணப்படுவதுடன் சேரிகள் எவ்வாறு அமைந்திருக்கும் என்ற விளக்கமும் தரப்பட்டுள்ளது. பெரும்பாலும் சிறு குடிசைப்பகுதிகள் நிறைந்த, நகர்ப்புரத்துக்கு வெளியில் உள்ள பகுதிகளாகவே சேரிகள் உள்ளன.

''புலாலஞ் சேரிப் புல்வேய் குரம்பை
ஊரென உணராச் சிறுமையொடு நீருடுத்து''[10]

என்று ஓர் சேரியின் அமைப்பு அகநானூற்றில் சித்தரித்துக் காட்டப்பட்டுள்ளது. புலால் நாற்றம் வீசுவதாகக் குறிப்பிடப் படுவதால் இது மீனவர் உறையும் சேரி என்பது விளங்கும். ஆனால் புல்வேய் குரம்பைகள் உடையதாக, அதனை ஊர் என்று கூறமுடியாத அளவுக்கு எளிமையான அமைப்புடையதாக விளங்கியது என்று ஆசிரியர் குறிப்பிடுவது பொதுவாகச் சேரிகளின் பொது அமைப்பினையே விளக்குவதாக உள்ளது.

''பல குடிகள் சேர்ந்து வாழும் இடம் சேரி என்று பெயர் பெற்றது. பள்ளர் வாழும் சேரி பள்ளர் சேரி எனப்படும். பறையர் வாழுமிடம் பறைச்சேரி; ஆயர் வாழுமிடம் ஆயர்சேரி; பிராமணர் வாழுமிடம் பார்ப்பனச்சேரி. எனவே சேரி என்னும் சொல் ஒரு குலத்தார் சேர்ந்து வாழும் இடத்தினை முற்காலத்தில் குறிப்பதாயிற்று''[11] என்ற விளக்கம் தமிழகத்தில் முன்பு சேரிகள் எவ்வாறு அமைந்திருந்தன என்பதை எடுத்துக் காட்டுகின்றது. பார்ப்பனச் சேரிகள் இங்கு இருந்தமையினைத் தொல்காப்பிய உரையாசிரியர்களும்கூட எடுத்துக்காட்டுகின்றார்கள்.

ஆயர்களின் சேரியைப்பற்றி இளங்கோவடிகள் 'புறஞ்சேரி இருத்த காதை'யில் விரிவாக எடுத்துக் கூறியுள்ளார். பிற காப்

---

10. அகநானூறு - பாடல்: 200-2,3.

11. ஊரும் பேரும் - டாக்டர். ரா. பி. சேதுப்பிள்ளை பக்: 54

பியங்களிலும் தமிழகத்திலிருந்த பல்வேறு சேரிகளையும் பற்றி விரிவாக உணரமுடிகிறது. ஆனால் காலப்போக்கில் அச்சொல் மாறுபட்ட புதுப்பொருளை அடையத் தொடங்கிவிட்டது. சமுதாயத்தில் தாழ்ந்த சாதியினராகக் கருதப்படும் மக்கள் சேர்ந்து வாழும் பகுதி அது என்றும், உயர்ந்த சாதியினர் உறையும் ஊர்ப் புரங்களிலிருந்து ஒதுங்குப் புரங்களில் தான் சேரிகள் அமையும் என்றும் கூறும் நிலை பின்னர் உருவாகிவிட்டது.

செங்கற்பட்டு மாவட்டத்தில் சேரிகள் என்ற பொதுக் கூறினைப் பெற்றுள்ள ஊர்கள் பிற்காலத்தில் கூறப்படும் சேரிகளின் அமைப்பினின்றும் மாறுபட்டவைகளாகவே காணப்படுகின்றன. ஊர், பாக்கம் என்ற பொதுக் கூறுபாடுகளைக் கொண்ட ஊர்கள் எவ்வாறு அமைந்திருந்தனவோ அவைகளைப் போன்றே சேரிகளும் அமைந்துள்ளன.

சாதிகளின் பெயர்களில் சேரிகள் முன்னர் அமைந்திருந்தன. அந்நிலையிலுங்கூட மாற்றத்தைக் காணமுடிகிறது. செங்கை மாவட்டத்தில் சாதியின் பெயரால் ஒரு சேரிகூட இன்றில்லை என்பது குறிபிடத்தக்கது. கொல்லச்சேரி என்ற ஓர் ஊர் உண்டு. அதுவும்கூடச் செய்யும் தொழிலின் அடிப்படையில் அமைந்த ஊர் தானேயன்றி சாதியின் பெயரால் அமைந்த ஊர் அல்ல.

'இயற்கைப் பொருட்களான மரப் பெயர்களைப் பெரும்பாலான சேரிகள் முன் ஒட்டுகளாகப் பெற்றுள்ளமையினைக் காணமுடிகின்றது.

| | |
|---|---|
| பனங்காட்டுச்சேரி | தண்டலசேரி |
| முருக்கஞ்சேரி | எலந்தஞ்சேரி |
| பாக்குவாஞ்சேரி | எருக்கஞ்சேரி |
| கருவேட்டுச்சேரி | வேலச்சேரி |
| தோட்டச்சேரி | அத்தியமாஞ்சேரி |
| வேப்பஞ்சேரி | பூஞ்சேரி |

போன்ற பல ஊர்கள் இம்மாவட்டமெங்கும் காணப்படுகின்றன. தோட்டம், பூ, தண்டலை போன்ற முன் ஒட்டுகளுடன் சேரிகள் அமைந்துள்ள நிலை அவை செழிப்பான, நீர்வளமுள்ள பகுதிகள் எனக் காட்டும். பனை, முருங்கை, கருவேலம், வேம்பு, எலந்தை, எருக்கம், அத்தி போன்ற மாறுபட்ட சூழ்நிலைகளில் உருவாகும்

மரங்களை நோக்கும் போது, பல்வேறு புவியியல் அமைப்புள்ள பகுதிகளிலும் சேரிகள் செங்கற்பட்டு மாவட்டத்தில் அமைந் துள்ளமை புலனாகும்.

தனிப்பட்ட சாதியின் பெயரால் சேரி இல்லாவிட்டாலும் சில தனிமனிதர்களின் பெயரால் சேரிகள் தோன்றியுள்ளமை யினை இம்மாவட்டத்தில் காணமுடிகிறது.

| | |
|---|---|
| அய்யன்சேரி | அரியப்பன்சேரி |
| வல்லன்சேரி | பெருமாள்சேரி |
| சாத்தன்சேரி | குமரன்சேரி |
| அண்ணாமலைச்சேரி | கருணாகரச்சேரி |

போன்றவைகளை இவ்வகைக்குச் சான்று காட்டலாம். இப்பெயர் களில் சில தாழ்ந்த இனப்பெயர்களாக இன்று கருதப்பட்டாலும் செல்வாக்குள்ள சில மனிதர்கள், தமது பெயர் விளங்குமாறு இவ்வூர்ப் பெயர்களை உருவாக்கியுள்ளார்கள் என்று கருதுவதே பொருத்தமாக அமையும். பலர் கூடி வாழும் இடமே சேரி எனப்படும் என்பதை கூடுவாஞ்சேரி என்ற ஊர்ப்பெயர் உணர்த்துகிறது. கருணாகரச்சேரி என்ற பெயரில் பல ஊர்கள் இம்மாவட்டத்தில் அமைந்துள்ளன.

சேரிகள் அவ்வப்போது புதிது புதிதாகத் தோன்றுகின்றன. புதிதாகப் தோன்றும் சேரிகள் ஏதேனும் புதுப்பெயர்களைப் பெறுகின்றன. சிலபோது, புதிதாகத் தோன்றிய சேரிக்குப் புதிய பெயர் ஏதும் சூட்டாமல் அச்சேரிக்கு அருகில் உள்ள ஊரின் பெயரோடு இணைத்து 'புதுச்சேரி' என்றும் கூறியுள்ளனர். இம்முறையில் அமைந்த சில ஊர்களையும் செங்கற்பட்டு மாவட்டத்தில் காணமுடிகிறது.

காரணை, காவனூர் ஆகிய ஊர்களுக்கு அருகில் புதிதாகத் தோன்றிய சேரிகள், காரணைபுதுச்சேரி என்றும், காவனூர் புதுச்சேரி என்றும் அழைக்கப்படுகின்றன. சில போது, அருகில் உள்ள ஊர்ப்பெயரை இணைத்துக் கூறாமல் தனியாகவே 'புதுச்சேரி' எனறும் புதிதாகத் தோன்றிய ஊர் குறிப்பிடப் பட்டுள்ளது. அப்படிப்பட்ட பல புதுச்சேரிகள் செங்கை மாவட்டத்தில் உள்ளன.

இவ்வூர்ப் பெயர்களை நோக்கும் போது மக்கள் சேர்ந்து வாழும் இடம் சேரி என்று கூறுவதைக் காட்டிலும் ஒரு ஊரைச் சேர்ந்தாற்போல் புதிதாகத் தோன்றும் ஊர் சேரி என்று கூறுவது மிகவும் பொருத்தமாக அமையும்.

புதிதாகத் தோன்றிய ஊரை, பழைய ஊரிலிருந்து வேறு படுத்திக்காட்டவே புதுச்சேரி என்று குறிப்பிட்டுள்ளனர். எனவே இங்கு புது அல்லது புதிய என்பது அடையாளக் குறியீடே யாகும். சில போது புதுச்சேரி என்பதற்குப் பதில் 'அடையாளச் சேரி' என்றும் கூறியுள்ளதைக் காணமுடிகிறது. புதிதாகத் தோன்றிய சேரிகளில் காணப்படும் மண்வகையின் அடிப்படையில் 'செம்மண்சேரி' 'குருமண்சேரி' என்றும் ஊர்ப் பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

சேரி என்பது தமிழ்ப் பெயராகையால் தெலுங்கு பேசும் மக்கள் நிறைந்த திருத்தணி வட்டத்தில் இரண்டு சேரிகளை மட்டுமே காணமுடிகிறது.

**5. வாக்கம்:**

வாக்கம் என்ற பொதுக்கூறையுடைய பல ஊர்கள் செங்கற் பட்டுமாவட்டத்தில் காணப்படுகின்றன. திருத்தணிவட்டத் தைத் தவிர பிற எல்லா வட்டங்களிலுமே வாக்கம் என்று முடியும் ஊர்கள் உள்ளன.

பாக்கம் என்பது மருவிவாக்கம் என்று அழைக்கப்படுவதாகக் கூறுகின்றனர். அவ்வாறு கருதுவதற்கு மொழியியல் அடிப்படை யிலும் வாய்ப்புண்டு. பொருள்நோக்கிலும் பல இடங்களில் 'ப', 'வ' வாகத் திரிந்தும் அதே பொருளைத் தருமாறு அமைந் துள்ளது.

பகுத்தல் என்பதை வகுத்தல் என்றும் கூறலாம். பால்நிறம் என்பதும் வால்நிறம் என்பதும் ஒரே பொருளையே தரும். பண்டி என்பது வண்டி எனவும் அழைக்கப்படும். இச்சான்று களின் அடிப்படையில் நோக்கினால் பாக்கம் என்பதுவே வாக்கம் என்று மருவியுள்ளது என்பது தெளிவாகும்.

''பட்டினம், பாக்கம் என்பவை கடற்கரைச் சிற்றூரைக் குறிக்கும். நெய்தல் நிலம் முழுமைக்கும் இப்பெயர்கள் பரவி யிருக்கின்றன. பாக்கம் என்ற சொல் வாக்கம் என்று மருவியும்

வழங்கி வருகிறது.[12] ஊர்கள் அமைந்துள்ள இடம், ஊர்களுக்கு முன் ஒட்டாக அமைந்துள்ள சிறப்புக்கூறுகளில், கூறப்பட்டிருக்கும் செய்திகள் ஆகியவைவற்றை நோக்கினாலும் பாக்கத்துடன் வாக்கத்திற்குள்ள நெருங்கிய தொடர்பு புலப்படும். எனினும் வாக்கம் என்ற முடிபைப்பெற்றுப்பல ஊர்கள் உள்ளமையால் தனித்தலைப்பாக இவ்வூர்களையும் ஆராய வேண்டியுள்ளது.

செங்கற்பட்டு மாவட்டத்தின் எல்லா வட்டங்களிலும் வாக்கம் என்ற முடிபைப் பெற்ற ஊர்கள் காணப்பட்டாலும் திருத்தணி வட்டத்தில் மட்டும் இம்முடிபைப் பெற்ற ஊர் ஒன்றனைக்கூடக் காணமுடியவில்லை. பாக்கம் என்ற பொதுக் கூறுடைய 254 ஊர்கள் மாவட்டமெங்கும் காணப்பட்டாலும் திருத்தணிவட்டத்தில் 4 ஊர்கள் மட்டுமே அம்முடிபைப் பெற்றதாக அமைந்துள்ளன. அதே போலத்தான் வாக்கம் என்ற முடிபைப்பெற்ற ஊர்களின் நிலையும் இவ்வட்டத்தில் அமைந்துள்ளன. அவ்வட்டம் கடற்கரைப்பகுதியில் அமையாதிருப்பதுவே வாக்கம் என்ற பொதுக்கூறுடைய ஊாகள் குறைவாக உள்ளமைக்குரிய காரணமாகும்.

பாக்கங்களைப் போன்று வாக்கங்களும் இயற்கைப் பொருட்களின் பெயர்களைப் பெற்று மாவட்டமெங்கும் அமைந்துள்ளன.

| | |
|---|---|
| அத்திவாக்கம் | போந்தவாக்கம் |
| ஒட்டிவாக்கம் | கொட்டிவாக்கம் |
| அழிஞ்சிவாக்கம் | பருத்திவாக்கம் |
| அவுரிவாக்கம் | காஞ்சிவாக்கம் |

போன்ற பொதுக்கூறுடைய பல ஊர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. அத்திவாக்கம், அவுரிவாக்கம் போன்ற ஊர் பல வட்டங்களில் காணப்படுகின்றன. ஒட்டிவாக்கம் என்பதனுடன் கீழ் ஒட்டிவாக்கம், மேல் ஒட்டிவாக்கம் என்ற ஊர்களும் காணப்படுகின்றன. மரப்பெயர்களைக் காட்டிலும் செடிப்பெயர்களையே பெரும்பாலான வாக்கங்கள் பெற்றுள்ளன. இவ்வகையில் பாக்கங்களிலிருந்து வாக்கங்கள் வேறுபடுகின்றன எனலாம். பாக்கங்களில் பல மரப்பெயர்களின் அடிப்படையில் அமைந்திருக்கின்றன.

---

12. செங்கற்பட்டு மாவட்டம் - சோ. ம. லெ - பக்: 54

ஏரிவாக்கம்
குன்னவாக்கம்
புழுதிவாக்கம்
மேடவாக்கம்

போன்ற சில ஊர்கள் நீர், மலை, மண், நிலம் போன்றவற்றின் அடிப்படையில் அமைந்துள்ளன. இப்படி அமைந்த ஊர்ப் பெயர்கள் சிலவாக இருப்பினும் ஒரே வட்டத்தில் பலமுறையாக மாவட்டமெங்கும் காணப்படுகின்றன. இம்மாவட்டத்தின் பல வட்டங்களிலும் ஏரிகள் உள்ளன என்பதை ஊர்ப்பெயர் களின் மூலம் உணரமுடிகிறது. குன்றம் என்பது குன்னம் என்றும் குண்ணம் என்றும் மருவி வழங்குகின்றன. கடல், ஏரியையடுத்த பகுதிகளில் வாக்கங்கள் அமைந்துள்ளது போன்று மலைப் பகுதிகளிலும் அமைந்துள்ளதை இப்பெயர்கள் உணர்த்துகின்றன.

கூத்துக்கலைகளில் வல்ல கூத்தர்களுக்குப் பரிசாகச் சில ஊர்களை மன்னர்கள் வழங்கியிருத்தல்வேண்டும். அப்படிப்பட்ட ஊர்கள் 'கூத்தவாக்கம்' என்று குறிப்பிடப் படுகின்றன. இப் பெயரையுடைய ஊர்கள் பல வட்டங்களில் காணப்படுகின்றன. அன்னதானம் முட்டுப்பாடின்றி நடைபெறுவதற்காகச் சில ஊர்கள் விடப்பட்டுள்ளன. அப்படிப்பட்ட ஊர்கள் 'அன்னதானம் காக்கவாக்கம்' என்று அழைக்கப்படுகின்றன.

ஆரியவாக்கம்
வில்லிவாக்கம்
வன்னிவாக்கம்

போன்ற சிலஊர்கள் சாதிப்பெயர்களாலும் அமைந்துள்ளன. செங்கைமாவட்டத்தின் கடற்கரைப்பகுதி ஊர்களில் ஆரியர்கள், வில்லியர்கள் வன்னியர் போன்ற இனப்பிரிவு மக்கள் தங்கள் சாதிப் பெயர்களில் ஊர்கள் அமையுமளவிற்குச் செல்வாக்குடன் வாழ்ந்துள்ளதை ஊர்ப்பெயர்களால் அறியமுடிகிறது.

பிற பொதுக் கூறுகளையுடைய ஊர்களில் காணப்படுவது போன்று வாக்கம் என்ற பொதுக்கூறினைக் கொண்ட ஊர்களில் கடவுளர் பெயர்களை மிகுதியாகக் காணமுடியவில்லை.

விஷ்ணுவாக்கம்
தொழுதவாக்கம்
மௌலிவாக்கம்

போன்ற சிலஊர்களே இறைத் தொடர்புடையனவாகக் காணப் படுகின்றன. விஷ்ணுவின் பேர்மட்டுமே இறைவன் என்ற நிலையில் குறிப்பிடப்பட்டுள்ளது. விஷ்ணு முல்லை நிலக்கடவுள் என்று கூறுவர். ஆனால் பிற்காலத்தில் அம்முறையமைப்பு மாற்றம் பெற்றுள்ளது. தெலுங்கு மொழி பேசும் மக்கள் கூட்டத் தினர், விஷ்ணுவை வழிபடும் வைணவர்களாக இருந்தமையால் அவர்கள் மிகுதியாக வாழ்ந்த பகுதிகளில் விஷ்ணுவின் பெயர் மட்டுமே காணப்படுகிறது.

பாக்கங்களின் அமைவிடங்களிலிருந்து இவைகள் சிறிது வேறுபட்டுக்காணப்பட்டாலும் பெயரளவில் காணப்படும் மாற்றத்தைப் போன்றதே ஊர்களின் அமைப்பில் காணப்படும் மாற்றங்களுமாகும். ஆனால் பொருத்தப்பாடுகளே மிகுதியாக உள்ளன. பாக்கம் என்ற பொதுக்கூறில் முடியும் சில ஊர்கள் வாக்கம் என்ற முடிவிலும் அமைந்துள்ளன.

அச்சரப்பாக்கம் — அச்சரவாக்கம்
அரியபாக்கம் — அரியவாக்கம்
ஆரியபாக்கம் — ஆரியவாக்கம

என்பன ஒற்றுமைக் கூறுபாடுகள் அமைந்து இருபொதுக் கூறுக ளிலும் காணப்படும் ஊர்களாகும். எனவே பாக்கம் என்று குறிப் பிடப்படும் ஊர்ப்பகுதிகளில் சிலவே வாக்கம் என்று குறிப்பிடப் படுகிறது என்பது புலனாகிறது. பாக்கம் என்பது பழைய வடிவம்; வாக்கம் என்பது மாற்றம் பெற்றுவழங்கப்பட்டு வரும் புதிய வடிவம். வாக்கம் எனப்படும் பகுதிகள் பின்னர்த் தோன்றியவை களாகக் காணப்படுவதால் முன்னர்த் தோன்றிய பாக்கங்களிலி ருந்து சிறிதுமாறு பட்டுக்காணப்படுகின்றன. ஆனால் பெரும் பாலும் தூய தமிழ்ப் பெயர்களாக இவை விளங்குவது குறிப் பிடத்தக்கதாகும்.

**6. பட்டு:**

பட்டு என்ற பொதுக்கூறுடைய ஊர்ப்பெயர்களும் செங்கை மாவட்டத்தின் எல்லா வட்டங்களிலும் காணப்படுகின்றன. ஸ்ரீபெரும்புதூர். திருத்தணி ஆகிய வட்டங்களில் இப்பொதுக்கூறு டைய ஊர்கள் மிகவும் குறைவாகக் காணப்பட்டாலும் செங்கற் பட்டு, பள்ளிப்பட்டு என்ற பெயரில் இரண்டு வட்டங்கள் இம்மாவட்டத்தில் உள்ளமையால் பட்டு என்ற பொதுக்கூறினது சிறப்பு நன்கு புலப்படும்.

பட்டு என்ற சொல் குக்கிராமம் என்ற பொருளுடன், சிறு நகரம் அல்லது கிராமம் என்ற பொருளையும் தரும் என்று கூறுகிறது தமிழ்லெக்ஸிகன்.[13]

"சிற்றூர்ப் பெயரும் துகிலும் பட்டே"[14] என்று கூறுகிறது பிங்கல நிகண்டு இவ்விருசான்றுகளின் அடிப்படையில் நோக்கினால் பட்டு என்ற சொல் சிறுநகரம் அல்லது சிற்றூர் என்ற பொருளைத்தருமாறு அமைந்துள்ளமைபுலனாகும். 'பேடு' என்ற பொதுக்கூறுடைய ஊர்களும் உள்ளன. அவ்வாறு குறிப்பிடப் படும் பேடுகளுடன் பட்டு என்ற பொதுக்கூறுடைய ஊர்கள் ஒப்பிடுவதற்குரியன என்றும் தமிழ் அகராதி குறிப்பிடுகிறது.

சிறுநகரம் அல்லது சிற்றூர் என்ற விளக்கங்களை நோக்கினால் ஓர் உண்மை புலப்படும். ஒருபெரும் நகரத்தையோ, அல்லது பெரிய ஊரையோ அடுத்தாற்போல், அதன் பிரிவாகத் தோன்றும் நகரம் அல்லது கிராமம் பட்டு என்று குறிப்பிடப் பட்டிருத்தல் வேண்டும்.

பட்டி என்ற சொல் சிற்றூரைக்குறிக்கும். அச்சொல்லினடி யாகவே பட்டினம், பட்டுபோன்ற சொற்கள் அமைந்திருத்தல் கூடும். இவ்விளக்கங்கள் பொதுவாகச் செங்கற்பட்டு மாவட்டத் தில் பட்டு என்ற பொதுக்கூறைக்கொண்டுள்ள பல ஊர்களுக்குப் பொருந்தலாம். ஆனால் செங்கற்பட்டு, பள்ளிப்பட்டு போன்ற நகரங்களுக்கும் பொருந்தும் என்று கூறமுடியாது. ஒருவேளை, தொடக்ககாலத்தில் சிறு நகரங்களாக இருந்த அவ்வூர்கள் காலப் போக்கில் வளர்ச்சியடைந்து பெருநகரங்களாக மாறி இருத்தல் வேண்டும். இவ்வளர்ச்சி நிலைகளைக்காட்டுமாறு பல ஊர்கள் சிற்றூர்களாகவும், சில ஊர்கள் சிறு நகரங்களாகவும், மிகச்சில ஊர்கள் வளர்ச்சியடைந்த நகரங்களாகவும் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன.

பொதுவாகப் பிற ஊர்களைப் போன்றே பட்டு என்ற பொதுக் கூறுடைய ஊர்களும் காணப்படுகின்றன. எனினும் மூன்று முக்கி யச் செய்திகளை இவ்வூர்ப் பெயர்களைக் கொண்டு உணர முடி கிறது. பெரும்பாலான ஊர்கள்,

---

13. Tamil Lexicon - Vol-IV P: 2427
14. பிங்கல நிகண்டு - நூற்பா; 3762

1. மரப்பெயர்களைக் கொண்டுள்ளது
2. சில இடங்களில் சாதிப் பெயர்களாலும்
3. வேறு சில இடங்களில் தனிமனிதப் பெயர்களாலும்

பட்டு என்று முடியும் ஊர்கள் அமைந்துள்ளன. மண் அமைப்பைக் கொண்டும், மலைகளின் பெயராலும் கூடச் சில ஊர்கள் உள்ளன. மரப்பெயர்களைக் கொண்டு அமைந்த ஊர்களே காலத்தால் முன்னர்த் தோன்றிய ஊர்களாய் இருத்தல் வேண்டும்.

| | |
|---|---|
| கோரப்பட்டு | மாம்பட்டு |
| புன்னப்பட்டு | தூதுவிளம்பட்டு |
| அத்திப்பட்டு | விளாம்பட்டு |
| இலுப்பப்பட்டு | ஆர்க்கப்பட்டு |
| கள்ளிப்பட்டு | மூங்கில்பட்டு |
| வேப்பம்பட்டு | முருக்கம்பட்டு |

போன்ற பல ஊர்கள் மாவட்டமெங்கிலும் காணப்படுகின்றன. அத்திப்பட்டு, மாம்பட்டு போன்ற ஊர்ப்பெயர்களைப் பல வட்டங்களில் காண முடிகிறது. கோரை, கள்ளி போல் வன செடிப் பெயர்களாக இருந்தாலும் மரப்பெயர்களுடன் அவை தொடர்புடையனவாதலால் சேர்த்துக் குறிப்பிடப்படுகின்றன. இங்கு எடுத்துக் காட்டப்பட்டுள்ள மரங்கள் பல்வேறு நில அமைப்பிலும் வளர்வனவாதலால், பட்டுஎன்ற பொதுக்கூறுடைய கிராமங்கள் கடற்கரைப்பகுதி, காட்டுப்பகுதி போன்ற பல இடங்களிலும் அமைந்துள்ளதை உணர முடிகிறது.

| | |
|---|---|
| செட்டிப்பட்டு | தட்டாம்பட்டு |
| கம்மாளம்பட்டு | தேவம்பட்டு |
| அங்கமப்பட்டு | கோமாசிப்பட்டு |
| கோசப்பட்டு | |

போன்ற சில சாதிகளின் பேரிலும் ஊர்ப்பெயர்கள் காணப்படுகின்றன. செட்டியார் இனத்தைச் சேர்ந்தவர்கள் மிகுதியாக வாழ்ந்துள்ளதால். பல வட்டங்களில் செட்டிப்பட்டுகள் காணப்படுகின்றன. இன்றும் கூட குறிப்பிட்ட சில ஊர்களில் செட்டி மக்கள் மிகுதியாக வாழ்ந்து வருகின்றனர், பிற மொழி பேசும் இனத்தவர்களும் இம்மாவட்டப் பகுதியில் உள்ள பட்டுக்களில் வாழ்ந்

துள்ளனர் என்பதை ஊர்ப்பெயர்களால் உணர முடிகிறது. ஆரியர்களின் பேரில் ஒரு பட்டுக்கூட இம்மாவட்டத்தில் காணப் படவில்லை. ஒருவேளை பட்டுக்களாகிய சிற்றூர்கள் ஆரியர் களின் வாழ்க்கை முறைக்கு ஏற்றதாக அமையவில்லை போலும்!

ஆமையன்பட்டு, வீரன்பட்டு, சூரன்பட்டு, சோமதேவன் பட்டு போன்ற பெயரில் சில ஊர்களும் காணப்படுகின்றன. செல் வாக்குப் பெற்ற தனிமனிதர்களாக இவர்கள் விளங்கி இருத்தல் வேண்டும். ஆமையன்பட்டு என்ற பெயரில் பல ஊர்கள் காணப் படுகின்றன. வீரன், சூரன் என்பன வீரத்தின் அடிப்படையில் அமைந்த புனைபெயர்களாக இருத்தல் கூடும். இயற்பெயரால் மட்டுமன்றி, புனை பெயர்களாலும்கூட ஊர்ப்பெயர்கள் அமைக் கப்பட்டுள்ளன.

களிவந்தபட்டு, செங்கல்பட்டு, சேத்துப்பட்டு போன்ற ஊர் கள் மண் அடிப்படையில் அமைந்துள்ளன, களிமண் மிகுந்து காணப்படுதல், செங்கல் செய்வதற்கேற்ற மண் அமைந்துள்ள நிலை (செங்கல்பட்டிற்குப்பிற காரணங்களும் உள. அவை முன்பு எடுத்துக்காட்டப்பட்டுள்ளன). சேறு மிகுந்து காணப்படுதல் என்ற அடிப்படையில் இவ்வூர்ப் பெயர்கள் அமைந்துள்ளன. சேத்துப்பட்டு என்ற பெயரில் பல ஊர்கள் பல வட்டங்களில் காணப்படுகின்றன. மாவட்டத்தின் சில பகுதிகள் சேறு மிகுந் துள்ள பகுதிகளாகவே காணப்படுவதை இன்றும் காண முடி கிறது.

மேல், கீழ், நடு, வட, தென் என்ற எல்லைகளின் அடிப்படை யிலும் நில அமைப்பின் அடிப்படையிலும் பல பட்டுக்கள் மாவட்டமெங்கும் காணப்படுகின்றன. புதிது புதிதாகப் பல பட்டுக்கள் தோன்றியிருத்தல் வேண்டும். அதனால்தான் புதுப் பட்டு என்ற பெயரில் பல ஊர்கள் மாவட்டமெங்கிலும் காணப் படுகின்றன.

வடவேரிப்பட்டு, மலைப்பட்டு, காட்டேரிப்பட்டு, குன்னப் பட்டு, பாலேரிப்பட்டு போன்ற பெயரில் பல ஊர்கள் இம்மாவட் டத்தில் காணப்படுகின்றன. வடவேரி, காட்டேரி, பாலேரி போன்ற ஏரிகள் பாயும் பகுதியில் சில பட்டுகள் அமைந்துள்ளன. அதுபோல் மலைப்பகுதியிலும் சில பட்டுகள் காணப்படுகின்றன. இவ்வூர்களின் முன் ஒட்டுகளைக் கொண்டு நோக்கும்போது, பொதுவாகச் சிறுநகர், அல்லது சிறுகிராமம் என்பதுவே பட்டு

கள் எனப்படினும் ஏரி, மலை, சேற்றுப்பகுதிகள் போன்ற இடங்களிலேயே மிகுதியான பட்டுக்கள் அமைந்துள்ளதைக் காணமுடிகிறது.

ராயல்பட்டு, சந்தானம் பட்டு, கோமாசிப்பட்டு, மும்மல் பட்டு, தூக்கணாம்பட்டு போன்ற ஊர்ப்பெயர்களை நோக்கும் போது 'பட்டு' எனப்படும் ஊர் பிறிதோர் காரணத்தால் அமைந் திருத்தல் கூடுமோ என்று ஐயுறத் தூண்டுகிறது. பட்டு நெசவுத் தொழில் இம்மாவட்டத்தில் பரவலாக நடைபெற்று வருகிறது. அன்று இன்னும் சிறப்பாக நடைபெற்றிருக்க வேண்டும். அத் தொழில் புரியும் மக்கள் மிகுந்துள்ள ஊர்கள் பட்டுகள் என்றும் அழைக்கப்பட்டிருக்க வாய்ப்பு உண்டு. 'துகிலும் பட்டே' என்று நிகண்டு கூறும் பொருளும் எண்ணுதற்குரியது.

விளக்குப்பட்டு, திருக்கோயில்பட்டு என்ற பெயர்களில் சில ஊர்கள் காணப்பட்டாலும் திருமால்பட்டு என்ற பெயரை மட்டுமே காணமுடிகிறது. பிற தெய்வங்களின் பெயரால் பட்டு கள் ஏதும் காணப்படவில்லை. வேறுசில பொதுக்கூறுகளில் அமைந்த ஊர்களிலும்கூட திருமாலின் பெயரில் மட்டுமே ஊர் கள் அமைந்திருந்தது முன்னர் எடுத்துக்காட்டப்பட்டது. வைணவ சமயமே இம்மாவட்டத்தில் செல்வாக்குடன் விளங்கி யுள்ளதை ஊர்ப்பெயர்கள் உணர்த்துகின்றன. தெலுங்குமொழி பேசும் மக்கள் பரவலாக வாழ்ந்திருந்தாலும் பட்டுகளின் பெயர் கள் பெரும்பாலும் தமிழ்ச் சொற்களாகவே அமைந்துள்ளன.

## 7. குப்பம்:

செங்கை மாவட்டத்தில் காணப்படும் ஊர்ப்பெயர்களில் பல குப்பம் என்னும் பொதுக்கூறைப் பெற்றுள்ளதைக் காணலாம். மாவட்டத்தின் எல்லா வட்டங்களிலுமே குப்பங்களைக் காண முடிகிறது. காஞ்சிபுரம், சைதாப்பேட்டை வட்டங்களில் ஒன்றிரண்டு குப்பங்கள் காணப்படினும் பிறவட்டங்களில் மிகுதி யான குப்பங்கள் உள்ளன.

கும்பல் என்றசொல் கூட்டத்தைக்குறிக்கும். அச்சொல்லி னடியாகவே குப்பம் என்ற சொல் தோன்றி இருத்தல் வேண்டும். கும்பல் → குப்பல் → குப்பம் என்று இச்சொல் மாற்றம் பெற்றி ருத்தல் கூடும். குப்பை என்றசொல்லும் கூட்டத்தையே உணர்த் தும். கூட்டமாக மக்கள் வாழும் இடம் என்ற பொருளில் குப்பை என்பது குப்பமாகவும் மாறி இருத்தல் கூடும்.

சில ஊர்ப்பெயர்களில் காணப்படும் பொதுக்கூறுகள் நாட்டின் பல்வேறு நிலப்பகுதிகளிலும் காணப்படும். அவை சிற்றூர்களா நகரங்களா என்றவேறு பாடுகளையுணரமுடியுமே தவிர அப்பொதுக் கூறையுடைய ஊர்கள் எப்பகுதியில் மட்டுமே அமையும் என்று வரையறுத்துக் கூறமுடியாது. ஆனால் சில பொதுக்கூறுகளை வரையறுத்துக் கூறமுடியும். அப்படிப்பட்ட பொதுக்கூறுகளில் குப்பமும் ஒன்று. கடற்கரையைச்சார்ந்த பகுதிகளில் மட்டுமே குப்பங்கள் காணப்படுகின்றன.

''நெய்தல் நிலத்தில் வாழ்பவர் வலையர் என்றும், செம்படவர் என்றும், பரதவர் என்றும் வழங்கப்பெறுவர். அன்னார், வசிக்கும் இடம் குப்பம் என்னும் பெயரால் குறிக்கப்படும்''[15] என்ற கூற்று செங்கை மாவட்டத்தில் அமைந்துள்ள குப்பங்களுக்குப் பெரும்பாலும் பொருந்தும். முற்றிலுமாகப் பொருந்தும் என்று கூறமுடியாது. ஏனெனில் இம்மாவட்டத்தில் கடற்கரையிலிருந்து விலகி, மலைப்பகுதியில் அமைந்துள்ள வட்டம் திருத்தணிவட்டம். அவ்வட்டத்தில் மிகுதியான குப்பங்கள் காணப்படுகின்றன. எனவே பெரும்பாலும் கடற்கரையை ஒட்டிய பகுதிகளிலும் சில இடங்களில் வேறு நிலப்பகுதிகளிலும் குப்பங்கள் அமையும் என்பதையறியலாம். தொடக்க காலத்தில் கடற்கரைப் பகுதிகளில் மட்டுமே குப்பங்கள் தோன்றியிருத்தல் கூடும். காலப்போக்கில் பல இடங்களிலும் குப்பங்கள் தோன்றியுள்ளன. ஆனால் குப்பங்களுக்கிடையே சில ஒற்றுமைத் தன்மைகளைக் காணமுடிகிறது.

சமுதாயத்தில் பின் தங்கிய சாதியினர்
பொருளாதாரத்தில் பின் தங்கிய மக்கள்

என்னும் இருபிரிவினரையே குப்பங்களில் காண முடிகிறது. இவ்வமைப்பு முறையை எல்லாக் குப்பங்களிலும் காணலாம். இன்று புதிது புதிதாகத் தோன்றி வரும் குப்பங்கள் கூட இவ்வடிப்படையில்தான் தோன்றி வருகின்றன. மரம், செடிகளின் பேரிலும், இயற்கைப் பொருட்களின் பேரிலும் சில குப்பங்கள் காணப்படுகின்றன. இந்நிலை இம்மாவட்டத்தில் மிகவும் குறைவு.

| | |
|---|---|
| இடையன் குப்பம் | அன்னப்ப நாயக்கன் குப்பம் |
| கானத்தூர் ரெட்டி குப்பம் | நாயுடு குப்பம் |

15. ஊரும் பேரும்-டாக்டர். ரா.பி. சேதுப்பிள்ளை-பக்: 36

| | |
|---|---|
| முதலியார் குப்பம் | பாப்பான் குப்பம் |
| நயினார் குப்பம் | வண்ணான் குப்பம் |
| தட்டான் குப்பம் | சாணான் குப்பம் |

போன்ற பல குப்பங்கள் காணப்படுகின்றன. பொதுவாக நெய்தல் நிலப்பகுதிகளாகிய கடற்கரைப் பகுதியில் வலையர், பரதவர், செம்படவர் ஆகிய இனத்தவர்களே மிகுதியாக வாழ்வர் என்று கூறப்படுகிறது. ஆனால் செங்கை மாவட்டத்தில் காணப்படும் குப்பங்களில் அவ்வினத்தார் எவரது பெயரையும் காணவில்லை. பிற சாதியினரிடம் கூட பொருளாதாரத்தால் பின் தங்கியவர்கள் வாழும் பகுதியாகவே குப்பங்கள் அமைந்துள்ளன.

கடலில் மீன் பிடித்தல் போன்ற தொழில்களைச் செய்யும் மக்கள் கடற்கரையையொட்டி அமைத்துக் கொண்ட வாழ்விடங்களே குப்பங்கள் என்று முன்பிருந்த நிலை மாறி, பல்வேறு தொழில்களையும் செய்து பிழைக்கும், பொருளாதாரத்தில் பின் தங்கிய மக்கள் ஆங்காங்கு வாழ்விடங்களாக அமைத்துக் கொண்ட புதிய சிற்றூர்களே குப்பங்கள் என்று கூறும் நிலை பின்னர் உருவாகியுள்ளது.

சாதிகளின் பெயர்களைக் குப்பங்களுக்குச் சூட்டியுள்ள முறையிலும்கூட இழிவுப் பொருள் தொனிப்பதை உணர முடிகிறது. இடையன், தட்டான், நாயக்கன், பாப்பான், வண்ணான், சாணான் என்று அன், ஆன் விகுதிகளிலேயே குப்பங்கள் அமைந்துள்ளன. சமுதாயத்தில் உயர்ந்த சாதியாகக் கருதுப்படும் பார்ப்பனர்களின் வாழ்விடமாகவும் ஒரு குப்பம் அமைந்துள்ளது. அக்குப்பமும்கூட 'பார்ப்பான் குப்பம்' என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. உயர்ந்த சாதியிலும், பொருளாதாரத்தில் பின் தங்கியவர் எனின் அவர்கள் வாழ்விடம் குப்பம் எனப்படும் நிலை இம்மாவட்டத்தில் நிலவியுள்ளதையறிய முடிகிறது.

| | |
|---|---|
| ராமையன் குப்பம் | சடையன் குப்மம் |
| காங்கேயன் குப்பம் | சிங்கிலிக் குப்பம் |
| சாலுவன் குப்பம் | விஸ்வநாதக் குப்பம் |
| சாந்தான் குப்பம் | அக்கச்சி குப்பம் |
| வைரவன் குப்பம் | ஜனகராஜ குப்பம் |
| கிருஷ்ண குப்பம் | கேசவராஜு குப்பம் |
| கிருஷ்ணமராஜ குப்பம் | குமாரக் குப்பம் |

போன்ற குப்பங்கள் தனிமனிதப் பெயர்களில் அமைந்துள்ளன. இப்பெயர்களிலும்கூடப் பெரும்பாலான, சமுதாயத்தில் பின் தங்கிய இனத்தைச் சேர்ந்தவர்களின் பெயர்களாகவே அமைந்துள்ளன. திருத்தணி வட்டத்தில் காணப்படும் பெயர்களுடன் 'ராஜ' என்ற பெயரும் சேர்ந்து காணப்படுகிறது, அது ஒரு இனப்பெயராகவே இருத்தல் வேண்டும். அக்கச்சி என்ற ஒரு பெண்ணின் பேராலும் கூட ஒரு குப்பம் அமைந்துள்ளது. பெண்ணுக்குப் பெருமை தருதல் கருதியோ, அன்றி அப்பெண் செல்வாக்குள்ள குடும்பத்தில் தோன்றிய காரணத்தாலோ அவள் பெயரால் ஒரு குப்பம் அமைந்துள்ளது. பெண் தெய்வங்களின் பெயரில் அமைந்துள்ள பல ஊர்களை இம்மாவட்டத்தில் காணும் அளவிற்குப் பெண்களின் பெயரில் அமைந்துள்ள ஊர்களைக் காணமுடியவில்லை. பெண்ணினம், பெயர் சூட்டுமளவிற்கு மதிக்கப்படவில்லை என்பதனையே இதன் மூலம் உணரமுடிகிறது.

| | |
|---|---|
| நெல்விக்குப்பம் | ஆர்க்காடுகுப்பம் |
| சோலைக்குப்பம் | பீரைக்குப்பம் |
| தாமரைக்குப்பம் | கோரைக்குப்பம் |

போன்ற ஊர்ப்பெயர்கள் மரம், செடிகளின் பெயரிலும் அமைந்துள்ளன. தாமரைக்குப்பம் என்ற பெயர் பல வட்டங்களில் காணப்படுகிறது. மரம், செடிகளின் பெயர்களை நோக்கும் போது பெரும்பாலும் கடற்கரை அல்லது நீர்வளமுள்ள பகுதிகளிலேயே குப்பங்கள் அமைந்துள்ளன என்பது விளங்கும்.

பெரும்பாலும் அடிமை நிலையில் உள்ளவர்களின் வாழ்விடங்களே குப்பங்கள் என்று கூறப்பட்டுள்ளன. ஆனால் 'ஆண்டார் குப்பம்' என்ற பெயரில் இரண்டு ஊர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. ஆண்டவர்குப்பம் என்று இறைவன் பெயரைப்பொது நிலையில் குறிப்பிட, காலப்போக்கில் ஆண்டவர் என்பது ஆண்டார் என்று மாற்றம் பெற்றிருக்கலாம். அல்லது, நாட்டை ஆண்ட, அல்லது அப்பகுதியை ஆண்ட ஒருவரைச்சிறப்பிப்பதாகவும் அவை இருக்கலாம். அப்படியெனில் அம்மனிதர் பெயர்தான் குறிப்பிடப்பட்டிருக்கும். அதுவே அன்று நிலவிய முறை. எனவே, ஆண்டவர் என்பது ஆண்டார் எனத்திரிந்து வழங்குகிறது என்று கருதுவதே பொருத்தமாக அமையும்.

கோவில் குப்பம், மடத்துக்குப்பம் என்ற ஊர்கள் உண்டேயன்றி, தனிப்பட்ட சமயக் கடவுளர் எவரின் பெயரையும்

குப்பங்களின் பெயர்களில் காணமுடியவில்லை. வாழ்க்கையைத் துயர்களுக்கிடையில் நடத்திவந்த குப்பத்து மக்கள் தனிப்பட்ட கடவுளர்களுக்குக் கோயில் எழுப்பி வழிபடவும், கடவுளர் பெயரை ஊர்களுக்குச் சூட்டவும் வாய்ப்பில்லாது போயிருக்கக் கூடும், அல்லது பொது வழிபாட்டை அவர்கள் போற்றியிருக்கவும் வாய்ப்புண்டு. சீதேவிக்கும்பம் என்ற ஓர் ஊர்மட்டும் சிறிது வேறுபட்டுள்ளது. ஒருவேளை பிற்காலத்தில் அது தோன்றி யிருக்கலாம். இசைச் சிறப்பைப் புலப்படுத்தும் விதத்தில் சங்கீதக் குப்பம் என்ற ஊரும் காணப்படுகிறது.

புதுக்குப்பம் என்ற பெயரில் பல ஊர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. பிற்காலத்தில் புதிதாகத் தோன்றிய ஊர்கள் அவை என்பதைப் பெயர்கள் புலப்படுத்துகின்றன. இன்றும் கூடப் பலகுப்பங்கள் கடற்கரையையொட்டிய பகுதியில் தோன்றியுள்ளன. இவைபெரும்பாலும் அரசியல் தலைவர்களின் பெயரையே பெற்றுள்ளன. இன்று புதிதாகத் தோன்றும் ஊர்களுக்குப் பெயர் சூட்டப்படும் முறையே அரசியல் அடிப்படையில் தான் அமைந்துள்ளது. சில இடங்களில் தொடர்பு கருதித் தமிழறிஞர்களின் பெயர்களும் சூட்டப்படுகின்றன.

திருத்தணி வட்டத்தில் உள்ள குப்பங்களைத் தவிர பிற குப்பங்கள் பெரும்பாலும் தமிழ்ப்பெயர்களையே பெற்றுள்ளன. இத்தகைய குப்பங்களில் பிறமொழிபேசும் மக்கள் செல்வாக்குப் பெறவில்லை என்பது இதன் மூலம் தெரியவருகிறது.

**8. மங்கலம் :**

செங்கைமாவட்டத்தில் பரவலாகக் காணப்படும் பொதுக் கூறுகளையுடைய ஊர்களில் மங்கலம் என்பது ஒன்று. எல்லா வட்டங்களிலுமே மங்கலம் என்று முடியும் ஊர்களைக் காண முடிகிறது. சைதாப்பேட்டை, பொன்னேரி, திருவள்ளூர் திருத்தணி, ஆகிய வட்டங்களில் ஒன்றிரண்டு ஊர்களே மங்கலம் என்ற பொதுக்கூறைப் பெற்றுள்ளன.

நன்மையானவற்றையெல்லாம் மங்கலம் என்னும் சொல் குறிப்பதாகும்.[16] நன்மை, தீமை பற்றி மிகுதியாகச் சிந்தித்

16. ஊரும் பேரும் - டாக்டர். ரா. பி. சேதுப்பிள்ளை பக்: 316

துள்ள தமிழர் மங்கலம் என்ற சொல்லையும் புனிதமான சொல்லாகப் போற்றிவந்துள்ளனர். மங்கல்மொழிகளைப் பேச வேண்டும்; மங்கலமான செயல்களே நடைபெறவேண்டும் என்று விரும்பியுள்ளனர். இவ்விருப்பத்தின் அடிப்படையில் சில நம்பிக்கைகளையும் வளர்த்து வந்துள்ளனர்.

தொல்காப்பியத்திலிருந்தே மங்கலம் என்ற சொல்வழக்கைக் காணமுடிகிறது. தொல்காப்பியம், பொருளியலில்,

''மங்கல மொழியும் அவையல் மொழியும்
மாறில் ஆண்மையில் சொல்லிய மொழியும்
கூறிய மருங்கில் கொள்ளும் என்ப'' [17]

என்ற நூற்பா அமைந்துள்ளது. பொதுவாக, சொல், செயல் இவையிரண்டும் மங்கலமாகவே அமையவேண்டும் என்பது தமிழரின் கோட்பாடு. அதனால் தான் தீய செயல்களைச் சொல்லும் போதுகூட அச்செயலைநேரடியாகப் புலப்படுத்தும் சொற்களால் குறிப்பிடாமல் மறைமுகமாக வேறோர் சொல்லால் அச்செயலைக் குறிப்பிட்டுள்ளனர். அப்படிக் குறிப்பிடு வதையே மங்கலமொழி என்று கூறியுள்ளனர். தமிழரின நாகரிகத்தையும் இதில் காணமுடிகிறது.

அத்தகைய சிறப்பிற்குரிய சொல்லின் பொருள் காலப் போக்கில் வேறுவிதமாக மாறுகிறது. ஊர்ப்பெயர்களாக மங்கலம் என்ற பொதுக்கூறு அமையும்போது அச்சொல் மாறுபட்ட பிறிதோர் பொருளை உணர்த்துகிறது. அந்தணர்கள் வாழும் ஊர்களே மங்கலம் என்ற பெயரைப் பிற்காலத்தில் பெற்றுள்ளன.

''வழிவழியாக வந்த அரசர்கள் வேதம் ஓதவும் சமயத்திற்கு ஏற்றம் கொடுக்கவும் அந்தணர்களை வரவழைத்து அவர்களுக்காகவும் புதிய ஊர்களைத் தானமாக வழங்கினர். இவ்வாறு உண்டான ஊர்கள் மங்கலம், அகரம் (அஹ்ரகாரம் என்பதன் மரூஉ) புதூர், புத்தூர், தேவதானம், மான்யம் என்ற பெயர்களைப் பெற்று இன்றும் உள்ளன [18] என்ற கருத்து அந்தணர்களது செல்வாக்கால் தோன்றிய புதிய ஊர்களைப்பற்றி உணரச்

---

17. தொல்காப்பியம் - பொருளியல் - நூற்பா; 48
18 செங்கற்பட்டு மாவட்டம் - சோ. ம. லெ - பக்: 62

செய்கிறது. இங்குக் குறிப்பிடப் பட்ட பொதுக்கூறுகளில், செங்கற்பட்டு மாவட்டத்தில் மிகுதியாக இடம் பெற்றிருப்பது மங்கலம் என்பதுவேயாம்.

மங்கலம் என்ற பொதுக்கூறைப் பெற்றுள்ள ஊர்களேயன்றி இன்று வேறு பெயர்களில் வழங்கும் ஊர்களுக்கும்கூட மங்கலம் என்று முடியுமாறு பிறிதோர் பெயர் இருப்பதை வரலாற்று ஆசிரியர்கள் எடுத்துக் காட்டுகின்றார்கள்.

மதுராந்தகம் என்று இன்று வழங்கப்படும் ஊருக்கு 'மதுராந்தக சதுர்வேதிமங்கலம்' என்ற வேறோர் பெயரும், வேளச்சேரி என்று இன்று அழைக்கப்படும் ஊருக்கு 'தினச்சிந்தாமணி சதுர் வேதி மங்கலம்' என்று பிறிதோர் பெயரும் இருப்பதாகக் கூறுகின்றனர். இவை போன்று பல மங்கலங்கள் இன்று வேறு பெயர்களில் உள்ளன.

செங்கற்பட்டு மாவட்டத்தில் காணப்படும் மங்கலங்கள் இதற்கு முன்னர்க் காணப்பட்ட ஊர்களிலிருந்து வேறுபட்டுள்ளன. பெரும்பாலும் மரம், செடிகளின் பெயரிலும் இயற்கைப் பொருட்களின் பெயரிலுமே அமைந்துள்ள பல ஊர்கள் முன்னர் எடுத்துக்காட்டப்பட்டன. அந்த அடிப்படையில் மங்கலங்கள் எவையும் அமையவில்லை.

முருகமங்கலம், வேங்கடமங்கலம், விண்ணமங்கலம், மணி மங்கலம், இறையா மங்கலம் போன்ற ஊர்கள் இறைத் தொடர் புடைய ஊர்களாகக் காணப்படுகின்றன. அவ்வூரிலுள்ள இறைவனது ஆலயத்தில் வேதம் ஓதிய அந்தணர்களுக்காக வழங்கப் பட்ட ஊர்களாக இவை இருத்தல் கூடும். அதனால் இறைவன் பேரிலேயே ஊரும் அமைந்துள்ளது சைவம், வைணவம் ஆகிய இரு சமயக் கடவுளரின் பேரிலும் மங்கலம் எனப்படும் ஊர்கள் அந்தணர்களுக்கு வழங்கப்பட்டுள்ளன.

பரமேசுவரமங்கலம், அத்தரையர்மங்கலம், மகாதேவிமங்கலம் ஒரகடமகாதேவிமங்கலம், நரசமங்கலம், ராயமங்கலம், அரசாணி மங்கலம் போன்ற ஊர்கள் அந்தணர்களுக்கு வழங்கியவர்களின் பேரால் அழைக்கப்படுகின்றன. நாட்டையாண்ட ஆண்கள் மட்டு மன்றிப் பெண்களும் கூடத்தங்கள் பெயர் விளங்குமாறு சில ஊர்களை அந்தணர்களுக்கு வழங்கியுள்ளதை இங்குக் குறிப் பிடப்பட்ட ஊர்களின் பெயர்களால் உணரமுடிகிறது.

அமிர்தமங்கலம், மதுரமங்கலம்; மேல் மதுரமங்கலம், ஏலக்காமங்கலம் போன்ற ஊர்கள் சுவை, மணம் போன்றவற்றை உணர்த்துகின்றன. அமிர்தம், மதுரம் போன்ற பொருட்களின் பெயரால் ஊர்கள் அமைந்திருப்பது புராணத்தொடர்பின் அடிப்படையில் அமைந்திருக்கக்கூடும் அவ்வூரில் ஏலக்காய் மிகுதியாக உற்பத்தியாவதால் ஏலக்காய் மங்கலம் என்ற பெயரை ஓர் ஊர் பெற்றிருக்கலாம்.

கன்னிமங்கலம், தாலிமங்கலம் என்ற புதுமையான பெயர்களிலும் சிலஊர்கள் காணப்படுகின்றன. அவ்வூர்களிலுள்ள சிறு தெய்வங்களைப் பற்றிய செய்திகளுடன் தொடர்பு கொண்டு இவ்வூர்ப் பெயர்கள் அமைந்திருத்தல் கூடும், அவ்வூர்கள் அந்தணர்களுக்கு வழங்கப்பட்டமையால் கன்னி, தாலியுடன் மங்கலம் சேர்ந்ததுவா என்று தெரியவில்லை.

நீலமங்கலம், ரத்னமங்கலம், உழுதமங்கலம் என்ற பெயர்களில் சில ஊர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. நீலம் இரத்தினம் போன்ற விலையுயர்ந்த கற்களின் அடிப்படையில் அவ்வூர்கள் அமைந்திருக்கவேண்டும். உழவுத்தொழில் சிறந்து விளங்கும் ஊர் உழுதமங்கலம் எனப்பட்டிருக்கலாம்.

சேந்தமங்கலம், அனந்தமங்கலம், சாத்தமங்கலம், ஜாகீர் மங்கலம் போன்ற ஊர்கள் தனிமனிதர்களது பெயர்களின் அடிப்படையில் அமைந்தவையாம். இசுலாமியர் காலத்தில் தோன்றிய ஊராதலால் ஜாகீர் என்ற முன் ஒட்டுக் காணப்படுகிறது. இசுலாமியரும் கூட அந்தணருக்கு ஊரை வழங்கினரா என்று ஐயுறத் தோன்றுகிறது.

மங்கலம் என்ற பொதுக்கூறுடைய ஊர்கள் அனைத்தையும் ஆய்ந்தால் எல்லா ஊர்களுமே அந்தணர்களுக்கு வழங்கப்பட்டதுதானா என்பதில் ஐயம் தோன்றுகிறது. தொடக்க காலத்தில் அந்தணர்களுக்கு வழங்கப்பட்ட ஊர்கள் மங்கலம என்றுஅழைக்கப்பட்டிருக்கலாம் ஆனால்அந்நிலைபின்பு மாற்றம் பெற்று, மங்கலமாக அமையவேண்டும் என்ற நோக்குடன் தோற்றுவிக்கப்பட்ட புதிய ஊர்களும் மங்கலம் என்றே அழைக்கப்பட்டுள்ளன. அப்படி அமைந்த மங்கலங்களும் செங்கை மாவட்டத்தில் உள்ளதை உணரமுடிகிறது.

**9 கண்டிகை ;**

செங்கைமாவட்டத்தில் கண்டிகை என்ற பொதுக்கூறுடைய ஊர்கள் பரவலாக உள்ளன. செங்கற்பட்டு, காஞ்சிபுரம், சைதாப்

பேட்டை, ஸ்ரீபெரும்புதூர் ஆகிய வட்டங்களில் கண்டிகை என்ற பெயரில் ஒரு ஊர் கூடக் காணப்படவில்லை. ஆனால் திருத்தணி வட்டத்தில் பெரும்பாலான கண்டிகைகள் காணப்படுகின்றன, மாவட்டத்தில் மொத்தம் உள்ள 50 கண்டிகைகளில் 44 கண்டிகைகள் திருத்தணி வட்டத்தில் மட்டுமே உள்ளன. கண்டிகைகள் நிறைந்த வட்டம் என்று திருத்தணியைக் கூறலாம். இவ்வட்டத்தில் உள்ள மொத்த ஊர்களில் மூன்றில் ஒரு பங்கிற்கு மேல் கண்டிகைகளாகவே உள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

கண்டம் என்றால் பிரிவு என்பது பொருள். கண்டம் என்பதிலிருந்தே கண்டிகை என்ற சொல் அமைந்திருக்க வேண்டும். ஒரு பகுதியிலிருந்து பிரிந்து காணப்படும் ஊர் கண்டிகை எனப்படும். கண்டிகை என்பதற்கு நிலப்பிரிவு என்று பொருள்கூறுகிறது தமிழ் லெக்ஸிகன்.[19]

''கண்டிகை என்பது மகளிர்தம் கழுத்தில் அணியும் ஒருவகை அணிகலன் (பதக்கம்). 75 ஏக்கர் பரப்புள்ள நிலப்பிரிவு என்று தமிழ் லெக்ஸிகன் கூறும்''[20]

75 ஏக்கர் அளவுள்ள பகுதிகளாக எல்லா ஊர்களுமே அமைந்திருக்கும் என்று கூறமுடியாது. ஒரு ஊரிலிருந்து பிரிந்து புதிதாக அமைந்த ஊர்களே கண்டிகை எனப்படும் என்று கூறலாம்.

பெரும்பாலான கண்டிகைகள் தனிமனிதர்களின் பெயர்களிலேயே அமைந்துள்ளன. இவ்வகையில் பிறவகைப் பொதுக்கூறுடைய ஊர்களிலிருந்து இது பெரிதும் வேறுபடுகிறது என்று கூறலாம். கண்டிகை என்ற பெயரில் அமைந்துள்ள 50 ஊர்களில் 8 ஊர்கள் மட்டுமே பிற பெயர்களில் அமைந்துள்ளன. ஏனைய பெயர்கள் அனைத்தும் தனிமனிதப் பெயர்களேயாம்.

| | |
|---|---|
| பெரும் பெயர்க் கண்டிகை | மடிமைகண்டிகை |
| கண்டிகை | குப்பம் கண்டிகை |
| நெட்டேரிக் கண்டிகை | திருக்குளம் கண்டிகை |
| பேட்ட கண்டிகை | தும்மல் செருவு கண்டிகை |

19 Tamil Lexicon - Vol-IV P: 689

20. செங்கற்பட்டு மாவட்டம் - சோ. ம. லெ - பக்: 66

ஆகிய ஊர்களே தனிமனிதப் பெயர்களில் அமையாத ஊர்களாகும். இவ்வூர்கள் குப்பம், ஏரி, குளம் போன்ற பிறபொதுக் கூறுகளைச் சிறப்புக் கூறுகளாகப் பெற்று அமைந்துள்ளன. இதுவும் இவ்வூர்ப் பெயர்களில் காணப்படும் புதுமையாகும்.

தனிமனிதப் பெயர்களில் அமைந்த கண்டிகைகளில் பல சாதிப்பெயர்களால் அமைந்துள்ளதைக் காணமுடிகிறது. திருத்தணி வட்டத்தில் வாழும் மக்களிடம் எத்தனை விதமான சாதிகள் காணப்படுகின்றனவோ அத்தனை சாதிகளின் பேரிலும் கண்டிகைகள் அமைந்துள்ளன.

அய்யவாரி நாயுடு கண்டிகை
சங்கரா ரெட்டி நாராயண ரெட்டி கண்டிகை
பட்டணம் சேஷய்யர் கண்டிகை
எர்ரம செட்டி நரசிம்மலு நாயுடு கண்டிகை

என்பன சில எடுத்துக்காட்டுகளாகும். நாயுடு கண்டிகைகளே அதிகமாகக் காணப்படுகின்றன. அதற்கடுத்த நிலையில் ரெட்டி கண்டிகைகள் உள்ளன. அய்யர், செட்டியின் பேரில் இரண்டு மூன்று கண்டிகைகளே உள்ளன. நாயுடு இனத்தைச் சேர்ந்தவர்கள் இவ்வட்டத்தில் மிக அதிகமாக வாழ்ந்து வருவதையும், அதற்கடுத்த நிலையில் ரெட்டிகள் வாழ்ந்து வருவதையும் கண்டிகையின் பெயர்களால் உணரமுடிகிறது.

செங்கை மாவட்டத்தின் பிற ஊர்களிலிருந்தும் பிற மாவட்டங்களைச் சேர்ந்த ஊர்களிலிருந்தும் செல்வாக்குப் பெற்ற சிலர் திருத்தணி வட்டத்தில் புதிதாக ஊர்களை உருவாக்கியுள்ளார்கள். இன்று 'ரியல் எஸ்டேட்' என்ற பெயரில் வீட்டுமனை இடங்களை விற்று வருபவர்கள் புதிதாக ஊர்களையே உருவாக்குகின்றனர். அவ்வூருக்குத் தங்கள் பெயர்களையோ தங்களுக்கு விருப்பமான பெயர்களையோ அவர்கள் சூட்டி வருவது போன்றே பிற ஊரிலிருந்து வந்தவர்கள் திருத்தணி வட்டத்தில் கண்டிகைகளை உருவாக்கித் தங்கள் பெயர்களையும் சூட்டியுள்ளனர்.

கவுணிபுரம் பத்ராஜீ கண்டிகை
கொண்டரகிரி வெங்கடமுனி கண்டிகை
கொத்தூர் ராமையா கண்டிகை
நல்லூர் வெங்கட்டராஜீ கண்டிகை

பட்டணம் சேஷய்யர் கண்டிகை
பெரும் காஞ்சி நரசிம்மலுநாயுடு கண்டிகை
வேலூர் கிருஷ்ணநாயுடு கண்டிகை

என்பன சில சான்றுகளாகும். இவை போன்று பல கண்டிகைகளைக் காணமுடிகிறது. இப்படிப்பட்ட அமைப்பு முறையைப் பிற பொதுக்கூறுகளின் அடிப்படையில் அமைந்த ஊர்களில் காணமுடியவில்லை. பிற இடங்களில் இப்போதும் உள்ள ஊர்களின் பெயரில் இக்கண்டிகைகள் அமைந்திருப்பதை நோக்கினால் பிற்காலத்தில் தான் இவ்வூர்கள் தோன்றியிருத்தல் வேண்டும் என்பது நன்கு விளங்கும். பட்டணம் என்பது சென்னையயே குறிக்கும். சென்னை ஓர் பட்டனமாகியது சென்ற நூற்றாண்டில் தான். எனவே அதன் பிறகுதான் பட்டிணம் சேஷய்யர் கண்டிகை தோன்றியிருத்தல் வேண்டும்.

புராணத்தில் (எழுதுவதில் அல்லது எடுத்துரைப்பதில்) வல்லவராக விளங்கியவருக்கும், ஜோஸ்யம் கூறுவதில் சிறந்து விளங்கியவருக்கும் கூட சில ஊர்கள் அன்பளிப்பாக வழங்கப் பட்டிருத்தல் வேண்டும். ஏனெனில் அம்மனிதர்களின் பெயர் களுடன் புராணம். ஜோஸ்யம் என்ற சொற்களும் சேர்த்து வழங்கப்படுகின்றன.

புராணம் சஞ்சீவி ராயனி கண்டிகை
இராம ஜோஸ்யலு கண்டிகை

என்பன அவ்வூர்களாகும். இப்படி அமைந்த ஊர்களையும் பிற பொதுக்கூறுகளில் காணமுடியாது. புராணம், ஜோஸ்யம் போன்றவற்றில் அப்பகுதிமக்களுக்கிருந்த ஈடுபாட்டை இவ்வூர்ப் பெயர்கள் உணர்த்தும்.

தெலுங்கு மொழி பேசும் மக்கள் மிக்கிருந்த பகுதிகளிலேயே கண்டிகைகள் தோன்றியுள்ளன. அதனால்தான் ஊர்ப பெயர்களும் பெரும்பாலும் தெலுங்குப்பெயர்களாக உள்ளன.

10. பேடு:

செங்கை மாவட்டத்தில் பரவலாகக் காணப்படும் ஊர்ப் பெயர்களில் பேடு என்ற பொதுக்கூறுடைய பெயரும் ஒன்று. திருத்தணி வட்டத்தைத் தவிர மாவட்டத்தின் பிற வட்டங்கள் அனைத்திலும் பேடு என்று முடியும் ஊர்ப்பெயர்கள் காணப்படு

கின்றன. கண்டிகைகள் மிகுந்து காணப்படும் திருத்தணி வட்டத்தில் பேடு என்று முடியும் ஊர் ஒன்றுகூட இல்லை அப்பெயரில் ஊர் அங்கு அமையாமைக்குக் காரணம் இருக்க வேண்டும்.

பேடு என்ற சொல் நெடுங்காலமாகத் தமிழ் இலக்கியங்களில் நிலவிவரும் தன்மையது. பட்டு என்று முடியும் ஊர்கள் பற்றி முன்னர்க் கூறப்பட்டது. அவ்வூர்களுடன் பேடு என்று முடியும் ஊர்களும் ஒப்பிடுவதற்குரியன என்று தமிழ் அகராதி கூறியது முன்னர் உணர்த்தப்பட்டது.

"அலியும் ஊரும் மதல் ஆடலும் பேடு" 21

என்று குறிப்பிடுகிறது பிங்கல நிகண்டு. பட்டு என்பது சிற்றூர்களைக்குறிக்கும் என்று குறிப்பிடுவதால் அதனுடன் ஒப்பிடப் படும் பேடு என்ற பொதுக்கூறுடைய ஊர்களும் சிற்றூர்களைக் குறிக்கும் என்றே கருதவேண்டியுள்ளது.

பெட்பு என்ற சொல் விருப்பம் என்ற பொருளைத் தரும். அச்சொல்லினடியாகவே பேடு என்ற சொல் தோன்றியிருத்தல் வேண்டும். விரும்புதற்குரிய இயற்கைச் சூழலில் அமைந்த சிற்றூர்கள் பேடு என்ற பொதுக்கூறினைப் பெற்றிருத்தல் வேண்டும். பட்டு என்ற சிற்றூர்களைப் போன்றே இயற்கை வளமும் நீர்வளமும் அமைந்த பகுதிகளில் பேடு என்ற சிற்றூர்கள் தோன்றியுள்ளன. செங்கற்பட்டு வட்டத்தில் இவ்வூர்கள் அமைந்துள்ள நிலையும் இக்கருத்தையே உறுதிப்படுத்துகின்றன. மலைப்பகுதிகள் நிறைந்து, நீர்வளம் குறைந்த பகுதியாகிய திருத்தணிவட்டத்தில் பேடுகள் தோன்றாமைக்கு அப்பகுதியின் அமைப்புக் காரணமாகலாம். தெலுங்கு மொழிபேசும் மக்கள் நிறைந்துள்ள பகுதியில் தமிழ்ச்சொல்லின் அடிப்படையில் ஊர் தோன்றாமல் இருக்கவும் வாய்ப்புண்டு.

பேடு என்று முடியும் செங்கைமாவட்ட ஊர்ப்பெயர்களில் பல இயற்கையமைப்பையொட்டி, மரம், செடிகளின் பெயரில் அமைந்துள்ளன. கண்டிகைகளில் காணப்பட்டது போன்று சாதிப் பெயர்களைப் பேடு என்றுமுடியும் ஊர்களில் காணமுடியவில்லை. 'செட்டி புண்யம் சின்ன வெப்பேடு' என்று ஓர் ஊர் உள்ளது. இவ்வூரின் பெயர் வெப்பேடு என்பதுவேயாம். செட்டியார் இனத்தைச் சேர்ந்த ஒருவர் அறச்செயலாக இவ்வூரை உருவாக்கி

---

21. பிங்கல நிகண்டு – நூற்பா : 3887

இருத்தல் வேண்டும். அதனால் 'செட்டி புண்யம்' என்ற குறிப்பு, ஊர்ப்பெயருடன் இணைந்து காணப்படுகிறது. ஒருவர் அறச் செயலாகப் புதிய ஊர்களைத் தோற்றுவிப்பதும் உண்டு என்ற குறிப்பை இவ்வூர்ப் பெயரால் உணர முடிகிறது.

| | |
|---|---|
| காயரம்பேடு | முருச்சம்பேடு (முருக்கம்பேடாகலாம்) |
| சின்னவெப்பேடு | பூவலம்பேடு |
| தாழம்பேடு | வேம்பேடு |
| அரப்பேடு | மணம்பேடு |
| | அரப்பேடு (ஆர்ப்பேடாகலாம்) |

போன்ற பெயருடைய பல ஊர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. பொதுவாக மரப்பெயர்களேயன்றி காய், பூ என்ற சிறப்புக் கூறுகளிலும், வாசம் தரும் மணத்தைக்குறிக்கும் சிறப்புக் கூறிலும் ஊர்கள் அமைந்துள்ளன வேம்பேடு என்பது வெப்பேடு வெம்பேடு. வேப்பேடு, சின்னவெப்பேடு போன்ற பல வடிவங்களில் காணப்படுகிறது. வேம்பேடு என்ற பெயரிலும் பல ஊர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன.

எலியம்பேடு, மீனம்பேடு, அன்னம்பேடு என்று உயிரினங்களின் பேரிலும் சில ஊர்கள் காணப்படுகின்றன. எலி, மீன், அன்னம் ஆகியவை மிகுந்து காணப்பட்ட காரணத்தால் அவ்வூர்கள் அப்பெயர்களைப் பெற்றிருத்தல் கூடும். அன்னப்பறவை என்பது இலக்கியங்களில் மட்டுமே காணக்கூடியதாக உள்ள பறவையாகும். அன்னம் என்பது உணவு என்ற பொருளையும் தரும். எனவே உணவு படைக்கும் அன்னசத்திரங்கள் மிகுந்து காணப்பட்டதால் அன்னப்பேடு என்ற பெயரைப்பெற்றது என்றும் கருதலாம். 'செட்டி புண்யம் சின்னவெப்பேடு' என்று ஓர் ஊரும் அமைந்திருப்பது இக்கருத்தை உறுதிப்படுத்துகிறது.

இரும்பேடு, மப்பேடு என்ற பெயரில் பல ஊர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. இரும்பேடு என்பது, சிறந்த ஊர் என்ற பொருள் தரும். 'இருந்தமிழ்', 'இரும்பேர் ஒக்கல்' என்ற இலக்கிய வழக்குகளை நோக்கினால் 'இரும்' என்பது சிறப்பையே குறிக்கும் என்பது விளங்கும். பல காரணங்களால் சிறப்புப்பெற்ற ஊர்களை இரும்பேடு என்று குறிப்பிட்டுள்ளனர். மெய்ப்பேடு

என்பதுவே மப்பேடு என்று திரிந்து வழங்குவதாகக் கூறுவர்.[22] அப்படி நோக்கினால் அவ்வூர்களின் சிறப்பும் புலப்படும். உண்மைப்புகழுக்குரிய ஊர்கள் 'மெய்ப்பேடு' களாக அழைக்கப் பட்டுள்ளன.

உமிப்பேடு, தொழுப்பேடு, மோதிரம்பேடு, என்ற வித்தியாச மான பெயர்களில் அமைந்த ஊர்களையும் இம்மாவட்டத்தில் காண முடிகிறது. துமி என்பது நீர்த்திவலையைக் குறிக்கும். துமிப்பேடு என்பதுதான் உமிப்பேடு என்று மாறியதா என்று ஐயுற வேண்டியுள்ளது. தொழுவதற்குரிய கோயில் நிறைந்த ஊர் என்ற பொருளில் தொழுப்பேடு குறிக்கப்பட்டிருக்கலாம். மோதிரம்பேடு என்ற ஊர் எப்பொருளில் அமைந்தது என்பது விளங்கவில்லை. இம்மாவட்ட ஊர்ப்பெயர்களில் 'சுமத்திரம் பேடு' என்ற ஓர் ஊரும் காணப்படுகிறது. மோதிரம்பேடு, சுமத்திரம்பேடு ஆகிய இரு ஊர்களும் அருகாமையிலேயே உள்ளன. தசரதனின் இரண்டாம் மனைவி சுமத்திரை. அவளின் பெயரில் சுமத்திரம்பேடு அமைந்திருப்பதால மோதிரம்பேடு இராமாயணச் செய்தியின் (அனுமன் பெற்றுச்சென்ற இராமனின் மோதிரம்) தொடர்பாக அமைந்திருத்தல் கூடும்.

புராணச்செய்தியைக் குறிப்பிடும் விதத்தில் 'அமரம்பேடு' என்ற ஓர் ஊரும் காணப்படுகிறது. அமரர் என்பது அமரம் என்று திரிந்து வழங்கியுள்ளது. 'முதலம்பேடு' ரெட்டம்பேடு, கல்லம்பேடு என்றும் ஊர்ப்பெயர்கள் அமைந்துள்ளன. முதலி, ரெட்டி, கள்ளர் போன்ற சாதிப்பெயர்கள் இவ்வாறு திரிந்து வழங்குகின்றனவா என்று ஐயுறவேண்டியுள்ளது. ஏனெனில் பேடு என்ற பொதுக்கூறுடைய ஊர்களில் வெளிப்படையாகச் சாதிகள் குறிப்பிடப் படவில்லையென்றாலும், பிற பொதுக்கூறு களையுடைய ஊர்களில் சாதிகள் குறிப்பிடப்பட்டுள்ளன. எனவே முதலம், ரெட்டம், கல்லம் போன்ற சிறப்புக் கூறுகளும் சாதிப்பெயர்களை உணர்த்துகின்றனவா என்று எண்ண வேண்டி யுள்ளது.

தமிழ் பேசும் மக்கள் நிறைந்த பகுதிகளிலேயே பேடு என்ற பொதுக்கூறுடைய ஊர்கள் காணப்படுவதால் பெரும்பாலும் தமிழ்ப்பெயர்களாகவே ஊர்ப்பெயர்கள் அமைந்துள்ளன.

---

22. செங்கற்பட்டு மாவட்டம் - சோ. ம. லெ-பக்: 105

11 தாங்கல்:

செங்கைமாவட்ட ஊர்ப்பெயர்களில் தாங்கல் என்ற பொதுக் கூறுடைய ஊர்களும் காணப்படுகின்றன. இம்மாவட்டத்திலுள்ள எல்லா வட்டங்களிலுமே தாங்கல் என்று முடியும் ஊர்கள் காணப்படுகின்றன. சில பொதுக்கூறுடைய ஊர்களைக் காண முடியாத திருத்தணி வட்டத்திலும் கூட தாங்கல்கள் காணப்படு கின்றன.

''தாங்கல் என்பதற்குக் கலிங்கு என்ற பொருளும் உண்டு. எனவே, ஏரியின் கழிவு நீரால் ஊருக்கு ஊறு ஏற்படாது தாங்கிச் செல்லுவது தாங்கல்''[23] என்று இவ்வூர்ப்பெயர்களுக்கு விளக்கம் தரப்படுகிறது. இவ்விளக்கம் பொருந்துமாறு சில ஊர்கள் இம்மா வட்டத்தில் காணப்படுகின்றன. ஆனால முற்றிலுமாகப் பொருந்தும் என்று கூறமுடியாது. ஏனெனில் வேடந்தாங்கல், பழவந்தாங்கல், சவுக்கந்தாங்கல் போன்ற வித்தியாசமான பெயர்களிலும் சில ஊர்கள் அமைந்துள்ளன. மேற் கண்ட விளக்கம் இவ்வூர்களுக்கும் பொருந்தும் என்று கூறமுடியாது. எனவே பிறிதோர் காரணமும் இருத்தல் வேண்டும் என்று எண்ணத்தோன்றுகிறது.

தங்கல் என்ற சொல் முதல் நீண்டு தாங்கல் என்று அமைந் திருத்தல் வேண்டும். அப்படியெனில் வேடன், பழம், சவுக்கு போன்ற சிறப்புக்கூறுகள் பொதுக்கூறுடன் பொருந்தி அமை கிறது. வேடன் தங்கி வேட்டையாடும் ஊர்; பழங்கள் (நிறைந் துள்ள) தங்கியுள்ள ஊர்; சவுக்குமரம்(நிறைந்துள்ள) தங்கியுள்ள ஊர் என்ற காரணங்களுடன் இவ்வூர்ப்பெயர்கள் அமைந்திருக்க வேண்டும்.

தாங்கல் என்பதற்கு, ஏற்றல் என்ற பொருளும் உண்டு. அவ்வகையிலும் இவ்வூர்ப்பெயர்கள் பொருந்துமாறே அமைந் துள்ளன. செங்கை மாவட்டத்தில் தாங்கல் என்ற பொதுக் கூறுடைய ஊர்ப்பெயர்கள் பல திறப்பட்டனவாக அமைந் துள்ளன. சாதிப்பெயர்களின் பேரிலும் சில ஊர்ப்பெயர்கள் அமைந்துள்ளன.

எடையன் கொடுமாந்தாங்கல்
ஆண்டித்தாங்கல்
ஒட்டன்தாங்கல்

23. செங்கற்பட்டு மாவட்டம் - சோ. ம. லெ-பக்; 64

பட்ரன் தாங்கல் (பட்டர் என்ற இனமாகலாம்)

போன்றசில ஊர்கள் சாதிப்பெயர்களில் அமைந்துள்ளன. ஒட்டன் என்றபேரில் இரண்டு ஊர்கள் அமைந்துள்ளன. அந்த இனத்தவர் மிகுந்து காணப்படும் பகுதியில் இவ்வூர்கள் அமைந்திருக்க வேண்டும்.

செங்கைமாவட்டம் உள்ளடங்கிய தொண்டை நாட்டை சோழ அரசர்கள் ஆண்டுள்ளனர், அவர்கள் பேரிலும் சில ஊர்கள் காணப்படுகின்றன.

வளவன் தாங்கல்

சோழந்தாங்கல்

என்பன அவ்வூர்கள். சோழந்தாங்கல் என்ற பெயரில் இரண்டு ஊர்கள் காணப்படுகின்றன. சோழர்தன் செல்கின்ற, அல்லது வருகின்ற வழியில் இவ்வூர்களில் தங்கியிருந்தல் வேண்டும். அதனால் சோழல் தங்சல், சோழன் தாங்கலாகியிருக்க வாய்ப்புண்டு.

கண்ணன், பீமன், கடம்பன் போன்ற புராணத் தொடர்பான ஊர்ப்பெயர்களும் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. முருக்கந்தாங்கல் என்ற ஊர்ப்பெயர் முருக்கமரத்தைக் குறிக்கின்றதா அல்லது முருகன் தாங்கல் என்று முருகக் கடவுளைக் குறிக்கின்றதா என்பது புலப்படவில்லை.

'பெருமாள் தாங்கல்' என்ற பெயரில் பல ஊர்கள் காணப்படுகின்றன. வைணவ சமயக் கடவுளர் செல்வாக்கையே இப்பெயர்கள் எடுத்துக்காட்டுகின்றன. 'பிடாரி' என்ற சிறு தேவதையின் பேரில் பிடாரித் தாங்கல் என்ற ஊரும் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன.

அரசன், ஆண்டவன் பேரில் தாங்கல்கள் அமைந்துள்ளது போல் சில தனிமனிதர்களின் பேரிலும் தாங்கல்கள் அமைந்துள்ளன. பல வட்டங்களில் இவ்வமைப்பு முறையைக் காண்கிறோம்.

கொக்கரன் தாங்கல்
முருக்கன் தாங்கல்
முனியன் தாங்கல்
பெரியன் தாங்கல்
கொம்மன் தாங்கல்
கடம்பன் தாங்கல்
தலையாரி தாங்கல்

போன்ற பெயரில் சில ஊர்கள் காணப்படுகின்றன. சாதிப்பெயர்களும்கூட தனிமனிதப் பெயர்களாகவே அமைந்துள்ளன. இங்கு இடம் பெற்ற பெயர்கள் யாவும் சமுதாயத்தில் பின் தங்கியவர்களாகக் கருதப்படும் மக்கட் பெயர்களாகவே உள்ளன. அது போல் செய்யும் தொழிலிலும், கடைநிலைத் தொழிலான தலையாரியின் பேரிலும் ஓர் ஊர் அமைந்துள்ளது. இந்நிலைகளை நோக்கினால் தாங்கல்கள் எனப்படும் ஊர்கள் சேரிகள் போன்று அமைந்திருத்தல் கூடும் என்று எண்ணத் தோன்றுகிறது. காலப் போக்கில் ஊர்கள் வளர்ச்சியடைந்து அந்நிலை மாற்றம் பெற்றிருக்கவும் கூடும்.

கூவம் (கிணறு) தாங்கல், வெள்ளந் தாங்கல் என்று நீர்ப் பெயர்களின் அடிப்படையிலும் சில ஊர்கள் அமைந்துள்ளன. இப்படிப்பட்ட இடங்களில் தாங்கல் என்பது கலிங்கு என்ற பொருளில் அமையலாம்.

பல்வேறு வகைப்பட்ட முன் ஒட்டுகளைப் பெற்றிருந்தாலும் பெரும்பாலும் தமிழ்ப் பெயர்களாகவே தாங்கல்கள் அமைந்துள்ளன.

## 12. காரணை:

செங்கை மாவட்டத்தில் காரணை என்ற பொதுக்கூறுடைய பல ஊர்கள் காணப்படுகின்றன. பொன்னேரி, திருத்தணி ஆகிய இரு வட்டங்களிலும் இப்பெயரைக் கொண்ட ஊர்களைக் காண முடியவில்லை. ஆனால் மதுராந்தகம் வட்டத்தில் பல ஊர்கள் உள்ளன. பிற வட்டங்களில் ஒன்றிரண்டு ஊர்கள் காணப்படுகின்றன.

இப்பொதுக்கூறு எவ்வாறு அமைந்தது என்பதில் கருத்து வேறுபாடு காணப்படுகிறது. "இறைவன் கருணையால் ஏற்பட்டது கரணை. கரணை-துண்டுபடுதல்; பேரூரிலிருந்து பிரிந்த சிற்றூர் இவ்வாறு பெயர் பெற்றது என்பது சிலர் கருத்து".[24]

கருணை கரணையாகி, காரணையாகியது என்று கூறுவது மொழியமைப்பில் இயல்பாக ஏற்படக்கூடிய மாற்றமே எனலாம். ஆனால் ஊர்ப்பெயர்களில் காணப்படும் முன் ஒட்டுகளை நோக்

---

24. செங்கற்பட்டு மாவட்டம் - சோ. ம. லெ - பக்: 66

கும்போது கருணையால் பெயர்கள் பெற்றன என்று கூறுவது பொருத்தமாகப் படவில்லை. எனினும், கரணை என்பது துண்டு படுதல் என்ற பொருளில், பேரூரிலிருந்து பிரிந்த சிற்றூர்கள் இவை எனக் கூறுவதே பொருத்தமாகும்

காரணை என்று முடியும் ஊர்களில் பல மரம், செடி, கொடி கள் போன்ற இயற்கைப் பொருட்களின் பெயர்களைப் பெற்றுள்ளன.

| | |
|---|---|
| ஈச்சங்காரணை | பொற்பனங்காரணை |
| மல்லியங்காரணை | வேப்பங்காரணை |
| காட்டுக்காரணை | பீர்க்கங்காரணை |
| பசுங்காரணை | பேய்க்காரணை |
| | மஞ்சக்காரணை |

போல்வன இயற்கைப் பொருட்களையொட்டியமைந்த பெயர் களாகும். ஈச்சரங்காரணை என்ற பெயரில் இரண்டு ஊர்கள் உள்ளன. பனை, வேப்பு போன்ற மரங்கள், மல்லி, பீர்க்கை, பெய்த்தேர் போன்ற செடி கொடி வகைகள், பசுமையாக அமைந்த இயற்கையமைப்பு, காட்டுப்பகுதி ஆகியனவற்றின் அடிப்படையில் சில ஊர்கள் அமைந்துள்ளன.

கண்ணன் காரணை, கிருஷ்ணங்காரணை, திருவெங்காரணை போன்ற ஊர்ப்பெயர்கள் வைணவ சமயக் கடவுளர் பெயரில் அடிப்படையில் அமைந்த ஊர்கள். பிற சமயக் கடவுளர் பெயரில் காரணைகள் ஏதும் அமைந்ததாகத் தெரியவில்லை. காரணை என்ற பெயரில் மட்டுமே பல ஊர்கள் காணப்படுகின்றன. பள்ளிக்கரணை என்பது சமய, பௌத்தப் பள்ளிகள் அமைந்த ஊராக இருக்கலாம்.

ஒட்டன் காரணை, வளை(லை)யக் காரணை போன்று சாதிப் பெயர்களின் அடிப்படையிலும் சில ஊர்கள் அமைந்துள்ளன. ஓட்டர் என்ற இனத்தவர் பெயரில் பிற பொதுக்கூறிலும் ஊர் கள் அமைந்துள்ளதால் அவர்கள் இப்பகுதியில் மிகுதியாக வாழ்ந் திருப்பர் என்று உணர முடிகிறது.

கீழ், மேல், வட, தென் என்று எல்லைப் பெயர்களைக் குறிக்குமாறும் சில ஊர்கள் அமைந்துள்ளன. முன்பிருந்த ஊரி

லிருந்து பிரிந்து அவ்வூருக்கு கீழ், மேல், வடக்கே தெற்கே இப்புது ஊர்கள் அமைந்துள்ளன என்பதையும், அதனால் தான் காரணை என்ற பெயர்களைப் பெற்றன என்பதையும் எல்லைப் பெயர்கள் உணர்த்துகின்றன.

கரணை என்ற பெயரிலும், காரணை என்ற பெயரிலும் மட்டுமேயன்றி காரணி என்ற பெயரிலும் கூட ஓர் ஊர் உள்ளது. மேலும், ஊர் என்ற பொதுக்கூறுடைய லாட கரணை எண்டத்தூர் என்ற ஊர்ப்பெயரிலும், தாங்கல் என்ற பொதுக்கூறுடைய காரணைத் தாங்கல் என்ற ஊர்ப்பெயரிலும் காரணை என்பது இடம்பெற்றுள்ளது.

கரணை என்பது தமிழ்ச் சொல்லாக உள்ளதால் கரணையைப் பொதுக்கூறாகப் பெற்றுள்ள ஊர்ப்பெயர்களும் பெரும்பாலும் தமிழ்ச் சொற்களாகவே அமைந்துள்ளன.

13. காடு:

காடு என்ற பொதுக்கூறுடைய ஊர்கள் செங்கை மாவட்டத்தின் எல்லா வட்டங்களிலுமே காணப்படுகின்றன. இவ்வூர்ப் பெயர்களும், ஊர்கள் அமைந்துள்ள முறையும் காடு என்ற பெயருக்குப் பொருந்துமாறே அமைந்துள்ளதை உணரமுடிகிறது.

காடு என்ற தமிழ்ச் சொல்லைத் தொல்காப்பியத்திலிருந்தே காண முடிகிறது. நால்வகை நிலங்களையும் பற்றிக் குறிப்பிடும் இடத்தில்,

"மாயோன் மேய காடுறை உலகமும்"[25]

என்று முல்லை நிலத்தைப் பற்றிக் குறிப்பிடுகிறார் ஆசிரியர். இன்று பெரும்பாலும் காடு என்பது, மனிதர்கள் வாழ்வதற்குப் பொருந்தாத, விலங்குகள் உறையும் இடமாகவே கருதப்படுகிறது. ஆனால் செங்கை மாவட்ட ஊர்ப்பெயர்களில் காடுகளாகக் காணப்படும் ஊர்கள் முல்லை நிலத்து ஊர்களாகவே காணப்படுகின்றன. பெரும்பாலான முன் ஒட்டுகள் காட்டுப் பகுதியின் இயற்கைச் சூழலைப் படம்பிடித்துக் காட்டுமாறே அமைந்துள்ளன.

---

25. தொல்காப்பியம் - அகத்திணை இயல் - நூற்பா: 5

ஆர்க்காடு
சித்தார்க்காடு
பழவேற்காடு
சிறுபழவேற்காடு
வெடியங்காடு
தோட்டக்காடு
மாங்காடு
சேக்காடு
ஓதிக்காடு
முதுகாடு

போன்ற ஊர்கள் மரம், செடி போன்ற இயற்கைப் பொருட்களின் பெயர்களைப் பெற்றுள்ளன. தோட்டம், பழம் போன்ற பெயர்களும் முல்லை நிலப்பகுதியையே எடுத்துக்காட்டுகின்றன. வெடியங்காடு, சேக்காடு, முதுகாடு போன்ற ஊர்ப்பெயர்களும் காட்டுப்பகுதியை உணர்த்துகின்றன.

குன்னக்காடு
சூலேரிக்காடு
செங்காடு
வெங்காடு

போன்ற ஊர்ப்பெயர்கள் குன்று, ஏரி, மண்ணின் தன்மை போன்றனவற்றை உணர்த்துமாறு அமைந்துள்ளன. செங்காடு, வெங்காடு என்ற பெயர்கள் இரண்டு மூன்று ஊர்களுக்கு அமைந்துள்ளன. சின்ன வெளிக்காடு, திறந்த வெளியில் அமைந்த ஊரையும், கோட்டைக்காடு என்பது யாரேனும் ஓர் அரசரால் கட்டப்பட்ட கோட்டையைச் சார்ந்து அமைந்த ஊரையும் குறிக்குமாறு அமைந்திருத்தல் கூடும்.

ஆர்க்காடு என்ற பெயர் சித்தார்க்காடு, வேர்க்காடு, திருவேர்க்காடு என்றெல்லாம் அழைக்கப்படும் பல ஊர்களாக அமைந்துள்ளன. பட்டிக்காடு என்ற பெயரிலும் ஓர் ஊர் அமைந்துள்ளது. மாங்காடு என்பதனுடன் பூனிமாங்காடு என்ற வேறோர் ஊரும் காணப்படுகிறது.

சாத்தான்காடு என்ற ஓர் ஊர்மட்டுமே தனிமனிதப் பெயரில் அமைந்துள்ளது. எந்தச் சமயக் கடவுளரின் பெயரிலும் ஊர்கள் இல்லையெனினும் திருவேற்காடு, திருவாலங்காடு போன்ற ஊர்கள் சைவசமயக் கடவுளரின் தொடர்புள்ள ஊர்களாகும்.

காடு என்ற சொல்லைப் போலவே அப்பொதுக் கூறுடன் அமைந்தஊர்கள் அனைத்தும் தமிழ்ப் பெயருடைய ஊர்களாகவே அமைந்துள்ளன.

## 14 பேட்டை :

பேட்டை என்ற பொதுக்கூறுடைய ஊர்கள் செங்கை மாவட்டத்தின் எல்லா வட்டங்களிலும் காணப்படுகின்றன. செங்கல்பட்டு, சைதாப்பேட்டை, ஸ்ரீ பெரும்பூதூர் ஆகிய வட்டங்களில் ஒவ்வொர் ஊர் மட்டுமே பேட்டை என்ற பெயரில் உள்ளன. காஞ்சீபுரம் வட்டத்தில் பல ஊர்கள்காணப்படுகின்றன.

பேடு என்ற பொதுக்கூறுடைய ஊர்கள் பற்றி முன்னர் விளக்கப்பட்டது. அப்பேடு என்ற சொல்லின் அடியாகவே பேட்டை என்ற சொல் அமைந்திருக்கலாம். ஆனால் பேட்டை என்ற சொல் எந்தக் காலத்திலிருந்து ஊர்ப்பெயராக அமைந்துள்ளது என்பதை நோக்கும்போது அச்சொல் பேடு என்ற சொல்லினடியாகப் பிறந்திருக்குமா என்று ஐயுறவேண்டியுள்ளது. தமிழ் நாட்டு ஊர்ப்பெயர்களைப் பொதுவாக நோக்கினால் பேட்டை என்ற சொல் முசுலிம்களின் செல்வாக்குள்ள ஊர்களாகவே காணப்படுகின்றன.

பட்டடை என்ற சொல் தொழிலின் அடிப்படையில் அமைந்த ஊர்ப் பெயரைக் குறிக்கும். பட்டடை என்பதுவே குறுகி பேட்டை என்று அமைந்திருக்குமா என்று எண்ண வேண்டியுள்ளது. எப்படியேனும் பேட்டை என்ற பெயரில் ஊர்கள் அமைந்தது முசுலிம்கள் காலமாதலால் பிறமொழி பேசும் மக்களாகிய அவர்களால் புதிதாக உருவாக்கப்பட்ட ஊர், பட்டடை என்பதுபோல் தொழில்கள் தோன்றுவதற்கு ஏற்ற ஊர் என்ற பொருத்தத்தில் பட்டடை → பட்டை → பேட்டை என்று மாற்றம் பெற்றிருத்தல்கூடும். பிறமொழியாளரால் எழுதப்படும் போது ஊர்களின் பொதுக்கூறுகள் மாற்றம் பெறுவது இயல்பு. சைதாப்பேட்டை என்பது 'சைதாபேட்' என்றும், செங்கற்பட்டு என்பது 'சிங்கள்புட் என்றும் ஆங்கிலத்தில் எழுதப்படுவதை யறியலாம்.

"... இங்ஙனம் தொழில்களால் சிறப்புறும் ஊர்கள் பேட்டை எனப்படும் ...... திருநெல்வேலிக்கு மேற்கே பேட்டை என்ற பெயருடைய ஓர் ஊர் உண்டு. பலவகையான பட்டடைகள் அங்கு இன்றும் காணப்படும்.[26]

---

26. ஊரும் பேரும்- டாக்டர். ரா. பி. சேதுப்பிள்ளை-பக்.62

தொழில்களால் சிறப்புறும் ஊர்களை பேட்டை, பட்டடை எனக் குறிப்பிட்டு, பேட்டை இருப்பது போலவே பட்டடைகளும் நெல்லைமாவட்டத்தில் இருப்பதாக அறிஞர் ரா. பி. சேதுப் பிள்ளை கூறும் கருத்து இரண்டு பொதுக்கூறுகளையும் ஒப்பு நோக்கத் துணை செய்கிறது.

செங்கை மாவட்டத்தில் காணப்படும் பேட்டைகளில் பல இசுலாமிய, விஜயநகர அரசபரம் பறையைச் சேர்ந்த செல்வாக்குள்ளவர்களின் பெயர்களாகவே காணப்படுகின்றன.

மாபூஸ்கான் பேட்டை
ஜல்லடியன் பேட்டை
ஷாம்ஷர் பகதூர் பேட்டை

போன்ற ஊர்களும், நசரத்பேட்டை என்ற பெயரில் காணப்படும் ஊர்களும் முசுலிம்களால் தோற்றுவிக்கப்பட்ட ஊர்களாகும். முசுலிம்களுக்குப் பிறகு விஜய நகர அரசர்களின் ஆட்சி சுமார் மூன்று நூற்றாண்டுகள் இப்பகுதியில் நிலவியுள்ளதால் நாயக்கர் களின் பேரில் பல பேட்டைகள் தோன்றியுள்ளன.

| | |
|---|---|
| நாய்க்கன் பேட்டை | கேசவராயன் பேட்டை |
| திம்மராசம் பேட்டை | லிங்கப்பையன் பேட்டை |
| திம்மையன் பேட்டை | பொம்மராஜு பேட்டை |
| பாபுராயம் பேட்டை | இராமகிருஷ்ணராஜு பேட்டை |

முதலிய ஊர்கள் விஜய நகர அரசர்களின் பெயரால் உருவாகிய ஊர்களாகும். இவ்வூர்களேயன்றி அய்யம் பேட்டை, நரசம் பேட்டை, நெக்கினிப் பேட்டை, முத்தியாலுப் பேட்டை, ஏக்கனாம் பேட்டை போன்ற ஊர்களும் கூட விஜய நகர அரசர் களின் ஆட்சிக் காலத்தில் தோன்றியவைகளேயாம்.

நில அமைப்பின் அடிப்படையில் களியப்பேட்டை நத்தப் பேட்டை போன்ற ஊர்கள் அமைந்துள்ளன.

பள்ளிப்பேட்டை என்பது பள்ளப்பேட்டை என்றமைந்து, பள்ளமான இடத்தில் அமைந்த ஊர் என்ற பொருள் புலப்படுத் தலாம். அல்லது பௌத்த, சமயப்பள்ளிகள் உள்ள இடம் என்றும் அமையலாம்.

கண்ணம்மா என்ற பெண்ணின் பெயரில் கண்ணம்மாப் பேட்டை என்ற ஊர் உள்ளது. செவ்வாப் பேட்டை என்றுள்ள ஊர், செவ்வாழைப்பேட்டை என்பதன் திரிபாக இருத்தல் கூடும். சிறப்புழகரம் சரியாக உச்சரிக்கப்படாமையால் ஊர்ப் பெயர் மாற்றம் பெற்றிருக்க வாய்ப்பு உண்டு.

பெரும்பாலான பேட்டைகள் பிறமொழியாளரால் உருவாக் கப்பட்டமையால் பேட்டைகளின் முன் ஒட்டுகளில் பிற மொழிச் சொற்களைக் காணமுடிகிறது,

15 மேடு :

செங்கை மாவட்டத்தில் திருத்தணி வட்டத்தைத் தவிர பிற வட்டங்களில் மேடு என்ற பொதுக் கூறுடைய ஊர்களைக் காண முடிகிறது. மதுராந்தகம், சைதாப்பேட்டை ஆகிய இருவட்டங் களிலும் ஒவ்வொரு ஊர்களே காணப்படுகின்றன.

நில அமைப்பின் அடிப்படையிலேயே மேடு என்ற பொதுக் கூறு அமைந்திருக்கவேண்டும். மேட்டுப் பாங்கான இடத்தில் உரு வாகிய ஊர்கள் மேடு என்ற பொதுக்கூறைப் பெற்றுள்ளன. பிற பொதுக்கூறுகளின் அடிப்படையில் அமைந்த ஊர்களில் மேடு என்பது சிறப்புக்கூறாக அமைந்திருந்தது. இங்கு அது பொதுக் கூறாக அமைய, அப்பொதுக் கூறைச் சார்ந்து பல சிறப்புக்கூறு கள் இடம் பெற்றுள்ள விதம் விளக்கப்படுகிறது.

மேட்டுப்பாங்கான இடத்தில் பயிரிடப்படும் பல செடி, கொடிகளின் பேரில் பல ஊர்கள் அமைந்துள்ளன.

| | |
|---|---|
| கொள்ளுமேடு | செங்கழுணீர்மேடு |
| கொட்டமேடு | நொச்சிமேடு |
| மஞ்சள்மேடு | பாகல்மேடு |
| அவிரிமேடு | |

என்பன அப்பெயர்கள். இங்குக் குறிப்பிடப்பட்டுள்ள பெயர் களில் மரப்பெயர் ஏதும் இல்லை. அருகில் உள்ள இடத்தைவிட மேடாக உள்ள இடங்களில் பயிரிடப்படும் செடி கொடிகளே இங்கு எடுத்துக்காட்டப் பட்டுள்ளன. பருத்தி போன்ற கொட் டைகள் பயிரிடப்படும் இடம் கொட்டமேடு என்று குறிப்பிடப் பட்டுள்ளது. செங்கழுணீர் நிறைந்த இடம் நீர்நிலையாக இருப்பி னும் அதனருகில் உள்ள இடம் மேடாக அமைந்திருக்கும். அம் மேட்டின் மேல் புதிய ஊர் தோன்றியிருக்கும்.

பெரும்பாலும் மேடு என்ற பொதுக்கூறுடைய ஊர்கள் பிற் காலத்தில் தோன்றியவைகளாகவே காணப்படுகின்றன. அதனால் சில பின் தங்கிய இனத்தைச் சேர்ந்த தனிமனிதர்களின் பெயரிலும் சில மேடுகள் தோன்றியுள்ளதைக் காணமுடிகிறது.

குருவன்மேடு
கருக்காமேடு
சொக்கிலிமேடு
கங்காணிமேடு
மேல்சிங்கிலிமேடு
கோவிந்தமேடு
எட்டிகுத்திமேடு

என்ற ஊர்களை இவ்வரிசையில் குறிப்பிடலாம். குருவனமேடு என்ற பெயரில் இரண்டு ஊர்கள் காணப்படுகின்றன. கங்காணி என்பது தொழில் அடிப்படையில் அமைந்தபெயர்.

சித்தேரிமேடு என்பது ஏரியின் அருகில் உள்ள மேட்டுப் பாங்கான இடத்தில் அமைந்தஊர் என்பதனையும், மணல்மேடு என்பது மணற்பாங்கான மேட்டுப் பகுதியில் உள்ள ஊர் என்பதனையும் உணர்த்தும்.

ஆளவந்தார் மேடு என்ற பெயரிலும் ஓர் ஊர் உள்ளது. ஆட்சிபுரிய வந்தவர் என்ற பொருளில் யாரேனும் அரசரை உணர்த்துகின்றதா அல்லது தெலுங்கு இனத்தைச் சேர்ந்த தனி மனிதப் பெயரை உணர்த்துகின்றதா என்பது ஐயமாக உள்ளது. இரண்டாவது கருத்தே பொருத்தமாக அமையலாம். நந்தி பல்லவனின் பெயர் விளங்குமாறு நந்திமேடு என்ற ஊரும் காணப்படுகிறது.

மேடு என்ற பொதுக் கூறையுடைய ஊர்கள் அனைத்தும் தமிழ்ப் பெயர்களாகவே காணப்படுகின்றன.

**16 தண்டலம் :**

செங்கற்பட்டு மாவட்டத்தில் திருத்தணி வட்டத்தைத்தவிர பிறவட்டங்கள் அனைத்திலும் தண்டலம் என்ற பொதுக்கூறு டைய ஊர்களைக்காணமுடிகிறது சைதாப்பேட்டை வட்டத்தில் 'விடதண்டலம்' என்ற ஓர் ஊரைமட்டுமே காணமுடிகிறது.

"'சோலையைக் குறிக்கும் மற்றொரு தமிழ்ச்சொல் தண்டலை என்பதாகும். அது தண்டரை எனவும் தண்டலம் எனவும் வழங்கும்[27]

---

27. ஊரும் பேரும் - டாக்டர். ரா. பி. சேதுப்பிள்ளை-பக்:9

செங்கைமாவட்டத்தில் தண்டலம் என்ற பெயரில் அமைந்துள்ள ஊர்களில் பல, பொதுக்கூறினுக்கு ஏற்பச் சோலைகளாகவே அமைந்துள்ளன

பூந்தண்டலம்
காவாந்தண்டலம் (காயாந்தண்டலம்எனப்படுகிறது)
காவித்தண்டலம்
பழந்தண்டலம்

என்பன பூ, காய், பழம் என்ற அடிப்படையில் அமைந்த ஊர்கள். பெரும்பாலும் சோலைகள் இவ்வடிப்படையிலேயே அமைதல் இயல்பு. பூந்தண்டலம் என்ற பெயரில் இரண்டு ஊர்கள் காணப்படுகின்றன. தண்டலம் என்ற பெயரில் பல ஊர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. முன் ஒட்டு ஏதும் இல்லாமலேயே காணப்படும் இத்தண்டலங்கள் பிற்காலத்தில் தோன்றியவைகளாக இருந்தல் வேண்டும்.

கொருக்கன் தண்டலம், இராமன் தண்டலம் என்று சில தனி மனிதப் பெயர்களின் அடிப்படையில் சில ஊர்கள் காணப்படுகின்றன. துலுக்கந் தண்டலம் என்ற ஓர் ஊர் முசுலிம் இனத்தைச் சுட்டும் விதத்தில் காணப்படுகிறது. பிற சாதிப்பெயர் எதனையும் குறிப்பிடும் விதத்தில் தண்டலங்கள் ஏதும் காணப்படவில்லை.

பெருந்தண்டலம் என்பது ஊரின் பெருமையை அல்லது பேரளவை உணர்த்தலாம். கோடித்தண்டலம் என்பது ஊர்க் கடைசியில் அமைந்த புதிய ஊரைக் குறிக்கலாம்; அல்லது கோயில் தண்டலம் என்பது மருவி கோடித் தண்டலமாக அழைக்கப்பட்டிருக்கலாம். அனுமன் என்ற இராமபக்தன் பெயரிலும் அனுமந்தண்டலம் என்ற ஊர் தோன்றியுள்ளது.

தண்டலம் என்ற பொதுக்கூறுக்குப் பொருந்துமாறு முன் ஒட்டுகளைப் பெற்றிருப்பதுடன், தமிழ்ப்பெயர்களாகவே ஊர்ப் பெயர்கள் அனைத்தும் காணப்படுகின்றன.

## 17 அகரம்:

செங்கற்பட்டுமாவட்டத்தில் பரவலாகக் காணப்படும் ஊர்களில் அகரம் என்ற பொதுக்கூறுடைய ஊர்களும் உள்ளன. திருத்தணிவட்டத்தைத் தவிர பிறவட்டங்களில் இவ்வூர்கள் காணப்படுகின்றன.

''பிராமணர்கள் வசித்த இடங்கள் அக்கிரகாரம் என வழங்கப் பெற்றன. அதன் குறுக்கமே அகரம் எனக்கருது கின்றனர்.''[28] இக்கருத்தைச் சிலர் ஏற்றும், சிலர் மறுத்தும் உள்ளனர். பிறசாதியினர் வாழ்ந்த பகுதிகளும் அகரம் என்று வழங்கப்பட்டுள்ளதை எடுத்துக் காட்டி 'வேளாளர் அகரம்' என்பதைச் சான்று காட்டியும் உள்ளனர்.[29] எனவே, அக்ரகாரம் என்பதுவே அகரம் எனத்திரிந்தது என்று கூறுவது பொருந்தாது.

நகரம் என்பதுவே அகரம் என்று திரிந்து வழங்கியிருத்தல் வேண்டும். நகரம் என்று அழைக்கப்படுவன அனைத்துமே பெரு நகரங்கள் அல்ல. அதில் சிற்றூர்களும் உண்டு. பட்டினம் என்று குறிப்பிடப்படும் பல ஊர்கள் சிற்றூர்களாகவே உள்ளன. அது போல் நகரம் அகரமாகிச் சிற்றூர்களாகவும் பேரூர்களாகவும் உள்ளன. அவ்வூர்களில் எல்லா இனத்தவரும் வாழ்ந்துள்ளனர்.

அகரம் என்ற பொதுக்கூறை மட்டுமே கொண்டு செங்கை மாவட்டத்தில் பல ஊர்கள் உள்ளன. முன் ஒட்டுகள் ஏதும் இல்லாமலேயே தோன்றிய இவ்வூர்கள் வேற்று நாட்டவர் ஆட்சி இம்மாவட்டத்தில் இல்லாத காலத்தில் தோன்றியிருக்க வேண்டும்.

'புத்தகரம்' என்ற பெயரில் இரண்டு ஊர்கள் காணப்படு கின்றன. பிற்காலத்தில் புதிதாகத் தோன்றிய ஊர்களாக அவை இருத்தல் வேண்டும். பிறிதோர் மாவட்டத்தில் உள்ள செஞ்சியின் பேரில் 'செஞ்சியகரம்' என்ற ஓர் ஊரும் அமைந்துள்ளது. செஞ்சி நகரம் என்றே தொடக்கத்தில் இவ்வூர் குறிப்பிடப்பட்டிருக் கலாம்.

வைணவக்கடவுளான பெருமாள் பெயரில் பெருமாளகரம் என்ற ஊரும், வெண்மாலகரம் என்ற ஊரும் காணப்படுகிறது. நீலநிறமால் இவ்வூரில் வெண்மாலாகியுள்ளார் போலும்! சமண அல்லது பௌத்தப் பள்ளியைக் கொண்டுள்ள ஊர் பள்ளியகரம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

உசேன் என்னும் இசுலாமியர் பெயரில் உசேன் அகரம் (உசேனகரம் என்று பொதுக்கூறும் சிறப்புக் கூறும் சேரும் போது

---

28. Names of Villages donated to Brahmins– Dr. M. Chidanandamurthy P.28

29. ஊரும் பேரும் - டாக்டர ரா.பி. சேதுப்பிள்ளை-பக்: 22

அகரம், நகரமாகிறது) என்ற ஊரும் அமைந்துள்ளது. இனாமாகப் பிறருக்கு வழங்கப்பட்ட ஊர் இனாம் அகரம் எனப்படுகிறது. காட்டுப்பகுதியில் உள்ள ஊர் காட்டகரம் என்றும், வேலி என்ற அளவுப்பரப்புள்ள இடத்தில் அமைந்துள்ள ஊர் அயவேலியகரம் என்றும், சிறந்த மனிதர் ஒருவர் பெயரால் அமைந்த ஊர் தெள்ளியார் அகரம் என்றும் அழைக்கப்படுகிறது. குருவியகரம் என்ற புதுமையான ஓர் ஊரும் காணப்படுகிறது. பறவைகள் நிறைந்துள்ளது, மரங்கள் அடர்ந்த பகுதியில் அமைந்த ஊராக அவ்வூர் இருக்கலாம்.

அகரம் என்ற சொல்லைப் போன்று இப்பொதுக் கூறையுடைய ஊர்களும் தமிழ்ப் பெயர்களாகவே உள்ளன.

18. வரம்:

வரம் என்ற பொதுக்கூறுடைய பல ஊர்கள் செங்கை மாவட்டத்தில் காணப்படுகின்றன. மாவட்டத்தின் எல்லா வட்டங்களிலுமே வரம் என்று முடியும் ஊர்கள் உள்ளன.

புரம் என்பது இடத்தைக் குறிக்கும் என்பது முன்னர் விளக்கப்பட்டது. புரம் என்பதுவே வரம் என்று திரிந்து வழங்குகிறது. வாக்கம் என்பது எவ்வாறு பாக்கம் என்பதன் திரிபாக அமைந்ததோ அதுபோன்று வரம் என்பது புரம் என்பதன் திரிபாக அமைந்துள்ளது. உச்சரிக்கும் முறையில் காலப்போக்கில் இம்மாற்றங்கள் நிகழ்வது இயல்பே. மாதவபுரம் என்பது நாளடைவில் மாதவரம் என்றாகிவிட்டது. இவ்வாறே பிற பெயர்களும் அமைந்துள்ளன எனலாம்.

நந்திவரம், பல்லாவரம் என்ற ஊர்கள் பல்லவமன்னர்களால் அவர்களது ஆட்சிக்காலத்தில் உருவாகியவை. சோழவரம் என்ற ஊர் சோழ அரசரால், சோழர் ஆட்சி இப்பகுதியில் நிலவிய போது தோற்றுவித்திருக்க வேண்டும்.

மாதவரம் என்ற பெயரில் இரண்டு ஊர்கள் காணப்படுகின்றன. மாதவமுனிவர் எவரது பேரிலேனும் இவ்வூர்கள் தோன்றியிருத்தல் வேண்டும். சென்னாவரம் என்ற பெயரில் மூன்று ஊர்கள் காணப்படுகின்றன. இவ்வூர்கள் தெலுங்கு மொழி பேசுவோரின் பெயரில் அமைந்ததாய் இருத்தல்வேண்டும். 'சென்னா ரெட்டி' என்ற பெயரில் தெலுங்கு மொழி பேசும். இனத்தைச் சேர்ந்த அரசியல் தலைவர் இருப்பதையறியலாம்

செம்புலிவரம் என்ற பெயரில் இரண்டு ஊர்கள் காணப்படு கின்றன. புலிகள் நிறைந்த காட்டுப்பகுதியில் அமைந்த ஊர் என்ற பொருளில் இவ்வூர்கள் தோன்றியிருக்க வேண்டும்; அல்லது, செம்புலி என்ற மனிதர் பெயரில் உருவாகியிருக்கவேண்டும்.

திருநாகேஸ்வரம், பாண்டேஸ்வரம், பாலேஸ்வரம் ஆகிய ஊர்கள் வரம் என்ற முடிபைப் பெற்றிருந்தாலும வேறுபட்ட நிலையில் பொருள் புலப்படுமாறு அமைந்துள்ளன இவ்வூர்கள் சிவன் உறையும் இடம் என்ற பொருளில் 'ஈஸ்வரம்' என்ற முடிபைப் பெற்றுள்ளன. இம்முடிபு மூன்று ஊர்களுக்கும் பொருந்தும்.

சீ என்பது ஸ்ரீ என்ற வடவெழுத்தின் தமிழ் ஒலிப்பு முறை யில் அமைந்தது. ஸ்ரீ என்பது திருமகளைக் குறிக்கும். சீவரம் என்பது திருமகள் உறையும் இடம் என்று பொருள்தரும். பழைய சீவரம் என்ற ஊர்ப்பெயர் இவ்வாறு தான் அமைந்திருக்க வேண்டும்,

பெண்ணொருத்தியின் பேரில் அமைந்த ஊர் மங்காவரம் எனப்படுகிறது. அப்பாவரம், அப்ளாவரம் என்ற புதுமையான ஊர்ப்பெயர்களும் காணப்படுகின்றன.

முன் ஒட்டுகளை ஒப்பிடும்போது புரம் என்ற பொதுக்கூறு டைய ஊர்களினின்றும் வரம் என்ற பொதுக்கூறுடைய ஊர்கள் வேறுபடுகின்றன. இவ்ஊர்ப் பெயர்கள் பிற மொழிக் கலப் புடையனவாகக் காணப்படுகின்றன.

**19. ஏரி:**

ஏரி என்ற பொதுக்கூறுடைய ஊர்கள் சிலவும் செங்கை மாவட்டத்தில் காணப்படுகின்றன. சைதாப்பேட்டை, திருவள் ளூர் ஆகிய வட்டங்களைத் தவிர பிற வட்டங்கள் அனைத்திலும் ஏரி என்ற பொதுக்கூறுடைய ஊர்கள் அமைந்துள்ளன. இவ் வூர்ப் பெயர்களின் மூலம் இம்மாவட்டத்திலுள்ள ஏரிகளைப் பற்றியும் அறிந்துகொள்ள முடிகிறது.

ஏர் என்ற சொல்லினடியாகவே ஏரி என்ற சொல் அமைந் துள்ளது. ''ஏர்த்தொழிலாகிய பயிர்த்தொழிலுக்குப் பயன்படும் தண்ணீரை தேக்கி வைக்கும் நிலையம் ஏரி எனப்படும்.''[30]

---

30. ஊரும் பேரும் - டாக்டர். ரா. பி. சேதுப்பிள்ளை-பக்20

அப்படிப்பட்ட ஏரிகள் பாயும் இடத்திற்கு அருகிலுள்ள ஊரும் ஏரி என்று கூறப்பட்டுள்ளது.

பிற பொதுக்கூறுகளுக்கு முன் ஒட்டாக ஏரி அமைந்திருந்தது அப்படிப் பல ஊர்கள் உள்ளன. ஏரி என்பதுவே பொதுக்கூறாக அமைந்த ஊர்கள் இப்பகுதியில் எடுத்துக்காட்டப்படுகின்றன.

சமயத் தொடர்புள்ள இறைவர் பெயரால் சில ஏரிகள் அமைந்துள்ளன. ஹனுமந்தப்புத்தேரி, பெருமானேரி, அரனேரி, திருவரம்புத்தேரி, அம்மனேரி ஆகிய ஊர்களை இவ்வரிசையில் குறிப்பிடலாம். சைவம், வைணவம் ஆகிய இரு சமயக் கடவுளர் பெயரிலும் ஏரிகள் அமைந்துள்ளன.

இயற்கைத் தாவரங்களாகிய மருது, கடம்பு, புல் ஆகிய வற்றுடன் முருக்கமரம் ஆகியவைகளின் பெயரிலும் சில ஊர்கள் அமைந்துள்ளன. மருதேரி, புல்லேரி, கடப்பேரி, முருக்கேரி ஆகிய ஊர்களைச் சான்று கூறலாம். ஏரிகள் பாய்ந்து வளப் படுத்தும் இடங்களில் தோன்றியுள்ள செடிகள், மரங்களின் பெயரில் ஊர்கள் அமையும் என்பதை இச்சான்றுகள் எடுத்துக் காட்டுகின்றன. மருதேரி என்ற பெயரில் பல ஊர்கள் அமைந் துள்ளன. ஒரே ஏரி, பாயும் இடங்களில் பல ஊர்கள் தோன்றி யிருக்கும். கடப்பேரி என்ற பெயரில் ஒரு வட்டத்திற்குள்ளேயே இரண்டு ஊர்கள் காணப்படுகின்றன.

பொன், வெங்கலம் என்ற உலோகங்களின் பெயரிலும் ஏரிகள் அமைந்துள்ளன. பொன்னேரி, வெங்கலேரி என்ற ஊர் கள் சான்றாக உள்ளன. ஏரிகள் பாயும் இடத்தில் இப்படிப்பட்ட உலோகங்கள் கிடைத்தமையால் இப்பெயர்கள் ஊர்களுக்குச் சூட்டப்பட்டிருக்கலாம். தென்னேரி என்ற பெயரிலும் ஓர் ஊர் உள்ளது. சென்னேரி என்ற பெயரிலும் ஓர் ஊர் உள்ளது. தென் என்பதுவே சென் என்று மாறி இருக்கக்கூடும்.

பாரேரி என்ற பெயரிலும் ஓர் ஏரி அமைந்துள்ளது. பார் என் பது உலகம் என்ற பொருளில் அமைந்ததாகவே இருத்தல் வேண்டும். பள்ளமான இடத்தில் அமைந்த ஊர் பள்ளவேரி எனப்பட்டுள்ளது. புத்தேரி என்ற பெயரில் பல ஊர்களை இம்மாவட்டத்தில் காணமுடிகிறது. புதிதாக ஏரிக்கரையில் தோன்றிய ஊர்கள் இவை என்பது தெரிகிறது. புத்தேரி என்ற பெயரில் புதிதாக ஏரி எதுவும் வெட்டப்படவில்லை. ஏற்கெனவே

உள்ள ஏரியின் கரையில் புதிதாக ஊர்களே தோன்றியுள்ளன. புதிதாகத் தோன்றிய காரணத்தால் புத்தேரிகளாகியுள்ளன.

ஏரி என்ற பொதுக்கூறையுடைய ஊர்கள் அனைத்தும் தமிழ்ப்பெயர்களாகவே உள்ளன. புவியியல் அடிப்படையில் ஏரிகள் பாயும் பகுதியிலேயே இவ்வூர்கள் உள்ளன.

20 குளம :

ஏரியைப் போலவே குளம் என்ற பொதுக்கூறுடைய பல ஊர்களும் இம்மாவட்டத்தில் உள்ளன. செங்கற்பட்டு வட்டத்தில் குளத்தூர் என்ற பெயரில் ஊர் இருந்தாலும் குளம் என்று முடியுமாறு ஊர்ப்பெயர் ஏதும் இல்லை. பிறவட்டங்களில் ஓரிரு ஊர்களையேனும் காணமுடிகிறது.

நீர் தேங்கியுள்ள இடம் குளம் எனப்படும். அப்படிப்பட்ட குளங்களின் அருகில் அமைந்த ஊர்கள் குளங்கள் எனப்படுகிறது. செங்கற்பட்டு மாவட்டத்தில் பொதுவாகக் குளங்கள் குறைவாகவே வெட்டப்பட்டுள்ளன. ஏரிகள் தான் பொதுநிலையில் குறைவாகக் காணப்படும். இம்மாவட்டத்தைப் பொறுத்தவரையில் ஏரிகளைக்காட்டிலும் குறைவாகக் குளங்களே உள்ளன, அதற்கேற்ப ஊர்களும உள்ளன. பிறவட்டங்களைக் காட்டிலும் காஞ்சீபுரம் வட்டத்தில் அதிகமான குளங்கள் வெட்டப்பட்டுள்ளன. அதனால் அவ்வட்டத்தில் குளம் என்று முடியும் ஊர்களும் மிகுதியாக உள்ளன.

இம்மாவட்டத்தில் குளம் என்று முடியும் ஊர்ப்பெயர்களில் பெரும்பான்மையானவை தனிமனிதப் பெயர்களாகவே உள்ளன. அவற்றுள் சில தனிப்பட்டசாதிப்பெயர்களின் அடிப்படையிலும் அமைந்துள்ளன.

அய்யங்கார் குளம்

பம்மது குளம்

இவ்விரண்டு பெயர்களும் பிராமணர், இசுலாம் இனத்தவர் பெயர்களில் அமைந்த ஊர்களாகும். காஞ்சீபுரம் பகுதியில் இவ்வினத்தவர் மிகுதியாக வாழ்ந்துள்ளதை இப்பெயர்களால் அறிய முடிகிறது இன்றும் அதே நிலை தொடர்வதையும் அறியலாம்.

| | |
|---|---|
| சின்னையன் குளம் | சேக்கான் குளம் |
| காட்டான் குளம் | தோனான் குளம் |
| மலையான் குளம் | பொன்னான் குளம் |
| நாவெட்டி குளம் | |

போன்ற ஊர்கள் பிறதனிமனிதப் பெயர்களில் அமைந்தவை யாகும். இப்பெயர்களில் பெரும்பாலானவை பிற்படுத்தப்பட்ட இனத்து மக்களின் பெயர்களாகவே காணப்படுகின்றன. குளத்தைப் பொறுப் பேற்று வெட்டியவர்களின் பெயரால், குளத்துக்கு அருகில் தோன்றிய ஊர்களும் அமைந்திருக்க வேண்டும்.

உப்பு, சுண்ணாம்பு, கல் போன்றவற்றின் பெயர்களிலும் சில குளங்கள் அமைந்துள்ளன. உப்புக்குளம், சுண்ணாம்புக்குளம், கல்குளம் ஆகிய இவ்வூர்கள் குளங்கள் வெட்டப்பட்ட இடத்திக் மண்வகைகள் எவ்வாறு அமைந்திருந்தனவோ அதற்கேற்பப் பெயர் பெற்றிருக்கலாம்.

பூஞ்சோலையுள்ள பகுதியில் வெட்டப்பட்டகுளம் பூங்குளம் எனவும், புலிகள் வாழ்ந்த காட்டுப்பகுதியில்வெட்டப்பட்டகுளம் புலிகுளம் என்றும் அழைக்கப்பட்டிருக்கலாம். அக்குளங்களுக்கு அருகில் அமைந்த ஊர்களும் அப்பெயர்களையே பெற்றிருக்கக் கூடும். இருங்குளம், அருங்குளம் என்பன ஊரின் சிறப்புக்களைப் புலப்படுத்தும் விதத்தில் அமைந்த பெயர்களாகும்.

குளம் என்ற பொதுக்கூறில் அமைந்த ஊர்கள் அனைத்தும் தமிழ்ப்பெயர்களாகக் காணப்படுவதுடன் மாவட்டத்தில் உள்ள குளங்களைப் பற்றியறிந்து கொள்ளவும் துணை செய்கின்றன.

## 21 பூண்டி :

பூண்டி என்ற பொதுக்கூறுடைய சில ஊர்கள் இம்மாவட்டத்தில் உள்ளன. செங்கற்பட்டு, சைதாப்பேட்டை திருத்தணி ஆகிய வட்டங்களைத்தவிர பிற வட்டங்களில் பூண்டி என்று முடியும் ஊர்கள் காணப்படுகின்றன.

"பூண்டு வகைகள் மிகுதியாக விளையும் தோட்டங்களை அடுத்து அமைந்த ஊர்களாகும்"[31] என்று பூண்டி என்ற பொதுக்

31. செங்கற்பட்டு மாவட்டம் - சோ. ம. லெ - பக்: 64

கூறுடன் அமைந்த ஊர்களுக்கு விளக்கம் தரப்படுகிறது. ஒரு வேளை அவ்வூர்கள் உருவாகிய காலத்தில் பூண்டுகள் விளைந்திருக்கக்கூடும். இன்றும் அதே பூண்டுகள் உற்பத்தியாகும் என்று கூறமுடியாது. முன்ஒட்டுகளும் பூண்டுவகைகளை எடுத்துக் காட்டும் விதத்தில் அமையவில்லை.

மரம், செடிகளை உணர்த்தும் விதத்தில் சில ஊர்கள் இம்மாவட்டத்தில் அமைந்துள்ளன.

கருவேப்பம்பூண்டி
தினையாம்பூண்டி
பின்னம்பூண்டி (புன்னை, பின்னையாகியுள்ளது)
சூரைப்பூண்டி

என்ற இப்பெயர்களில் பூண்டுவகைகள் ஏதும் குறிப்பிடப்படவில்லை. தொடக்க காலத்தில் இவ்வூர்களில பூண்டுகள் விளைந்திருக்கக்கூடும். பின்னர் இங்குக்குறிப்பிடப்பட்ட மரம், செடிகள் உற்பத்தியாகியிருக்கக்கூடும்.

களியாம்பூண்டி, செம்பூண்டி ஆகிய ஊர்கள் களிமண், செம்மண் ஆகிய மண்வகையால் பெற்ற பெயர்களாகும். தளவராம் என்பவர் பெயரில் தளவராம் பூண்டி என்ற ஊரும், கம்மாளர் என்ற தெலுங்கு மொழி இனத்தவர் பெயரில் கம்மாளம் பூண்டி என்ற ஊரும் அமைந்துள்ளது.

தனிப்பட்ட எச்சமயக்கடவுளர் பெயரிலும் பூண்டிகள் தோன்றாவிட்டாலும் கோவிலம் பூண்டி என்று பொதுப்படையாகக் கோயிலைக் குறிக்கும் ஓர் ஊரும் உள்ளது.

பழைய கும்மிடிப்பூண்டி, புதுக்கும்மிடிப்பூண்டி என்ற பெயரில் இரண்டு ஊர்கள் அமைந்துள்ளன. கும்பல், கும்மல் என்பன கூட்டம் என்ற பொருள் தரும் சொற்கள். கூட்டமாகப் பெண்கள் ஆடுவது கும்மி எனப்படும். வீடுகள் கூட்டமாக நெருங்கியுள்ள ஊர்களைக் கொண்ட பகுதி கும்மிப்பூண்டி, கும்மிடிப்பூண்டி என்று அழைக்கப்பட்டிருக்கலாம். ஒரு வட்டத்தின் தலைநகராகவும் இவ்வூர் உள்ளது.

பூண்டி என்ற பொதுக்கூறை மட்டுமே ஊர்ப்பெயராகக் கொண்டு சில ஊர்கள் அமைந்துள்ளன. பிற ஊர்களின் பொதுக்

கூறுகளிலும் இந்நிலையைக் காணமுடிகிறது. சில தெலுங்குப் பெயர்களைத் தவிர பிற ஊர்ப்பெயர்கள் தமிழ்ப் பெயர்களாகவே உள்ளன.

22. வாயல்:

வாயல் என்ற பொதுக்கூறுடைய சில ஊர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. காஞ்சிபுரம், மதுராந்தம், திருத்தணி ஆகிய வட்டங்களில் இப்பொதுக்கூறுடைய ஊர்கள் காணப்படவில்லை. ஆனால் பொன்னேரி வட்டத்தில் மிகுதியாகக் காணப்படுகிறது.

வாயில், வாசல் என்ற சொல்லே வாயல் என்று மருவியிருக்கலாம் என்று பொதுவாக நம்பப்படுகிறது. "கோட்டை வாயிலாக இருந்த இடங்கள், மன்னன் மாளிகை வாசலாக இருந்த இடங்கள் போன்றனவே இவ்வாறு பின்னாளில் ஊர்ப் பெயராக வழங்கப்படுகிறது"[32] என்ற கருத்து பெயர்ப் பொருத்தம் என்ற அளவில் சரியாக அமைந்துள்ளதேயன்றி ஊர்களின் சிறப்புக் கூறுகளை நோக்கும் போது பொருந்துவதாகப் படவில்லை.

வயல் என்ற சொல்லே வாயல் என்று மாறி இருக்க வேண்டும். இக்கருத்துப் பொருந்துமாறு செங்கை மாவட்ட ஊர்ப்பெயர்கள் அமைந்துள்ளன.

கொடிநெல்வாயல
உப்புநெல்வாயல்

என்ற ஊர்ப்பெயர்கள் நெல் விளையும் இடங்களாகவும் ஊர்களைக்குறிப்பிடுவதால், வயல் என்பதே வாயல் என்று மாறியுள்ளது என்பது புலனாகும். வாயல் என்று முடியும் பிற ஊர்ப் பெயர்களும் இக்கருத்தை உறுதிப் படுத்துகின்றன.

| | |
|---|---|
| ஆரியன்வாயல் | குருவாயல் |
| பெருவாயல் | சிவன்வாயல் |
| காஞ்சிவாயல் | அரன்வாயல் |
| புதுவாயல் | |

---

32. தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்கள் - மெய். சந்திரசேகரன்-பக்: 72

போன்ற ஊர்கள் பல்வேறு காரணங்களால் வழங்கப்பட்ட வயல்களைக் குறிக்குமாறு அமைந்துள்ளன. வேதம் ஓதும் ஆரியனுக்கு வழங்கப்பட்ட வயல் ஆரியன் வாயல் என்றும், பாடம் நடத்தும் குருவுக்கு வழங்கப்பட்ட வயல் குருவாயல் என்றும், இறைப் பணிக்காகச் சிவன் கோயிலுக்கு விடப்பட்ட வயல்கள் சிவன் வாயல் என்றும், அரன் வாயல் என்றும், காஞ்சியைச் சேர்ந்தவர் வாங்கிய வயல் காஞ்சி வாயல் என்றும், பெரிய வயல் பெரு வாயல் என்றும், புதிதாக அமைந்த வயல் புதுவாயல் (புதுவயல், பெருவயல் என்ற ஊர்கள் பிற மாவட்டத்தில் உள்ளன) என்றும் அழைக்கப்படுகின்றன.

சின்ன முல்ல வாயல், பெரிய முல்ல வாயல், அமுல்ல வாயல் ஆகிய ஊர்கள் முல்லை மலர்கள் விளைவிக்கப்படும் வயல்களைக் குறிக்கும். சேல வாயல் என்பது சேல் விளையாடும் வயல் என்ற பொருளிலும், பால் வாயல் என்பது பால் போன்ற வெண்ணிற நெல் விளையும் வயல் என்ற பொருளிலும், இவை போன்றே பிற பெயர்களும் காரணத்துடன் அமைந்துள்ளன.

வாயலூர் என்ற ஊர்ப்பெயர் செங்கல்பட்டு, மதுராந்தகம் வட்டங்களில் காணப்படுகிறது. வயலைச் சார்ந்த ஊர் வயலூர் என்றிருந்து, அதுவே பின்லர் வாயலூராக மாறியுள்ளது. இப்பொதுக்கூறு மட்டுமன்றி பொதுக்கூறுடன் அமைந்த ஊர்களும் தமிழ்ப்பெயர்களாகவே காணப்படுகின்றன.

## 23. விளாகம்:

விளாகம் என்ற பொதுக்கூறுடைய சில ஊர்கள் செங்கை மாவட்டத்தில் காணப்படுகின்றன. பொன்னேரி, சைதாப் பேட்டை, திருத்தணி ஆகிய வட்டங்களில் இப்பொதுக்கூறுடைய ஊர்சள் காணப்படவில்லை, மதுராந்தகம் வட்டத்தில் சற்று மிகுதியான விளாகங்கள் உள்ளன.

''இது போர்க்களம், சூழிடம் என்னும் பொருளைக் கொண்டது. ஊரின் புறத்தே அல்லது ஒரு பெருநகரினைச் சுற்றியிருந்த சிறு சிறு கிராமங்களைக் குறிப்பதாக இருக்கலாம்.''[33] என்று விளாகத்திற்கு விளக்கம் கூறப்படுகிறது. குடியிருப்புப் பெயர்

33. தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்கள் - மெய். சந்திரசேகரன்-பக்: 74

களில் ஒன்றாக விளாகம் கல்வெட்டில் எடுத்துக்காட்டப் பட்டுள்ளது.[34]

செங்கைமாவட்டத்தில் இடம் பெற்றுள்ள விளாகங்களை நோக்கினால் போர்க்களம், சூழிடம் என்ற இருபொருளுமே பொருந்துமாறு அமைவதையுணரலாம்.

அடவிளாகம் (அடல் விளாகம் எனப்படும்)
கருணாகர விளாகம்
ஆட்சி விளாகம்

ஆகிய ஊர்கள் போர்க்களம் என்ற பொருளைப் புலப்படுத்து மாறு அமைந்துள்ளன. கலிங்கம் வென்ற கருணாகரத் தொண் டைமானின் பெயரால் கருணாகர விளாகம் அமைந்திருக்க வாய்ப்பு உண்டு. போர்க்களங்கள் நடைபெற்ற இடத்தில் அமைந்த ஊராகவோ அல்லது வேறிடத்தில் நடைபெற்ற போரை நினைவுகூரும் விதத்திலோ இவ்வூர்கள் அமைந்திருக்க வேண்டும்.

சூழிடம் என்பது பொருந்துமாறு பல ஊர்கள் அமைந்துள் ளன. கோயில் மடங்களைச் சூழ்ந்த பகுதியில் பல ஊர்கள் அமைந்துள்ளன. அதனால்தான் 'மடவிளாகம்' என்ற பெயரில் பல ஊர்கள் காணப்படுகின்றன. ஒரே வட்டத்தில் இரண்டு மடவிளாகங்கள் காஞ்சீபுரம், மதுராந்தகம், ஸ்ரீபெரும் புத்தூர், திருவள்ளூர் ஆகிய வட்டங்களில் காணப்படுகின் றன.

மேல் விளாகம், கீழ் விளாகம் என்று திசையின் அடிப்படை யில் அமைந்த விளாகங்களேயன்றி, விளாகம் என்ற பொதுக் கூறு மட்டுமே பெற்றுப் பல ஊர்களும் இம்மாவட்டத்தில் உள்ளன. இவ்விளாங்கள் எவற்றைச் சூழ்ந்து அமைந்துள்ளன என்பதை முன் ஒட்டு இன்மையால் உணர முடியவில்லை. ஒரு வேளை, இவ்வூர்ப் பெயர்கள் போர்க்களங்கள் நடைபெற்ற இடங்களில் அமைந்தவையாகவும் இருப்பதற்கு வாய்ப்பு உண்டு. பெரும்பாலும் எல்லா ஊர்ப் பெயர்களும் தமிழ்ப் பெயர்களா கவே உள்ளன.

---

34. கல்வெட்டில் ஊர்ப்பெயர்கள் - ஆர். ஆளவந்தார்-பக்: 9

## 24. குன்றம்:

குன்றம் என்ற பொதுக் கூறுடைய சில ஊர்கள் செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ளன. மதுராந்தகம், பொன்னேரி, ஸ்ரீபெரும்பூதூர், திருத்தணி ஆகிய வட்டங்களில் இப்பொதுக் கூறுடைய ஊர்களைக் காண முடியவில்லை. அதற்குக் காரணமும் உண்டு. குன்றம் என்பது சிறு மலைகளைக் குறிக்கும். அப்படிப்பட்ட மலைகள் அமைந்த இடங்களில் தோன்றிய ஊர்களே குன்றங்கள் என்று கூறப்பட்டுள்ளன. அப்படிப்பட்ட சிறு மலைகள் மிகுதியாக இல்லாத இடங்களிலும், மலைகளைச் சார்ந்து ஊர்கள் தோன்ற வாய்ப்பு இல்லாத இடங்களிலும் குன்றம் எனப்படும் ஊர்கள் காணப்படவில்லை.

செங்கற்பட்டு மாவட்டத்தில் குன்றம் என்று முடியும் ஊர்களின் முன்ஒட்டுகளை நோக்கினால் பொதுக்கூறுடன் பொருந்தி வருமாறே அமைந்துள்ளன.

| | |
|---|---|
| அருங்குன்றம் | நெடுங்குன்றம் |
| செங்குன்றம் | சிறுகுன்றம் |
| வளர்குன்றம் | |

ஆகிய ஊர்ப்பெயர்கள், குன்றத்தின் சிறப்பு, தன்மை, அமைப்பு ஆகியனவற்றை உணர்த்துகின்றன. அப்படிப்பட்ட குன்றங்களைச் சார்ந்து ஊர்கள் உள்ளமையால் குன்றங்களின் பெயர்களை ஊர்களும் பெற்றுள்ளன.

புலிக்குன்றம், திருக்கழுக்குன்றம் என்ற பெயர்கள் குன்றங்கள் அமைந்துள்ள வடிவங்களால் பெற்ற பெயர்களாகும். புலி போல் வடிவமுடைய குன்று புலிக்குன்று எனப்படுகிறது. கழுகு போல் அமைந்த குன்று கழுக்குன்று எனப்படுகிறது. (அது வேறு விதமாகவும் அமையும் என்பது முன்னர்க் கூறப்பட்டது). அது இறைவன் கோயில் கொண்ட குன்றமாக விளங்குவதால் 'திரு' என்று சிறப்பிக்கப்படுகிறது.

நீர்பாயும் அருவியையுடைய குன்றம் நீர்க்குன்றம் எனப்படுகிறது. நெல்வயல்கள் சூழ அமைந்த குன்றம் நெற்குன்றம் எனப்படுகிறது. குன்று போல் நெல்குவிக்கப்படும் ஊர் என்றும் இப்பெயர் அமையும். அருங்குன்றம், செங்குன்றம், நெற்குன்றம் என்ற பெயரில் முறையே இரண்டு ஊர்கள் அமைந்துள்ளன.

## 25 வாடி :

வாடி என்ற பொதுக்கூறுடைய சில ஊர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. காஞ்சீபுரம், மதுராந்தகம் வட்டங்களிலேயே இவ்வூர்கள் அதிகமாக உள்ளன. பிறபொதுக்கூறுகளிலிருந்து வேறுபட்டுக் காணப்படும் வாடி என்ற சொல்லமைப்பும் வழக்கில் குறைந்தே காணப்படுகிறது.

பாக்கம், வாக்கம் என்றும், புரம், வரம் என்றும் மாற்றமடைந்த செய்தி முன்னர் விளக்கப்பட்டது. பொதுவாக பெருவழக்கில் உள்ள ஊர்ப்பெயர்கள் பலராலும் பலவாறாக உச்சரிக்கப்பட்டு காலப்போக்கில் உருமாறி விடுவது இயல்பு. அந்நிலையில், பாடி என்னும் பொதுக்கூறு வாடி என்று மாற்றம் பெற்றிருத்தல் வேண்டும். அவ்வாறன்றி இளம் பெண்ணை விளிப்பது போல் வாடி என்ற பொதுக்கூறு இயல்பாகவே அமைந்திருக்குமெனல் பொருந்தாது.

பாடியைப் போன்று முல்லை நிலச்சிற்றூராகவோ படைவீடாகவோ வாடியும் அமைந்துள்ளதென்று கூறமுடியாது. பல்வேறு காரணங்களின் அடிப்படையில் இவ்வூர்கள் அமைந்துள்ளன.

சில ஊர்கள் தனிமனிதப் பெயர்களின் அடிப்படையில் அமைந்துள்ளன. பிச்சைவாடி கோவிந்தவாடி, குமாரவாடி, வசந்தாவாடி ஆகிய ஊர்களை இவ்வரிசையில் குறிப்பிடலாம். சிறப்புப் பொருந்திய சீர்வாடி என்பது சீவாடி எனக் குறுகியுள்ளது. ஓவிய வேலைப்பாடுடைய இடங்களையுடைய ஊர் சித்திர வாடி எனப்பட்டுள்ளது. கீரைச் செடிகள் மிகுதியாகப் பயிரிடப்பட்ட காரணத்தால் கீரைவாடி எனப்பட்டு, பின்பு அது கீரல் வாடியாகியுள்ளது.

மோகல்வாடி என்ற ஊர்ப்பெயர் மொகல்வாடி என்றமைந்திருக்கவேண்டும். கோல்கொண்டா முகமதியர்கள் இப்பகுதியை ஆண்டுள்ளதால் அவர்தம் இனப்பெயரால் வாடி என்ற ஊர் அமைந்திருக்க வாய்ப்பு உண்டு. அதுபோல் ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் பாதர்வாடி, மதர்வாடி என்ற ஊர்களும் தோன்றியுள்ளன. பொதுக்கூறு தமிழாகவும், முன் ஒட்டு ஆங்கிலமாகவும் சில ஊர்கள் இவ்வாறு அமைந்துள்ளன.

## 26. பட்டடை:

பட்டடை என்ற பொதுக்கூறுடைய ஊர்கள் சில செங்கற்பட்டு மாவட்டத்தில் காணப்படுகின்றன. காஞ்சீபுரம் வட்டத்தில் மட்டுமே பட்டடை என்ற முடிபைப் பெற்ற கிராமங்கள் உள்ளன. திருத்தணி வட்டத்தில் பட்டடா என்ற முடிபைப் பெற்ற ஊர்கள் உள்ளன. பட்டடை என்பதுவே தெலுங்கு மொழி பேசப்படும் பகுதியில் பட்டடா என்று வழங்கப்பட்டிருக்க வேண்டும்.

பட்டடை என்ற சொல் கழுத்தணியைக் குறிக்கும். பட்டடைக் கழனி என்பது இறைப்புப் பாசனத்தால் பயிரிடப்படும் நிலம்[35] என்று கூறப்படுகிறது. பட்டடைக்கழனிகள் நிறைந்த ஊர் பட்டடை என்று பின்னர் அழைக்கப்பட்டிருக்கலாம்.

''ஏற்றக்கால் அல்லது கவலைபோட்டுப் பெரிய அளவில் தனியொருவர் உரிமையோடு பயிரிட்டுள்ள நிலங்கள் பட்டடை எனப்படும்'' [36] என்றும் பட்டடைக்கு விளக்கம் தரப்படுகிறது.

பட்டு என்ற சொல்லினடியாகப் பட்டடை தோன்றியிருக்க வாய்ப்பு உண்டு. பட்டடை என்பது தமிழ்ச்சொல்லாக இருப்பினும் காஞ்சீபுரம் வட்டத்தில் காணப்படும் பட்டடைகளில் பெரும்பாலன பிறமொழிச் சொல்லாகவே உள்ளன.

அசனாபாத் பட்டடை
அஸ்தகிரிப் பட்டடை

என்ற ஊாகள், பிற மாநிலத்தில் உள்ள ஊர்களின் பேருடன் அமைந்த பட்டடைகளாக உளளன. அசனாபாத், அஸ்தகிரி என்பன பிற மாநிலத்தில் உள்ள ஊர்களாகும். ஓட்டப்பட்டடை என்பது ஓட்டர் எனப்படும் சாதியின் பேரில் அமைந்த ஊராகும். வெளிக்கப் பட்டடை என்பது திறந்த வெளியில் அமைந்த கழனி, அதாவது புஞ்செய் நிலம் எனப் பொருள்படும், கள்ளக்கம்பன் பெயரில் கள்ளக்கம்பன் பட்டடை என்ற ஊரும் காணப்படுகிறது.

---

35. Tamil Lexicon – Vol-IV - P. 2419
36. செங்கற்பட்டு மாவட்டம் - சோ. ம. லெ - பக்: 65

திருத்தணியில் காணப்படும் பட்டடாக்களில் அரவாசிப் பட்டடா என்பதுவும் ஒன்று. தெலுங்குபேசும் மக்கள் தமிழரை அரவாளர் என்று கூறுவர்.[37] அரவாசி என்பதும் தமிழரைக் குறிக்கும் சொல்லாக இருத்தல்கூடும். அப்பகுதியில் தமிழர் பயிரிட்ட நிலங்கள் மிகுந்துள்ள ஊர் அரவாசிப்பட்டடா என்று அழைக்கப்பட்டிருக்கலாம்.

சின்ன திம்மராஜு பட்டடா, தளவாய்ப்பட்டடா என்ற ஊர்கள் தனிமனிதர்களின் பெயர்களில் அமைந்த ஊர்களாகும். கால் பட்டடா என்பது, பட்டடை எனப்படும் நிலஅளவில் கால் பங்காகும். அளவின் அடிப்படையில் பெற்ற பெயருடன், அந்நிலம் அமைந்துள்ள திசைப்பெயருக்கு ஏற்ப மேல், கீழ் என்னும் சொல் சேர்ந்து மேல் கால் பட்டடா, கீழ் கால் பட்டடா என்று வழங்குகின்றன.

பட்டடை என்ற பொதுக்கூறு தமிழ்ச் சொல்லாயினும் அப்பொதுக்கூறுடன் முன் ஒட்டுக்களாக இணைந்துள்ள ஊர்கள் பெரும்பாலும் பிற மொழிச் சொற்களாகவே உள்ளன.

27. பாளையம்:

பாளையம் என்ற பொதுக்கூறுடைய சில ஊர்களும் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. சைதாப்பேட்டை, திருத்தணி வட்டங்களில் பாளையம் என்று முடியும் ஊர்கள் காணப்படவில்லை. பொன்னேரி வட்டத்தில் மிகுதியான பாளையங்கள் உள்ளன.

''படை வீரருக்குரிய ஊர் பாளையம் எனப்படும்.[38]''

என்று கூறப்படுகிறது. ஆனால் பாளையம் என்ற பொதுக்கூறில் அமைந்த எல்லா ஊர்களுமே படைவீரர்களுக்கு உரியதாகத் தெரியவில்லை. படைவீரர்களுடன் தொடர்புஇல்லாத ஊர்களும் பாளையங்கள் என்று அழைக்கப்பட்டுள்ளன.

கி. பி. 14ஆம் நூற்றாண்டு முதல் 17 ஆம் நூற்றாண்டின் தொடக்கம்வரை விஜயநகர ஆட்சி இம்மாவட்டப்பகுதியில் நில

---

37. செங்கற்பட்டு மாவட்டம் - சோ. ம. லெ - பக்: 19
38. ஊரும் பேரும்-டாக்டர். ரா.பி. சேதுப்பிள்ளை-பக்:78

வியபோது பல சிற்றரசர்களை இங்கு அவர்கள் நியமித்தார்கள். அவர்களே பாளையக்காரர்கள் எனப்பட்டனர்.[39] அதன் பிறகே பாளையங்கள் இம்மாவட்டத்தில் தோன்றியுள்ளன

செங்கை மாவட்டத்தில் தோன்றியுள்ள பாளையங்களின் முன் ஒட்டுக்களில் பல்வேறு செய்திகள் காணப்படுகின்றன. சில பாளையங்கள் அவ்வூர்களின் பொது அமைப்பைச் சுட்டுகின்றன.

புதுப்பாளையம
மேட்டுப்பாளையம்
பெரியபாளையம்

ஆகிய ஊர்களில் பாளையத்தின் பொது அமைப்புகளைக் காண முடிகிறது. வேடர்களுக்குரிய ஊர் வேடபாளையம் எனப்பட்டுள்ளது. நெல்வயல நிறைந்த பாளையம் நெல்வாய்ப் பாளையமாக மாற்றம் பெற்றுள்ளது. பிறருக்குக் கொடுப்பவர் மிகுந்த ஊர் என்ற பொருளில் ஈவார் பாளையம் என்றிருந்த ஊர் ஈகுவார் பாளையமாக மாறியுள்ளது. செல்வார் செல்குவார் என்பது போல் இவ்வூர் மாற்றம் பெற்றுள்ளது.

வீரர்கள் எருமைகளை வெட்டிக் கடவுளர்க்குப் பலியிட்டிருக்கலாம். அந்நிகழ்ச்சி நடைபெற்ற ஊர் எருமை வெட்டிபாளையம் என்று கூறப்பட்டிருக்கும். அப்பழைய ஊருக்குப்பின் புதிதாக வேறோர் ஊர் தோன்றிருக்கும். பழையஊர் 'பழைய எருமை வெட்டி பாளையம்' என்றும் 'புதிய ஊர் புதிய எருமை வெட்டி பாளையம்' என்றும் பின்பு அழைக்கப்பட்டுள்ளன.

'பிளேஸ் பாளையம்' என்று ஆங்கிலப் பெயர் வருமாறும் ஓர் ஊர் அமைந்துள்ளது. ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் இவ்வூர் தோன்றியிருக்க வேண்டும். முல்லாப்பாளையம். சென்றான் பாளையம் என்ற பெயர்களிலும் இரண்டு ஊர்கள் உள்ளன. தனிமனிதப் பெயர்களில் இவ்வூர்கள் தோன்றியிருக்கவேண்டும்.

பாளையம் என்ற பொதுக்கூறுடைய ஊர்களில் பெரும்பாலன தமிழ்ப்பெயர்கள் உடையனவாக உள்ளன.

---

39. செங்கற்பட்டு மாவட்டம் - சோ. ம. லெ - பக்: 24

## 28 வாய் :

வாய் என்ற பொதுக்கூறையுடைய சில ஊர்களும் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. சில வட்டங்களிலேயே வாய் என்று முடியும் ஊர்கள் உள்ளன.

அலைவாய், கால்வாய் என்று கூறும் போது வாய் என்ற சொல் குறிக்கும் பொருள் வேறு. ஆனால் இங்கு ஊர்ப்பெயர்களில் இடம் பெற்றுள்ள வாய் என்ற சொல் முன்னர்க் குறிப்பிட்ட பொருளினின்றும் வேறுபட்டுள்ளது. வாய என்ற பொதுக்கூறினுக்கு முன் ஒட்டுகளாக அமைந்த பெயர்களை நோக்கினால் முன்னர்க் குறிப்பிட்ட பொருள் பொருந்துவதாகத் தெரியவில்லை.

இம்மாவட்டத்தில் வாய் என்று முடியுமாறு அமைந்த ஊர்கள் பதினொன்று. அதில் ஆறு ஊர்கள் நெல்வாய் என்ற பெயரைப் பெற்றுள்ளன. அலைவாய், கால்வாய் என்பது போன்று நெல்வாயும் அமைந்து பொருள் புலப்படுத்தாது. எனவே, நெல் வயல் என்பதுவே நெல்வாய் என்று மாற்றம் பெற்றிருக்கும் நெல் வயல் பாளையம் நெல்வாய்ப் பாளையமாக மாறியது. இதற்கு முன் எடுத்துக்காட்டப்பட்டது. அது போன்றே வயல் என்பது வாய் என்று காலப்போக்கில் மாறியுள்ளது.

கற்பாங்கான வயல் கல்வாய் என்றும், ஏரிக்கரையில் உள்ள வயல் ஏரிவாய் என்றும், எருக்கஞ்செடிகள் முளைத்தவயல் எருக்கவாய் என்றும், தேரோடும் வீதியையடுத்த வயல் தேர்வாய் என்றும் அழைக்கப்பட்டுள்ளன. புலிவாய் என்ற ஊர் புலிக்குகையையடுத்த வயல் பகுதியில் அமைந்த ஊரைக் குறிக்கும்.

தெலுங்கு பேசப்படும் பகுதியில் வாய் என்று முடியும் ஊர்கள் ஏதும் இல்லாதிருப்பதுடன், இருக்கும் ஊர்கள் அனைத்தும் தமிழ்ப்பெயர்களாகவே உள்ளன.

## 29. வேடு :

வேடு என்ற பொதுக்கூறுடைய சில பெயர்கள் செங்கை மாவட்டத்தில் உள்ளன. மதுராந்தகம் வட்டத்தைத் தவிர பிற வட்டங்களில் இவ்வூர்ப் பெயரைக் காணமுடிகிறது.

வேட்டையாடும் தொழில் புரிந்தவர்கள் வேடர்கள் எனப்படுவர். அத்தகைய வேடர்கள் தங்கிய இடங்களே வேடு என்

னும் முடிபைப் பெற்றுள்ளன. வேடர் தங்கிய இடம் 'வேடந் தாங்கல்' எனப்பட்டது. அதுபோல் அவர்கள் வாழ்ந்த இடங்கள் வேடுகளாக விளங்குகின்றன.

இம்மாவட்டத்தில் உள்ள வேடுகளில் சில இயற்கைத் தாவரங்களின் பெயர்களைப் பெற்றுள்ளன.

கொவளவேடு (குவளை வேடு)
தொளவேடு (துளசிவேடு)
தாழவேடு

என்ற இவ்வூர்கள் இயற்கையான தாவரங்கள் முளைத்துள்ள இடங்களாகிய புறநகர்ப்பகுதியில் வேடர்கள் கிராமங்களை அமைத்து வாழ்ந்துள்ளனர் என்பதைப் புலப்படுத்துகின்றன.

வீரங்கிவேடு, காதர்வேடு என்பன தனிமனிதப் பெயர்களால் அமைந்த ஊர்களாகும். காதர் என்ற முசுலிம் பெயர். முசுலிம்களின் செல்வாக்குள்ள காலத்தில் தோன்றிய ஊர் என்பதைக் காட்டுகின்றது. பண்டார இனத்தைச் சேர்ந்த வேடுவர்கள் தங்கிய ஊர் பண்டாரவேடு எனப்பட்டுள்ளது. வேட்டையாடுதல் எல்லா இனத்தவர்க்கும் பொதுவான தொழில். கோயில் பண்டாரங்களில் சிலரும் வேட்டையாடியிருக்கக் கூடும். அதனால் அப்பெயர் தோன்றியுள்ளது.

முத்தவேடு, கதிர்வேடு என்பன ஒளி வீசும் முத்துக்களையணிந்த வேடர்களின் குடியிருப்பு என்ற பொருளில் அமைந்திருக்கவேண்டும். ஏற்கெனவே உள்ள ஊருக்குக்கிழக்கே புதிதாகத் தோன்றிய வேடர் குடியிருப்பு கீழவேடு என்று கூறப்பட்டுள்ளது. மன்னர்வேடு என்பது மன்னவேடாகி (மன்னவேடு தேவதானம் என்றும் ஓர் ஊர் உண்டு,) அது பின்பு மொன்ன வேடு என்று மாற்றம் பெற்றுள்ளது மன்னர்கள் வேட்டையாட வரும்போது தங்கும் இடம் என்று ஆகிப் பின்பு அவ்விடத்தில் வேடர் குடியிருப்பும் தோன்றியிருத்தல் கூடும்.

வேடு என்ற பொதுக்கூறுடைய ஊர்ப்பெயர்கள் சொல்ளவில் சில மாற்றங்களைப் பெற்றிருப்பினும் அனைத்து ஊர்களும் தமிழ்ப் பெயர்களாகவே அமைந்துள்ளன.

**30. பள்ளம் :**

பள்ளம் என்ற பொதுக்கூறுடைய சில ஊர்கள் இம்மாவட்டத்தில் உள்ளன. மதுராந்தகம், ஸ்ரீபெரும்புதூர், திருத்தணி

ஆகிய வட்டங்களைத் தவிர பிறவட்டங்களில் பள்ளம் என்று முடியும் ஊர்கள் காணப்படுகின்றன.

நில அமைப்பின் அடிப்படையில் பள்ளம் எனப்படும் ஊர்கள் தோன்றியுள்ளன. பள்ளமாக உள்ள இடங்களில் தோன்றிய புது ஊர்கள் பள்ளங்கள் என்று கூறப்பட்டுள்ளன. பள்ளம் என்பது முன் ஒட்டாகச் சில பொதுக்கூறுகளுக்கு அமைந்தது போல் அதுவே பொதுக்கூறாகவும் அமைந்துள்ளது.

பள்ளங்கள் பல்வேறு காரணங்களுடன் தோன்றியுள்ளன. ஏற்கெனவே உள்ள ஊருக்கு அருகில் புதிதாகத் தோன்றிய பள்ளம் எனப்படும் ஊர், பழைய ஊரின் பெயரையும் தன்னுடன் பெற்றுள்ளது. 'கருங்குழி பள்ளம்' என்ற ஊர் இதற்கு எடுத்துக் காட்டு.

மரங்களின் பெயரிலும், பறவை, விலங்கின் பெயரிலும் சில பள்ளம் எனப்படும் ஊர்கள் தோன்றியுள்ளன.

கமுகம்பள்ளம்
மாம்பள்ளம்

என்பன மரங்களின் பெயரில் தோன்றிய ஊர்கள். இங்குக் குறிப்பிடப்பட்ட மரங்கள் அப்பகுதியில் மிகுந்துள்ளதால் அப்பெயரில் ஊர்கள் தோன்றியிருக்கும்.

காகாபள்ளம்
குதிரைப்பள்ளம்

என்பன பறவை, விலங்கின் பெயர் பெற்ற பள்ளம் எனப்படும் ஊர்கள். பறவைகள் மிகுந்துள்ள மரங்கள் நிறைந்த பகுதியாகவும், குதிரைலாயம் உள்ள இடமாகவும் இவ்வூர்கள் தோன்றிய இடங்கள் முன்பு இருந்திருத்தல் வேண்டும்.

நங்கையொருத்தியின் பேரில் தோன்றிய நங்கைப்பள்ளம் நங்கபள்ளமாக மாறியுள்ளது. யாரேனும் ஒரு ஆங்கிலத் துரையின் பேரில் தோன்றிய துரைப்பள்ளம் துராப்பள்ளமாக மாற்றம் பெற்றுள்ளது. நங்கநல்லூர், துரப்பாக்கம் ஆகிய ஊர்கள் போல் இவ்வூர்களும் மாற்றம் பெற்றுள்ளன. கோயிலின் அருகில் தோன்றிய கோயில் பள்ளம் கோடிப் பள்ளமாகியுள்ளது. அமிர்தப்

பள்ளம் எனப்படும் ஊர் எவரேனும் தனிமனிதர் பெயரில் தோன்றியிருக்க வேண்டும்.

பள்ளம் என்ற பொதுக் கூறையுடைய எல்லா ஊர்ப்பெயர்களும் தமிழ்ப்பெயர்களாகவே உள்ளது குறிப்பிடத்தக்கது.

31. **சமுத்திரம் :**

சமுத்திரம் எனப்படும் பொதுக்கூறைப் பெற்றுள்ள சில ஊர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. பெரும்பாலான வட்டங்களில் இப்பெயருள்ள ஊர்கள் காணப்படவில்லை. திருத்தணி வட்டத்தில் மட்டுமே மிகுதியாக உள்ளன.

"தமிழ் நாட்டு மன்னரும் செல்வரும் உண்டாக்கிய பெரிய ஏரிகள் கடல் என்றும், சமுத்திரம் என்றும் வாரிதி என்றும் புனைந்துரைக்கப் பெற்றன"[40] என்ற கருத்து ஏரிகள் சமுத்திரமாக எவ்வாறு உருவாகியுள்ளன என்பதைக் காட்டுகிறது. அப்படிப்பட்ட சமுத்திரங்களைச் சார்ந்து தோன்றிய ஊர்களும் அப்பெயர்களையே பெற்றுள்ளன.

திருத்தணி வட்டத்தில் காணப்படும் சமுத்திரங்கள் தனிமனிதர்களின் பெயரில் அமைந்தவையாக உள்ளன. அப்பகுதியில் வாழ்ந்த அரசர், அல்லது செல்வர் பெயரால் இவை அமைந்திருக்க வேண்டும்.

கிருஷ்ணசமுத்திரம்
இராமசமுத்திரம்
சிங்கசமுத்திரம்

என்பன அவ்வூர்கள். நாராயண சமுத்திர அக்ரகாரம் என்றும் ஓர் ஊர் இவ்வட்டத்தில் உள்ளது. கிருஷ்ணசமுத்திரம் என்ற பெயரில் இரண்டு ஊர்கள் காணப்படுகின்றன.

திம்ம சமுத்திரம் என்ற பெயரில் காணப்படும் ஊரும் திம்மராசன் எனப்படும் மன்னன் பெயரில் அமைந்ததாகவே காணப்படுகிறது. ஒப சமுத்திரம் என்ற ஊர்ப்பெயர் உப சமுத்திரம் என்று இருத்தல் வேண்டும். ஏற்கெனவே இயல்பாக, உண்மையான

---

40. ஊரும் பேரும் - டாக்டர். ரா. பி. சேதுப்பிள்ளை-பக்:20

சமுத்திரம் (கடல்) ஒன்று உள்ளது. செயற்கையாகத் தோன்றிய இச்சமுத்திரம் இயற்கைச் சமுத்திரத்திற்கு உப(துணை) சமுத்திரமாகும் என்ற பொருளில் அமைந்திருக்கும். வசவ சமுத்திரம் என்பது வளவசமுத்திரம் என்று இருத்தல் வேண்டும். இப்பகுதியை வளவர்களாகிய சோழர்கள் ஆண்டிருப்பதுடன் பல ஏரிகளையும் அவர்கள் வெட்டியுள்ளதையறியலாம்.

அழகாக அமைந்துள்ள காரணம் பற்றி அழகு சமுத்திரம் என்ற ஓர் ஊரும் தோன்றியுள்ளது. ஊர்கள் தோன்றக் காரணமான சமுத்திரங்கள் அனைத்தும் இன்று இல்லாவிடினும் சமுத்திரங்களைச் சார்ந்து தோன்றிய ஊர்கள் இன்றும் உள்ளன. இப்பொதுக்கூறு வடசொல்லில் அமைந்தது. அதனால் பெரும்பாலான ஊர்களும் அப்படியே அமைந்துள்ளன.

32. அக்ரகாரம்:

இம்மாவட்டத்தில் காணப்படும் ஊர்ப்பெயர்களில் அக்ரகாரம் என்னும் முடிபைப் பெற்றனவும் சில உண்டு. ஸ்ரீபெரும்புதூர், திருவள்ளூர், திருத்தணி வட்டங்களில் மட்டுமே இவ்வூர்கள் காணப்படுகின்றன.

வேதம் ஓதுவதற்காகவும், வடமொழியை இப்பகுதியில் பரப்புவதற்காகவும் அந்தணர்கள் வரவழைக்கப்பட்டுள்ளனர். அவர்கள் தங்குவதற்காகப் புதிதாக உண்டாக்கப்பட்ட ஊர்கள் அக்ரகாரம் எனப்பட்டுள்ளது. சில ஊர்களில் அந்தணர்கள் தங்கும் தெருக்கள் அக்ரகாரமாக இன்றும் அழைக்கப்படுகின்றன.

இம்மாவட்டத்தின் பிற வட்டங்களில் அக்ரகாரங்கள் தோன்றமாலிருப்பது அங்கெல்லாம் பிராமணர்கள் மிகுந்த செல்வாக்குப் பெறவில்லை என்பதை உணர்த்துகின்றது. அக்ரகாரங்கள் எனப்படும் ஊர்கள் எப் பகுதியில் உள்ளனவோ அப்பகுதியில் தான் இன்றும் அவர்கள் அதிக அளவில் வாழ்ந்து வருகின்றனர்

பெரும்பாலான ஊர்கள் அக்ரக்ாரம் என்ற பொதுக்கூறு மட்டுமே பெற்றுள்ளன. திருத்தணி வட்டத்தில் உள்ள அக்ரகாரங்கள் மட்டுமே வேறுபட்டுள்ளன. அங்கு காணப்படும் அக்ரகாரங்கள் வேறு பிற ஊர்களின் பெயரை முன் ஒட்டுகளாகப் பெற்றுள்ளன. ஒரு வேளை அவ்வூர்களிலிருந்து அந்தணர்கள் வரவழைக்கப்பட்டனரா என்று ஐயுற வேண்டியுள்ளது.

செங்கல்வபுரம் அக்ரகாரம்
நாகபூடி அக்ரகாரம்
நாராயண சமுத்திர அக்ரகாரம்
நெக்கினியவக்ரகாரம்
இராமாபுர அக்ரகாரம்
சென் களத்தூர் அக்ரகாரம்
செங்கல் புத்தூர் அக்ரகாரம்

என்பன அவ்வூர்கள். ஏற்கெனவே உள்ள ஊர்களுக்கு அருகில் புதிதாகத் தோன்றிய அக்ரகாரங்கள், பழைய ஊர்ப்பெயர்களை முன் ஒட்டுகளாகப் பெற்றுள்ளன. சில இடங்களில் பழைய ஊரும் புதிதாகத் தோன்றிய ஊரும் இன்றும் உள்ளன. எடுத்துக் காட்டாக இராமாபுரம், இராமாபுர அக்ரகாரம் ஆகிய ஊர்களைக் குறிப்பிடலாம். சில இடங்களில் பழைய ஊர் இன்று இல்லை; அவ்வூரைச் சார்ந்து தோன்றிய புது ஊர்களாகிய அக்ரகாரங்களே உள்ளன. சென்களத்தூர், செங்கல் புத்தூர் போன்ற ஊர்கள் இன்று திருத்தணி வட்டத்தில் இல்லை; ஆனால் இவ்வூர்களுடன் தோன்றிய அக்ரகாரங்கள் என்ற ஊர்கள் மட்டும் இன்றும் உள்ளன.

அக்ரகாரம் என்பதைப் போலவே அப்பொதுக்கூறுடன் முன் ஒட்டுகளாக அமைந்த ஊர்களும் வடசொல்லாகவே உள்ளன.

33. பாடி:

பாடி என்னும் பொதுக்கூறுடைய ஊர்கள் சில செங்கை மாவட்டத்தில் காணப்படுகின்றன. ஒரு வட்டத்திற்கு ஓர் ஊர் என்ற நிலையில் பல வட்டங்களில் பாடிகள் காணப்படுகின்றன.

"முல்லை நிலச் சிற்றூராகவும், மன்னன், குறுநிலத்தலைவன் ஆகியோரின் படைவீடு கொண்ட இடமாகவும், பெருநகரமாகவும் பொருள் கொள்ளப்படுகிறது"[41] என்று பாடிக்கு விளக்கம் தரப்படுகிறது. பெரும்பாலும் முல்லை நிலச் சிற்றூர்களே பாடிகள் என்று கூறப்பட்டுள்ளன. அந்நிலையினையே செங்கை மாவட்ட ஊர்ப்பெயர்களிலும் காண முடிகிறது.

---

41. தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்கள் - மெய். சந்திரசேகரன்-பக்: 72

'திருவாயர் பாடி'

என்ற ஊர்ப்பெயர், முல்லை நிலத்தில் வாழும் மக்களின் உறைவிடமாக உள்ளது என்பதை எடுத்துக் காட்டுகிறது. ஆயர்களின் உறைவிடங்களே பாடிகள் எனப்படும் என்பதைப் பெரு வழக்காக உள்ள இச்சொற்றொடர் ஆட்சியே புலப்படுத்தும்.

வீரத்திற்கு உறைவிடமான படைவீடாகவும் பாடிகள் உண்டு என்பதையும் செங்கை மாவட்ட ஊர்ப்பெயர் எடுத்துக் காட்டுகிறது.

'வீரம் பாடி'

என்ற ஊர்ப்பெயரிலிருந்து அவ்வூர் ஓர் படைவீடாகவே விளங்கியுள்ளது என்பதையுணர முடிகிறது. மரப்பெயர்களை முன் ஒட்டுகளாகப் பெற்றுள்ள ஊர்கள் பெரும்பாலும் ஆயர்பாடிகளாகவே உள்ளன.

கடம்பாடி (கடம்பு பாடி)
ஈச்சம்பாடி
காஞ்சிபாடி
சின்னாலம்பாடி

ஆகிய மரப்பெயர்களுடன் அமைந்த ஊர்ப்பெயர்களை நோக்கினால் அம்மரங்கள் முல்லை நிலத்து மரங்களாகவே உள்ளதால் ஊர்களும் அப்படியே அமையும் என்பது புலனாகும். சிறிய ஆலமரத்தைச் சார்ந்துள்ள ஊர் சின்ன ஆல்பாடி என்று அமைந்து பின்னர் சின்னாலம்பாடியாக மாறியுள்ளது.

மருத்துவன்பாடி என்றுள்ள ஊர் யாரேனும் ஓர் மருத்துவனின் பேரில் தோன்றியிருத்தல் வேண்டும். ராள்ளபாடி என்று தெலுங்கு மொழிப் பெயரில் அமைந்த ஓர் ஊரும், சிங்கில்பாடி என்ற ஆங்கிலப் பெயர் பெற்ற ஊரும், கூட இம்மாவட்டத்தில் உள்ளன. பாடி என்ற பொதுக்கூறு மட்டுமே பெற்ற ஓர் ஊரும் காணப்படுகிறது. பாடி என்பது தமிழ்ப் பெயராக அமைந்தாலும் முன் உள்ள ஊர்ப்பெயர்களில் பிற மொழிகளையும் காணமுடிகிறது.

**34 நகரம் ;**

நகரம் என்ற பொதுக்கூறுடைய சில ஊர்களும் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. நகராட்சி அல்லது பெரு நகரமாக

உள்ள ஊர்கள் எதுவும் நகரம் என்று குறிப்பிடப்படவில்லை. சிற்றூர்களும் சிறிது வசதி வாய்ப்புகள் உள்ள ஊர்களுமே நகரம், நகர் என்று கூறப்பட்டுள்ளன.

"சிறந்த ஊர்கள் நகரம் என்னும் பெயரால் வழங்கும். நாட்டின் தலைமை சான்ற நகரம் தலைநகரம் எனப்படும். முன்னாளில் ஊர் என்றும் பட்டி என்றும் வழங்கிய சில இடங்கள் பிற்காலத்தில் சிறப்புற்று நகரங்களாயின."[42]

செங்கை மாவட்டத்தைப் பொறுத்தவரையில் பெரும்பாலும் சிற்றூர்களே நகரங்கள் எனப்படுவதால் முற்கால நிலையிலேயே இன்றும் உள்ளன என்று தான் கூற வேண்டும்.

மக்கட்தொகை, வீடுகளின் எண்ணிக்கை என்ற அடிப்படையில் நகரம் எனப்படும் ஊர்கள், பெருநகர் என்றும் சிறுநகர் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன கிளி என்ற பறவைகள் மிகுந்து காணப்பட்டதாலோ என்னவோ கிளியா நகர் என்னும் பெயரையும் ஓர் ஊர் பெற்றுள்ளது. சிறு நகர் என்பது போல் இளநகர் என்ற பிறிதோர் ஊரும் உள்ளது. அது தற்போது எளநகர் என்று மருவியுள்ளது.

சூரியன் பெயரால் அமைந்த சூரியனகரம் என்ற ஓர் ஊரும் காணப்படுகிறது. சூரிய வழிபாடு நடைபெற்ற சிற்றூராக இவ்வூர் இருத்தல் கூடும். கதன நகரம் என்ற பிறிதோர் ஊர் உள்ளது. கதலி நகர் என்பது பின்னர் கதனநகராகியுள்ளது.

உசேன் என்ற முசுலிம் பெயரில் உசேன் நகரம் என்ற ஊரும், அட்சன் என்ற ஆங்கிலேயர் பெயரில் அட்சன் நகரம் என்ற ஊரும் காணப்படுகிறது. முசுலிம், ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் இவ்வூர்கள் தோன்றியுள்ளன.

## 35. கழனி:

செங்கை மாவட்டத்தில் கழனி என்ற பொதுக்கூறுடைய சில ஊர்கள் காணப்படுகின்றன. சில வட்டங்களிலேயே இப்பொதுக்கூறுடைய ஊர்கள் காணப்படுவதால் கழனிகளின் பெயரில் ஊர்கள் அமையும் வழக்குக்குறைவு என்று தெரிகிறது.

---

42. ஊரும் பேரும்- டாக்டர். ரா. பி. சேதுப்பிள்ளை-பக்: 49

கழனிகள் என்ற பெயரில் புதிதாக இரண்டு ஊர்கள் தோன்றியபோது, தோன்றிய ஊர்கள் அமைந்துள்ள இடங்களுக்கு ஏற்ப மேலக்கழனி என்றும், கீழக்கழனி என்றும் பெயர்கள் அமைந்துள்ளன. தண்டல் என்பது வரிவசூலிப்பது என்ற பொருள்படும். தண்டல் நாயகம் என்பது வரி வசூலிக்கும் அலுவலர் தொழிற் பெயர். அத்தொழில் புரிந்தவருக்குத் தானமாக வழங்கப்பட்ட கழனி 'தண்டல் கழனி' எனப்பட்டுள்ளது. இப்பெயரில் இரண்டு ஊர்கள் உள்ளன. அது போல் ஊர்காவல் செய்தவர்க்கு வழங்கப்பட்ட கழனி 'காவல் கழனி' எனப் பட்டுள்ளது.

மாமரம் உள்ள இடத்தில், கரியமண் இருந்திருக்கக்கூடும். இவ்விரண்டின் அடிப்படையில் அமைந்த ஊர் கரியமாங்கழனி எனப்பட்டுள்ளது. அரசங்கழனி என்ற ஊர், அரசமரத்தைச் சார்ந்துள்ள கழனி என்ற அடிப்படையில் தோன்றியுள்ளது. பட்டருக்கு வழங்கப்பட்ட ஊர் பட்டர் கழனி எனப்பட்டு, பின்னர் பட்ரகழனி என மருவியுள்ளது. அதுபோல், கோயிலுக்குத் தருமமாக விடப்பட்ட கட்டளைக் கழனி என்பது கட்டகழனி என்று மருவியுள்ளது.

பெரும்பாலும் பிறருக்குத் தானமாக வழங்கப்பட்ட கழனிகளின் அடிப்படையிலேயே இவ்வூர்கள் தோன்றியுள்ளன.

## 36. கோட்டை:

கோட்டை என்ற பொதுக்கூறுடைய ஊர்கள் சிலவும் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. பெரும்பாலும் அப்பொதுக் கூறு உணர்த்தும் பொருளுக்கு ஏற்பவே ஊர்களின் பெயர்களும் அமைந்துள்ளன.

"கோட்டை என்பது அரணைக் குறிப்பதற்குப் பெரும்பான்மையாக எங்கும் வழங்கும் சொல்லாகும்".[43] அரசர்கள் ஆண்ட பகுதியாக இம்மாவட்டம் உள்ளதால் அரண்கள் பல இப்பகுதியில் அமைந்திருக்க வாய்ப்புண்டு.

புலியரணங் கோட்டை

என்ற ஊர்ப்பெயர் இவ்வுண்மையை உறுதிப்படுத்துகிறது. இது போல் கோட்டைகள் என்று அமைந்துள்ள பிற ஊர்களும் அரண்

43. ஊரும்பேரும்-டாக்டர். ரா.பி சேதுப்பிள்ளை-பக்: 29

கள் உள்ள இடங்களாகவே உள்ளன. அவ்வரண்கள் காடு, ஆறு, ஊற்று போன்ற இடங்களில் அமைந்துள்ளன.

இருங்காட்டுக் கோட்டை
வெள்ளாத்துக் கோட்டை
ஊத்துக் கோட்டை

என்ற ஊர்ப்பெயர்கள் காடு, ஆறு, ஊற்று ஆகியவற்றின் அடிப்படையில் உள்ளதையுணரலாம். வல்லம் என்ற சொல்லும் அரணுடைய ஊரையே குறிக்கும்.[44]

வல்லக் கோட்டை

என்ற ஊர்ப்பெயர் இவ்வுண்மையை நிலை நாட்டுகிறது. கண்ணன் என்ற பெயரில் கண்ணன் கோட்டை என்ற ஊர் உள்ளது. இது அரசன் பெயரா அல்லது இறைவனைக் குறிக்கும் பெயரா என்பது விளங்கவில்லை. புத்திரங்கோட்டை என்ற பெயருடைய ஊரும் காணப்படுகிறது புத்திரன் என்பது மகன் என்ற பொருள் தரும் சொல். யாரேனும் அவ்வடிப்படையில் கோட்டையை அமைத்துப் பின்பு அது ஊர்ப் பெயராகியிருக்கலாம்.

37. கரை :

கரை என்ற பொதுக்கூறுடைய சில ஊர்களும் இம்மாவட்டத்தில் உள்ளன. சில வட்டங்களில் மட்டுமே இவ்வூர் காணப்படுவதால் கரையின் அடிப்படையில் ஊர்கள் குறைவாகவே அமையும் என்பது விளங்குகிறது.

கரை என்ற சொல் பொதுவாக எல்லை என்ற பொருளைத் தரும். கடற்கரையில் அமைந்துள்ள சில ஊர்கள் கரை என்ற முடிபைப்பெற்றுள்ளன. சில பகுதிகளில் கரை என்ற சொல் வரப்பு என்ற பொருளைத் தருமாறும் அமைந்துள்ளது. இம்மூன்று நிலைகளையும் இம்மாவட்டத்தில் காணமுடிகிறது.

கிடங்கு, இஞ்சி (மதில்) போன்றவற்றைச் சார்ந்துள்ள கரைகளின் அடிப்படையில் அமைந்துள்ள ஊர்களை இங்குக் காணலாம்.

---

44. ஊரும் பேரும் - டாக்டர். ரா.பி. சேதுப்பிள்ளை - பக்:78

கிடங்கரை, அமிஞ்சிக்கரை என்பனவே அவ்வூர்கள். அம் இஞ்சி கரை என்பது அமிஞ்சிக்கரை என்று அமைந்துள்ளது. அமைநதகரை என்பது அமிஞ்சிக்கரையாக மாறியுள்ளது என்ற கருத்தும் உண்டு.

கரைகளின் எல்லைகளை அடைப்படையாகக் கொண்டும் சில ஊர்கள் அமைந்துள்ளன.

வடகரை, நடுவக்கரை, செங்கரை (தென்கரை) ஆகிய ஊர்கள் சான்றுகளாக உள்ளன. தென்கரை என்பதுவே செங்கரையாக மருவியுள்ளது. செம்மண் படிந்த கரைப்பகுதி செங்கரை என்பது பொருத்தமாக அமையாது. நீண்ட கரையின் நடுவில் அமைந்த ஊர் நடுவக்கரை எனப்பட்டுள்ளது.

நின்ற கரை என்பது நின்னக் கரையாக மாறியுள்ளது. இங்கு கரை என்பது வரப்பு என்ற பொருளில் அமைந்து, உயர்ந்து நின்ற கரை எனப்பட்டுள்ளது. உயர் கரை என்பதுவே மாற்றமடைந்து ஒழுகரை என்ற ஊர்ப் பெயராகியுள்ளது.

38 வாடா :

வாடா என்ற வித்தியாசமான பொதுக்கூடைய சில ஊர்களும் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. திருத்தணி, பொன்னேரி வட்டங்களில் மட்டுமே இப்பொதுக்கூறுடைய ஊர்கள் உள்ளன.

பாடி என்பது எவ்வாறு வாடியாக மாறியது என்பது முன்னர் விளக்கப்பட்டது. அந்த வாடி என்பதுவே வாடா என்று மாறியிருக்க வேண்டும். பட்டடை என்பது தெலுங்கு மொழி பேசப்படும் பகுதியில் பட்டடா என்று கூறப்பட்டது போன்று வாடி என்பது அப்பகுதியில் வாடா என்று தெலுங்கு மொழி பேசப்படுபவர்களால் அழைக்கப்பட்டிருக்கலாம்.

பல்லவ வாடா என்பது பல்லவாடா என்று குறுகியுள்ளது. சாமந்தி வாடா என்பது சாமந்த வாடா என்று மாறியுள்ளது. சிறுவாடா என்று ஓர் ஊர் உள்ளது அப்பெயரே சிவ்வாடா என்று மருவியும் ஊர்ப்பெயர்களாக அமைந்துள்ளன.

மயில் ஆர் வாடா என்பது மைலார்வாடா என்று அழைக்கப்படுகிறது. மலைப்பகுதியில் உள்ள ஊராகையால் அங்கு

மயில்கள் மிகுந்திருக்க வாய்ப்பு உண்டு. கீரிவாடா என்பது கிரி வாடா என்பதன் திரிபாக இருக்கவேண்டும். கிரி என்பது சிறு குன்றைக் குறிக்கும். கீரிப்பிள்ளையைச் சுட்டுமாறும் அப்பெயர் அமைந்திருக்கலாம்.

39 வேலி :

வேலி என்ற பொதுக்கூறுடைய சில ஊர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. வேலி என்ற சொல் நிலஅளவைக் குறிப்பதுடன் ஒரு இடத்தைச் சுற்றி வரம்பாகப் போடப்படும் தடுப்பினையும் குறிக்கும். முள்வேலி, கம்பிவேலி போன்றவற்றைக் கொல்லைகளில் காணலாம். பெரும்பாலும் இந்த அடிப்படையிலேயே இம்மாவட்ட ஊர்ப்பெயர்கள் அமைந்துள்ளன.

வேலி என்று முடியும் ஏழு ஊர்ப்பெயர்களில் ஐந்து பெயர்கள் நெய்வேலி என்னும் பெயராகவே உள்ளன. நெல் என்பதுவே நெய் என்று மாறியுள்ளது. நெல்லாடிபாக்கம் என்பது நெய்யாடிபாக்கம் என்று மாறியுள்ளது போலவே நெல் வேலி என்பது நெய்வேலியாகியுள்ளது. நெல்விளையும் வயலைச் சுற்றிப்போடப்பட்ட வேலி என்று இவ்வூரின் பெயர்ப்பொருள் அமையும்.

பழமரங்களைச் சுற்றிப் போடப்பட்ட வேலி என்ற பொருளில் பழவேலி என்ற ஊர்ப்பெயர் அமைந்துள்ளது. பேரளவுள்ள இடத்தைச்சுற்றிப் போடப்பட்ட வேலி அல்லது பெரியதாகப் போடப்பட்ட வேலி என்ற பொருளில் பெருவேலி என்ற ஊர்ப்பெயர் அமைந்திருக்க வேண்டும்.

40 பேர் :

பேர் என்ற பொதுக்கூறுடைய சில ஊர்கள் இம்மாவட்டத்தில் உள்ளன. இப்பொதுக்கூறு பிற பொதுக்கூறுகளிலிருந்து வேறுபட்டுக் காணப்படுகிறது.

கானப்பேரெயில் என்ற ஓர் ஊர் சங்க இலக்கியத்தில் காணப்படுகிறது. காட்டில், பெருமைக்குரிய கோட்டையை உடைய இடம் என்று அவ்வூர் குறிப்பிடப்பட்டிருக்க வேண்டும். அப்படிப் பார்த்தால் பேர் என்ற பொதுக்கூறு பெருமை என்பதைக் குறிக்கும்.

செல்வத்தால் பெருமை பெற்ற ஊர் திருப்பேர் என்றும், மிகு சிறப்பிற்குரிய ஊர் பெரும் பேர் என்றும், கன்னிகைப் பெண்ணொருத்தியால் பெருமை பெற்ற ஊர் கன்னிகைப்பேர் என்றும், நீர் வளத்தால் பெருமை பெற்ற ஊர் நீர்பேர் என்றும், புதிதாகத் தோன்றிய, பெருமைக்குரிய ஊர் புதுப்பேர் என்றும், மொகலாயர் பெருமை தோன்ற அமைந்த ஊர் மொகல்பேர் (மொகப்பேர் என்றுள்ளது) என்றும் அமைந்துள்ளன. பேர் என்ற பொதுக்கூறே பேரி எனவும் மருவியிருக்க வேண்டும்.

## 41. குழி:

குழி என்ற பொதுக்கூறையுடைய சில ஊர்களும் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. குழி என்பது நில அளவையைக் குறிக்கும். மண்ணில் வெட்டப்படும் ஆழமான பள்ளங்களும் குழிகள் எனப்படும். அப்படிப்பட்ட குழிகள் பெரிதாகிக் குட்டைகள் ஆவதும் உண்டு.

இம்மாவட்ட ஊர்ப்பெயர்களில் அமைந்துள்ள குழிகள் மேற்கண்ட இரு நிலைகளுக்கும் பொருந்துமாறு உள்ளன. மண் வகையின் அடிப்படையில், கருமண் நிறைந்த பகுதியில் அமைந்த ஊர் கருங்குழி என்றும், வெண்மணல் நிறைந்த பகுதியில் அமைந்த ஊர் வெங்குழி என்றும் அழைக்கப்பட்டுள்ளன. கருங்குழியின் பழைய பெயர் குறுங்கோழியூர் என்று கூறி, உத்திரமேரூருக்கு அருகில் உள்ள பெருங்கோழியூர் போன்று இவ்வூர் அமைந்துள்ளது என்றும் கூறப்படுகிறது.[45] இவ்விளக்கம் பொருந்துமாறு அமையவில்லை. கருங்குழியின் பழைய பெயர் குறுங்கோழியூர் எனின் வெங்குழியின் பழைய பெயரும் வேறா என்று ஐயுறத் தோன்றும். இம்மாவட்டத்தில் பல ஊர்ப்பெயர்கள் வடக்கு—தெற்கு எனவும், கீழ்—மேல் எனவும், பழைய—புதிய எனவும், கருமை—வெண்மை எனவும் அமைந்துள்ளதைக் காணலாம். அவை போன்றே கருங்குழி—வெங்குழிகளும் அமைந்துள்ளன. 'கருங்குழி பள்ளம்' என்ற பிறிதோர் ஊரும் இம்மாவட்டத்தில் இருப்பது இவ்வூர்ப்பெயர் கருங்குழியே என்பதை உறுதிப்படுத்துகிறது.

திருப்புள்குழி என்ற ஊர் திருப்புண்குழி எனப்பட்டுப் பின்னர் திருப்புக்குழி என்றாகியுள்ளது. புள் (பறவை) இறைவனை வழி

45. செங்கற்பட்டு மாவட்டம் - சோ. ம. லெ - பக்: 194

பட்ட தலம் இது. திருமங்கையாழ்வார் மங்களா சாசனம் பெற்ற ஊர் இது. அல்லிமலர்கள் நிறைந்த ஊர்ப்பகுதி அல்லிக்குழி எனப் படுகிறது. அந்தணருக்குத் தரப்பட்ட ஊர்ப்பகுதி பாப்பான்குழி என்று அழைக்கப்படுகிறது. அப்பெயரில் இரண்டு ஊர்கள் இம்மா வட்டத்தில் உள்ளன.

## 42. கால்:

கால் என்ற பொதுக்கூறுடைய சில ஊர்களும் இம்மாவட்டத் தில் உள்ளன. கால் என்ற சொல் இடம் என்ற பொருளை உணர்த்துவதுடன், தண்ணீர் செல்லும் வழி என்ற பொருளை யும் உணர்த்தும். நாற்றங்கால் என்ற சொல் நாற்று பயிரிடப் படும் இடம் என்ற பொருள் தரும். வாய்க்கால் என்பது தண்ணீர் செல்லும் வழியைக் குறிக்கும்.

கரசங்கால் என்ற பெயரில் இரண்டு ஊர்கள் இம்மா வட்டத்தில் உள்ளன. கரிசல் மண் நிறைந்த பகுதி என்ற பொருளில் கரிசல் கால் என்றிருக்க வேண்டிய ஊர் கரசங்காலாக மாறியுள்ளது. அருங்கால் என்பது அவ்விடத்தின் அருமையைக் குறிக்கும்.

நெடுங்கால், வடகால் என்ற சொற்கள் நீண்ட பகுதியுள்ள இடம், ஊரின் வடபகுதியில் உள்ள இடம் என்ற பொருளிலும் அமையலாம்; நெடுந்தூரம் ஓடும் வாய்க்கால், ஊரின் வடபகுதி யில் ஓடும் வாய்க்கால் என்ற பொருளிலும் அமையலாம். ஏரிகளில் நீர் நிரம்பும்போது, அதனால் பக்கத்து ஊருக்கு இடையூறு நேரு மெனின் ஏரியின் நீரை வேறு வழியில் செலுத்துவார்கள். அப்படிப்பட்ட சமயங்களில் வெட்டப்படும் வாய்க்கால் மறுகால், புறகால் என்றெல்லாம் கூறப்படும். அந்தப்புறகால், புரகால் என்று மாறி ஓர் ஊர்ப்பெயராக அமைந்துள்ளது. நீரோடும் வாய்க்கால் களைச் சார்ந்து அமைந்த ஊரகள் கால்கள் எனப்பட்டுள்ளன.

## 43. கோயில் :

கோயில், கோவில் என்ற பொதுக்கூறுகளையுடைய ஊர்கள் சில இம்மாவட்டத்தில் உள்ளன. சிறப்புமிக்க கோயில்கள் உள்ள இடமாக அவ்வூர்கள் விளங்குவதால் கோயிலில உள்ள இறை வன் பெயராலேயே அவ்வூர்களும் அழைக்கப்படுகின்றன. அந் நிலையைத்தான் இம்மாவட்ட ஊர்ப் பெயர்களில் காணமுடி கிறது.

சிங்கப்பெருமாள் கோயில் என்ற ஊர் நரசிங்கமாக வெளிப்பட்ட நாராயணனின் பெயரில் அமைந்தது. ஆனை, சிவபெருமானை வழிபட்ட இடம் திருவானைக் கோயில் எனப்படுகிறது. முப்புரம் எரித்த பரமசிவனின் கோயிலான திரிபுரக்கோயில் திருபுரக் கோயிலாகத் திரிந்துள்ளது. செல்லப்பிள்ளையார் பேரிலும், இராமன் பேரிலும் கோயில்கள் அமைந்துள்ள ஊர்களும் அக்கோயில்களின் பெயரையே பெற்றுள்ளன.

உடையவர் கோயில் என்று பொதுவாகக் குறிப்பிடப்பட்ட ஓர் ஊரும் உள்ளது. உலகைத்தன்னுள் கொண்டவர் என்ற புராணக்குறிப்பின் அடிப்படையில் பார்த்தால் அவ்வூர் திருமால் திருத்தலமாகவே இருத்தல் வேண்டும்.

## 44 தண்டரை :

தண்டரை என்ற பொதுக்கூறுடைய சில ஊர்கள் இம்மாவட்டத்தில் உள்ளன. தண்டலை, தண்டலம் என்ற சொற்கள் தண்டரை என்றும் மருவி அழைக்கப்படும் என்று பொதுவாகக் கூறப்படுகிறது. அது பொருத்தமான விளக்கமாகவே அமையினும் தண்டலை எனப்படும் சோலை என்ற இடப் பொருளிலிருந்து தண்டரை எனக் குறிக்கப்படும் இடங்கள் சிறிது வேறுபடவே செய்கின்றன. அச்சொல்லமைப்பும் பொருள் வேறுபாட்டைப் புலப்படுத்தும்.

தண் தரை என்பது தண்டரை எனப்படுகிறது. குளிர்ந்த இடப்பகுதி சோலையாகத்தான் இருக்கவேண்டும் என்பதில்லை. நீர் நிலைகளைச் சார்ந்துள்ள பகுதிகளாகவும் இருக்கலாம்.

இம்மாவட்டத்தில் காணப்படும் தண்டரைகள் அனைத்தும் முன் ஒட்டுகள் இல்லாமல் பொதுக்கூறுடனேயே அமைந்துள்ளன. மேல், கீழ் என்ற பாகுபாடு மட்டும் காணப்படுகிறது.

## 45. பட்டணம் :

பட்டணம் என்ற பொதுக்கூறுடைய சில ஊர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. செங்கல்பட்டு, மதுராந்தகம் ஆகிய கடற்கரைப் பகுதியிலேயே பட்டணம் எனப்படும் ஊர்கள் அமைந்துள்ளன.

''கடற்கரையில் உண்டாகும் நகரங்கள் பட்டினம் என்று பெயர் பெறும்''.[46] இன்று பட்டணம் என்று அழைக்கப்படுவது அன்று பட்டினம் என்று அழைக்கப்பட்டுள்ளது. பட்டினப்பாலை என்ற நூல் இதனை உறுதிப்படுத்தும்.

புதுப்பட்டணம், தென் பட்டணம், வடபட்டணம் ஆகிய ஊர்ப்பெயர்களின் காரணம் வெளிப்படையாகப் புரிகிறது. ஒருவர் பிறருக்குக் கொடையாக வழங்கிய ஊர் கொடைப் பட்டணம் எனப்பட்டுப் பின்னர் கொடப்பட்டணமாக மாறியுள்ளது. 'சட்ராஸ்' என்று டச்சுக்காரர்களால் அழைக்கப்பட்ட ஊர் சதுரங்கபட்டணம். சென்னை பட்டணம் 'மெட்ராஸ்'எனப் பட்டதுபோல் சதுரங்கபட்டணம் 'சட்ராஸா'க மாறியுள்ளது.

**46. நெம்மிலி :**

நெம்மிலி என்ற பொதுக்கூறுடைய சில ஊர்கள் இம்மாவட்டத்தில் உள்ளன. இது நெம்மேலி, நெம்மலி, நெமிலி என்றும் மருவி அழைக்கப்படுகிறது. இப்பொதுக்கூறு சிறிது வேறுபட்ட சொல்லமைப்புடையதாகக் காணப்படுகிறது. எனினும் சிறிது கூர்ந்து நோக்கினால் இதன் மூல வடிவம் புலப்படும்.

நெம்மலி என்பது நெம்மிலி, நெம்மேலி என்று பலவாறு பலபகுதி மக்களால் அழைக்கப்படுகிறது. அந்த நெம்மலி என்ற சொல் நெல்மலி என்ற சொல்லின் திரிபாக இருத்தல் வேண்டும். நெல்மிகுதியாக விளைந்த இடம் என்றிருந்த ஊர்ப்பெயர் பின்பு வேறுவிதமாக மாறியுள்ளது. நெமிலி என்பது அதன் குறுகிய வடிவமாகும்.

நெம்மிலிச் சேரி, நெமிலிச்சேரி என்ற ஊர்ப் பெயர்களும் நெம்மிலி என்ற இடம் நெல்விளைதற்குரிய சேரிப்பகுதி என்பதைக் காட்டுகின்றன. நெம்மிலி என்ற பொதுக்கூறுடைய ஊர்களில் ஓர் ஊர் மட்டும் வட என்ற முன்ஒட்டைப் பெற்றுள்ளது. பிற ஊர்ப்பெயர்கள் பொதுக்கூறு மட்டுமே பெற்றுள்ளன.

**47. மல்லி :**

மல்லி என்பது முன் ஒட்டாக அமைந்து, பல பொதுக்கூறுகளுடன் இணைந்து வந்தது முன்னர் எடுத்துக்காட்டப்பட்டது.

---

46. ஊரும் பேரும் - டாக்டர் ரா.பி. சேதுப்பிள்ளை-பக்:33

அதுவே பொதுக்கூறாக அமைந்த சில ஊர்களும் காணப்படுகின்றன. மல்லிகைத்தோட்டங்கள் மிகுந்திருந்த இடங்களில் அமைந்த ஊர்களும் அம்மல்லிகையின் பெயரையே பெற்றுள்ளன.

பூனமல்லி என்றுகுறிப்பிடப்படும் ஊர் பலவாறாகத்திரித்துக் கூறப்படுகிறது. பூவிருந்தவல்லி என்பதுவே அவ்வூரின் மூல வடிவம் என்றும், அது வெள்ளைத் தாமரைப் பூவிலிருப்பவளான கலைமகள் பெயர் பெற்றது என்றும் கூறப்படுகிறது.[47] அது பொருந்தாது. கலைமகள் பெயரில் அவ்வூர் அமைவதற்கான சாத்தியக் கூறுகள் ஏதும் அங்கு இல்லை. கலைமகளுக்கான ஆலயமோ பிற சிறப்புச் செய்தியோ அவ்வூரில் இல்லை. ஊர்ப் பெயர் சூட்டப்பட்ட முறைகளை நோக்கினால் சூட்டியவர்கள், தம் இனம் ஆகியவற்றைக் குறிப்பிட்டிருப்பதுடன் சைவம், வைணவம் தொடர்பான கடவுளர் பெயரையே பெரும்பாலும் சூட்டியுள்ளனர். திருமகள் பெயரில் ஊர்கள் உள்ளதற்குச் சமயமே முதல் காரணம். கலைமகள் தொடர்பான சமயம் ஏதும் இங்கு இல்லை. கல்வியைப் பலரும் போற்றியிருப்பினும், கலைமகளுக்குப் பெரிதும் சிறப்பளித்து, அவளுக்காகத் தனிக் கோயில் கட்டி வழிபட்ட தன்மை இம்மாவட்டத்தில் இல்லை. எனவே, பூவிருந்தவல்லியே பூந்தமல்லி, பூனமல்லி என்று மாறிவிட்டதாகக் கூறி மனம் நோகத் தேவையில்லை.

பூனமல்லி, பூந்தமல்லி என்றே நெடுங்காலமாக அழைக்கப்பட்டது. அவ்வடிவமே இயல்பான வடிவத்துடன் நெருங்கித் தொடர்புடையது. மல்லிகைப்பூக்கள் மிகுதியாகப் பூத்துக் குலுங்கும் ஊர் 'பூத்தமல்லி' எனப்பட்டுள்ளது. பின்னர் த், ந் ஆக மாறி, பூந்தமல்லியாகியுள்ளது. இன்றும் அவ்வூரில் மல்லிகைத் தோட்டம் மிகுந்துள்ளதையும், பேருந்து நிலையத்தில் பெருமளவு மல்லிகைப் பூக்கள் விற்கப்படுவதையும் காணலாம்.

பூந்தமல்லிக்கு அருகில் 'கொட்னமல்லி' என்ற ஊரும் உள்ளது. அவ்வூரும் மல்லிகைப் பூவின் பெயரால் அமைந்த ஊரேயாகும். தொடர்பு கருதி இருவூர்களும் மல்லி என்ற ஒரே பொதுக்கூறைப் பெற்றுள்ளன. கொட்னமல்லியைப் போன்று மிட்னமல்லி என்று வேறோர் ஊரும் உள்ளது. இவ்வூர்ப் பெயர்களில் உள்ள முன் ஒட்டுகள் பிற மொழிச் சொற்கள் போல்

---

47. செங்கற்பட்டு மாவட்டம் - சோ. ம. லெ - பக்:120

உள்ளன. வானமல்லி என்ற ஊர்ப்பெயர் வாசமல்லி என்பதன் திரிபாக இருத்தல் கூடும். அல்லது சிறப்பைப் புலப்படுத்தும் அம்மலர்வகைகளில் ஒன்றாகவும் இருத்தல் கூடும்.

**48. வசலை :**

4 வசலை எனப்படும் பொதுக்கூறுடைய ஊர்களும் இம்மா வட்டத்தில் உள்ளன. மதுராந்தகம் வட்டத்தில் மட்டுமே வசலை எனப்படும் ஊர்கள் உள்ளன. அடுத்துத் திருத்தணி வட்டத்தில் வலசா எனப்படும் பொதுக்கூறுடைய இரண்டு ஊர்கள் காணப்படுகின்றன. இப்பொதுக்கூறும் சிறிது வேறுபாடுடையதாக அமைந்துள்ளது.

வாசல் எனப்படும் சொல் காலப்போக்கில் மாற்றமடைந்து வசல் எனக்குறுகி அதுவே பின்பு வசலை என்று ஆகியிருக்கக் கூடுமோ என்று எண்ணவேண்டியுள்ளது. மேல் வசலை, கீழ் வசலை என்று, ஊர்கள் அமைந்துள்ள இடங்களுக்கேற்பப் பேர் பெற்று இரண்டு ஊர்கள் உள்ளன. வசலை என்பது வசலா என்றும் மாறியிருக்கவாய்ப்பு உண்டு. அம்மாற்றம் திருத்தணிவட்டத்தில்வேறுவிதமான மாற்றமடைந்துள்ளது. இரண்டாமெழுத்தும மூன்றாமெழுத்தும் ஒன்றற்கொன்றுமாறி, வசலா என்பது வலசா என்று மாறியுள்ளது. கொடி வலசா, பை வலசா என்று இரண்டு ஊர்கள் அங்கு இவ்வடிப்படையில் அமைந்துள்ளன.

**49. மதுரை:**

வரலாற்றுச் சிறப்பு மிக்க ஊர் மதுரை. ஒரு மாவட்டத்தின் தலை நகராக இன்று விளங்கும் நகர் அது. அப்பெயரைப் பொதுக் கூறாகக் கொண்டு சில ஊர்கள் இம்மாவட்டத்தில் அமைந்துள்ளன.

மதுரம் என்ற சொல் இனிமை என்ற பொருள் தரும். மதுராந்தகம் வட்டத்தில் 'மதூர்' என்றோர் ஊர் உள்ளது. மதுரம் என்பது குறுகி, மது என்றாகி, மதூர் அமைந்துள்ளது. அதே வட்டத்தில் மதுரை என்ற பொதுக்கூறு மட்டுமே உடைய ஓர் ஊரும் உள்ளது. மதூர், மதுரை என்றும் மாறியிருக்கலாம்.

நெய்த மதுரை என்ற ஊர், நெய்தல் மதுரை என்றிருக்க வேண்டும். நெய்தல் நிலத்தில் உள்ள ஊர் என்று பொருள் அமையுமாறு அவ்வூர் அமைந்துள்ளது. ஈகு மதுரை என்பது

ஈகைக்குணமுடையோர் உள்ள ஊர், அல்லது ஒருவரின் ஈகையால் உருவாகிய ஊர் என்று அமைந்திருக்க வேண்டும்.

## 50. பூடி :

பூடி என்ற பொதுக்கூறுடைய சில ஊர்கள் இம்மாவட்டத்தில், திருத்தணி வட்டத்தில் மட்டுமே காணப்படுகின்றன. பிற வட்டங்களில் இப்பொதுக்கூறில் ஒரு ஊர் கூட அமையவில்லையெனினும் பூடி என்பதுடன் தொடர்புடைய பூண்டி என்ற பொதுக்கூறுடைய ஊர்கள் பிற வட்டங்களில் காணப்படுகின்றன.

பூண்டு வகைகள் மிகுதியாக விளையும் தோட்டங்களையடுத்து அமைந்த ஊர்கள் பூண்டிகள் எனப்படும் என்பது முன்னர்க்கூறப்பட்டது. அப்பூண்டிகளே திருத்தணி வட்டத்தில் பூடிகள் என்று குறுகியமைந்துள்ளன.

ஊர்கள் அமைந்துள்ள திசைகளுக்கு ஏற்பக் கீழப்பூடி, மேலப்பூடி என்ற ஊர்கள் பெயர் பெற்றுள்ளன. சின்ன நாகன் என்பவர் பெயரால் அமைந்த ஊர் சின்ன நாகபூடி எனப்பட்டுள்ளது குணம் என்பது குன்றம் என்பதன்மருவாக அமைந்தது. அவ்வடிப்படையில் வலக்குணம்பூடி என்ற ஊர், பெயர் பெற்றுள்ளது. வலம் என்பது வலது புறம் என்ற பொருளில் அமைந்து, ஏற்கெனவே உள்ள ஊருக்கு வலது பக்கமாக உள்ள குன்றத்தையடுத்து அமைந்த ஊர் என்ற பொருளை வலக்குணம் பூடி தருகிறது.

## 51. வலம்:

வலம் என்ற பொதுக்கூறுடைய சில ஊர்கள் இம்மாவட்டத்தில் உள்ளன. வலம் என்பது வெற்றியைக்குறிக்கும். எனவே, அப்பொருளிலேயே ஊர்கள் அமைந்துள்ளன என்று கருத முடியுமெனினும், வல்லம் என்ற சொல்லின் சுருக்கமே வலமாகியுள்ளது என்று கருதுவதே பொருத்தமாக அமையும்.

வல்லம் என்பது அரணுடைய கோட்டையைக் குறிக்கும். வலம் என்று முடியும் ஊர்களும் கோட்டையைக் குறிக்குமாறே அமைந்துள்ளன. கீவலம், மேலவலம் என்ற ஊர்ப்பெயர்கள், கோட்டைகள் அமைந்துள்ள திசைகளைக் குறிக்கின்றன. மலையரண் அமைந்த பகுதி குண்ண வலம் எனப்படுகிறது. குன்றம் என்பது குண்ணம் என மருவியுள்ளது. மன்னர் வலம் என்பது மொன்ன வலம் ஆகியுள்ளது. மன்னவேடு மொன்னவேடாக

மாறிய விதம் முன்னர்க்கூறப்பட்டது. அம்மாற்றம் இப்பெயர்க்கும் பொருந்தும்.

52. மலை:

மலை என்ற பொதுக்கூறுடைய சில ஊர்கள் இம்மாவட்டத்தில் உள்ளன. குன்றம் என்ற பொதுக்கூறுடைய ஊர்கள் பற்றி முன்னர் விளக்கப்பட்டது. மலை என்பதும் குன்றத்துடன் தொடர்புடையதுவே. குன்றங்களைவிடப் பொதுவாக மலைகள் உயரமானவைகளாக இருக்கும். ஆனால் ஊர்ப்பெயர்களாக இம்மாவட்டத்தில் இடம் பெற்றுள்ள மலைகளை நோக்கினால் குன்றங்களைப் போன்ற அமைப்புடையவைகளாகவே காணப்படுகின்றன.

குருவி போன்ற அமைப்புடைய மலை குருவி மலை எனப்பட்டுள்ளது. அருவிநீர், சுனைநீர் தோன்றும் இடமாக உள்ள மலை நீர்மலை எனப்பட்டுள்ளது. அது இறைவன் உறையும் தலமாகவும் கருதப்பட்டதால் திருஎன்னும் அடைச்சொல்லைப் பெற்றுள்ளது. பரங்கியர் எனப்பட்ட ஆங்கிலேயர் சென்னைக்கு வருகை தந்ததன் நினைவாக அமைந்த ஊர் பரங்கிமலை எனப்பட்டது. கருக்கா மலை என்ற ஊர் அங்குள்ள மலை, நிறம் கருக்காமல் உள்ளது என்பதைக் குறிக்குமாறு அமைந்திருத்தல் வேண்டும். அல்லது குருவி மலை போன்று காக்காய் மலையாக இருந்து பின்னர் கருக்கா மலையாக மாறியிருக்க வேண்டும். காக்காய்ப் பள்ளம் என்ற ஓர் ஊர் இம்மாவட்டத்தில் உள்ளதும் நினைத்தற்குரியது.

53. மேனி :

மேனி என்ற புதுமையான பொதுக்கூறுடைய ஊர்களையும் இம்மாவட்டத்தில் காணமுடிகிறது. மேனி என்ற சொல் உடல் என்பதனையே குறிக்கும். உடலின் தன்மைகளை உணர்த்தும் விதத்திலும் கூட ஊர்கள் சில இம்மாவட்டத்தில் உள்ளன.

மோகினி என்பது மௌகினி என்று திரிந்து மௌகினி மேனி என்று ஊர்ப்பெயராக அமைந்துள்ளது. கிழமேனி என்பது கீழ மேனியாகி ஓர் ஊர்ப்பெயராகவும் அமைந்துள்ளது. பருத்த மேனி என்பது பருத்து மேனி எனவும், சூலை நோயுடைய உடம்பு சூலைமேனி எனவும் ஊர்ப்பெயர்களாக அமைந்துள்ளன.

உடம்பின் பல்வேறு தன்மைகள் இவ்வூர்ப் பெயர்களால் உணர்த்தப்பட்டுள்ளன.

## 54. நத்தம் :

நத்தம் என்ற பொதுக்கூறுடைய சில ஊர்களும் இங்குக் காணப்படுகின்றன. முன் ஒட்டு இல்லாமல் நத்தம் என்பதை மட்டுமே ஊர்ப்பெயராகக் கொண்டும் இரண்டு ஊர்கள் உள்ளன.

''ஊர்ப்பொதுவாக அமைந்த இடம் நத்தம் எனப்படும். அத்தகைய இடம் குடியிருப்பாக மாறிய பின்னரும் பழைய பெயர் எளிதாக மறையவில்லை.''[48] அதனால்தான் அப் பெயரில் இன்றும் பல ஊர்கள் காணப்படுகின்றன.

நத்தா நல்லூர், நத்தப்பேட்டை, நத்தம்பாக்கம் என்று பிற பொதுக்கூறுகளுக்கு முன் ஒட்டுகளாகவும் பல நத்தங்கள் அமைந்துள்ளன.

சித்தூர் நத்தம் என்ற பெயரில் அமைந்த ஊர், சித்தூரை யடுத்துள்ள பொது இடத்தில் அமைந்த ஊர் என்பதைக் குறிக்கும். கிரீன்வேல் நத்தம் என்பது கிரீன்வேய்ஸ் நத்தம் என்றிருக்க வேண்டும். வேய்ஸ் என்பது வேல் என்று மருவியுள்ளது. ஆங்கிலச் சொற்றொடரை முன் ஒட்டாகக் கொண்டு இவ்வூர் அமைந்துள்ளது.

## 55. தேவதானம் :

தேவதானம் என்ற பொதுக்கூறுடைய சில ஊர்களையும் செங்கை மாவட்டத்தில் காண முடிகிறது. ஆரியர்கள் செல்வாக்குப் பெற்ற பின்னரே இப்படிப்பட்ட தானங்கள் நடைபெற்றுள்ளன என்பதைச் சொல்லமைப்பே உணர்த்துகிறது.

''திருக்கோயிலுக்கு அரசர் இறையிலியாக விட்ட நிலங்களும், ஊர்களும் தேவதானம் எனப்பட்டன. இத்தகைய தானம் தமிழ்நாட்டில் சிறந்திருந்ததென்பது சாசனங்களாலும் ஊர்ப் பெயர்களாலும் அறியப்படும்.''[49]

---

48. ஊரும் பேரும்- டாக்டர். ரா. பி. சேதுப்பிள்ளை-பக்:71
49. ,, ,, பக்: 316

மன்னவேடு என்பது ஓர் ஊர்ப்பெயராக உள்ளது. அத்துடன் தேவதானம் என்பது சேர்ந்து மன்னவேடு தேவதானம் எனப்பட்டுள்ளது. முன்னுள்ள ஊரை ஒட்டியமைந்தது இவ்வூர் என்பது தெரியவருகிறது. தேவதானம் என்ற பொதுக்கூறுடன் ஊர் அமைந்திருப்பதுடன், கீழ், மேல் என்ற திசைப்பெயர்களுடனும் தேவதானங்கள் அமைந்துள்ளன.

## 56. தோட்டம்:

தோட்டம் என்ற பொதுக்கூறுடைய ஊர்கள் சிலவும் இம் மாவட்டத்தில் உள்ளன. பெரும்பாலும் கோயிலுக்கு மானியமாக வழங்கப்பட்ட பெரிய நந்தவனம் அடங்கிய பகுதியே தோட்டம் என்ற ஊராகக் குறிப்பிடப்பட்டுள்ளன. சில இடங்களில் தனிமனிதர் பெயரிலும் தோட்டங்கள் அமைந்துள்ளன.

லாலா தோட்டம் என்ற ஊர், வட மாநிலங்களிலிருந்து இங்கு வந்து குடியேறிய 'சேட்' எனப்படும் இனத்தவரைக் குறிக்கும் சொல்லாக உள்ளது. லாலா பெயரில் மிட்டாய்கடை, சிற்றுண்டிக் கடைகள் இன்றும் பல நகரங்களில் உள்ளன. அண்மைக் காலத்தில் தோன்றிய ஊராகவே அது இருக்க வேண்டும். திருமலைராயன் என்ற நாயக்கர் மன்னன் பெயரில் திருமலராயன் தோட்டம் என்ற ஊர் அமைந்துள்ளது.

அளவில் மிகுந்த தோட்டம் பெரிய தோட்டம் என்றும், வளமான மண் வகையைப் பெற்ற தோட்டம் வளத்தோட்டம் என்றும் ஊர்ப்பெயர்களாக அமைந்துள்ளன.

## 57. வேடல்:

வேடல் என்று முடியும் ஊர்கள் சிலவும் இம்மாட்டத்தில் உள்ளன. வேடு என்ற பொதுக்கூறினடியாகவே வேடல் என்ற சொல் அமைந்திருக்கவேண்டும். வேடன் என்பது வேடல் என்று அமைந்திருக்கவும் கூடும். இப்பொதுக்கூறையுடைய ஊர்களில், சிறு என்ற முன் ஒட்டை ஒரு ஊர் பெற்றுள்ளது. சிறிய அளவுள்ள ஊர் என்ற அடிப்படையில் அப்பெயர் அமைந்திருக்கும். பிற ஊர்ப்பெயர்களில் முன் ஒட்டுகள் இல்லை. பொதுக்கூறு மட்டுமே உள்ளது. அதனால் வேடலைப்பற்றி விளக்கமாக அறிய முடியவில்லை.

காஞ்சிபுரம் வட்டத்தில் மட்டுமே இவ்வூர்கள் காணப்படுகின்றன. மன்னரும் பிறரும் வேட்டையாடிய இடம் வேடு

என்றும், வேடர்கள் தங்கிய இடம் (வேடன்தாங்கல் போல்) வேடல் என்றும் கூறப்பட்டுள்ளது.

58. பள்ளி:

பள்ளி என்பதைச் சிறப்புக்கூறாகக் கொண்டு பல ஊர்கள் வேறு பல பொதுக்கூறுகளில் முடிந்த விதம் முன்னர் எடுத்துக் காட்டப்பட்டது. பள்ளி என்பதைப் பொதுக்கூறாகக் கொண்டும் சில ஊர்கள் இம்மாவட்டத்தில் உள்ளன.

பள்ளி என்ற சொல் சமணர்கள், பௌத்தர்களின் கோயில்கள் இருந்த இடங்களையே பொதுவாகக் குறித்துள்ளது. சேரி என்ற பொருளிலும் சில இடங்களில் இச்சொல் இடம் பெற்றுள்ளது.

பெரிய மலைப் பகுதியில் இருந்த பௌத்த அல்லது சமணக் கோயில் இருங்குன்றப்பள்ளி எனப்பட்டுள்ளது. காட்டுப் பகுதியில் இருந்த அக்கோயில் காட்டுப் பள்ளி என்று கூறப்பட்டுள்ளதுடன், ஜங்கால பள்ளி என்றும் கூறப்பட்டுள்ளது. 'ஜங்கில்' என்ற ஆங்கிலச் சொல்லுடன் பள்ளி என்ற தமிழ்ச் சொல் சேர்ந்து ஜங்கால பள்ளியாகியுள்ளது. இவ்வூர் பிற்காலத்தில் தோன்றியிருக்க வேண்டும்.

59. கோழி :

மரம், செடி போன்ற இயற்கைப் பொருட்களைப் பொதுக் கூறாகக் கொண்டு பல ஊர்கள் அமைந்துள்ளது போன்று, விலங்குகள் பறவைகளின் பெயர்களைப் பொதுக் கூறுகளாகக் கொண்டும் சில ஊர்கள் அமைந்துள்ளன. அப்படி அமைந்த ஊர்களில் கோழி என்ற பொதுக்கூறு கொண்டு முடியும் ஊர்களும் அடங்கும்.

கோழிவாக்கம் என்ற பெயரில் ஓர் ஊரும் உள்ளது. பெருங்கோழி என்று கூறப்படும் ஊர்கள் சிலவும் இம்மாவட்டத்தில் உள்ளன. பின் ஒட்டு ஏதுமின்றி பெருங்கோழி என்ற அளவிலேயே ஊர்கள் உள்ளமை, கோழியின் சிறப்பால் ஊர்கள் குறிக்கப்படும் நிலையையுணர்த்தும். கோழி, முருகனின் கொடிச் சின்னமாக விளங்குவதால் இப்பெயருடைய ஊர்கள் முருக வழிபாடுடைய ஊர்களாகவும் இருத்தல் கூடும்.

**60. பறை :**

பறை என்று முடியும் சில ஊர்கள் இம்மாவட்டத்தில் உள்ளன. அரையர் என்ற சொல்லின் பகுதியாகிய அரை என்பது முன்னொட்டுச் சொல்லுடன் சேரும் போது பறை என்று மாறியதா என்பது புரியவில்லை. குறும்பு அரை என்பது குறும்பறை என்று மாறியிருக்க வாய்ப்பு உண்டு. பாறை என்பது முதல் குறுகி, பறை என்று, றகரம் ரகரமாக மாறியிருக்கவும் கூடும். குறுகிய பாறை உள்ள இடத்தில் அமைந்த ஊர் குறும் பாறை என்றிருந்து பின்பு குறும்பறையாகியிருக்கும். இப்பெயரில் அமைந்த ஊர்கள் இரண்டு உள்ளன.

ஆலமரத்தைச் சார்ந்த பாறையுள்ள இடத்தில் அமைந்த ஊர் ஆலம்பாறையாக இருந்து பின்பு ஆலம்பறையாக மாறியுள்ளது.

**61. கல் :**

கல் என்ற சொல் சிறப்புக்கூறாக அமைந்த பல ஊர்கள் இம்மாவட்டத்தில் உள்ளன என்பது முன்னர்க் காட்டப்பட்டது. கல்பாக்கம், கல்பட்டு போன்ற ஊர்களை இவ்வரிசையில் குறிப்பிடலாம். அதுபோன்று அச்சொல் பொதுக்கூறாக அமைந்த ஊர்கள் சிலவும் உள்ளன. கல்லின் அமைப்பு, தன்மை ஆகியவற்றைப் புலப்படுத்துமாறு அவ்வூர்ப் பெயர்கள் அமைந்துள்ளன.

சிறுணை பெருகல், பருக்கல், வெங்கல் என்ற ஊர்களின் பெயர்களை வெளிப்படையாக நோக்கும் போதே அவ்வூர்கள் அமைந்த நிலை புலனாகிறது. பெரிய, பருமை என்பன கல்லின் அமைப்பினையும். வெண்மை என்பது அதன் நிறத்தையும் குறிக்கும்.

**62. துரை:**

துரை என்றசொல் தலைவன் என்ற பொருளையுணர்த்தும். வெள்ளையர்களில், ஆட்சிப் பொறுப்பிலிருந்த பலர் துரை என்று அழைக்கப்பட்டுள்ளனர். அப்பொருளில் ஊர்ப்பெயர்கள் அமைந்தனவா என்பது விளங்கவில்லை. துறை என்ற சொல் துரை என்று மருவி வழங்கியுள்ளதாக எண்ணுவதற்கும் வாய்ப்பு உண்டு. ஊர்ப்பெயர்களும் அவ்வாறு எண்ணுவதற்கு இடம் தருகின்றன.

துறை என்பது நீர்த்துறை, கடற்றுறை என்ற பொருளில் அமையும். பாலாறு கடலில் புகும் வழியில் நீர்த்துறையை யொட்டி அமைந்த ஊர் புக்கத்துரை எனப்படுகிறது. அவ்வூர் புக்கத்துறை என்று இருத்தல் வேண்டும். கடற்கரையையொட்டி ஆரியர்கள் மிகுதியாக வாழ்ந்த ஊர் ஆரியத்துறை எனப்பட்டு, பின்பு ஆரியத்துரை, ஆரிகத்துரை என்றெல்லாம் மாற்றம் பெற்றுள்ளது. கணவன் துரை என்ற பெயரில் புதுமையான ஊரையும் காணமுடிகிறது. பாதர்வாடி, மதர்வாடி என்று ஊர்கள் அமைந்துள்ளது போல் கணவன் துறையும் அமைந்து பின்பு கணவன் துரையாகியிருத்தல் கூடும்.

## 63. வளி:

வளி என்ற சொல் காற்று என்ற பொருளையுணர்த்தும். அப்பொருளின் அடிப்படையில் ஊர்ப்பெயர்கள் அமைந்துள்ளன வாகக் கூற முடியாது. வெளி என்பதுவே வளியாக மாற்றம் பெற்றிருக்க வேண்டும். வெளி என்பது வெளிப்படையான இடம் என்ற பொருளைத்தரும். திறந்த வெளி, அண்டவெளி என்பன வெளி என்ற சொல்லின் பொருளைப் புலப்படுத்தும் சொற்களாகும். திறந்த வெளியாகக் கிடந்த இடங்களில் அமைந்த ஊர்கள் வெளி என்ற பொதுக்கூறைப் பெற்றுள்ளன.

செம்பியன் பேரில் வெளியிடத்தில் அமைந்த ஊர் செம்பியமா (வெளி) வ்ளி எனப்பட்டுள்ளது. ஊரைச்சார்ந்து அல்லது ஓர் ஊரிலிருந்து மற்றோர் ஊருக்குத்தேர் செல்லும் வழியில் உள்ள வெளியிடத்தில் அமைந்த ஊர் தேர் வளி என்றும், மலைப்பகுதியைச் சார்ந்து அமைந்த ஊர் கோடு வளி என்றும் கூறப்பட்டுள்ளன.

வழி என்பதுவே வளியாக மாறியுள்ளது என்றும் கூறலா மெனினும் அது அவ்வளவாகப் பொருந்துமாறு ஊர்ப்பெயர்கள் அமையவில்லை.

## 64. வனம் :

வனம் என்ற சொல் காடு என்ற பொருளையுணர்த்தும். காட்டையொட்டி அமைந்த ஊர்கள் வனம் என்ற பொதுக் கூறு பெற்று முடிந்துள்ளன.

புலிகள் வாழும் காட்டுப் பகுதி புலிவனம் எனப்பட்டுள் ளது. பாலை நிலத்தில் அமைந்த காட்டுப்பகுதி பாலைவனம்

எனப்பட்டுள்ளது. ஊர்களின் சிறப்புக் கருதி திரு என்ற அடைச் சொல் அமைந்துள்ளன. ஊர்கள் அமைந்துள்ள பகுதிகள் காட்டையொட்டிய பகுதிகளாகவே உள்ளன என்பதை இன்றும் காணலாம்.

~5. குண்ணம் :

குன்றம் என்பதுவே காலப்போக்கில் மருவிக் குண்ணம் எனப்பட்டுள்ளது. குன்றம், குன்னம் எனப்பட்டுப் பின்னர் குண்ணமாகியுள்ளது. குன்றத்தூர் என்பது குண்ணத்தூர் என்றும் கூறப்படுகிறது.

வீரணன் என்பவர் பெயரால், குன்றையொட்டிய பகுதியில் அமைந்த ஊர் வீரணக்குண்ணம் எனப்பட்டுள்ளது. ஆயர்கள் வாழ்ந்த மலைப்பகுதியில் அமைந்த ஊர் ஆயக்குண்ணம் எனப் பட்டுள்ளது. குண்ணம் என்ற பொதுக்கூறினை பட்டுமே பெற்ற ஓர் ஊரும் இம்மாவட்டத்தில் உள்ளது.

66. பல்லி:

பள்ளி என்று தமிழில் அழைக்கப்படும் ஊர்கள் தெலுங்கில் பல்லி என்று அழைக்கப்பட்டிருக்கலாம். ஏனெனில், திருத்தணி வட்டத்தில் மட்டுமே இப்பொதுக்கூறுடைய ஊர்களைக் காண முடிகிறது. சமண, பௌத்த சமயக் கோயில்கள் என்ற பொரு ளிலோ அன்றிப் பொதுவாகக் கோயில்கள் என்ற பொருளிலோ பல்லிகள் குறிப்பிடப்பட்டிருக்கலாம்.

மலையைச் சார்ந்தும், கடல் அல்லது நீர் நிலையைச் சார்ந் தும் பல்லிகள் அமைந்திருக்கக்கூடும் என்று பல்லிகளின் பெயர் களைக் கொண்டு உணரமுடிகிறது. ரங்கநாதராகிய வேங்கட வன் பெயரால் அமைந்த பல்லி, இரங்க பல்லி எனப்பட்டுள்ளது.

67. கட்டு:

கட்டுதல் என்ற சொல்லிற்கு மூலமாக அமைந்த சொல் கட்டு என்பது. கட்டிடம் என்பதும் கட்டுஎன்பதிலிருந்துஅமைந்த சொல்லே. பொதுவாக, அமைத்தல் என்ற பொருளை இச்சொல் உணர்த்தும்.

அணை கட்டப்பட்ட இடத்தில் உருவாகிய ஊர் அணைக் கட்டு என்றும், சோலையுள்ள இடத்தில் அமைந்த ஊர் சோலைக்

கட்டு என்றும் கூறப்பட்டுள்ளது. அச்சுத் தொழில் உள்ள இடத்தில் அமைந்த ஊர் அச்சுக்கட்டு எனப்பட்டுள்ளது. அச்சு இயந்திரம் தோன்றிய பின்னர் இவ்வூர் உருவாகியிருக்க வேண்டும்.

## 68. மணி:

அணி வகைகளுள் ஒன்று மணி. அம்மணியின் பேரில், அதனைப் பொதுக்கூறாகக் கொண்டும் சில ஊர்கள் இம்மாவட்டத்தில் உள்ளன. குண்டு மணிச்சேரி என்ற ஊர்ப்பெயரில் குண்டு மணி என்பது சிறப்புக் கூறாக உள்ளது.

சிந்தாமணியின் பெயரில் ஓர் ஊர் அமைந்துள்ளது. சிறப்பிற்குரிய மணி என்ற பொருளில் திருமணி என்ற ஊர்ப்பெயர் அமைந்துள்ளது. திருமணி என்பதுவே சிறிது மாற்றமடைந்து தரமணி என்றும் அழைக்கப்படுகிறது.

## 69. வெள்ளரை :

வெள்ளறை என்பதுவே வெள்ளரை என்று மாற்றம் பெற்றிருக்கவேண்டும். அறை என்ற சொல் பாறை என்ற பொருளையுணர்த்தும். வெள்ளறை என்பது வெண்மை நிறப் பாறை என்ற பொருள் தரும். அப்படிப்பட்ட பாறையுள்ள இடங்களில் அமைந்த ஊர்களும் வெள்ளறைகள் எனப்பட்டுள்ளன.

தொண்டைமா வெள்ளறை என்பது தொண்டமா வெள்ளரை என்று திரிந்து வழங்குகிறது. வெள்ளரை என்றபொதுக் கூறினை மட்டுமே பெயராகக் கொண்ட ஊர்களும் இம் மாவட்டத்தில் உள்ளன.

## 70. நெல்லி :

நெல்லி என்ற பொதுக்கூறுடைய சில ஊர்களும் இம் மாவட்டத்தில் உள்ளன. நெல்லி என்பது ஒருவகை மரத்தின் பெயர். இவ்வகை மரங்கள் மிகுந்துள்ள இடங்களில் அமைந்த ஊர்கள் அம்மரங்களின் பெயரையே பெற்றுள்ளன. இவ்வூர்கள் அமைந்துள்ள இடங்கள் நெல்லி மரங்கள் மிகுந்துள்ள பகுதிகளாகவே இன்றும் காணப்படுகின்றன. தொடக்க காலத்தில் பெரும்பாலான ஊர்ப்பெயர்கள் மரங்களின் பெயர்களாகவே அமைந்துள்ளன என்ற பொதுவான கருத்தை இவ்

ழூர்ப் பெயர்களும் உறுதிப்படுத்துகின்றன. படு என்ற சிறப்புக் கூறாகிய முன்ஒட்டினை ஓர் ஊர் பெற்றுள்ளது பொதுக்கூறினை மட்டுமே பிற ஊர்ப் பெயர்கள் பெற்றுள்ளன.

## 71. ஓரகடம்:

இப்பொதுக்கூறு சற்று புதிராக உள்ளது. நேரடியாக இதன் பொருள் எதுவென்று உணரமுடியவில்லை. சற்றுத்திரிந்த நிலையில் இவ்வூர்ப்பெயர் அமைந்திருக்க வேண்டும்.

உரற்களம் என்பது அறிஞர்கள் கூடும் இடம் என்ற பொருளையுணர்த்தும்.[50] அதுவே காலப்போக்கில் மாற்ற மடைந்து ஓரகடமாகத்திரிந்திருக்க வேண்டும் என்று எண்ண வேண்டியுள்ளது. அறிஞர்களின் பெயராலும் அவர்கள் கூடும் இடங்களின் பெயராலும் வேறு பிற ஊர்ப்பெயர்களும் உள்ளதையுணரலாம். சிறப்புக்கூறாகிய முன் ஒட்டு இல்லாமலேயே இவ்வூர்ப்பெயர்கள் அமைந்துள்ளன.

## 72. பந்தல்:

கொடிகள் படர்வதற்காகப் போடப்படுவது பந்தல். திருவிழாக்காலங்களிலும் வீடுகளில் நடைபெறும் முக்கிய நிகழ்ச்சிகளின் போதும் தற்காலிகமாகப் பந்தல்கள் போடப்படுவதுண்டு. நிரந்தரமாகப் போடப்படும் பந்தல்களும் உண்டு. அவை கூரைகள் என்றும் கூறப்படும்.

பொற்பந்தல் என்ற ஊர்ப்பெயர் பொன்னால் வேயப்பட்ட பந்தல் என்ற பொருளையுணர்த்தும். கட்டியாம் பந்தல் என்ற பெயர் கட்டியபந்தல் என்பதன் திரிபாக இருக்கலாம். அல்லது, கட்டியம் கூறுவோர்க்கு வழங்கப்பட்ட ஊர் என்ற பொருளில் கட்டியம் பந்தல் என்றிருந்து, பின்னர் கட்டியாம் பந்தலாகியிருத்தல்கூடும். வெல்ல பந்தல் என்னும்ஓர் ஊர் உள்ளது. வெள்ளத்தைத்தடுப்பதற்காகக் கட்டப்பட்ட தடுப்புச் சுவருடன் அமைகப்பட்ட பந்தல், வெள்ளப் பந்தல் என்று முன்னர் வழங்கப்பட்டுப் பின்னர் வெல்லபந்தலாக மாறியதா என்பதும் நினைத்தற்குரியது.

---

50. மதுரைத் தமிழ்ச் சங்கப் பேரகராதி - பக்: 1031

## 73. நிலை:

நிலை என்ற சொல் தரம் என்ற பொருளைப் பொதுவாக உணர்த்துமெனினும், நிலை பெறுதல் என்ற பொருளையும் உணர்த்தும். அப்பொருள் படுமாறே ஊர்ப்பெயர்கள் இம் மாவட்டத்தில் உள்ளன.

நிலை என்ற பொதுக்கூறு தனைப் பெற்ற மூன்று ஊர்களுமே திரு என்ற சிறப்புக் கூறினையே பெற்றுள்ளது சிந்தித்தற்குரியது, செல்வம் நிலை பெற்றுத் தங்குமாறு வளமுடைய ஊர் என்பதனையே 'திரு நிலை' என்ற ஊர்ப் பெயர்கள் உணர்த்து கின்றன. திருநின்றஊர் என்ற ஊர்ப்பெயர் உணர்த்தும் பொருள் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

## 74. குணம் :

குண்ணம் என்ற பொதுக்கூறுடைய ஊர்கள் பற்றி முன்னர்க் கூறப்பட்டது. குன்றம் என்பது குண்ணம் என்று ஆகியது போன்று குணம் என்றும் குறுகியுள்ளது. எனினும் பண்பு என்பதனைக் குணம் என்ற சொல் உணர்த்துமாதலால் அப்பொருள் படுமாறு அருங்குணம் என்ற ஓர் ஊரும் அமைந்துள்ளது. அரிய குன்றம் என்ற பொருளிலும் இவ்வூர்ப் பெயர் அமைந்துள்ளதாகக்கூறலாம்.

குண்ணம் என்பது இயல்பாக அமைந்தகுன்றங்களையும் குணம் என்பது குன்றங்களாக உருவகிக்கப் பட்டவைகளையும் உணர்த்துகின்றன. நெற்குணம், பூங்குணம் என்ற ஊர்ப் பெயர்கள், நெல்லும் பூவும் குன்றுகளாக உருவகிக்கப்பட்டுள்ள நிலையினை உணர்த்துவதையுணரலாம்.

## 75 மந்தை :

மந்தை என்ற சொல் விலங்கினங்களின் கூட்டத்தைக் குறிக்கும். ஆட்டு மந்தை, மாட்டு மந்தைஎன்று கூறப்படுவதை யுணரலாம். இங்கு இடப்பெயராக அது அமைந்திருப்பது எண்ணு தற்குரியது ஆடு, மாடு போன்ற விலங்கினங்கள் மேய்வதற்காக, அல்லது அவைகள் தங்குவதற்காக அமைந்த வெளி இடங்கள் மந்தை எனப்பட்டு, பின்னர் அவ்விடங்களில் அமைந்த ஊர்களும் அப்பெயர்களைப் பெற்றிருத்தல் கூடும். மந்தைவெளி என்று

கூறப்படும் சென்னை நகர்ப்பகுதி: மந்தைகள் மேய்வதற் கமைந்த பகுதியாக முன்னர் இருந்திருக்க வேண்டும்.

அனுமந்தை, அருமந்தை என்ற ஊர்கள் இப்பொதுக்கூறு பெற்றுள்ளன. அனுமன் மந்தை என்பது அனுமந்தையாகியிருத்தல் கூடும். அருகு முளைத்த மந்தை அருமந்தை எனப்பட்டிருக்கலாம், அருகம்புல், மந்தைகள் மேய்வதற்குரியதாகும்.

## 76. குமிளி:

குமிளி என்ற சொல் உருண்டை, திரட்சி, சிமிழ் போன்ற பொருளையுணர்த்தும். அவ்வடிப்படையில் ஊர்ப்பெயர் அமைந்திருக்க இயலாது. குமிலி என்பது துளசிச் செடியையுணர்த்தும்[51] குமிள் என்ற சொல்லும் ஒரு வகை மரத்தையுணர்த்தும்.[52] குமிலி என்பது குமிளி என்று மாற்றமடைந்திருக்கலாம். அல்லது குமிள் என்பது குமிளி என்றும் கூறப்பட்டிருக்கலாம்.

முன் ஒட்டாகிய சிறப்புக்கூறு இல்லாமல் குமிளி என்ற பொதுக்கூறு மட்டுமே பெற்று ஊர்ப்பெயர்கள் அமைந்துள்ளன.

## 77. நெய்குப்பி :

நெற்குப்பம் என்ற பொதுக்கூறு, பின்னர் மாற்றமடைந்து நெய்குப்பியாகியுள்ளது. பொதுவாக, நெல் என்ற சொல் நெய் என்றே மருவியுள்ளது. பழம் என்பது பயம் என்று கூறப்படும் நிலையை இன்றும் சென்னை நகர்ப்பகுதியில் காணலாம். அது போன்றே நெல், நெய் எனப்படுவதுமாகும். குப்பம் என்பது நெய்தல் நிலப்பகுதியில் மக்கள் கூடிவாழும் இடத்தை உணர்த்தும். அப்பகுதி மக்கள் தாம் வாழும் இடத்திற்கு அண்மையில் நெல் பயிரிட்டிருக்கவும் கூடும். அது கருதியே இப்பெயர் அமைந்திருக்க வேண்டும்.

நெய்குப்பம் என்ற ஓர் ஊர் இம்மாவட்டத்தில் உள்ளதும் மேற்கண்ட கருத்தை உறுதிப்படுத்துகிறது. நெல் குப்பமே நெய் குப்பமாகியிருக்க வேண்டும்.

## 78. கட்டளை :

கோயிலுக்குத் தருமமாக விடப்பட்ட ஊர்கள் கட்டளை என்னும் பொதுக்கூறு பெற்றுள்ளன. அரசனின் ஆட்சிக்குட்

---

51. Tamil Lexicon - Vol-IV-part-I
52. ,, ,,

பட்ட இடங்களில் கட்டளை என்னும் ஊர்கள் பொதுவாக எல்லா மாவட்டங்களிலும் உள்ளன.

அரசனின் ஆணை என்ற பொருளில் கட்டளை அமைந்திருக்கவேண்டும். அதனால்தான் மூன்றாம் கட்டளை என்ற பெயரில் ஓர் ஊர் அமைந்துள்ளது. ஊர் அமைந்துள்ள இடத்திற்கு ஏற்பக் கீழ்க் கட்டளை என்றும் ஓர் ஊர் அமைந்துள்ளது.

## 79. கொரடு :

கொரடு என்ற சொல் தங்குமிடம் அல்லது மறைவிடம் என்ற பொருளில் இடம் பெற்றிருக்க வேண்டும். இம்மாவட்டத்தில் இடம் பெற்றுள்ள இரண்டு ஊர்களும் புலிக்கொரடு என்ற பெயரையே பெற்றுள்ளன.

கொருடன் என்ற சொல் கோவைக் கொடி வகையையுணர்த்தும்.[53] கொரலி என்ற சொல் தினை, வெண் தினை என்ற பொருள்களை யுணர்த்தும்.[54] இப்பெயர்களே மருவி கொரடு என்று வழங்கப்படுகிறதா என்று தெரியவில்லை. கொடி அல்லது தினை நெருக்கமாக வளர்ந்துள்ள இடங்களில் புலிகள் பதுங்கியிருந்தமையால் புலிக்கொரடு எனப்பட்டிருக்கலாம்.

## 80. சூலம்:

சூலம் என்பது முன் பகுதி கூர்மையாக அமைந்த ஓர் கருவி. கடவுளர்களின் கரங்களில் இக்கருவி இருப்பதாக அமைத்துக் காட்டுவர். அதில் மூன்று எர்மையான பகுதிகள் சேர்ந்தும் அமைந்திருக்கும். அப்படிப்பட்ட சூலங்களைத் திரிசூலம் என்று கூறுவர்.

சூலம் என்று முடியும் இரு ஊர்கள் இம்மாவட்டத்தில் உள்ளன. ஒன்று திரிசூலம், மற்றது திருவடிசூலம். அதுவும் இறைவன் திருவடியில் உள்ள சூலம் என்ற பொருளையே உணர்த்தும். இவ்வூர்ப் பெயர்கள் பிற்காலத்தில் தோன்றியவைகளாக இருத்தல் வேண்டும். திரு இடைச்சுரம் என்பதே திருவடி சூலமாகியது என்பாரும் உளர்,[55] திரிசூலத்திற்கும் அது பொருந்தாமையால் சுரம் சூலமாகியத் என்பது ஏற்புடையதாகாது.

---

53. Tamil Lexicon-Vol-II - part-III
54. ,, ,,
55. செங்கற்பட்டு மாவட்டம் - சோ. ம. லெ - பக்:173

**81 மடம்:**

அரண்மனையை, கோயிலைச் சார்ந்து அமைக்கப்படுவது மடங்கள் எனப்படும். மடங்கள் பல்வேறு காரண அடிப்படையில் அமையும். பொதுவாக, தர்மகாரியங்கள் செய்யப்படும் இடங்களாக மடங்கள் அமைந்துள்ளன. அப்படிப்பட்ட மடங்களைச் சார்ந்து அமைந்த ஊரும் மடம் என்றே அழைக்கப்பட்டுள்ளது.

ஆண்டார் மடம் என்ற ஓர் ஊர் காணப்படுகிறது. நாட்டை ஆண்ட அரசரின் மடம் என்ற பொருளிலோ, அன்றி ஆண்டாள் நாச்சியாரின் பெயரிலோ இம்மடம் அமைந்திருக்க வேண்டும். மடம் என்ற பொதுக்கூறு மட்டுமே பெற்ற ஊரும் காணப்படுகிறது.

**82. நேமம்:**

நேமம் என்பது பல பொருள்களையுணர்த்தும் சொல்லாகத் தமிழ் லெக்ஸிகனில் காட்டப்பட்டுள்ளது.[56] அப்பொருள்களில் வேலி என்ற பொருளும் ஒன்று. ஊர்ப்பெயர்கள் என்ற நிலையில் நோக்கும்போது அப்பொருளே பொருத்தமாக அமைகிறது. வேலி என்ற பொதுக்கூறையுடைய வேறு சில ஊர்கள் இம்மாவட்டத்தில் இருப்பதும் இப்பொருளுடன் பொருத்தமாக அமைகிறது.

முன் ஒட்டாகிய சிறப்புக்கூறு ஏதும் இல்லாமல் நேமம் என்ற பொதுக்கூறு மட்டுமே பெற்று இரண்டு ஊர்கள் இம்மாவட்டத்தில் உள்ளன.

**83. நீராடி :**

இம்மாவட்டத்தில் சில புதுமையான பொதுக்கூறுகளையுடைய ஊர்களும் காணப்படுகின்றன. அவற்றுள் நீராடி என்பதும் ஒன்று. சிறப்புக்கூறாகிய முன் ஒட்டு இல்லாமல் பொதுக்கூறு மட்டுமே பெற்று இவ்வூர்ப் பெயர்கள் அமைந்துள்ளன.

நீர்நிலையைச் சார்ந்த பகுதியை இவ்வூர்ப் பெயர்கள் உணர்த்துகின்றன. நீராடும் ஒன்றை உணர்த்துவது போல் ஊர்ப்பெயர்கள் காணப்படுவதால் அருவி நீர் பாயும் மலையை

---

56 Tamil Lexicon -Vol-IV-Part-I

இச்சொல் உணர்த்தலாம். மலைப்பகுதியில் அமைந்த ஊரை, பின்பு அச்சொல்லே உணர்த்தியிருக்க வேண்டும்.

84. கண்டை :

இச்சொல் பதினாறு பொருள்களை யுணர்த்துமென்று அகராதி குறிப்பிடுகிறது.[57] நூற்கண்டு என்ற பொருளையும் இச்சொல் உணர்த்துமென்று அகராதி குறிப்பிடுவது இவ்வூர்ப் பெயர்களுக்கு பொருத்தமாக அமையக் கூடும்.

மலகண்டை, புன்னங்கண்டை என்று இரு ஊர்கள் இப் பொதுக் கூறுடன் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. மலர்க்கண்டை என்பது மலகண்டையாகியிருத்தல் வேண்டும். பொதுவாக மலரையும், புன்னை மலரையும் கட்டும் நூற்கண்டு என்ற பொருள்களில் இவ்வூர்கள் அமைந்திருத்தல் கூடும்.

85 மதி :

இப்பொதுக் கூறுடைய ஊர்ப்பெயரும் சற்று வேறுபாடு உடையதாகவே அமைந்துள்ளது. மதி என்பது தான் பொதுக் கூறா அல்லது பதி என்பது மதியாக மாற்றம் பெற்றுள்ளதா என்று ஐயுற வேண்டியுள்ளது.

வானார் மதி என்பது மானாமதியாக மாறியிருக்க வாய்ப்பு உண்டு. வகரம் மகரமாக மாறுதல் இயல்பு. அல்லது வான்-அம்-பதி என்பது மானாம் பதியாக மாறியிருக்கவும் கூடும். வானிலுள்ள அழகிய நகராகிய அமரர்பதியின் பெயரைப் பெற்ற ஊர்களாக இவை அமைந்திருக்கவும் வாய்ப்பு உண்டு. கடவுளர், தேவர் பெயர்களில் பல ஊர்கள் உள்ளதால் தேவர் தலைநகரின் பேரில் இவ்வூர்கள் அமைய வாய்ப்பு உண்டு. வானவன் மாதேவி மங்கலம் என்பது மானமதியாகியுள்ளது என்பாரும் உளர்.

86. திருத்தி:

இப்பொதுக்கூறுடைய ஊர்களும் சற்று வேறுபாடுடைய தாகவே காணப்படுகின்றன. 'துருத்தி' என்ற பொதுக்கூறுடைய ஊர்கள் பிறமாவட்டங்களில் உள்ளன. எனவே துருத்தி என்பது தான் திருத்தி என்று வழங்குகின்றதா என்றும் ஐயுற வேண்டியுள்ளது. ஆனால் பஞ்சந்திருத்தி என்று ஊர்ப்பெயர்கள் காணப் படுவதால் அப்படி எண்ணுவது பொருந்தாது.

57. மதுரைத் தமிழ்ப் பேரகராதி - முதல்பாகம் - இ. மா. கோபால கிருஷ்ணக்கோன்

பஞ்சக்காலங்களில் மக்களுக்கு உதவுவதற்காலச் சில நிலங்கள் அரசர்களால் தானமாக விடப்பட்டிருக்கலாம். அந்நிலங்கள், பஞ்சக்கால நிலையைத் திருத்தியமைக்கப் பயன்படுவதால் பஞ்சந்திருத்தி எனப்பட்டிருக்கலாம். அந்நிலங்களையொட்டி அமைந்த ஊர்களும் பின்னர் அப்பெயர்களையே பெற்றிருத்தல் வேண்டும்.

## 87. மணலி:

மணல் நிறைந்த பகுதியில் அமைந்த ஊர் மணலி எனப்பட்டுள்ளது. இப்பெயருடைய ஊர்கள் இரண்டு இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. முன் ஒட்டாகிய சிறப்புக்கூறு ஏதுமின்றி மணலி என்ற பொதுக்கூறு மட்டுமே பெற்று அவ்விரு ஊர்களும் அமைந்துள்ளன. அவ்வூர்கள் அமைந்துள்ள பகுதிகள் மணற்பாங்கான பகுதிகளாகவே இன்றும் காணப்படுகின்றன.

## 88. மாகரல்:

இப்பொதுக்கூறும் சிறிது வேறுபாடுடையதாகவே காணப்படுகிறது. இச்சொல் உணர்த்தும் நேரடியான பொருளை அகராதிகளில் காணமுடியவில்லை. மாகர் என்ற சொல் தேவர் என்ற பொருளையுணர்த்தும்.[58] அச்சொல்லே அல்விகுதி பெற்று மாகரல் என்று ஊர்ப்பெயராக அமைந்திருக்க வேண்டும்.

இம்மாவட்டத்தில் மாகரல் என்ற பெயருடன் அமைந்துள்ள இரண்டு ஊர்களிலுமே முன் ஒட்டு இன்மையால் இப்பெயர்பற்றி வேறு எதனையும் உணரமுடியவில்லை.

## 89 காலி :

கால் என்ற பொதுக் கூறுடைய ஊர்களைப் பற்றி முன்னர் விளக்கப்பட்டது. அது வாய்க்கால் என்ற பொருளைத் தருமாறு அமைந்திருந்தது. காலி என்பது கால் என்பதனுடன் தொடர்புடையதாகப் படினும் சிறப்புக் கூறினை நோக்கும் போது வேறுபாடுடையதாகவே தெரிகிறது.

கருங்காலி என்பது ஒருவகை மரத்தின் பெயர். அம்மரங்கள் மிகுந்துள்ள இடங்களில் அமைந்த ஊரும் அதே

58. Tamil Lexicon Vol - V - Part - I

பெயரையே பெற்றுள்ளன. இம்மாவட்டத்தில் உள்ள இரண்டு ஊர்களும் கருங்காலி என்ற பெயரையே பெற்றுள்ளன.

**90 போகம் ;**

இச்சொல் இன்பம், புணர்ச்சி, செல்வம் உள்ளிட்ட பல பொருளைப் புலப்படுத்தும் என்று லெக்ஸிகன் கூறுகிறது.[59] ஆனால் ஊர்ப்பெயர் என்ற நிலையில் நோக்கும் போது இன்பம் என்ற பொருளே பொருந்துவதாக அமைகிறது.

வீர போகம், சால போகம் என்ற இரண்டு ஊர்கள் இம் மாடத்தில் காணப்படுகின்றன. வீரத்தால் பெற்ற இன்பம், மிகுந்த இன்பம் என்ற பொருள் நுட்பம் தோன்றுமாறு அவ்வூர்ப் பெயர்கள் அமைந்துள்ளதையுணரலாம்.

**91 ஓடை :**

ஓடை என்பது சிறுவாய்க்கால் போன்ற, இயற்கையாக நீரோடுகின்ற நீர் நிலையைக் குறிக்கும். இப்பொதுக்கூறுடைய ஊர்கள் பல்வேறு மாவட்டங்களிலும் காணப்படுகின்றன. நாட்டின் பல பகுதிகளிலும் ஓடைகள் காணப்படுவதால் அவ்வோடைகளைச் சார்ந்து அமைந்த ஊர்களும் ஓடைகள் எனப்பட்டன.

ஜம்பு என்பவர் பெயரால் அமைந்த ஓடை ஜம்போடை எனப்பட்டுள்ளது. காரணை என்பது துண்டுபடுதல் என்ற பொருள் தரும் என்பது முன்னர்க் காட்டப்பட்டது. ஒரு ஓடையிலிருந்து பிரிந்து, துண்டுபட்டு ஓடும் அடுத்த ஓடை காரணையோடை எனப்பட்டுள்ளது.

**92 நாவல் :**

நாவல் மரங்கள் மிகுந்துள்ள பகுதியில் அமைந்த ஊர் நாவல் என்னும் பொதுக்கூறு பெற்றுள்ளது. இம்மரங்கள் பல இடங்களிலும் வளரும். வளரும் இடத்திற்கேற்ப முன் ஒட்டு மாறியமையும்.

இம்மாவட்டத்தில் இப்பொதுக்கூறுடைய இரண்டு ஊர்கள் காணப்படுகின்றன. இரண்டு ஊர்களுமே தோட்ட நாவல்

59. Tamil Lexicon Voi-V-Part - III

என்னும் பெயரைப் பெற்றுள்ளன. நாவல் மரங்கள் உள்ள தோட்டங்களில் புதிதாகத் தோன்றிய ஊர்கள் தோட்ட நாவல் என்ற பெயரைப் பெற்றுள்ளன.

93 சோகண்டி :

இவ்வூர்ப்பெயர்களும் எளிதில் பொருள் புரியாதவாறு புதிராகவே அமைந்துள்ளன. கண்டி என்பது பிரிந்துள்ள பகுதி எனப்படும். சோ என்ற முன் ஒட்டு வேறு பொருளைப் புலப் படுத்தக்கூடும். ஆனால் சோகண்டி என்று இன்று வழங்கப்படும் ஊரின் பழைய பெயர் சுந்தரபாண்டியச் சதுர்வேதி மங்கலம்[60] என்று கூறப்படுகிறது. அப்பெயர் மருவி, இன்றைய புது வடிவத்தைப் பெற்றிருக்கவும் கூடும்.

சோகண்டி எனப்படும் அதே பெயரில் இரண்டு ஊர்கள் இம்மாவட்டத்தில் உள்ளன. இரண்டு ஊர்களும் சுந்தர பாண்டியச் சதுர்வேதி மங்கலமாகவே கருதப்படும்.

94 கிளாய் :

இச்சொல் எள்ளுக்காய்க்கோது, புண்ணாக்கு ஆகிய பொருள் களைப் புலப்படுத்தும் என்று கூறப்படுகிறது.[61] எள்ளிலிருந்தே புண்ணாக்கும் தயாரிக்கப்படுவதால் அவ்வடிப்படையிலேயே இவ்வூர்ப் பெயர்கள் அமைந்திருக்க வேண்டும். கிழார் என்பது கிளாய் என்று மருவியும் இருத்தல்கூடும்.

கிளாய், சிறு கிளாய் என்ற பெயருடைய இரண்டு ஊர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. முன் ஒட்டின் மூலம் ஊர்ப்பெயர்பற்றிச் சிந்திக்க வாய்ப்பு இல்லாமல் உள்ளது.

95. மருதம்:

பண்டைத் தமிழர் இயற்கையமைப்பையொட்டி நிலங் களைப்பாகுபடுத்தியிருந்தனர். அதில், வயலும் வயல் சார்ந்த பகுதியும் மருதம் எனப்பட்டது. நால்வகை நிலங்களிலும் பொது வாகத் தமிழர் குடியிருந்து வாழ்ந்தாரேனும் மருத நிலமே சிறப்பாகக்குடியிருப்புக்கு ஏற்றதாய் அமைந்துள்ளது.

---

60. செங்கற்பட்டு மாவட்டம் - சோ. ம. லெ - பக்:132
61. மதுரைத் தமிழ்ப் பேரகராதி - முதல்பாகம்

ஊர் என்னும் பொதுக்கூறு சிறப்பாக மருத நிலக்குடியிருப்பையே குறிக்கும் என்பது முன்னர் எடுத்துக் காட்டப்பட்டது. ஆனால் அந்நிலத்தின் பெயரையே தம் பெயராகக் கொண்டு இரண்டு ஊர்கள் இம்மாவட்டத்தில் உள்ளதைக் காணமுடிகிறது.

96. மரம்:

ஆங்காங்குள்ள மரங்களின் அடிப்படையிலேயே ஊர்ப் பெயர்கள் அமைந்துள்ளன என்பது ஊர்ப்பெயர் பற்றி ஆய்பவர் களின் அடிப்படைக் கருத்து. அவ்வடிப்படையில் பல ஊர்கள், பல மரங்களினது பெயர்களின் அடிப்படையிலேயே அமைந் துள்ளதை இம்மாவட்டத்திலும் காணலாம். சிறப்புக்கூறாகிய முன் ஒட்டுகளாகப் பல மரப்பெயர்கள் அமைந்துள்ள விதம் முன்னர் விளக்கப்பட்டது. இங்கு எவ்வகை மரப்பெயரும் முன் ஒட்டாக அமையாமல் மரத்தின் தன்மையே முன் ஒட்டால் விளக்கப்பட்டுள்ளது.

நெடுமரம் என்பது நீண்ட கிளைகளையுடைய மரம் என்ற பொருளையும், இருமரம் என்பது பெரிய மரம் என்ற பொருளை யும் உணர்த்தும். இரு மரங்கள் சேர்ந்த நிலையையும் இப்பெயர் குறிக்கும்.

97 அம்பி :

ஓடம், மரக்கலம், விமானம், தெப்பம் உள்ளிட்ட பல பொருள்களை இச்சொல் புலப்படுத்துகிறது.[62] பெரும்பாலும் நீர் மிதவையினையே இச்சொல் உணர்த்துவதால் நீர் நிலையைச் சார்ந்து இவ்வூர்கள் அமைந்ததனால் இப்பெயரைப் பெற்றிருக்க லாம்.

விஜயநகர அரசரின் தலைநகர் ஹம்பி. அம்மன்னர் ஆட்சி இப்பகுதியில் நிலவியதால் அப்பெயர் அம்பி என்று இங்கு மாறி வழங்குமாறு ஊர்கள் தோன்றியிருக்கலாம். கீழ் அம்பி, மேல் அம்பி என்று இரண்டு ஊர்கள் இம்மாவட்டத்தில் உள்ளன.

98 வல்லம் :

வல்லம் என்ற சொல்லும் அரசனுடைய கோட்டையைக் குறிப்பதாகத் தெரிகின்றது.[63] வலிமையையுணர்த்தும் வல்

---

62. மதுரைத் தமிழ்ப் பேரகராதி - முதல்பாகம்
63. ஊரும் பேரும் - டாக்டர். ரா.பி. சேதுப்பிள்ளை-பக்:78

என்ற வேர்ச்சொல்லினடியாகவே வல்லம் என்ற ஊர்ப்பெயர்கள் அமைந்திருக்கவேண்டும். வல்லக் கோட்டை என்ற பெயருடைய ஊரும் இம்மாவட்டத்தில் இருப்பது இச்சிந்தனைக்கு வலுவூட்டு கிறது. கோட்டையிருந்த இடத்தைச் சார்ந்து அமைந்த ஊரும் வல்லம் என்ற பெயரையே பெற்றுள்ளது.

இம்மாவட்டத்தில் வல்லம் என்ற பெயருடைய இரண்டு ஊர்கள் காணப்படுகின்றன. ஊர்ப்பெயரே பொதுக் கூறாக அமைந்துள்ளது. முன் ஒட்டு ஏதும் இடம் பெறவில்லை.

**99 புலம் :**

புலம் என்ற சொல் பொதுவாக நிலம் என்ற பொருளை யும், சிறப்பாகத் தண்ணீர் தேங்கி நிற்கும் ஆழ் நீர் நிலை யையும் உணர்த்தும். நீர் தேங்கி நிற்கும் நெடுவயல்கள் புலம் எனப்பட்டுள்ளனவாதலால் அவ்விடங்களைச் சார்ந்து அமைந்த ஊர்களும் அதே பெயர்களைப் பெற்றுள்ளன.

செம்மண் படிந்த இடம் 'செம்புலம்' எனப்பட்டுள்ளது. 'செம்புலப் பெயல் நீர், என்ற குறுந்தொகை அடியை இவ்வூர்ப் பெயர் நினைவூட்டுகிறது. 'பட்டிபுலம்' என்ற பிறிதோர் ஊரும் இம்மாவட்டத்தில் உள்ளது. பட்டி என்பது முல்லை நிலச் சிற்றூராகையால், முல்லை நிலத்தில் அமைந்த ஊர் என்ற பொருளைப் பட்டிபுலம் என்ற ஊர்ப்பெயர் உணர்த்துகிறது.

**100 மணல் :**

செம்மண் படிந்த இடம் செம்புலம் எனப்பட்டது போன்று மணல் படிந்த இடம் அப்பெயரையே பெற்றுள்ளது. அவ்விடத்தில் அமைந்த ஊர்களும் மணல் என்ற பொதுக் கூறினைப்பெறலாயின. மணலி எனப்பட்டதும் மணல் என்பத னின்றும் தோன்றியதேயாம்.

கரிக்கும் தன்மையுடைய மணல் 'கரிமணல்' எனப்பட்டுள் ளது. கரிய நிறமுடைய மணல் 'கரிய மணல்' எனப்பட்டுள்ளது. மணலின் தன்மை, நிறத்திற்கேற்பப் பல ஊர்கள் தோன்றி யுள்ளன.

**101 விடந்தை :**

இப்பொதுக்கூறினையுடைய இரண்டு ஊர்கள் இம்மாவட்டத் தில் உள்ளன. இரண்டு ஊர்களுமே 'திரு' என்ற அடைச்சொல்

பெற்றுள்ளன. அதனால், இறைத்தொடர்பான ஊர்களாகவே அவை இருக்கும் என்பது பொதுவான கருத்து. திருவிடந்தை என்பதை, திரு-இட-எந்தை என்று பிரித்து, திருமகளைத் தமது இடப்பாகத்தில் கொண்ட எந்தையாகிய பெருமாள் [64] என்று இவ்வூர்ப்பெயரை விளக்குவோர் உண்டு. அது பொருந்துவதாகப் படவில்லை.

திரு என்பது அவ்வூரின் சிறப்புக்கருதிப் பின்பு சேர்த்து வழங்கப்படும் முன் ஒட்டாகும். எனவே திருவென்பது சேராமலேயே அவ்வூர்ப் பெயர் முழுமையான பொருளைத் தர வேண்டும். இங்கு திருவென்பது சேராவிடின் இடந்தை என்பது முன்பு கூறப்பட்ட பொருளைத்தர மாட்டாது. எனவே அது பொருந்தாது.

இலந்தை மரங்கள் நிறைந்த பகுதியாக அவ்வூர் இருந்திருக்கும் அதனால் ஊர்ப்பெயரும் இலந்தை என்றே இருந்திருக்க வேண்டும். அது இறைவன் எழுந்தருளிய இடமான பின்பு திரு என்பது சேர்ந்து திருவிடந்தை என்றாகியுள்ளது.

102. இரும்பிலி:

புலி என்பதுவே பிலி என்று மருவியுள்ளது. விலங்குகளின் பெயர்கள் பலவற்றை முன் ஒட்டாகப்பெற்று பல ஊர்கள் உள்ளமை முன்பு எடுத்துக்காட்டப்பட்டது. இங்கு புலி என்னும் விலங்கின் பெயர் பொதுக்கூறாகக் கூறப்பட்டுள்ளது. தொண்டை மண்டலத்திலிருந்த 24 கோட்டங்களில் புலியூர்க் கோட்டமும் ஒன்று என்பதும் குறிப்பிடத் தக்கது.

இரும்பிலிச்சேரி என்ற பெயரில் ஓர் ஊரும் உள்ளது. இரும்பிலி என்ற பெயரில் இரண்டு ஊர்கள் இம்மாவட்டத்தில் உள்ளன.

103. கிரி:

குன்று, மலை என்ற தமிழ்ச் சொற்கள் உணர்த்தும் பொருளையே கிரி என்ற வடசொல் உணர்த்துகிறது. வடமொழி தமிழ் நாட்டில் செல்வாக்குப் பெற்ற பின் சில ஊர்ப்பெயர்களும் வடமொழியிலேயே அமைந்துள்ளன. அப்பெயர்களில் கிரி என்ப

---

64. செங்கற்பட்டு மாவட்டம் - சோ. ம. லெ - பக்: 190

தும் ஒன்று. இப்பெயர் வைணவ சமயக் கடவுளரைக் குறிக்கும் பெயராகவே அமைந்துள்ளது என்பதும் குறிப்பிடத்தக்கது.

திருமாலின் திருநாமங்களில் ஒன்று முகுந்தன் என்பது. அப்பெயரில் முகுந்த கிரி என்ற ஊர் அமைந்துள்ளது. கொண்டர கிரி என்ற ஓர் ஊரும் உள்ளது. இப்பெயரின் முன் ஒட்டு கொண்டல் என்ற தமிழ்ச் சொல்லா அல்லது வேறு தெலுங்குச் சொல்லா என்பது விளங்கவில்லை.

**104. வெண்மணி :**

மணி என்னும் பொதுக்கூறுடைய ஊர்கள் பற்றி முன்பு விளக்கப்பட்டது. மணி என்பதனுடன் வெண்மணி என்ற பொதுக் கூறுடைய ஊர்களும் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. பொதுவான மணியைப் பொதுக்கூறாகக் கொண்டிருப்பதுடன் வெண்மை நிறமுடைய மணியைப் பொதுக்கூறாகவும் கொண்டு இரண்டு ஊர்கள் உள்ளன.

வெண்மணி என்பது, மணியென்னும் அணியைக் குறிக்கின்றதா அல்லது கடல் மணியாகிய உப்பைக் குறிக்கின்றதா என்றும் ஐயுற வேண்டியுள்ளது. 'கரிப்பு மணிகள்' என்று உப்பு குறிப்பிடப்படும் நிலையை இன்றும் காண முடிகிறது. எனவே உப்பின் நிறம் நோக்க வெண்மணி என்று குறிப்பிடப்பட்டிருக்க லாம். வெண்மணி என்றும், சின்ன வெண்மணி என்றும் குறிப் பிடப்படும் ஊர்கள் கடற்கரையையொட்டியே அமைந்திருப்பதும் எண்ணுதற்குரியது.

**105. கோடி :**

கோடு என்ற சொல் மலையையுணர்த்தும் அச்சொல்லே கோடி என்று மருவியுள்ளது. மலை என்ற பொருளையுணர்த்து மாறு பல ஊர்கள் கோடி என்னும் பொதுக்கூறுடன் தமிழ் நாட் டின் பல மாவட்டங்களிலும் உள்ளன.

ருத்ர கோடி என்ற ஓர் ஊர உள்ளது. ருத்ரன் என்பது சிவனைக் குறிக்கும். அவன் எழுந்தருளிய மலை என்ற பொருளில் அவ்வூர் அழைக்கப்படுகிறது. கிளிக் கோடி என்ற பெயரிலும் ஓர் ஊர் உள்ளது. கிளி போன்ற வடிவில் அமைந்த மலை கிளிக் கோடி என்று கூறப்பட்டிருக்கலாம். அல்லது கிளிகள் உறையும் மலை என்ற பொருளிலும் அமைந்திருக்கலாம்.

**106 கூடல் :**

கூடும் இடம் கூடல் எனப்படும். பல பொருட்கள் கூடும் இடமாகவோ, அறிஞர்கள் கூடும் இடமாகவோ, அன்றி ஆறுகள் கூடும் இடமாகவோ அவை அமையலாம். நான்கு மாடங்கள் கூடிய இடமாகக் கருதப்படுவதால் நான்மாடக் கூடல் என்று மதுரை கூறப்படுகிறது.

திருமுக்கூடல் என்றோர் ஊர் இம்மாவட்டத்தில் உள்ளது. பாலாறு, சேயாறு, பம்மையாறு ஆகிய மூன்று ஊர்களும் கூடு மிடமாக அவ்வூர் உள்ளதால் அப்பெயர் பெற்றது என்று கூறப் படுகிறது.[65] திரு என்ற அடைச்சொல் ஊர்ப்பெயரில் இருப்ப தால் கடவுளர் மூவர் ஒன்று கூடிக் காட்சியளித்த ஊராகவும் இருந்திருக்கலாம் என்றும் எண்ண வேண்டியுள்ளது. சிவன் கூடல் என்ற வேறோர் ஊரும் உள்ளது. சிவன் தன் மனைவியைக் கூடிய ஊர் என்ற பொருளில் அமைந்ததா அல்லது பிற கடவுள ரைச் சிவன் கூடிய ஊர் என்ற பொருளில் அமைந்ததா என்பது விளங்கவில்லை.

**107 துளி :**

தூளி என்பதுவே துளி என்று மருவியுள்ளது. தூளி என்ற சொல் தூசி, பூந்தாது என்ற பொருள்களை யுணர்த்தும்.[66] பூமரங்கள் நிறைந்துள்ள பகுதியில் அமைந்த ஊர்கள் தூளி என்ற பொதுக்கூறைப் பெற்று அமைந்துள்ளன.

அகரம் துளி, அத்திமூர் மேல் துளி என்ற இரண்டு ஊர்கள் இம்மாவட்டத்தில் உள்ளன. அகரம் என்பது அக்ரஹாரம் என்பதன் திரிபு என்பது முன்னர்க் கூறப்பட்டது. மலர்ச்சோலை நிறைந்த பகுதியில் அமைந்த ஊர்கள் இப்பொதுக்கூறைப் பெற்று அமைந்துள்ளன.

**108 கடல் :**

குன்று, மலை போன்ற பொதுக்கூறுகளைப் பெற்று ஊர்கள் அமைந்திருப்பது போன்று கடல்என்பதையும் பொதுக் கூறாகப் பெற்று இரண்டு ஊர்கள் இம்மாவட்டத்தில் அமைந் துள்ளன. கடலைச் சார்ந்த பகுதிகளாக இவ்வூர்கள் அமைய

---

65. செங்கற்பட்டு மாவட்டம் சோ. ம. லெ - பக்; 171
66. Tamil Lexicon-Vol - IV part-7

வில்லை. எனவே இங்குக் கடல் என்பது உருவகமாகவே ஊர்ப் பெயராக அமைந்துள்ளது. கடல் போன்று அமைந்த ஏரி அல்லது பிற நீர் நிலையைச் சார்ந்து இவ்வூர்கள் தோன்றி யிருக்கலாம். அதனால் இவ்வூர்கள் கடல் என்னும் பொதுக் கூறு பெற்றுள்ளன.

சிறுகடல், திருக்கடல் என்னும் இரண்டு ஊர்கள் இம்மாவட் டத்தில் உள்ளன. ஊரின் அமைப்பு, சிறப்பின் அடிப்படையில் முன் ஒட்டுகள் அமைந்துள்ளன.

**109 தோப்பு :**

மரங்கள் கூட்டமாக உள்ள இடம் தோப்பு எனப்படும். பல்வேறு மரங்களுக்கு ஏற்பத் தோப்புகளும் பலவகைப்படும். அத்தோப்புகளைச் சார்ந்த பகுதியில் அமைந்த ஊர்களும் அத்தோப்புகளின் பெயர்களையே பெறலாயின.

இம்மாவட்டத்தில் இரண்டு ஊர்கள் மட்டுமே தோப்பு என்ற பொதுக்கூறு பெற்றுள்ளன. ஆர்க்காடு தோப்பு என்ற ஓர் ஊர் உள்ளது. அத்திமரங்கள் நிறைந்துள்ள பகுதியில் அமைந்த ஊர் என்ற பொருளை அவ்வூர் உணர்த்தும். தாட்டிதோப்பு என்ற பிறிதோர் ஊரும் உள்ளது. தாட்டி என்ற சொல் சாமார்த்தியம், தைரியம் உள்ளிட்ட பல பொருளைப் புலப்படுத்தும் என்று கூறப்படுகிறது.[67] அச்சொல் கெட்டிக்காரி, ஆண்தன்மை வாய்ந்தவள், வைப்பாட்டி என்று பெண்ணை உணர்த்துமாறும் கூறப்படுவதால், தாட்டி தோப்பு என்பது குறிப்பிட்ட ஒரு பெண்ணுக்குரிய தோப்பு என்பதும், அத்தோப்பையொட்டி யமைந்த ஊரும் பின்னர் அப்பெயரைப் பெற்றுள்ளது என்பதும் உணரப்படுவதற்குரியதாக உள்ளது.

**நிறைவுரை:**

ஊர்ப்பெயர்கள் பற்றிய ஆய்வில் ஊர்களுக்கிடையில் காணப் படும் பொதுக் கூறுகள் பெரிதும் துணை செய்கின்றன. ஒரு பொதுக்கூறையுடைய பல ஊர்கள் உள்ளன என்றால், அவ்வூர் களுக்கிடையில் சில ஒப்புமைத் தன்மைகள் உள்ளதை உணர முடிகிறது. அவ்வொப்புமைகளின் அடிப்படையிலேயே புதிய புதிய ஊர்கள் தோன்றியுள்ளன.

---

67, Tamil Lexicon–Vol - III–part-V

பொதுக்கூறுகள் பெரும்பாலும் காலத்தால் முந்தியவை களாகவே உள்ளன. சில பொதுக்கூறுகளே அண்மைக் காலத்தில் தோன்றியுள்ளன. செங்கற்பட்டு மாவட்ட ஊர்ப்பெயர்களில் அமைந்துள்ள 109 பொதுக்கூறுகளும் இம்மாவட்டத்தைப் பற்றிய பல அடிப்படைச் செய்திகளை எடுத்துக் காட்டுகின்றன. சில பொதுக்கூறுகள் உணர்த்தும் பொருளை இன்று எளிதில் உணர முடியவில்லை. எனினும் தெளிவான பொருளைத் தொடக்க காலத்தில் அவை உணர்த்திப் பின்னர் வடிவம் மாறிய தன் விளைவால் உண்மைப் பொருளை இழந்திருத்தல் வேண்டும். இங்குக் காணப்படும் பொதுக்கூறுகள் இம்மாவட்டத்தின் தனித் தன்மைகளையும் உணரத் துணை செய்கின்றன.

# ஊர்ப்பெயர்களின் சிறப்புக்கூறுகள்

ஊர்ப்பெயர்களில் முன் ஒட்டுகளாக அமைவன சிறப்புக்கூறுகள். ஊர்ப்பெயர்கள் பற்றிய ஆய்விற்குப் பொதுக்கூறுகளைப் போன்றே சிறப்புக் கூறுகளும் பயன் படுகின்றன. ஊர்கள் அமையும் இடங்களைப் பற்றிய விளக்கங்களைப் பொதுக்கூறுகள் புலப்படுத்துகின்றன. அவ்விடங்களுக்குரிய விளக்கம் பல இடங்களுக்கும் பொருந்துமாறு அமைவதும் உண்டு கடற்கரையைச் சார்ந்த சிற்றூர்கள் பெரும்பாலும் பாக்கம் என்று வழங்கப் படுகின்றன. ஊர் அமையும் இடத்தினைப் பாக்கம் என்ற பொதுக்கூறு எடுத்துக் காட்டுகிறது. ஆனால் கடற்கரைச் சிற்றூர்கள் அனைத்துமே ஒன்று போல அமையாது. அச்சிற்றூர்களுக்கிடையில் சிறிது வேறுபாடும் இருக்கும். அவ்வேறுபாட்டை விளங்கும் வகையில் அமைவதே ஊர்ப்பெயரில் முன் ஒட்டாக அமையும் சிறப்புக் கூறுகள்.

ஊர்ப்பெயராய்வில், பொதுக்கூறுகளைப் பெரும் பிரிவுகள் என்று கூறினால் சிறப்புக் கூறுகளைச் சிறு பிரிவுகள் என்று கூறலாம். பல்வேறு இடங்களுக்கும் பொதுவான தன்மையைப் பொதுக்கூறு புலப்படுத்துகிறது. அவ்வவ்விடங்களுக்குரிய சிறப்புத் தன்மைகளைச் சிறப்புக்கூறு சித்தரிக்கிறது. ஒவ்வொரு பொதுக்கூறிலும் பல சிறப்புக் கூறுகள் அடங்கும். ஒரு பொதுக் கூறுக்குரிய சிறப்புக்கூறு பிற பொதுக் கூறுகளிலும் இடம் பெறுவதுண்டு மா என்ற பழத்தைக் குறிக்கும் சிறப்புக்கூறு பாக்கம் என்ற பொதுக்கூறுடன் சேர்ந்து மாம்பாக்கம் என்றோர் ஊராகியுள்ளது. அதே சிறப்புக்கூறு பட்டு என்ற பொதுக்கூறுடன் சேர்ந்து மாம்பட்டு என்ற பிறிதோர் ஊராகவும் உருப்பெற்றுள்ளது. இவ்வாறு பல சிறப்புக்கூறுகள் பல்வேறு பொதுக்கூறுகளுடன் சேர்ந்து வெவ்வேறு ஊர்கள் தோன்றக்காரணமாகியுள்ளன.

பாக்கம், பட்டு போன்ற பொதுக்கூறுகள் நில அடிப்படையில் வேறுபட்டுள்ளன. ஆனால் அவ்விரு நிலங்களிலும் மாமரங்ள் உற்பத்தியாவதால் இரு வேறுபட்ட பொதுக்கூறுகளிலும்

மா என்ற சிறப்புக் கூறினைக் காண முடிகிறது. இவ்வகையில் சிறப்புக்கூறுகளின் மூலம் சில உண்மைகளையும் நாம் உணர முடிகிறது. பனை என்ற சிறப்புக்கூறினைப் பல பொதுக்கூறுகளி லும் காண முடிகிறது. அதற்குக் காரணம், பனைமரம் வேறு பட்ட நிலங்களிலும் உற்பத்தியாகும் என்பதேயாகும். அதே சமயம் சில சிறப்புக்கூறுகள் சில பொதுக்கூறுகளில் மட்டுமே இடம் பெறும்; பிற பொதுக்கூறுகளில் இடம் பெறமாட்டா.

குப்பம் என்ற பொதுக்கூறில் பல சிறப்புக்கூறுகள் இடம் பெற்றுள்ளன. எனினும், மிகுதியாக இடம்பெற்ற சிறப்புக்கூறு கள் தனி மனிதர்களின் பெயர்களேயாம். அதற்கடுத்து, பல்வேறு சாதிப்பெயர்களின் அடிப்படையில் அமைந்த சிறப்புக்கூறுகளை யும் குப்பம் என்ற பொதுக்கூறில் காண முடிகிறது. பிறவகைப் பொதுக்கூறுகளில், இந்த அமைப்பில் இடம் பெற்ற சிறப்புக்கூறு களைக் காண முடியாது.

கண்டிகை என்ற பொதுக்கூறிலும் பெரும்பாலும் தனி மனிதப் பெயர்களே காணப்படுகின்றன. ஆனால் இரண்டு வகை யில் குப்பம் என்ற பொதுக்கூறினின்றும் இப்பொதுக்கூறில் இடம் பெற்ற சிறப்புக்கூறுகள் வேறுபடுகின்றன. பெரும்பாலான தனிமனிதப் பெயர்கள் பிற ஊர்ப்பெயர்களுடன் சேர்ந்தே கூறப் பட்டுள்ளன. கவுணிபுரம் பத்ராஜு கண்டிகை, வேலூர் கிருஷ்ண நாயுடு கண்டிகை என்பன சில சான்றுகள், பெரும்பாலும் தெலுங் குப் பெயர்களாகவே சிறப்புக்கூறுகள் அமைந்திருப்பது, குப்பம் என்ற பொதுக்கூறினின்றும் வேறுபடும் பிறிதோர் அம்சமாகும்.

மேடு என்ற பொதுக்கூறில் அடங்கும் சிறப்புக்கூறுகளிலும் தனிமனிதர்களைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. ஆனால் பெரும் பாலும் சமுதாயத்தில் பின் தங்கியவர்களின் பெயர்கள் தான் ஊர்ப்பெயர்களில் சிறப்புக் கூறுகளாக இடம் பெற்றுள்ளன. நில அடிப்படையில் மேடு என்ற பொதுக்கூறு பெற்றுள்ள ஊர் கள், சமுதாயத்தில் பிற்பட்டவர்களாகக் கருதப்பட்டவர்களின் வாழ்விடங்களாக அமைந்துள்ளதை இச்சிறப்புக் கூறுகள் உணர்த்துகின்றன.

புரம் என்ற பொதுக்கூறில் இடம் பெற்றுள்ள சிறப்புக் கூறு கள் பெரும்பாலும் தனிமனிதர்களின் பெயர்களைக் குறிப்பிடு வதுடன் அரசர்களின் பெயர்களையும், தெய்வங்களின் பெயர் களையும் எடுத்துக்காட்டுகின்றன.

சேரி என்ற பொதுக்கூறில் சில சாதிப்பெயர்கள் எடுத்துக் காட்டப்பட்டாலும், பெரும்பாலும் செடிப் பெயர்களும் மரப் பெயர்களுமே மிகுதியான சிறப்புக் கூறுகளின் மூலம் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. சேரி என்பது தமிழ்ப் பெயராகையால் தெலுங்கு மொழி பேசப்படும் திருத்தணி வட்டத்தில் சேரியைப் பற்றி விளக்கப் பயன்படும் சிறப்புக் கூறுகள் மிகவும் குறைவாகக் காணப்படுகின்றன.

பட்டு என்ற பொதுக்கூறில் இடம் பெற்றுள்ள சிறப்புக் கூறு களில் சாதிப் பெயர்களும் சில தனிமனிதப் பெயர்களும் இடம் பெற்றிருந்தாலும் மிகுதியான சிறப்புக் கூறுகள் மரப்பெயர் களாகவே உள்ளன.

பாக்கம் என்ற பொதுக்கூறில் சில இனப்பெயர்களும், ஆறு பற்றிய அடைச் சொற்களும் இறைவனைப் பற்றிய சில அடைச் சொற்களும் சிறப்புக் கூறுகளாக இடம் பெற்றிருந்தாலும் பெரும்பாலான சிறப்புக் கூறுகள், காடு, கழனி, மரம், கல் போன்ற இயற்கைப் பொருள்களைப் பற்றியே விளக்குகின்றன.

ஊர் என்ற பொதுக்கூறில் இடம் பெற்றுள்ள சிறப்புக்கூறு கள் மேல், கீழ், நடு, பள்ளம், மேடு போன்ற நில அமைப்பைப் பற்றி விளக்கினாலும், பெரும்பாலான அடைச்சொற்கள் மரம், செடி பற்றிய இயற்கைப் பொருள்களையே எடுத்துக்காட்டு கின்றன.

இவ்வாறு, ஒவ்வொரு பொதுக்கூறிலும் சில வகைச் சிறப்புக் கூறுகள் சிறப்பிடம் பெறுவதை உணர முடிகிறது. அவ்வப் பொதுக்கூறையுடைய ஊர்களின் தனிப்பட்ட சிறப்புத் தன்மை களையுணர இச்சிறப்புக்கூறுகள் பெரிதும் துணை செய்கின்றன. தனிப்பட்ட ஊர்களின் தனித்தன்மைகளைப் பிரித்துணரவும் இவ்வகையில் சிறப்புக்கூறுகள் பெரிதும் துணை செய்கின்றன.

ஊர்ப்பெயராய்விற்குப் பொதுக்கூறுகளைப் போலவே சிறப்புக் கூறுகளும் பயன்படுகின்றன. சில நிலைகளில் பொதுக்கூறு களைக் காட்டிலும் சிறப்புக்கூறுகளே மிகுதியும் பயன்படுகின் றன என்றும் கூறலாம். ஆனால் சில சிறப்புக்கூறுகளையும், சில பொதுக்கூறுகளையும் நோக்கும் போது இக்கருத்து வலு விழந்து போய் விடவும் செய்கிறது. ஏனெனில், செங்கற்பட்டு மாவட்டத்தைப் பொறுத்தவரையில் சிறப்புக்கூறுகளாகப் பல ஊர்ப்பெயர்களில் இடம் பெற்ற முன் ஒட்டுகள், வேறு சில

ஊர்ப்பெயர்களில் பொதுக் கூறுகளாகிப் பின் ஒட்டுகளாகி யுள்ளன.

கல் என்பது சிறப்புக் கூறாகிய முன் ஒட்டாக இடம் பெற்று, கல்பாக்கம், கல்பட்டு போன்ற ஊர்கள் அமைந்துள்ளன. அதே கல் என்பது பொதுக்கூறாகிய பின் ஒட்டாக இடம் பெற்று, பருக்கல், வெங்கல் போன்ற ஊர்கள் அமைந்துள்ளன. இது போன்று வேறுசில அடைச்சொற்களும் சிறப்புக்கூறு, பொதுக்கூறு என்ற இரு நிலைகளிலும் இடம் பெற்றுள்ளன. இப்படிப்பட்ட நிலையில் பொதுக்கூறினின்றும் சிறப்புக்கூறினை வேறுபடுத்தி, அதன் நுட்பமான வேறுபாட்டினையும் பிரித்துக் காணமுடியவில்லை. இப்படிப்பட்ட இடங்கள் குறைவு. எனவே, ஊர்ப்பெயர்களை மட்டுமின்றி அவ்வூர்களைப் பற்றிய சில நுட்பமான செய்திகளையும் உணர்வதற்குச் சிறப்புக் கூறுகள் பெரிதும் பயன்படுகின்றன என்றே கூறவேண்டும்.

பொதுக் கூறுகளைப்பற்றி விளக்கிய இயலிலேயே ஒவ்வொரு பொதுக்கூறிலும் இடம் பெற்றுள்ள ஊர்களைப்பற்றியும் பொதுவாக விளக்கப்பட்டுள்ளது. அப்பொது விளக்கத்திற்கு ஊர்ப் பெயர்களின் சிறப்புக்கூறுகளே பயன்பட்டுள்ளன. எனினும், பொதுக்கூறுகளின் அடிப்படையிலேயே அங்கு சிறப்புக் கூறுகள் வகைப்படுத்தப்பட்டன. அதனால் சிறப்புக்கூறுகளைத் தனியாக வகைப்படுத்திக் காண வேண்டுவது அவசியமாகிறது. அப்போது தான் சிறப்புக்கூறுகளைப் பற்றி முழு நிலையில் உணரமுடியும். பொதுக்கூறு என்ற பாகுபாடு இன்றிச் சிறப்புக் கூறுகள் மட்டும் இங்குத் தனித்து ஆராயப்படுகின்றன.

ஊர்ப்பெயர்களில் இடம் பெறும் சிறப்புக் கூறுகள் பல வகைப்படும். எனினும், பொது நிலையில் அவைகளை முப் பெரும் பிரிவுகளாகப் பிரித்துக் கூறுவர்.[1]

1. விளக்கப் பெயர் அடை
2. ஆட்பெயர் அடை
3. பிறவகைப் பெயர் அடை

என்பன அப்பிரிவுகள். "விளக்கப் பெயர் அடை என்ற பிரிவில் நில அமைப்பு, நீர் நிலைகள், தாவரம், விலங்கு போன்ற

1. கல்வெட்டில் ஊர்ப்பெயர்கள் - ஆர். ஆளவந்தார் - பக்: 13

இயற்கைக் கூறுகளும், தோட்டம், வயல் போன்ற செயற்கைக் கூறுகளும், கீழ், மேல், பெரிய, சிறிய போன்ற ஒப்புமைக் கூறுகளும் அடங்கும்.''[2]

செங்கற்பட்டு மாவட்ட ஊர்ப்பெயர்களில் பெரும்பாலானவற்றின் சிறப்புக் கூறுகள் விளக்கப்பெயர் அடைகளையே பெற்றுள்ளன. தனிப்பட்ட முறையில் நோக்கும்போது மரம், செடி, விலங்கு, நீர் நிலைகள், நிலஅமைப்பு போன்றனவற்றை விளக்கும் சிறப்புக்கூறுகள் அதிக அளவில் காணப்படாவிட்டாலும், மொத்தத்தில் நோக்கும்போது விளக்கப் பெயர் அடைகள் மிகுதியாகவே உள்ளன.

ஆட்பெயர்களைச் சிறப்புக் கூறுகளாகக் கொண்ட ஊர்ப்பெயர்கள் ஆட்பெயர் அடை என்று கூறப்படுகிறது.[3] இம்மாவட்டத்தைப் பொறுத்தவரையில் ஆட்பெயர் அடைகள் தனிப்பட்ட முறையில் மிகுதியாகவே அமைந்துள்ளன. கண்டிகை போன்ற சில பொதுக்கூறுகளில் ஆட்பெயர் அடைகளே மிகுதியாக உள்ளன என்பது முன்னர் விளக்கப்பட்டுள்ளது.

இங்குக் குறிப்பிடப்பட்ட இரண்டு வகையிலும் அடங்காத பிறவகைப் பெயர்களைச் சிறப்புக் கூறுகளாகக் கொண்ட ஊர்ப்பெயர்கள் பிறவகைப் பெயர் அடையில் அடங்கும்.[4] அவ்வகையில் அடங்கும் சில சிறப்புக்கூறுகளையும் இம்மாவட்டத்தில் காணமுடிகிறது.

சிறப்புக்கூறுகள் அனைத்தையும் மேற்கண்ட மூன்று பெரும் பிரிவிற்குள் அடக்கி விட முடியும். எனினும், இம்மாவட்ட ஊர்ப்பெயர்களில் இடம் பெற்ற சிறப்புக்கூறுகளைப் பற்றிப் பொதுவாக நோக்காமல், அனைத்துச் சிறப்புக்கூறுகளையும், அக்கூறுகளுக்குள் அடங்கிய ஊர்களையும் தனித்தனியாகக் காணவேண்டியுள்ளதால், மிகுதியாக இடம் பெற்றுள்ள சிறப்புக்கூறுகள் என்ற அடிப்படையில் அவைகள் இங்கு ஆராயப் படுகின்றன.

---

2. கல்வெட்டில் ஊர்ப்பெயர்கள் – ஆர். ஆளவந்தார்- பக்: 14, 15
3. ,, ,, பக்: 17
4. ,, ,, பக்: 18

ஆட்பெயர் அடைகளே மிகுதி !

செங்கைமாவட்ட ஊர்ப்பெயர்களில் இடம் பெற்றுள்ள சிறப்புக் கூறுகளில் ஆட்பெயர் அடைகளே மிகுதியாகக் காணப் படுகின்றன. சில அடைச்சொற்கள் தெளிவில்லாமலும், வேறு சில அடைச்சொற்கள் எப்பிரிவில் அடக்குவது என்று பகுத் துணர முடியாத நிலையிலும் உள்ளன. அப்படிப்பட்ட அடைச் சொற்கள் தவிர எஞ்சிய ஆட்பெயர் அடைகள் இங்கு எடுத்துக் காட்டப்படுகின்றன.

ஆட்பெயர்கள் என்று பொது நிலையில் கூறப்பட்டாலும், இம் மாவட்ட ஊர்ப்பெயர்களில் சிறப்புக்கூறுகளாக இடம் பெற் றுள்ள ஆட்பெயர்கள் பல திறப்பட்டனவாக உள்ளன.

அவைகளை நான்கு வகையாகப் பகுத்துக் காணலாம்.

1. ஆடவர் பெயர் அடைகள்
2. மகளிர், பெயர் அடைகள்
3. மன்னர், தலைவர் போன்றோர் பெயர் அடைகள்
4. கடவுளர் முனிவர் முதலானோர் பெயர் அடைகள்

என்பன அப்பிரிவுகள். மன்னர், தலைவர் போன்றோர் பெயர் அடைகளிலும், கடவுளர் பெயர் அடைகளிலும் கூட ஆடவர், மகளிர் என்ற பாகுபாடு காணப்படுகின்றன. எனினும், பொது வான மனிதப் பெயர்களாக உள்ளனவற்றை மட்டும் ஆடவர், மகளிர் என்று வகைப்படுத்திப் பிறவற்றை அவ்வாறு வகைப் படுத்தாது விடப்படுகிறது. அன்றியும், பொதுவான மனிதப் பெயர்களே மிகுதியாகக் காணப்படுவதால் அப்பெயர்களை ஆடவர், மகளிர் என்று பகுத்துக் காணவேண்டுவது அவசியமாகிறது.

1. ஆடவர் பெயர் அடைகள்:

ஏறத்தாழ எல்லாப் பொதுக்கூறுகளிலும் ஆடவர் பெயர்கள் சிறப்புக்கூறுகளாக இடம் பெற்றுள்ளன. எனினும், சில பொதுக் கூறுகளில் பிற அடைச் சொற்களைக் காட்டிலும் ஆடவர் பெயர் அடைகளே மிகுதியாக அமைந்துள்ளன. தனிமனிதர் களின் பெயரால் பெரும்பாலான ஊர்கள் இம்மாவட்டத்தில் தோன்றியுள்ளதை யுணரமுடிகிறது. சமுதாய நிலையில், பொருளாதார அடிப்படையில் வேறுபட்ட, பல திறப்பட்ட

ஆடவர் பெயர்கள் அடைச்சொற்களாக இம்மாவட்டத்தில் இடம் பெற்றுள்ளன. ஆடவர் பெயர் அடைகளைச் சிறப்புக் கூறுகளாகப் பெற்ற ஊர்களாவன:

| | |
|---|---|
| அம்மையப்பனூர் | நரப்பாக்கம் |
| வேளூர் | சித்தாள்பாக்கம் |
| பழையனூர் | வள்ளுவப்பாக்கம் |
| உத்தமனூர் | குமாரப்பாக்கம் |
| கும்பனூர் | மடையன்பாக்கம் |
| நேமனூர் | சரவணப்பாக்கம் |
| விஜயனூர் | அயினன்பாக்கம் |
| எலிமியானூர் | துலரப்பாக்கம் |
| சலையனூர் | அட்சன்பாக்கம் |
| சொக்கனூர் | பொம்மராஜபுரம் |
| தத்தனூர் | ஹனுமந்தபுரம் |
| களியானூர் | வேதநாராயணபுரம் |
| கரட்டானூர் | கம்மராஜபுரம் |
| நேசனூர் | லட்சுமிநாராயணபுரம் |
| வங்கனூர் | திம்மாபுரம் |
| ஆப்ரஹாம்புரம் | இப்ரஹாம்புரம் |
| இராமாபுரம் | ஜெகன்னாதபுரம் |
| பாலகிருஷ்ணாபுரம் | கிருஷ்ணபுரம் |
| செங்கல்வபுரம் | மதனந்தாபுரம் |
| சின்னராமபுரம் | ராமானுஜபுரம் |
| கோபாலபுரம் | சிங்கராயபுரம் |
| ஹரிச்சந்திராபுரம் | ஸ்ரீனிவாசபுரம் |
| கந்தபுரம் | திருமலராஜபுரம் |
| கார்த்திகேயபுரம் | வரதராஜபுரம் |
| காசிநாதபுரம் | வீரராகவபுரம் |
| காவேரி ராஜபுரம் | ராமையன் குப்பம் |
| கேவல ராஜபுரம் | இளையன் குப்பம் |
| கோதண்டராமபுரம் | குமாரக் குப்பம் |
| மகான் காளிபுரம் | சாத்தான் குப்பம் |
| நாராயணபுரம் | சூரக் குப்பம் |

இரகுநாதபுரம்
இராமச்சந்திரபுரம்
இராமலிங்கபுரம்
சந்தான கோபாலபுரம்
சௌனகபுரம்
சுப்பிரமணியபுரம்
வேலாயுதபுரம்
வல்லன் சேரி
குருமன் சேரி
சாத்தன் சேரி
சீட்டன் சேரி
வெங்கன் சேரி
கருணாசரச் சேரி
அண்ணாமலைச் சேரி
கடமன் சேரி
செக்கன் சேரி
சிருளப்பன் சேரி
சோமன் சேரி
கோலியன் சேரி
அரியப்பன் சேரி
ஆதனன் சேரி
கருவன் சேரி
கொளப்பான் சேரி
இருளன் சேரி
முனியன் தாங்கல்
முருக்கன் தாங்கல்
பீமன் தாங்கல்
கண்ணன் தாங்கல்
கொருக்கன் தாங்கல்
கடப்பன் தாங்கல்
பட்ரன் தாங்கல்

வீரக் குப்பம்
வைரவன் குப்பம்
சடையன் குப்பம்
விஸ்வநாதக் குப்பம்
ஜனகராஜ குப்பம்
கேசவ ராஜபுரம்
கிருஷ்ணன் குப்பம்
கிருஷ்ணமராசன் குப்பம்
வெங்கடராஜு குப்பம்
ஹனுமந் தேரி
சௌனையனேரி
சின்னையன் குளம்
காட்டான் குளம்
மலையான் குளம்
சேக்கான் குளம்
பம்மது குளம்
பொன்னான் குளம்
குருவன் மேடு
கருக்கா மேடு
கொக்கிலி மேடு
கோவிந்த மேடு
சாத்தான் காடு
முருகமங்கலம்
ரத்ன மங்கலம்
சேட்டமங்கலம்
வேங்கடமங்கலம்
சாத்தமங்கலம்
ஜாகீர் மங்கலம்
களியன்பேட்டை
பொம்மராஜு பேட்டை
இராமகிருஷ்ணராஜு பேட்டை
தரசன்பேட்டை

பாலீஸ்வரன் கண்டிகை
அப்பு கொண்டையா கண்டிகை
அய்யவாரி நாயுடு கண்டிகை
பத்ராஜு கண்டிகை
பத்தல செங்கம் நாயுடு கண்டிகை
பிக்கிசாணி செங்கம் நாயுடு கண்டிகை
சந்திரப்ப நாயுடு கண்டிகை
சீராள குர்ரப்ப கண்டிகை
செங்கல்வ நாயுடு கண்டிகை
சங்கரா ரெட்டி நாராயண ரெட்டி கண்டிகை
தாசி ரெட்டி கண்டிகை
எலவர்த்தி மும்மலராஜு கண்டிகை
எர்ரம செட்டி நரசிம்மலு நாயுடு கண்டிகை
கவுணிபுரம் பத்ராஜு கண்டிகை
கவுணிபுரம் சின்ன சுப்பராஜு கண்டிகை
கஞ்சிராஜு குருவராஜு கண்டிகை
வெங்கட்ராம நாயுடு கண்டிகை
கோரகை வெங்கடநம்பி கண்டிகை
கொத்தூர் ராமையா கண்டிகை
மாதிராஜு பெருமாள்ராஜு கண்டிகை
நல்லூர் வெங்கட்டராஜு கண்டிகை
பாகால நாராயண ரெட்டி கண்டிகை
பட்டணம் சேஷையா கண்டிகை
பெருமாள் மான்யம் கண்டிகை
பெரும் காஞ்சி நரசிம்மலு கண்டிகை
புராணம் சஞ்சீவிராயணி கண்டிகை
இராம ஜோஸ்யலு கண்டிகை
ரெட்டி பல்லி சுப்பராவ் கண்டிகை
இராயசம் வெங்கட கிருஷ்ணய்யர் கண்டிகை
ஸத்யகால வரதா சார்லு கண்டிகை
சித்தய்ய குண்டா கண்டிகை
சிரிகிரிராஜு பத்ரராஜு கண்டிகை
ஸ்ரீனிவாசய்யர் கண்டிகை

நாராயண ரெட்டி கண்டிகை
வேலூர் கிருஷ்ண நாயுடு கண்டிகை

| | |
|---|---|
| கண்ணன் சுாரணை | கோவிந்த வாடி |
| திம்மன் சமுத்திரம் | பிச்சை வாடி |
| கிருஷ்ணன் சமுத்திரம் | கருக்கன் பூண்டி |
| இராமன் சமுத்திரம் | கோவிலன் பூண்டி |
| லாலா தோட்டம் | உசேன் அகரம் |
| திருமலைராயன் தோட்டம் | பெருமாள் அகரம் |
| புத்திரன் கோட்டை | உசேன் நகரம் |
| கண்ணன் கோட்டை | அட்சன் நகரம் |
| கருணாகர விளாகம் | முகந்த கிரி |
| கள்ளகம்பன் பட்டடை | வீரண குண்ணம் |
| சின்ன திம்மராஜுப்பட்டடை | ஆரிகன் துரை |

இப்பெயர்கள் அனைத்தும் சிறப்புக்கூறுகளாக இடம் பெற்ற ஆடவர் பெயர்களே யெனினும், ஆடவர் பெயர் அடை என்ற பகுப்பில் இடம் பெறும் பெயர்களே இவைகள் என்று துணிந்து கூற முடியவில்லை. ஏனெனில், எல்லாப் பெயர்களுமே ஆடவர் பெயர்கள் போல் தோன்றினாலும் அப்பெயர்களில் சில அரசர் பெயர்களாகவும் இருத்தல் கூடும். சில பெயர்கள் கடவுளர்பெயர் களாகவும் இருத்தல் கூடும். துணிந்து முடிவு செய்ய ஏதுக்கள் ஏதும் இல்லையால் பெயரளவில் நோக்கி ஆடவர் பெயர்களாகப் பகுத்துக்கூறப்பட்டுள்ளன.

இங்கு இடம் பெறாத வேறு சில ஊர்களும் ஆடவர்களை உணர்த்துகின்றன. ஆனால், அவ்வூர்ப் பெயர்கள் ஆடவர் செய்த தொழிலின் அடிப்படையிலும், அவரவர் சாதியின் அடிப்படை யிலும் அமைந்துள்ளன. எனவே, அவ்வூர்ப்பெயரின் சிறப்புக்கூறு கள் தனியாக எடுத்துக்காட்டப்படும்.

ஆடவர் பெயர் அடைகளில் பல, பொதுக்கூறுகளுக்கேற்ப மாறுபட்டுக் காணப்படுவதையுணரலாம். சில பொதுக்கூறுகளில் உயர்ந்த இனத்து ஆடவர் பெயர்களும், வேறு சில பொதுக்கூறு களில் பிற்பட்ட இனத்து ஆடவர் பெயர்களும் இடம் பெற்றுள் ளன. திருத்தணி வட்டத்தில், கண்டிகை என்ற பொதுக்கூறில் அடங்கிய ஆடவர் பெயர்களில் பெரும் பாலும் சாதிப் பெயர்

களும் சேர்ந்தே அமைந்துள்ளன. அதனை நோக்கும்போது 'கண்டிகை' என்ற பொதுக்கூறும், அப்பொதுக்கூறில் அடங்கிய ஊர்ப் பெயர்களும் பிற்காலத்தில் தோன்றியவைகளாக இருத்தல் கூடுமோ என்று ஐயுற வேண்டியுள்ளது. ஆடவர் பெயர் அடை இடம் பெறாத சில பொதுக்கூறுகளும் இம் மாவட்ட ஊர்ப்பெயர் களாக உள்ளன.

## 2. மகளிர் பெயர் அடைகள் :

சமுதாயத்தில் ஆண்களுக்கிருந்த உரிமையும் செல்வாக்கும் மகளிர்களுக்கும் இருக்கவில்லை. மகளிர் பெருமைக்குரியவர் களாகவும், வணக்கத்திற்குரியவர்களாகவும் கருதப்பட்டுள்ளார் களே தவிர, அக்கருத்து செயல் வடிவம் பெறும் அளவிற்குப் பொறுப்புகள் அவர்களுக்குத்தரப்படவில்லை. நீண்ட நெடுங் காலமாகச் சொத்துரிமையும் கூட அவர்களுக்கு வழங்கப்பட வில்லை. அண்மைக்காலச் சமுதாய மாற்றங்களுக்குப் பிறகு தான் பல்வேறு உரிமைகளும் பெருமைகளும் உண்மையாகவே பெண் களுக்குத் தரப்பட்டுள்ளன.

செங்கைமாவட்ட ஊர்ப்பெயர்களிலும் மேற்கண்ட கருத்து உறுதிப்படுகிறது. ஆடவர் பெயர் அடைகள் உள்ள அளவிற்கு மகளிர் பெயர் அடைகள் இடம் பெறவில்லை. இடம் பெற் றுள்ள பெயர் அடைகளும் கூடப் பெரும்பாலும் பிற்காலத் தவைகளாகவே இருத்தல் வேண்டும். சில மகளிர் பெயர் அடைகள் காலத்தால் முந்திய ஊர்ப்பெயர்களில் இடம் பெற் றவைகளாகவும் இருத்தல் கூடும். அவையாவன :

| | |
|---|---|
| அம்மனூர் | லட்சுமிபுரம் |
| மாதர்பாக்கம் | அலமேலுமங்கைபுரம் |
| கன்னிவாக்கம் | அமிர்தபுரம் |
| சடச்சிவாக்கம் | ஆனந்தவல்லிபுரம் |
| சிங்காடிவாக்கம் | தேவகிபுரம் |
| ஜானகிபுரம் | தேவளாம்பாபுரம் |
| வல்லிபுரம் | தேவசேனாபுரம் |
| சீதாபுரம் | கன்னிகாம்பாள்புரம் |
| கனகவல்லிபுரம் | கன்னிகாபுரம் |
| மருதவல்லிபுரம் | சிதேவிக்குப்பம் |
| மோகினிபுரம் | சிங்கிலிக்குப்பம் |

| | |
|---|---|
| பத்மாபுரம் | அக்கச்சிகுப்பம் |
| பட்டாமிபுரம் | அம்மனேரி |
| இராஜபத்மாபுரம் | கன்னிகுளம் |
| சகஸ்ரபத்மாபுரம் | அமிர்தம்பள்ளம் |
| வள்ளியம்மாபுரம் | மகாதேவிமங்கலம் |
| மங்கைவரம் | ஓரகடமகாதேவிமங்கலம் |
| வசந்தாவாடி | கண்ணம்மாப்பேட்டை |
| | பௌகினிமேனி |

என்ற பெயர்கள் மட்டுமே மகளிர் பெயர் அடைகள் என்ற நிலையில் இடம் பெற்றுள்ளன. 'புரம்' என்று முடியும் ஊர்ப் பெயர்களில் பெரும்பாலானவை மகளிர் பெயர் அடைகளைச் சிறப்புக்கூறுகளாகப் பெற்றுள்ளதைக் காணமுடிகிறது. அப் பெயர்களிலும் கூடப்பெரும்பாலன பெண் தெய்வங்களின் பெயர்களையுடைய மகளிர் பெயர் அடைகளாக உள்ளமையால், இடைக்காலத்தில், புராண இலக்கியங்கள் இம்மண்ணில் பரவத் தொடங்கிய காலத்தில் தான் அவ்வூர்ப் பெயர்களும் அமைந்திருக்க வேண்டும்.

ஆடவர் பெயர் அடைகளில் காணப்பட்டது போல் சமுதாயத்தில் உயர்ந்த, பிற்பட்ட பெயர் அடைகளை மகளிர் பெயர் அடைகளிலும் காணமுடிகிறது. அவ்வூர்ப் பெயர்கள் பிற்காலத்தில் தோன்றியவைகளாகவே இருத்தல் வேண்டும். அம்மன், மாதர், கன்னி என்று மகளிரைப் பொதுவாகக் குறிப்பிடும் அடைச்சொற்களும் ஒப்புமை கருதி மகளிர் பெயர் அடைகளாகவே கருதப்பட்டுள்ளன.

இம்மாவட்டத்தைப் பொறுத்தவரையில் மகளிர் பெயர் அடைகள் குறைந்த எண்ணிக்கையுள்ள ஊர்ப்பெயர்களிலேயே இடம் பெற்றுள்ளன. பல பொதுக்கூறுகளில் மகளிர் பெயர் அடைகள் இடம் பெறவே இல்லை மிக அதிகமான ஊர்ப் பெயர்களைக் கொண்ட 'ஊர்' என்ற பொதுக் கூறில் ஒரு மகளிர் பெயர் அடைமட்டுமே உள்ளது. அதற்கடுத்த எண்ணிக்கையுள்ள 'பாக்கம்', என்ற பொதுக்கூறிலும் ஒரு மகளிர் பெயர் அடையே உள்ளது. ஊர், பாக்கம் போன்ற பொதுக்கூறுகள் காலத்தால் முந்தியவை. அவைகளில் இடம் பெற்றுள்ள மகளிர் பெயர் அடைகளும் கூட மகளிர் பெயர் எதனையும் நேரடியாக உணர்த்தவில்லை. எனவே, மகளிர்

பெயர் அடைகள், ஊர்ப்பெயர்களின் சிறப்புக் கூறுகளாக இடம் பெற்றிருப்பது பிற்காலத்தில்தான் என்பது நன்கு புலப்படுகிறது.

### 3. மன்னர், தலைவர் போன்றோர் பெயரடைகள் :

ஏதேனும் ஒருவகையில் செல்வாக்குப் பெற்றவர்களின் பெயர்கள்தான் ஊர்ப்பெயர்களாக இடம் பெற்றுள்ளன. அப்படிச் செல்வாக்குப் பெற்றவர்களின் பெயர்களை ஊர்ப் பெயர்களாகச் சூட்டும் நிலையும் இடைக்காலத்தில் தான் ஏற்பட்டிருக்கவேண்டும். இயற்கையையொட்டி வாழ்ந்த தமிழர், முதன் முதலில் இயற்கைப் பொருட்களின் பெயர்களையே ஊர்ப் பெயர்களுக்கும் சூட்டியுள்ளனர். இம்மாவட்டத்தில் இயற்கைப் பொருட்களின் பெயர்கள் குறைவாகவே காணப்படினும் அப் பெயர்களையுடைய ஊர்களே காலத்தால் முந்தியவையாம்.

பல்வேறு பிரிவைச் சேர்ந்த மன்னர்கள் செங்கை மாவட்டம் உள்ளடங்கிய தொண்டை நாட்டை ஆண்டுள்ளனர். எனவே, ஆட்சி புரிந்த மன்னர்களின் பெயர்களும், அம்மன்னர் தம் மரபுப் பெயர்களும், அம்மன்னர் தம் ஆட்சியில் அங்கம் வகித்திருந்த தளபதி, அமைச்சர் போன்றோர்தம் பெயரும் ஊர்ப்பெயர் களாக இடம்பெறுதல் இயல்பு என்றே கூறலாம். ஒரு மன்னனின் ஆட்சியில் பல்வேறு காரணங்களால் புதிய கிராமங்கள், நகரங் கள் தோன்றுகின்றன. இயல்பாகப் புதிய ஊர்கள் தோன்று தற்கு அவசியம் இல்லாதபோதும், ஏதேனும் செயல் காரணமாக, அல்லது தாம் பெற்ற வெற்றியின் நினைவாகப் புதிய ஊர் ஒன் றினை ஓர் அரசன் உருவாக்குவான். அவ்வூருக்குத் தம் பெயரை யோ அல்லது, தாம் விரும்பும் பெயரையோ சூட்டுவான். இந்த அடிப்படையில்தான் மன்னர்கள் ஆட்சிக் காலத்தில் பல புதிய ஊர்கள் தோன்றியுள்ளன. அவ்வூர்ப் பெயர்கள் பின்வருமாறு:

| | |
|---|---|
| அதிகமனூர் | பொம்மராஜபுரம் |
| தொண்டமாநல்லூர் | குமாரபொம்மராஜபுரம் |
| வில்வராயனூர் | மகாராஜபுரம் |
| அரசூர் | உத்தண்டமகாராஜபுரம் |
| கோபரசனூர் | இராஜகலஹாபுரம் |
| கோஊர் | வீரகாவேரிராஜபுரம் |
| சோயம்பாக்கம் | சிங்கராஜபுரம் |
| அரையர்பாக்கம் | திருமால்ராஜபுரம் |

| | |
|---|---|
| நந்தியம் பாக்கம் | திருவெங்கலநாதபுரம் |
| நந்திமேடு | நந்திவரம் |
| சேந்தமங்கலம் | சோழவரம் |
| பரமேசுவரமங்கலம் | வளவன் தாங்கல் |
| அத்தரையர்மங்கலம் | சோழன் தாங்கல் |
| திருமலராயன் தோட்டம் | திம்மராசன்பேட்டை |
| சின்னதிம்மராஜாபட்டடை | திம்மையன்பேட்டை |
| செம்பியன்வளி | பாபுராயன்பேட்டை |
| மொகல்வாடி | கேசவராயன்பேட்டை |
| மொகல்பேர் | லிங்கப்பையன் பேட்டை |
| மாமல்லபுரம் | மாபூஸ்கான்பேட்டை |
| அரசன்கழனி | ஷாம்ஷர்பகதூர்பேட்டை |

போன்ற ஊர்ப்பெயர்களில் மன்னர், தலைவர்களின் பெயர் அடைகள் இடம் பெற்றுள்ளன. இங்கு இடம் பெற்ற மன்னர்கள் பல நாட்டையும், பல மரபையும் சேர்ந்தவர்கள். எனினும் ,இம் மாவட்டம் உள்ளடங்கிய பகுதியை அவர்கள் ஆட்சி புரிந்துள்ள மையால் நினைவுச் சின்னமாகத் தம்பெயர்களில் ஊர்களை நிறுவி யுள்ளார்கள். குறிப்பிட்ட ஒரு சில மன்னர்களின் பெயர்களில் பல ஊர்கள் அமைந்துள்ளன. நந்திவர்ம பல்லவனின் பெயரில் நந்திவரம், நந்திமேடு, நந்தியப்பாக்கம் என்ற மூன்று ஊர்கள் அமைந்துள்ளதைச் சான்றாகக் குறிப்பிடலாம்.

சில ஊர்ப்பெயர்கள் நேரிடையாக அரசர்களின் பெயர்களை உணர்த்தாமல் அரசர்களின் மரபையுணர்த்துவதன் மூலம் அம்மரபிற்குரிய அரசர்களை உணர்த்தியுள்ளன. சோழவரம், வளவன் தாங்கல் என்ற ஊர்ப்பெயர்கள் சோழ அரசர் பெயர்களை, மரபுப் பெயர்கள் மூலம் உணர்த்துகின்றன. மொகல்வாடி, மொகல்பேர் ஆகிய ஊர்கள் மொகலாய மன்னர்களின் பெயர்களை, இனப்பெயர் மூலம் உணர்த்து கின்றன. சில ஊர்ப்பெயர்கள் அரசர்களுக்கு உரியன அல்ல வெனினும் அரசர்களுடன் நெருங்கிய தொடர்புடைய பொறுப்புகளில் இருந்தவர்களின் பெயர்கள் என்பது விளங்குகிறது.

புரம், பேட்டை போன்ற பொதுக்கூறுகள் காலத்தால் பின்பு தோன்றியவைகள். அப்பொதுக் கூறுகளையுடைய ஊர்ப் பெயர்களில் தான் அரசர் பெயர் அடைகள் அதிகமாகக்

காணப்படுகின்றன. புரம் என்று முடியும் ஊர்ப் பெயர்கள் பெரும்பாலும் தெலுங்கு மொழிப் பெயர்களாகவே உள்ளதால் விஜயநகர அரசர்களின் ஆட்சி இம் மாவட்டம் உள்ளடங்கிய பகுதியில் நிலவியபோது தோன்றியிருக்க வேண்டும். அதுபோல் பேட்டை என்று முடியும் ஊர்கள் முசுலிம்களின் ஆட்சி இப் பகுதியில் நிலவிய போது தான் உருவாகியுள்ளன. பிற பொதுக் கூறுகளில் ஒன்றிரண்டு ஊர்ப்பெயர்களே அரசர் பெயரடைகளைப் பெற்றுள்ளன. எனவே, விஜய நகர அரசர்கள், முசுலிம் அரசர்களின் ஆட்சி இப்பகுதியில் நிலவிய போதுதான் அரசர், தலைவர் போன்றவர்களின் பெயர் அடைகள் ஊர்ப்பெயர்களில் மிகுதியாக இடம் பெற்றுள்ளன என்பது தெளிவாகிறது.

## 4. கடவுளர், முனிவர் முதலானோர் பெயரடைகள் :

ஊர்ப்பெயர்கள் அனைத்துமே காலத்தின் பிரதிபலிப்பாகத் தான் உள்ளன. அவ்வக் காலங்களில் தோன்றிய ஊர்ப்பெயர்களைக் கொண்டு மாந்தர்தம் மனநிலை, வாழ்க்கை முறை ஆகியவைகளை உணரமுடிகிறது. தமது பெயர்களையே ஊர்ப் பெயர்களாக மனிதர் சூட்டியது ஒரு காலநிலை. அந்நிலைமாறி, தாம் வணங்கும் தெய்வத்தின் பெயரை ஊர்ப்பெயர்களாகச் சூட்டும் நிலையும் உருவாகியது. பக்தி இயக்கங்களின் செல் வாக்கும், பல்வேறு சமயங்கள் இப்பகுதியில் பரவத் தொடங்கியதும் இந்நிலைக்குக் காரணமாகலாம்.

இதற்கு முன்னர் எடுத்துக்காட்டப்பட்ட ஆடவர், மகளிர், அரசர் முதலானோர் பெயர் அடைகளிலும் கூடக் கடவுளர் பெயர்கள் உண்டு. ஏனெனில், கடவுளர் பெயர்களைத் தமக்குச் சூட்டுவதை ஒரு மரபாகவே இந்நாட்டு மக்கள் கருதியுள்ளனர்; கருதி வருகின்றனர். எனவே, அப்படிப்பட்ட பெயர்கள் தவிர, இறைவன், இறைவியர் எழுந்தருளியுள்ள இடங்களும், நேரிடையாகக் கடவுளர் பெயரை உணர்த்துமாறு அமைந்த ஊர்களும் இப்பகுதியில் ஆராயப்படுகின்றன. இவ்வகையில் இடம்பெற்ற ஊர்ப்பெயர்கள் குறைவாகவே காணப்படுவதால், கடவுளர்களில் ஆண், பெண் என்ற பகுப்பின்றிப் பொதுவாகவே அவ்வூர்ப் பெயர்கள் ஆராயப்படுகின்றன. அப்படி இடம் பெற்றுள்ள ஊர்ப்பெயர்களாவன :

| | |
|---|---|
| அம்மனூர் | சூரியன் நகரம் |
| அரியலூர் | நாகேசுரம் |
| இந்தூர் | திருமால்பட்டு |

| | |
|---|---|
| தேவரியப் பாக்கம் | பெருமாள்சேரி |
| கோயிலாம் பாக்கம் | பெருமாளேரி |
| விஷ்ணு வாக்கம் | அரனேரி |
| நரசிங்கபுரம் | இறைமங்கலம் |
| சிவபுரம் | பிடாரித்தாங்கல் |
| பர்வதராஜபுரம் | அமரம்பேடு |
| ஆதிவராஹபுரம் | கொண்டரகிரி வெங்கடமுனிக் கண்டிகை |
| ஆஞ்சநேயபுரம் | |
| தரணிவராஹபுரம் | சிங்கப்பெருமாள்கோயில் |
| துவாரகாபுரம் | செல்லப்பிள்ளையார்கோயில் |
| கோபால கிருஷ்ணாபுரம் | அரன்வாயல் |
| அருநேயர்புரம் | சிவன்வாயல் |
| சத்ருஞ்சயபுரம் | சூரியநகரம் |
| ஸ்ரீகாளிகாபுரம் | ருத்ரகோடி |
| ஸ்ரீகிருஷ்ணாபுரம் | வியாசர்புரம் |
| வெங்கடப் பெருமாள்புரம் | மால்அகரம் |
| வேணுகோபாலபுரம் | பெருமாள்அகரம் |
| விநாயகபுரம் | அல்லாவூர் |

போன்ற ஊர்ப்பெயர்கள் கடவுளர், முனிவர், தேவர் போன்றோரின் பெயர் அடைகளைப் பெற்றுள்ளன. கடவுளர் முதலானோர் பெயர்களை நேரிடையாகக் குறிப்பிடுவதுடன் பொதுவாகவும் குறிப்பிடப் பட்டுள்ளது. சைவம், வைணவம் ஆகிய இரு சமயங்களுமே இம்மாவட்டப் பகுதியில் செல்வாக்குப் பெற்றுள்ளதால் இரு சமயக் கடவுளர் பெயர்களிலும் பல ஊர்கள் மாவட்டமெங்கிலும் பரவலாகக் காணப்படுகின்றன.

அரன், அரி, சிவன், திருமால் என்று இறைவர் பெயர்கள் குறிப்பிடப் பட்டிருப்பதுடன், புராணங்களின் அடிப்படையில் இறைவர்கள் நிகழ்த்திய செயல்களும் ஊர்ப்பெயர்களில் இறைவர் பெயர்களுடன் இணைத்துக் கூறப்பட்டுள்ளன. சிங்கப் பெருமாள் கோயில், ருத்ரகோடி போன்ற ஊர்களை இவ்வகைக்குச் சான்று கூறலாம். புராணங்கள் பரவத் தொடங்கிய பிறகுதான் பல ஊர்கள் கடவுளர் பெயரில் உருவாகியுள்ளன. என்பதையுணரமுடிகிறது. ஏரிகளுக்கும் கூட இறைவர் பெயரைச்சூட்டும் நிலை பிற்காலத்தில் உருவாகியுள்ளது.

சமுதாயத்தில் மகளிர் நிலை போன்றே பெண் தெய்வங்களின் நிலையும் இருந்திருக்கவேண்டும். அதனால்தான், பல ஊர்ப்பெயர்கள் கடவுளர் பெயரால் அமைந்தும் கூட ஒன்றிரண்டு ஊர்ப் பெயர்களே பெண்தெய்வங்களின் பெயரில் அமைந்துள்ளன. ஆனால், மகளிர் பெயர்களில் பல பெண் தெய்வங்களின் பெயர்களாக இருக்கின்றன என்பதும் குறிப்பிடத்தக்கது.

விநாயகர் வழிபாடு தொடக்கத்தில் தமிழ் நாட்டின் இடைக்காலத்தில் இருந்ததில்லை. பல்லவர் ஆட்சியின் போது தான், சாளுக்கிய நாட்டிலிருந்து விநாயகர் இங்கு வந்துள்ளதால், பல்லவர் ஆட்சிக்குப் பிறகு தான் இவ்வழிபாடு தமிழ் மண்ணில் காலூன்றியது. இன்று விநாயகர் வழிபாடு தமிழ் நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் பரவியுள்ளது. விநாயகர் ஆலயம் இல்லாத ஊர்களே இன்று தமிழ் நாட்டில் இருக்க மாட்டாது என்று கூறலாம். பல்வேறு புதுப்புதுப் பெயர்களில் விநாயகர்கள் இன்று தோற்றுவிக்கப் பட்டுவருகின்றனர்.

இம்மாவட்டத்தில் விநாயகபுரம் என்றோர் ஊர் காணப்படுகிறது. இவ்வூர் தொடக்க காலத்தில் தோன்றியிருக்க வேண்டும். அதனால்தான் விநாயகருக்குச் சிறப்பு அடை ஏதும் சேர்க்கப்படவில்லை. ஆனால் இம்மாவட்டத்திலேயே செல்லப் பிள்ளையார் கோயில் என்ற வேறோர் ஊரும் உள்ளது. இவ்வூர்ப் பெயரில், பிள்ளையார் என்ற விநாயகர் பெயருக்கு முன்னால் அடைச் சொல்லும் சேர்த்துக் கூறப்பட்டுள்ளது. இவ்வாறு அமையும் முறை பிற்காலத்தில் தோன்றியதாகும்.

வியாசர் என்ற முனிவரின் பெயரில் ஓர் ஊர் தோன்றியிருப்பதுடன், கொண்டரகிரி வெங்கடமுனி என்ற முனிவரின் பெயரிலும் வேறோர் ஊர் தோன்றியுள்ளது. முனிவர்களைப் போற்றி வணங்கும் முறையும், அவர்கள் பெயரில் ஊர்களைத் தோற்றுவிக்கும் முறையும் இடைக்காலத்தில் ஏற்பட்டவையாகும்.

அமரர், தேவர் என்று பொதுவாகத் தேவர்களைக்குறிப்பிட்டு ஊர்ப்பெயர்கள் தோன்றியிருப்பதுடன், தேவர்களின் இயற்பெயரிலும் சில ஊர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. இம்மாவட்டத்தில் தோன்றியுள்ள 'கடவுளர்' முனிவர் போன்றோரின் பெயர்களையுடைய ஊர்கள் யாவும் இடைக்-

காலத்திலும், பிற்காலத்திலும் தோன்றியவைகளே என்பதை ஊர்ப் பெயர்களால் உணர முடிகிறது.

**சாதிப்பெயர்கள்:**

செங்கை மாவட்டத்தில் ஆட்பெயர் அடைகளாக இடம் பெற்றுள்ளவற்றுள் சாதிப் பெயர்களையும் பரவலாகக் காண முடிகிறது. அவ்வூர்ப் பெயர்களிலும் ஆட்பெயர் அடைகளே இடம் பெற்றுள்ளன. ஆனால் அப்பெயர் அடைகள் நேரடியாக ஆட்பெயர்களையுணர்த்தாமல் அவர்களது சாதிகளின் மூலம் ஆட்களையுணர்த்தியுள்ளன. இம்மாவட்ட ஊர்ப்பெயர்களில், இப்பகுதியில் வாழ்ந்துள்ள பல்வேறு சாதியினர் பெயர்களையும் காண முடிகிறது.

இயற்கையமைப்பை யொட்டி நிலப்பாகுபாடுகளை வகைப் படுத்திக் கொண்டு வாழ்ந்த அன்றைய தமிழ்ச் சமுதாயத்தில் சாதிக்களைகள் வேரூன்ற வில்லை. பிற நாட்டவரும், வேறு இனத்தவரும் இம்மண்ணில் கால் வைக்கத் தொடங்கிய பிறகு தான் சாதிகள் தோன்றத் தொடங்கின. படிப்படியாக அவை கிளைத்துச் செழித்து இன்று ஆயிரக்கணக்காக வெடித்துள்ளன. இன்றைய தமிழ்ச் சமுதாயத்தை அல்லற்படுத்தும் பல்வேறு பிணிகள் உருவாகும் சாக்கடைகளாகச் சாதிகள் அமைந்துள் ளன. அரசியல் கழிவுநீர்க் கால்வாய்களின் ஆதரவை இவை பெற்றிருப்பதால் இவை என்றும் வற்றாதஊற்றாக இந்நாட்டை வலம்வந்து கொண்டிருக்கின்றன.

செங்கை மாவட்டம் பலவழிகளில் தமிழ் நாட்டிற்கு வழியாக அமைந்துள்ளது. வேற்று நாட்டவருடன் கடல்வழித் தொடர்பு கொள்வதற்கு ஏற்றாற் போன்று இம்மாவட்ட ஊர் களில் பல அமைந்துள்ளன. தெலுங்கு மொழி பேசப்படும் ஆந்திரமாநிலம் இம்மாவட்டத்திற்கு அருகில் உள்ளது. பல் வேறு பிறநாட்டினர் படையெடுப்பிற்கும், ஆக்கிரமிப்பிற்கும் பட்ட மாவட்டம் இது. இம்மாவட்டம் தமிழ்நாட்டின் பகுதி யாக இருந்த போதும் அண்மையில் உள்ள மாநிலத்தின் பாதிப்பு பலவகையில் இம்மாவட்டத்தில் இன்றும் காணப்படுகின்றது. அன்றியும், பாண்டியர், சோழர்களைப் போன்று தமிழ் உணர் வுள்ளவர்களின் ஆட்சிக்குப்பட்ட பகுதியாக இது அமையவில்லை. அவ்வப்போது சில நூற்றாண்டுகள் (கி. பி. 9 முதல் கி. பி. 12

வரை) இம்மாவட்டம் உள்ளடங்கிய பகுதிகள் பிற்காலச் சோழர் ஆட்சிக்கு உட்பட்டிருந்துள்ளது. மற்றக் காலங்களில் பெரும்பாலும் பிற நாட்டவர்களான பல்லவர், முகலிம்கள், பாளையக்காரர்கள், கோல் கொண்டா முகமதியர்கள், ஆங்கிலேயர்கள் ஆகியோரின் ஆட்சிக்குட்பட்டே இருந்துள்ளது. அதனால் பல்வேறு சாதியைச் சேர்ந்தவர்கள் இங்கு குடியேறும் சூழ்நிலை உருவாகியுள்ளது. குடியேறியவர்களின் நினைவாகப் பல்வேறு சாதிகளும் தோன்றத் தொடங்கிவிட்டன.

இம்மாவட்ட ஊர்ப்பெயர்களில இடம் பெற்றுள்ள சாதிப் பெயர்களாவன :

| | |
|---|---|
| அல்லாவூர் | செட்டிபட்டு |
| இடையனூர் | கம்மாளம்பட்டு |
| ராவுத்த நல்லூர் | கோமாசிப்பட்டு |
| வன்னியநல்லூர் | கொசப்பட்டு |
| சாணாப்புத்தூர் | தட்டான்பட்டு |
| ஆரியனூர் | இடையர்குப்பம் |
| கொசப்பூர் | ரெட்டிகுப்பம் |
| ஆயப்பாக்கம் | சாலுவன்குப்பம் |
| வில்லிவாக்கம் | முதலியார்குப்பம் |
| ஆரியப்பெரும்பாக்கம் | நயினார்குப்பம் |
| கொல்லப்பாக்கம் | தட்டான்குப்பம் |
| சோழியப்பாக்கம் | நாயக்கன்குப்பம் |
| பிள்ளைப்பாக்கம் | நாயுடுகுப்பம் |
| இடையர்பாக்கம் | பாப்பான்குப்பம் |
| வளசரர்வாக்கம் | வண்ணான்குப்பம் |
| அய்யன்சேரி | கொல்லர்குப்பம் |
| கொல்லன்சேரி | கொத்தகுப்பம் |
| அய்யங்கார்குளம் | சாணான்குப்பம் |
| செட்டிமேடு | ஒட்டன்காரணை |
| ராயமங்கலம் | வலையன்காரணை |
| இடையன்தாங்கல் | துலுக்கன்தண்டலம் |
| ஒட்டன்தாங்கல் | ஒட்டன்பட்டடை |
| நாய்க்கன்பேட்டை | கம்மாளம்பூண்டி |
| நாயுடுகண்டிகை | ஆரியன்வாயல் |
| ரெட்டிகண்டிகை | ஆயர்பாடி |
| செட்டிகண்டிகை | ஆயர்குண்ணம் |

மொகல்பேர்
மொகல்வாடி
பாப்பான் குழி
பரங்கிமலை

இங்குக்குறிப்பிட்டுள்ள சாதிப்பெயர்களின் பட்டியலைக் காணும் போது இம்மாவட்டத்தில் என்னென்ன சாதியைச் சேர்ந்தவர்கள் வாழ்ந்தார்சள் என்பதையும், அச்சாதிகள் எவ்வாறெல்லாம் பல்வேறு வடிவங்களில் அழைக்கப் பட்டுள்ளன என்பதையும் உணரமுடிகிறது. அந்தணரைக் குறிக்கும் ஊர்ப் பெயர்கள் ஐயன், ஆரியன், பார்ப்பான் என்ற அடைச் சொற்களைப் பெற்றுப பல ஊர்களாகக் காணப்படுகின்றன.

ஒரு குறிப்பிட்ட மாவட்டத்தின் சமூக நிலையைக் காண்பதற்கு அம்மாவட்ட ஊர்ப்பெயர்கள் பெரிதும் துணை செய்யும் என்பதை இம்மாவட்ட ஊர்ப்பெயர்கள் மூலம் உணரமுடிகிறது தெற்குமாவட்டங்களில பரவலாகக்காணப்படும் முக்குலத்தோர் உள்ளிட்ட சில சாதிப்பெயர்களில் ஒரு ஊரைக்கூட இம்மாவட்டத்தில் காணமுடியவில்லை. திருநெல்வேலி போன்ற தென் மாவட்டங்களில் காணப்படும் பிள்ளைமார் சமூகத்தைக் குறிப்பிடும் விதத்தில் ஒரு ஊர் மட்டுமே இங்கிருக்கிறது. இவ்வூர்ப் பெயர்களின் மூலம் எந்தெந்தச் சாதியினர் செல்வாக்குடன் இம்மாவட்டப் பகுதிகளில் வாழ்ந்துள்ளனர் என்பதை உணர முடிகிறது.

எப்படிப்பட்ட நிலத்திலும் முளைத்து வளரும் சிலவகைச்செடிகளைப் போன்று எல்லா மாவட்டங்களிலும் பரவிப் பரவலாக வாழும் நிலையை அந்தணர்கள் பெற்றுள்ளார்கள் என்பதை இம்மாவட்ட ஊர்ப்பெயர்களாலும் பிற மாவட்ட ஊர்ப்பெயர்களாலும் தெளிவாக உணர முடிகிறது. அதுவேயன்றிப் பல்வேறு பொதுக்கூறுகளிலும் கூட அந்தணர்களின் சாதிப்பெயர்களையுணர்த்துமாறு அடைச் சொற்கள் இம்மாவட்டத்தில் இடம்பெற்றுள்ளன. குப்பம், குளம், சேரி, ஊர், பாக்கம் ஆகிய பொதுக்கூறுகளையுடைய ஊர்களிலெல்லாம் அந்தணர்கள் பெயர்களை உணர்த்தும் அடைச்சொற்கள் இடம் பெற்றுள்ளன.

பொதுவாக, பாக்கம், பட்டு, குப்பம் என்று முடியும் பொதுக்கூறுகளையுடைய ஊர்களில் சாதிப்பெயர்கள் மிகுதி

யாகவே காணப்படுகின்றன. கண்டிகை என்று முடியும் ஊர்ப்பெயர்களில் நாயுடு, ரெட்டி, செட்டி ஆகிய சாதிப் பெயர்களை மட்டுமே காணமுடிகின்றது. அதிலும் கூட நாயுடு என்ற சாதிப் பெயரே பெரும்பாலான ஊர்ப்பெயர் களில் சிறப்புக் கூறாக இடம் பெற்றுள்ளது.

சில பொதுக் கூறுகளையுடைய ஊர்ப்பெயர்களில் சாதிப் பெயர்களின் சாயலையே காணமுடியவில்லை. குறிப்பாக, 'புரம்' என்று முடியும் பொதுக்கூறுகளையுடைய ஊர்களில் ஆட்பெயர் அடைகளே மிகுதி என்பது முன்னர்க் கூறப்பட்டது. ஆனால், அப்பெயர் அடைகளில் ஒன்றுடன் கூடச் சாதிப்பெயரைக் காண முடியவில்லை. 'புரம்' என்பதைப் போன்று 'கண்டிகை' என்ற பொதுக்கூறுகளுடனும் ஆட்பெயர் அடைகள் மிகுதி. ஆனால் அப்பெயர்களில் மிகப் பெரும்பாலன, சாதிப்பெயர்களையும் உடன் பெற்றுள்ளன. இப்படிப்பட்ட சில முரண்பாடுகளையும் இம்மாவட்ட ஊர்ப்பெயர்களால் உணர முடிகிறது.

இங்குக் குறிப்பிடப்பட்ட சாதிப்பெயர்களில் சில அவரவர் செய்யும் தொழில்களின் அடிப்படையாக அமைந்தவை. கொல்லர், கொத்தர், வலையர், தட்டார் போன்ற பெயர்களைச் சான் றாகக் காட்டலாம். தொழிற் பெயர்களாக அமைந்த இப்பெயர் கள் காலப்போக்கில் சாதிப்பெயர்களாக மாறத்தலைப்பட்டு விட்டன எத்தகைய தொழில் புரிந்த மக்கள் இங்கு வாழ்ந் துள்ளனர் என்பதை இங்குக்குறிப்பிட்ட சாதிப் பெயர்களும் எடுத்துக்காட்டுகின்றன.

ஒரு குறிப்பிட்ட சாதிப்பெயர் பல்வேறு பொதுக்கூறுகளை யுடைய ஊர்ப்பெயர்களாக அமைந்துள்ளனவென்றால் அச்சாதி யினர் அம்மாவட்டத்தில் பரவலாக வாழ்ந்துள்ளனர் என்பதை யே அம்முறை உணர்த்துகிறது. இடையனூர், இடையர்பாக்கம், இடையன்தாங்கல், இடையர்குப்பம் ஆகிய ஊர்கள், இடையர் சாதியினரின் செல்வாக்கையும், கொல்லப்பாக்கம், கொல்லன் சேரி, கொல்லர் குப்பம் ஆகிய ஊர்கள் கொல்லர் எனப்படும் இனத்தினர் செல்வாக்கையும், சாணாப்புத்தூர், சாணான்குப்பம் ஆகிய ஊர்கள் அச்சாதியினர் செல்வாக்கையும் எடுத்துக்காட்டும். இந்நிலையில் இடம் பெறும் வேறு சாதிகள் சிலவும் உண்டு.

இசுலாமியர் செல்வாக்கைக்காட்டும் விதத்தில் சில ஊர் களும், வெள்ளையரை உணர்த்தும் பரங்கிமலை என்ற ஊரும் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன.

**தொழிற் பெயர்கள்:**

தொடக்ககாலத்தில் அவரவர் செய்த தொழிலின் அடிப்படையிலேயே மனிதர் வகைப்படுத்தப்பட்டுள்ளனர். காலப் போக்கில் அந்நிலை மாறி, பிறப்பால் உயர்வு தாழ்வு கற்பிக்கும் அளவிற்கு எண்ணற்ற சாதிகள் இம்மண்ணில் தோன்றத் தொடங்கிவிட்டன. எனினும், இன்னும் சில பிரிவினர் செய்யும் தொழின் அடிப்படையிலேயே குறிப்பிடப்பட்டு வருகின்றனர்.

தொழிலின் அடிப்படையில் குறிப்பிடப்படுபவரும் ஆட்களே. சாதியின் மூலம் அச்சாதியைச் சார்ந்தவர்கள் உணர்ந்தப் பட்டது போன்று சிலர் புரியும் தொழிலின் மூலமாக அவர்கள் உணர்த்தப்படுகின்றனர். செங்கை மாவட்டத்தில், தொழிலின் அடிப்படையில் ஆட்கள் உணர்த்தப்படும் நிலை குறைவே. எனினும், அவ்வடிப்படையிலும் சில ஊர்ப்பெயர்களை உணர வேண்டியிருப்பதால் அவைகள் இங்குத்தனித்துக் காணப்படுகின்றன. தொழிற்பெயர்களை அடைச்சொற்களாகப் பெற்ற ஊர்களாவன:

| | |
|---|---|
| விச்சூர் (வித்தை) | கஸ்பாபுரம் |
| வேட்டூர் | குருபுரம் |
| ஆசானபூதூர் | பாணபுரம் (பாணர்) |
| ஏடூர் | கூர்மவிலாசபுரம் (நாடகம்) |
| கூத்தரம்பாக்கம் | மச்சவிலாசபுரம் |
| கொல்லர்பாக்கம் | கோமாசிப்பட்டு |
| நெசப்பாக்கம் | தட்டான்பட்டு |
| குத்தம்பாக்கம் (கூத்து) | வீரம்பட்டு |
| கூத்தவாக்கம் | தட்டான்குப்பம் |
| பட்டரவாக்கம் | வேட்டைக்காரன்குப்பம் |
| முரசவாக்கம் | கொத்தர்குப்பம் |
| வேடவாக்கம் | சங்கீதக்குப்பம் |
| தொழுதவாக்கம் | கொல்லன்சேரி |
| காரியமங்கலம் | கங்காணிமேடு |
| ஆண்டித்தாங்கல் | வேடர்பாளையம் |
| ஆட்டந்தாங்கல் | சதுரங்கபட்டணம் |
| வேடந்தாங்கல் | வல்லக்கோட்டை |
| தலையாரிதாங்கல் | ஆட்சிவிளாகம் |

| | |
|---|---|
| மருத்துவன்பாடி | காவல்கழனி |
| வீரம்பாடி | குருவாடி |
| உழுதமங்கலம் | தண்டல்கழனி |
| | இராமஜோஸ்யலுகண்டிகை |

இங்கு எடுத்துக்காட்டப்பட்ட தொழிற் பெயர்கள் யாவும் செங்கை மாவட்டத்தில் அன்றிருந்த பல்வேறு தொழில்களையும் உணர்த்துகின்றன. தட்டார், கொல்லர் போன்ற தொழில்கள் நீங்கலாகப் பல் வேறுவகைத் தொழில்கள் புரிந்த மக்கள் இம்மாவட்டத்தில் அன்று வாழ்ந்துள்ளனர். அத்தொழில்களில் பல இன்றும் இம்மாவட்டத்தில் செய்யப்பட்டு வருவதைக் காணமுடிகிறது

வேட்டையாடுதல், நெசவுத் தொழில் புரிதல், கொத்து வேலை செய்தல், காவல் தொழில் புரிதல், கங்காணி வேலை செய்தல் போன்ற பொதுவான தொழில்கள் பரவலாகப் பலராலும் செய்யப்பட்டுள்ளன. இத்தொழில்கள் தவிர மருத்துவம், ஆசிரியப்பணி, சங்கீதப் பயிற்சி கூத்து, நாடகம் போன்ற நுட்பமான கல்வித் தொழில்களும், நுண்கலைகளும் கூட இம்மாவட்ட மக்களால் அன்று போற்றப்பட்டுள்ளன. மருத்துவர் பெயரிலும் ஆசிரியர் பெயரிலும் கூட ஊர்ப்பெயர்கள் அமைந்திருப்பது இம்மாவட்ட ஊர்ப்பெயர்களில் சிறப்பு அம்சங்கள் எனலாம்.

ஆசானபூதூர், குருபுரம், குருவாடி என்ற மூன்று ஊர்கள் ஆசிரியரை நினைவு படுத்தும் விதத்தில் இம்மாவட்ட ஊர்ப்பெயர்களாக உள்ளன. பாணபுரம் என்ற ஊர், பாணர் என்ற இசைக் கலைஞர் நினைவாக அமைந்துள்ளது. பாணபுரம் என்ற ஊருடன் சங்கீதக் குப்பம் என்ற வேறோர் ஊரும் உள்ளது. இசையை இம்மாவட்ட மக்கள் போற்றி வளர்த்த பான்மை இவ்வூர்ப் பெயர்களால் உணரமுடிகிறது.

கூர்மவிலாசம், மச்சவிலாசம் என்பன திருமால் பெருமைகளைச் சித்தரிக்கும் நாடகங்கள் அந்நாடங்கள் பெயரிலும் கூட ஊர்ப்பெயர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. நாடகக் கலையை இம்மாவட்டத்தில் அன்று வாழ்ந்த மக்கள் போற்றி வளர்த்துள்ளதால் அந்நாடகத் தொழில் புரிந்தவர்களுக்குப் பரிசிலாக இவ்வூர்களை வழங்கியிருத்தல் வேண்டும்.

கூத்துக் கலையில் இம்மாவட்டமக்கள் கொண்டிருந்த மிகுந்த ஈடுபாடு அக்கலையின் பெயர் அடைச்சொற்களாக அமையுமாறு பல ஊர்கள் இங்குக்காணப்படுவதன் மூலம் உணரப் படுகிறது. கூத்தரம்பாக்கம், கூத்தவாக்கம், குத்தம்பாக்கம் என்பன போன்ற ஊர்கள் கூத்துக்கலையின் சிறப்பைப் புலப் படுத்தும்.

வேட்டூர், வேடவாக்கம், வேட்டைக்காரன் குப்பம், வேடர் பாளையம், வேடந்தாங்கல் ஆகிய ஊர்ப்பெயர்கள், இம் மாவட்டத்தில் வேட்டையாடும் தொழில் முக்கிய இடம் பெற் றுள்ளது என்பதைப் புலப்படுத்துகின்றன. வீரச்செயல்கள் புரிந்தவர்களைப் போற்றும் விதத்தில் அவர்களது வீரத்தின் பெயரை அடையாகப் பெற்றும் ஊர்கள் உள்ளன. சமுதாய நிலையில் கீழ்மட்டத் தொழில்களான தலையாரி, ஊர்க்காவல் போன்ற தொழில்களை எடுத்துக்காட்டும் விதத்திலும் ஊர்ப் பெயர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன.

நாடகம், கூத்து, இசை ஆகிய கலைகளில் வல்லவர்களாக விளங்கியவர்கள் போன்று சாதகக்கலையில் (ஜோஸ்யத்தில்) வல்லவர்களாகவும்சிலர்விளங்கியுள்ளனர். சாதகம் கூறுவதையே அவர்கள் தொழிலாகக் கொண்டுள்ளனர். அப்படிப் பட்ட ஒரு ஜோஸ்யர் பெயரில் ஓர் ஊர் உள்ளதையும் காண முடிகிறது

பல்வேறு தொழில்களைப் புரிந்துள்ள ஆட்களின் பெயர் அடைகளை இம்மாவட்ட ஊர்ப்பெயர்களில் காணமுடிகிறது. ஆனால் உலகத் தொழில்களுக்கெல்லாம் உயிர்த்தொழிலான உழவுத் தொழில் புரிபவர் பற்றிய அடைச்சொல் ஒரு ஊர்ப் பெயரில் மட்டுமே காணப்படுகிறது. ஆனால், பொதுக்கூறுகளில் பல இடங்களில் இத்தொழில் பற்றிய குறிப்புகள் காணப்படு கின்றன. உழவுத்தொழில் என்பது இயல்பான அடிப்படைத் தொழிலாகத் தமிழர்களால் கருதப்பட்டு வருவதால் அத் தொழில் புரிவது பற்றிச் சிறப்பாகக் குறிப்பிடும் விதத்தில் ஊர்ப் பெயர்கள் மிகுதியாக ஏதும் அமையாமல் இருந்திருக்கக்கூடும். எனவே தான் அத்தொழில் தவிர பிற தொழிற்பெயர் அனைத் தும் சிறப்புக்கூறுகளில் அடைச்சொற்களாக இடம் பெற்றுள்ளன.

**உறவுப் பெயர்கள்:**

சாதிப்பெயர், தொழிற்பெயர்களின் மூலம் இம்மாவட்டத்தி லுள்ள ஆட்பெயர்கள் விளக்கப்பட்டது போன்று உறவுப்

பெயர்களின் மூலமும் விளக்கப்பட்டுள்ளன. உறவுப்பெயர்களை யுணர்த்துமாறு ஊர்கள் மிகச் சிலவே. எனினும், அப்பெயர்களின் மூலமும் ஆட்பெயர்களை யுணர முடிவதால் அவைகளும் இங்கு ஆராயப்படுகின்றன. உறவுப்பெயர்கள் அடைச்சொற்களாக அமைந்த ஊர்களாவன:

| | |
|---|---|
| பையனூர் | இளையன்குப்பம் |
| ஐயாவூர் | குமாரக்குப்பம் |
| நேசனூர் | குமரன்சேரி |
| சித்தியம்பாக்கம் | சேட்டமங்கலம் |
| குமாரப்பாக்கம் | பெரியன் தாங்கல் |
| பிள்ளைப்பாக்கம் | புத்திரன்கோட்டை |
| அப்பாவரம் | மதர்வாடி |
| கணவன் துறை | பாதர்வாடி |
| குமாரவாடி | குருவாடி |
| செவிலிமேடு | கொழுந்தனூர் |

போன்ற ஊர்ப்பெயர்களில் உறவுப் பெயர்களாகிய அடைச் சொற்கள் இடம் பெற்றுள்ளன. சில அடைச்சொற்கள் நேரிடையாக உறவுப்பெயர்களை யுணர்த்துகின்றன. வேறு சில அடைச் சொற்கள் மறைமுகமாக ஆட்பெயர்களைக் குறிப்பிடுகின்றன.

குமரன், குமாரன், புத்திரன் ஆகிய அடைச்சொற்கள் ஒரே பொருளையுணர்த்தும் பல சொற்களாகப் பல ஊர்ப்பெயர் களில் இடம் பெற்றுள்ளன பிள்ளைப்பாக்கம் என்ற ஊரில் அடைச்சொல்லாக உள்ள பிள்ளை என்ற சொல் சாதிப்பெயரை உணர்த்துவதுடன் குழந்தை அல்லது மகன் என்ற பொருளை யுணர்த்துமாறும் அமைந்துள்ளது. சேட்டன் என்பதும் மகன் என்ற பொருளையே உணர்த்தும்.

சித்தி, அப்பா, கணவன், தம்பி (இளையன்), குரு போன்ற உறவுகளை எடுத்துக்காட்டும் விதத்திலும் பல ஊர்ப்பெயர்கள் இடம் பெற்றுள்ளன. தமிழ்ப் பெயர் அடைகளே சிறப்புக்கூறு களாக மிகுதியும் இடம் பெற்றுள்ளபோது மதர். பாதர் என்ற ஆங்கில உறவுப்பெயர் அடைகளும் ஊர்ப்பெயர்களில் இடம் பெற்றிருப்பது புதுமையாகும். ஆங்கிலேயர் ஆட்சியின் போது இவ்வூர்கள் தோன்றியுள்ளன. பையனூர் என்ற ஊரில் உள்ள பையன் என்ற அடைச்சொல் லிங்கிப் பையன் என்பவரைக் குறிப்பதாகவும் கொள்ளலாம்.

ஆடவர், மகளிர், மன்னர் முதலானோர், கடவுளர், முனிவர் போன்றோரை உணர்த்தும் பெயரடைகளுடன், சாதிப்பெயர், தொழிற்பெயர், உறவுப்பெயர் முதலியவற்றையுணர்த்தும் அடைச்சொற்களும் ஆட்பெயர்களையுணர்த்தும் அடைச்சொற்களாகவே அமைந்துள்ளன. செங்கை மாவட்ட ஊர்ப்பெயர்களில் ஆட் பெயர்களையுணர்த்தும் அடைச் சொற்களைக் கொண்ட சிறப்புக்கூறுகளே மிகுதியாக உள்ளதையுணர முடிகிறது.

**விளக்கப் பெயரடைகள் :**

செங்கை மாவட்ட ஊர்ப்பெயர்களில், தனிநிலையில் நோக்கும் போது ஆட்பெயர் அடைகள் மிகுதியாகவே காணப் படுகின்றன. ஆனால் மொத்த எண்ணிக்கையை நோக்கும்போது பலபிரிவுகளை உள்ளடக்கிய விளக்கப்பெயர் அடைகளும் மிகுதியாகக் காணப்படுகின்றன. நிலஅமைப்பு, நீர்நிலைகள், தாவரம், விலங்கு போன்ற இயற்கைக்கூறுகளும், தோட்டம், வயல் போன்ற செயற்கைக் கூறுகளும், கீழ், மேல், பெரிய, சிறிய போன்ற ஒப்புமைக்கூறுகளும் விளக்கப்பெயர் அடை என்ற பெரும் பிரிவில் அடங்கும். விளக்கப்பெயர் அடையில் என்னென்ன கூறுபாடுகள் அடங்கும் என்று கூறப்பட்டுள்ளதோ அத்தனை கூறுபாடுகளையும் செங்கை மாவட்ட ஊர்ப்பெயர்களில் காணமுடிகிறது.

விளக்கப்பெயர் அடைகளில் மரம், செடி, கொடி, பூ போன்றன உள்ளடங்கிய தாவரப்பெயர்களே பிற விளக்கப் பெயரடைகளைக் காட்டிலும் மிகுதியாகக் காணப்படுவதால் தாவரப்பெயர் அடைகள் முதலாவதாகக் காணப்படுகின்றன.

**1. தாவரப்பெயரடைகள் :**

செங்கைமாவட்டம் பல்வேறு விதமான மாறுபட்ட இயற்கையமைப்பைக் கொண்ட மாவட்டம். ஒருபுறம் ஆழ்கடல், மறுபுறம் உயர்ந்த குன்றுகள் ; ஒருபுறம் செழிப்பான மருதநில வயல் வெளிகள்; வேறுபுறம் வரண்ட காட்டுப் பகுதிகள். இவ்வாறு மாறுபட்ட இயற்கையமைப்பை இம்மாவட்டம் கொண்டிருப்பதால் பல்வேறுவகைப் பட்ட செடிகள், மரங்கள் முதலியன இம்மாவட்டத்தில் தோன்றிவளர முடிகிறது. எந்தெந்தப் பகுதியில் என்னென்ன தாவரவகைகள் தோன்றிவளர்ந்தனவோ

அந்தந்தத் தாவரங்களின் பெயர்களே ஊர்ப்பெயர்களாக அமைந்துள்ளன. இவ்வாறு அமைந்த ஊர்ப் பெயர்களாவன :

| | |
|---|---|
| ஆலத்தூர் | ஆர்ப்பாக்கம் |
| காட்டூர் | காட்டுப்பாக்கம் |
| கடம்பூர் | கிளாம்பாக்கம் |
| காந்தளூர் | கீரப்பாக்கம் |
| முள்ளியூர் | முள்ளிப்பாக்கம் |
| நாவலூர் | பனங்காட்டுப்பாக்கம் |
| பனையூர் | ஊதையம்பாக்கம் |
| தாழம்பூர் | வேம்பாக்கம் |
| கரும்பூர் | வேண்பாக்கம் |
| கடம்பூர் | வெங்கம்பாக்கம் |
| முகையூர் | ஆலப்பாக்கம் |
| வேம்பூர் | ஈச்சம்பாக்கம் |
| விளம்பூர் | புளிப்பாக்கம் |
| ஆலந்தூர் | புல்லம்பாக்கம் |
| கொடுங்கையூர் | முருக்கம்பாக்கம் |
| போந்தூர் | விளாம்பாக்கம் |
| இலுப்பையூர் | இலுப்பாக்கம் |
| மாத்தூர் | விளாங்காட்டுப்பாக்கம் |
| புங்கனூர் | விருகம்பாக்கம் |
| அத்திவாக்கம் | பேரிஞ்சம்பாக்கம் |
| காட்டுவாக்கம் | விளிஞ்சம்பாக்கம் |
| அவுரிவாக்கம் | ஆலப்பாக்கம் |
| கொட்டிவாக்கம் | தாமரைப்பாக்கம் |
| பருத்திவாக்கம் | நுங்கம்பாக்கம் |
| காஞ்சிவாக்கம் | விளாம்பாக்கம் |
| அளிஞ்சிவாக்கம் | களாம்பாக்கம் |
| பிச்சிவாக்கம் | மாம்பாக்கம் |
| துளசிபுரம் | நெல்லிக்குப்பம் |
| புண்டரீகபுரம் | சூரைக்குப்பம் |
| புன்னம்பட்டு | தாமரைக்குப்பம் |
| பனம்பட்டு | பனங்காட்டுச்சேரி |

அத்திப்பட்டு
இலுப்பைப்பட்டு
நெல்பட்டு
தூதுவிளம்பட்டு
விளாம்பட்டு
சூரப்பட்டு
ஆர்ப்பட்டு
மூங்கில்பட்டு
வேப்பம்பட்டு
முருங்கைப்பட்டு
மாம்பட்டு
முள்ளிக்குளம்
பூக்குளம்
கமுகம்பள்ளம்
கொள்ளுமேடு
அவிரிமேடு
செங்கழுணீர்மேடு
எட்டிமேடு
நொச்சிமேடு
பாகல்மேடு
ஆர்க்காடு
ஓதிக்காடு
ஆலங்காடு
வேற்காடு
மாங்காடு
ஈச்சங்காரணை
மல்லியங்காரணை
பனங்காரணை
வேப்பங்காரணை
பீர்க்கங்காரணை
மஞ்சங்காரணை
காட்டுத்தோப்பு
காட்டுக்கோட்டை

பூச்சேரி
பாக்குவாஞ்சேரி
வேப்பஞ்சேரி
கருவேளஞ்சேரி
இலந்தைச்சேரி
எருக்கஞ்சேரி
அத்திச்சேரி
மருதேரி
புல்லேரி
கடம்பேரி
ஏலக்காமங்கலம்
முருக்கந்தாங்கல்
பூண்டித்தாங்கல்
பழவந்தாங்கல்
சவுக்கந்தாங்கல்
வெள்ளரித்தாங்கல்
நெற்குன்றம்
பருத்திக்குன்றம்
காரைப்பேட்டை
தாழம்பேடு
அத்திப்பேடு
பூவலம்பேடு
வேம்பேடு
குவளைவேடு
தாழவேடு
பூந்தண்டலம்
காவித்தண்டலம்
பழந்தண்டலம்
கருவேம்பூண்டி
தினையாம்பூண்டி
சூரைப்பூண்டி
காட்டுப்பள்ளி
ஜங்கஸ்பள்ளி

முல்லைவாயல்
நெல்வாயல்
காஞ்சிவாயல்
காட்டகரம்
பழவேலி
ஆலம்பரை
கடம்பாடி
ஈச்சம்பாடி
காஞ்சிபாடி
அத்தியூர்மேல்துளி
நெல்வாய்
எருக்குவாய்
அல்லிக்குழி
கொடிவலசை
பூந்தமல்லி

மேற்கண்ட ஊர்ப்பெயர்கள் தாவரங்களின் பெயர்களைப் பெற்றுள்ளன. பொதுவாகத் தாவரங்கள் என்று கூறப்பட்டாலும் மரப்பெயர்களே இம்மாவட்டத்தில மிகுதியான ஊர்களுக்குப் பெயர்களாகியுள்ளன. அதற்கடுத்த நிலையில் பல்வேறு வகைப் பட்ட செடி, கொடிகளின் பெயர்கள் ஊர்ப்பெயர்களாக அமைந் துள்ளன. பூக்களின் பெயர்களைப் பெற்றுள்ள ஊர்களாகச் சில ஊர்களே காணப்படுகின்றன. பல்வேறு வகைப்பட்ட தாவரங் களின் உறைவிடமாக அமைவது காடு. காடு என்பது தாவரங் களின் உறைவிடமென்பதால் அச்சொல்லும் தாவரங்களையே குறிப்பால் உணர்த்துமென்பது கருதி, தாவரங்களின் பெயர் களுடன் சேர்க்கப்பட்டுள்ளது.

இம்மாவட்டத்திலுள்ள ஊர்ப்பெயர்களில் பல பொதுக் கூறுகள் இயற்கைத் தாவரங்களின் பெயர் அடைகளைச்சிறப்புக் கூறுகளாகப் பெற்றுள்ளன. எனினும், குறிப்பிட்ட சில பொதுக் கூறுகளிலேயே மிகுதியான தாவரப்பெயரடைகளைக் காண முடிகிறது. ஊர், பாக்கம், பட்டு, மேடு, கரணை, குப்பம், சேரி, தாங்கல், பேடு, தண்டலம், பூண்டி, வாயல் ஆகிய பொதுக்கூறு களையுடைய ஊர்ப்பெயர்களில் மிகுதியான தாவரங்களின் பெயர் அடைகளைக் காண முடிகிறது.

இங்குக் குறிப்பிடப்பட்ட பொதுக் கூறுகள் அனைத்தும் இயற்கைத் தாவரங்கள் செழித்து வளர்வதற்கேற்ற சூழ் நிலையைக் கொண்டிருப்பதும் தாவரங்களின் பெயரடைகளை ஊர்ப்பெயர்கள் பெறுவதற்குக் காரணம் எனலாம். அன்றியும், ஊர்ப்பெயர்களின அமைப்பில் ஊர், பாக்கம் போன்ற பொதுக் கூறுகள் காலத்தால் முந்தித் தோன்றியவை. அப்பொதுக் கூறு களையுடைய ஊர்களில் இயற்கைத் தாவரங்களின் பெயர்களே

மிகுதியாகக் காணப்படுவதால் இப்பெயர்களெல்லாம் காலத்தால் முந்தியவைகளாக இருத்தல் வேண்டும் என்றும் எண்ணவேண்டியுள்ளது.

மரம், செடி போன்ற இயற்கைத் தாவரங்களின் பெயர்களையே ஊர்ப்பெயர்கள் கொண்டிருக்க வேண்டும் என்ற பொதுவான கருத்து ஊர்ப்பெயர்கள் பற்றி ஆராய்ச்சி செய்பவர்களிடையே நிலவுகிறது.[5] அக்கருத்தை இம்மாவட்ட ஊர்ப் பெயர்களும் உறுதிப்படுத்துகின்றன. மொத்தத்தில், பெரும் பாலான ஊர்கள் இயற்கைத் தாவரங்களின் பெயர்களாகவே இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன.

ஆல், கடம்பு, நாவல், பனை, கரும்பு, வேம்பு, விளம்பு, கொடுங்கை, போந்து, இலுப்பை, புங்கம், அத்தி, காஞ்சி, ஆர், ஊதை, வேண், வெங்கு, ஈச்சம், புளி, மா, முருங்கை, பேரீச்சை, விளிஞ்சை, விளாம், களாம், புன்னை, மூங்கில், கமுகு, ஓதியம், பாக்கு, கருவேளம், இலந்தை, சவுக்கு ஆகிய மரங்களின் பெயர்களை அடைச்சொற்களில் காணமுடிகிறது. இம்மரங்களெல்லாம் இம்மாவட்டத்தில் மிகுதியாக அன்று வளர்ந்துள்ளன. அதனால் தான் இம்மரங்கள் மிகுந்துள்ள பகுதிகளில் அம்மரங்களின் பெயராலேயே ஊர்ப்பெயர்களும் அமைந்துள்ளன

ஊர்ப்பெயர்களின் சிறப்புக் கூறுகளில் இடம் பெற்றுள்ள தாவரப்பெயர் அடைச் சொற்கள் மூலம் அம்மாவட்டத்திலிருந்த மரம், செடிகளைப் பற்றித் தெளிவாக உணர முடியும் என்பதற்கு இம்மாவட்ட ஊர்ப்பெயர்களே சான்று பகர்கின்றன. மனிதர்கள் தங்கள் பெயர்களையும், தங்களால் வழிபடப்படும் கடவுளர் பெயர்களையும் ஊர்களுக்குச் சூட்டத் தொடங்குவதற்கு முன்பு இயற்கைத் தாவரங்களின் பெயர்களையே சூட்டியுள்ளனர். இயற்கையையொட்டி ஐவகை நிலங்களைப்பாகுபாடு செய்து இயற்கையோடு இணைந்து வாழ்ந்த தமிழர், தாம் கூடிவாழ்ந்த பகுதிகளுக்கும் அப்பகுதியில் மிகுந்து காணப் பட்ட இயற்கைத் தாவரங்களின் பெயர்களையே தொடக்க காலத்தில் சூட்டியிருக்க வேண்டும். அவ்வாறு சூட்டப்பட்ட பெயர்களாகச் செங்கை மாவட்டத்தில் காணப்படும் ஊர்ப் பெயர்களே 'தாவரப்பெயர்கள்' என்ற பகுதியில் இங்கு எடுத்துக் காட்டப்பட்டன. ஒரு சில ஊர்கள் வேண்டுமானால் பிற் காலத்தில் தோன்றியிருக்கலாம்.

---

5. டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் அவர்கள் நேரில் கூறியது

இம்மாவட்ட ஊர்ப்பெயர்களில் இடம் பெற்ற மரப்பெயர் அடைகள் பலவாக இருப்பினும் சில மரப்பெயர்களே பல பொதுக் கூறுகளிலும் இடம்பெற்றுள்ளன. அத்தி, ஆல், வேம்பு, முருங்கை, பனை, மா, புளி, இலுப்பை, மூங்கில் இலந்தை போன்ற மரப்பெயர் அடைகள் பல பொதுக்கூறுகளையுடைய ஊர்களில் இடம் பெற்று பல ஊர்ப்பெயர்களாகி உள்ளன. இவ்வகை மரங்கள் இம் மாவட்டத்தில் மிகுதியாக உற்பத்தியாகி யுள்ளன என்று தெரியவருகிறது. இன்றும் கூட இம்மாவட்டப் பகுதிகளில் இவ்வகை மரங்களை மிகுதியாகக் காணமுடிகிறது.

மரப்பெயர்களுக்கு அடுத்து மிகுதியாகக் காணப்படுவது செடிவகைகளின் பெயர்களேயாகும். செடிவகைகளின் பெயரிலும் பல ஊர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன.

முள்ளி, போந்தை, அவுரி, கொட்டி, பருத்தி, கீரை, புல், துளசி, நெல், தூதுவிளம், சூரை, கொள்ளு, பீர்க்கை, எட்டி, நொச்சி, பாகல், மஞ்சள், எருக்கு, மருது, ஏலக்காய், பூண்டு, வெள்ளரி, காரை, கொடிவலசை போன்ற செடிகளின் பெயர் அடைகளைப் பெற்றுப் பல ஊர்கள் இம்மாவட்டத்தில் அமைந்துள்ளன. இம்மாவட்டத்தில் இச்செடிவகைகள் அன்றும் மிகுந்து காணப்பட்டுள்ளன; இன்றும் மிகுதியாகக் காணப்படு கின்றன. முள்ளி, அவுரி, எட்டி, கொட்டி, துளசி, மஞ்சள் போன்ற செடி வகைகள் நீர் நிலைகள் மிகுந்துள்ள இடங்களில் காணப்படும். சூரை, காரை, எருக்கு, கொள்ளு, பூண்டு வகைகள் போன்ற செடிவகைகள் காடுகளிலும், நீர்ப்பாசனம் குறைவாய் உள்ள பகுதிகளிலும் காணப்படும். இம்மாவட்ட ஊர்களில் சில நீர்வளமுள்ள இடங்களிலும், வேறு சில, காட்டுப்பகுதிகளிலும் அமைந்துள்ளதால் எல்லாவகைச் செடிகளும் இங்கு வளர்வதற்கு ஏற்றாற் போல் நில அமைப்பு உள்ளது.

பல்வேறு செடிகளின் பெயர்கள் இங்குக்காணப்பட்டாலும் முள்ளி, அவுரி, கீரை, சூரை, காரை, எருக்கு போன்ற செடி வகை களின் பெயர் அடைகளே மிகுதியாகக் காணப்படுகின்றன. பல பொதுக்கூறுகளில் இவ்வகைச் செடிகளின் பெயர் அடைகளே சிறப்புக்கூறுகளாக இடம் பெற்றுள்ளன. எனவே, இம்மாவட்டத் தில் மிகுதியாகக்காணப்படும் செடிவகைகள் இவைகள் என்று கருத முடிகிறது.

தாவரப்பெயர்கள் வரிசையில், மரப்பெயர், செடிப்பெயர் களுக்கு அடுத்தாற் போல் இடம் பெறுவது பூவினங்களின்

பெயர்களாகும். செடிப்பெயர்களின் வரிசையிலேயே பூவினங்களின் பெயர்களையும் சேர்க்க முடியுமெனினும், இவ்வகைத் தாவரங்களின் தனித்தன்மை கருதி இவை தனித்துக் காணப்படுகின்றன.

தாழம்பூ, முகை, காஞ்சி, தாமரை, செங்கழுணீர், மல்லி, மருது, குவளை, காவி, முல்லை, அல்லி, பிச்சிப்பூ, காந்தள் போன்ற பூக்களின் பெயர் அடைகளைப் பெற்றுப் பல ஊர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன, பூ என்ற அடைச் சொல்லை மட்டுமே சிறப்புக் கூறாகப் பெற்று, பூக்குளம், பூச்சேரி, பூவலம்பேடு, பூந்தண்டலம் ஆகிய ஊர்கள் அமைந்துள்ளன.

தாமரை என்ற பூவைச் சிறப்பு அடைச் சொல்லாகப் பெற்று தாமரைப் பாக்கம், தாமரைக் குப்பம் ஆகிய ஊர்கள் அமைந்திருப்பதுடன் புண்டரீகபுரம் என்ற ஊர்ப்பெயரும் அமைந்துள்ளது. தாழம்பூவைப் பெயர் அடையாகப் பெற்று தாழம்பூர், தாழம்பேடு, தாழம்பேடு ஆகிய ஊர்கள் அமைந்துள்ளன. இவ்வகைப் பூவினங்கள் இம்மாவட்டத்தில் மிகுதியாகக் காணப்படுவதையே பல்வேறு ஊர்ப்பெயர்களின் மூலம் உணர முடிகிறது.

மரப்பெயர், செடிப்பெயர், பூப்பெயர் ஆகிய பெயர் அடைகளைச் சிறப்புக்கூறுகளாகக் கொண்ட ஊர்கள் அனைத்தும் இம்மாவட்ட ஊர்களில் காலத்தால் முந்தியவை என்று துணிந்து கூறலாம். இயற்கையமைப்பையொட்டி இவ்வூர்ப் பெயர்கள் அமைந்திருப்பதுடன் பிற மொழிக் கலப்பு இவ்வூர்ப்பெயர்களில் பெரும்பாலும் இல்லை என்றே கூறலாம். புண்டரீகம் போன்று அமைந்துள்ளதும் கூடத் தாமரை என்ற தமிழ்ச் சொல்லின் மொழி பெயர்ப்பேயாகும். எனவே, பிற மொழியாளர் இம்மாவட்டத்திற்குள் கால் வைப்பதற்கு முன்பாகவே தாவரப் பெயர்களைச் சிறப்புக் கூறுகளாகப் பெற்ற ஊர்கள் அமைந்து விட்டன என்பது புலனாகிறது.

## 2. விலங்குப் பெயரடைகள்:

இயற்கைத் தாவரங்கள் இயல்பாக இருந்த இடங்களில் அப்பெயர் அடைகளை ஊர்ப்பெயர்களுக்குச் சூட்டிய தமிழர், குறிப்பிட்டுக் கூறும் அளவிற்குத் தாவரங்கள் ஏதும் இல்லாத இடங்களில் எப்பெயர்களை ஊர்களுக்குச் சூட்டலாம் என்று எண்ணி

யிருக்க வேண்டும். அப்படிப்பட்ட சமயங்களில் நில அமைப்பு நீர் நிலைகளின் அடிப்படையில் பெயர்களைச் சூட்டியிருக்க வேண்டும். அப்பகுப்பு முறைகள் எல்லா இடங்களுக்கும் பொருந்தியிருக்கும் என்று கூறமுடியாது. அந்நிலையில் தான் விலங்குகள், பறவைகளின் பெயர்களையும் ஊர்களுக்குச் சூட்டலாம் என்ற எண்ணம் அன்று வாழ்ந்தவர்களுக்குத் தோன்றியிருக்க வேண்டும். அதன் விளைவு தான் இன்று காணப்படும் பல ஊர்ப் பெயர்கள் விலங்குகள், பறவைகளின் பெயர்களைப் பெற்றிருப்பதாகும்.

இம்மாவட்ட ஊர்ப்பெயர்களில் காடு, மலை, குன்று என்பன போன்ற பொதுக்கூறுகள் பல உள்ளன. அப்பொதுக்கூறுகள் எல்லாம் இம்மாவட்டம் இயற்கையாகவே விலங்குகளும் பறவைகளும் வாழ்வதற்கேற்ற அமைப்பைப் பெற்றுள்ளன என்பதைப் புலப்படுத்தும். மேலும் வெளிப்படையாக மாவட்ட ஊர்களின் அமைவிடங்களை நோக்கும் போதும் காட்டுப்பகுதிகள், மலைப்பகுதிகள் பல இன்றும் இருப்பதைக் காணலாம். இவையாவும் விலங்குப் பெயர்களையும், பறவைகளின் பெயர்களையும் இம்மாவட்ட ஊர்ப்பெயர்களில் காண்பதற்கான பொருத்தப்பாடுகளாகும்.

இனி, இம்மாவட்டத்தில் விலங்கு, பறவைகளின் பெயர் அடைகளைச்சிறப்புக் கூறுகளில் பெற்றுள்ள ஊர்ப்பெயர்களைக் காணலாம்.

| | |
|---|---|
| ஆவூர் | நந்தியம்பாக்கம் |
| ஆட்டூர் | நாரைப்பாக்கம் |
| வல்லூர் | புலிப்பாக்கம் |
| உள்ளாவூர் | ஆனம்பாக்கம் |
| நரியூர் | நரியம்பாக்கம் |
| பசும்பூர் | புள்ளம்பாக்கம் |
| சம்பாதியூர் | மீனம்பாக்கம் |
| சேயூர் | தேனம்பாக்கம் |
| கரடியூர் | விரால்பாக்கம் |
| ஆனூர் | ஆட்டுப்பாக்கம் |
| எருமையூர் | ஏனம்பாக்கம் |
| தாராவூர் | கோழிவாக்கம் |
| மாம்பட்டு | பன்னிவாக்கம் |

| | |
|---|---|
| வேழம்பட்டு | இரும்புலிசேரி |
| தூக்கணாம்பட்டு | சியஞ்சேரி |
| குதிரைப்பள்ளம் | புலிகுளம் |
| காக்கைப்பள்ளம் | பாம்பள்ளம் |
| விட்டிலாபுரம் | சியமங்கலம் |
| புலிக்குன்றம் | மீனம்பேடு |
| திருக்கழுக்குன்றம் | எருமைவெட்டிபாளையம் |
| முதலமபேடு | பசுங்காரணை |
| அன்னம்பேடு | திருவாலங்கோயில் |
| புலியரணங்கோட்டை | சிங்கசமுத்திரம் |
| கிளிநகரம் | குருவியகரம் |
| கிளிக்கோடி | புலிவாய் |
| நந்திபுரம் | குருவிமலை |
| விட்டிலாபுரம் | சேல்வாயல் |
| செம்புலிவாம | சேல்காடு |

இங்குக் குறிப்பிடப்பட்ட ஊர்களில் விலங்குகள், பறவைகளின் பெயர்களுடன் நீர் வாழும் உயிரினமாகிய முதலை, மீன் வகைகளின் பெயர்களும் குறிப்பிடப்பட்டுள்ளன. அஃறிணை உயிரினங்கள் என்ற வரிசையில் அவைகளும் சேரும் என்பதுடன் அவைகளைத் தனியாகப் பகுத்துக் காணவேண்டியதிருப்பதால் அந்நிலையைத் தவிர்ப்பதற்காகவும் விலங்குப் பெயர்களுடன் மீன் வகைகளும் இணைத்துக் காணப்படுகின்றன.

இம்மாவட்ட ஊர்ப்பெயர்களாக இடம் பெற்றுள்ள விலங்குப் பெயர்கள் பல. அவ்விலங்குகளில் வீட்டு விலங்குகளும் உண்டு; காட்டு விலங்குகளும் உண்டு. ஆடு, பசு, காளை, எருமை, குதிரை, பன்றி, ஆகியன ஊர்ப்பெயர்களில் இடம் பெற்றுள்ள வீட்டு விலங்குகளாகும். பன்றி, யானை போல்வன காட்டு விலங்காகவும் கருதப்பட்டாலும் அவை மனிதர்களால் பழக்கப்பட்டுப் பயன்படுத்தப்படுவதால் வீட்டு விலங்குகளாகவே கருதப்படுகின்றன. ஆடு, காளை, பசு, எருமை ஆகிய வீட்டு

விலங்குகள் குடும்ப வாழ்க்கைக்குப் பெரிதும் பயன்படுவதால் அவை பெருமளவில் வளர்க்கப்படுவதற்கு வாய்ப்பு உண்டு. அதனால் அவ்விலங்குகளின் பேரில் பல ஊர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன.

எருமை வெட்டி பாளையம் என்றோர் ஊரும் காணப்படுவது சிந்தித்தற்குரியது. வீட்டு விலங்காகப் போற்றி வளர்க்கப்படும் எருமையைக் கடவுள் வழிபாடு கருதியோ அன்றி வேறு காரணத்தாலோ வெட்டியுள்ளனர். அக்கொலைத் தொழிலைக் குறிக்கும் விதத்தில் ஊர்ப்பெயரே அமைந்துவிட்டது.

ஊர்ப்பெயர்களில் சிறப்புக்கூறுகளாக இடம் பெற்ற விலங்குகளில் காட்டு விலங்குகள் சிலவும் உண்டு. நரி, கரடி, யானை, புலி, சிங்கம் ஆகிய காட்டு விலங்குகளின் பெயர் அடைகளைப் பல ஊர்களில் காணமுடிகிறது. நரியூர், நரியம் பாக்கம் என்ற ஊர்ப்பெயர்களில் நரியும், புலிப் பாக்கம், இருமபுலிசேரி, செம்புலிவரம், புலிகுளம், புலிக்குன்றம், புலியரணங்கோட்டை, புலிவாய் ஆகிய ஊர்ப்பெயர்களில் புலியும், சீயஞ்சேரி, சீயமங்கலம், சிங்க சமுத்திரம ஆகிய ஊர்ப்பெயர்களில் சிங்கமும் சிறப்பாகக் குறிப்பிடப் படுகின்றன.

விலங்குப் பெயர்களில் பிறவகை விலங்கினங்கள் யாவினையும் விடப் புலியே மிக அதிகமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. மலைப்பாங்கான பகுதிகளாக இம்மாவட்ட ஊர்களில் பெரும் பாலானவை அமைந்திருப்பதால் புலிகள் மறைந்து உறைவதற்கு ஏற்ற இடங்களாகப் பல ஊர்ப்பகுதிகள் அமைந்திருக்கும் என்று எண்ண வேண்டியுள்ளது. காட்டுப் பகுதிகளும், மலைப் பகுதிகளும இன்று அழிக்கப்பட்டு வருவதால் புலிகள் இப்பகுதியில் தங்குவதற்குரிய வாய்ப்பு இன்று அருகியுள்ளது எனலாம்.

ஊர்ப்பெயர்களாக இடம்பெற்ற விலங்குகளைப் போன்று பறவைகளிலும் வீட்டில் வாழும் பறவைகள், காட்டில் வாழும் பறவைகள் என்ற இருவகையும் உண்டு. கோழி, அன்னம், கிளி முதலிய பறவைகள் வீட்டில் வளர்க்கப்படும். வல்லூறு, உள்ளா, சம்பாதி, தாரா, தூக்கணாம் குருவி, காககை, நாரை, கழுகு, குருவி, விட்டில் ஆகியன காட்டில் வாழும் பறவைகள் ஆகும். கிளி என்ற வீட்டில் வளரும் பறவையின் பேரிலும், குருவி என்ற காட்டுப்பறவையின் பேரிலும் பல ஊர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன.

நீர் நிலைகள் உள்ள இடங்களில் முதலையும், மீன் வகைகளும் தங்குவதற்கு வாய்ப்பு உண்டு. அவ்வாய்ப்பு உள்ள இடங்களாகவே முதலம்பேடு, மீனம்பாக்கம், விரால்பாக்கம் ஆகிய ஊர்கள் காணப்படுகின்றன. பாக்கம் என்பது கடற்கரைச் சிற்றூரைக் குறிக்கும். கடற்கரையில் மீன் வகைகள் கிடைக்கும் என்பதை இவ்வூர்ப் பெயர்கள் எடுத்துக்காட்டுகின்றன.

இம்மாவட்ட ஊர்ப்பெயர்களில் விலங்கினம், பறவை, மீன் வகைகள் போன்றனவற்றின் பெயர்கள் மிகுதியாகக் காணப்படுவதற்கு மாவட்டத்தின் இயற்கையமைப்பு மூல காரணமாக அமைவதுடன், வேட்டையாடுதல் என்ற தொழில் இம்மாவட்டத்தில் பரவலாக இடம்பெற்றிருந்ததும் ஓர் காரணமாகும். வேட்டையாடுவதைக் குறிப்பிடும் விதத்தில் வேடு, வேடல் போன்ற பொதுக்கூறுகளும். வேடன்தாங்கல், வேட்டைக்காரன் புத்தூர் போன்ற பல ஊர்களும் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. வேட்டையாடுவோர் பொதுவாக விலங்குகளையும் பறவைகளையுமே வேட்டையாடுவர் என்பது பொதுவான செய்தி.

இம்மாவட்டத்தின் ஒரு பகுதியில் எல்லையாகவே கடல் அமைந்துள்ளது. அக்கடலின் தொடர்ச்சியாகச்சில ஆறுகளும். பல ஏரிகளும் ஆங்காங்குக் காணப்படுவதால் மீன்வகைகள் மிகுந்துகாணப்படுவதற்கு இயல்பான சூழல் அமைந்துள்ளது. இவ்விளக்கங்கள் யாவும் விலங்கு, பறவை, மீன் போன்ற பெயரடைகள் ஊர்ப்பெயர்களில் இடம் பெறுவதற்கு இம்மாவட்டத்தின் இயற்கையமைப்பும் தொழிலும் காரணம் என்பதை உறுதிப்படுத்தும்.

### 3. நில அமைப்புப் பெயரடைகள் :

ஊர்ப்பெயர்களின் அமைப்பில் இயற்கையோடியைந்த நில அமைப்புப் பெயர் அடைகளும் காலத்தால் முந்தியவைகளாகும். சங்க இலக்கியங்களிலேயே இயற்கையமைப்பை ஒட்டிய நில அமைவிடங்கள் குறிப்பிடப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது. தலைமகன், தலைமகள் முதலானோர் பெயர்கள் சுட்டிக்கூறப் பெறாத சங்க இலக்கிய அகப் பாடல்களில் தலைமகனின் ஊர் பற்றிய குறிப்புகள் பரவலாக இடம் பெற்றுள்ளன. ஒவ்வொரு தலைமகனுக்கும் உரிய ஊர் இன்னது என்று தனித்தனிப்பெயர்களால் சுட்டிக் கூறப்படவில்லை. ஆனால் அவ்வூரின் நில அமைப்பு, பெரும்பாலான பாடல்களில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளதையுணர முடிகிறது.

"கானலஞ் சேர்ப்பன்" [6]

"குன்ற நாடன்" [7]

"பெருவரை நண்ணிய சாரலான்" [8]

என்றெல்லாம் தலைமகன் குறிப்பிடப்படும் நிலைகளை அக நானூறு எடுத்துக்காட்டுகிறது. பிற அகத்துறை இலக்கியங் களிலும் இந்நிலையைக் காணலாம். கானம், குன்று, பெருவரை போன்ற நில அமைப்புப் பெயரடைகளின் மூலம் தலைமகன் சுட்டப்படுகின்றான். தனிப்பட்ட ஊர்ப்பெயர்கள் ஏற்படாத அன்றைய நிலையில் நிலஅமைப்புப் பெயரடைகளின் மூலம் தலைமகன் குறிப்பிடப்பட்டான். அந்நிலை காலப்போக்கில் வளர்ச்சி பெற்று, பல்வேறு ஊர்களும் தோன்றியபின் புதிதாகத் தோன்றிய ஊர்ப்பெயர்களுக்கு அடைச்சொற்களாக நில அமைப்புப் பெயரடைகள் அமைந்துவிட்டன.

இவ்வடிப்படையில் நோக்கினால், நிலஅமைப்புப் பெயரடை களைப்பெற்றுள்ள ஊர்கள் பெரும்பாலும் காலத்தால் முந்தித் தோன்றிய ஊர்களாகவே இருக்க வேண்டும் என்பது விளங்கு கிறது. ஒரு சில ஊர்கள் பிற்காலத்திலும் தோன்றியிருக்கக்கூடும் அப்படித் தோன்றிய ஊர்கள் குறைவாகவே இம்மாவட்டத்தில் உள்ளன.

நில அமைப்பின் அடிப்படையில் ஊர்கள் அமைவதற் கேற்பவே இம்மாவட்டம் அமைந்துள்ளது. பல்வேறு வகைப் பட்ட குன்றுகளையும், மண்வகையையும், காடு, மேடு, பள்ளம் போன்ற மாறுபட்ட நில அமைப்பையும் இம்மாவட்டம் பெற்றுள்ளது. அன்று சூட்டப்பட்ட பெயர்கள் இன்றும் அவ்வூர் களுக்குப் பொருந்துமாறே மாவட்டத்தின் நில அமைப்பு உள்ளது.

இம்மாவட்ட ஊர்ப்பெயர்களில் நூற்றுக்கு மேற்பட்ட பொதுக்கூறுகளைக் காணமுடிகிறது. பெரும்பாலான பொதுக் கூறுகளில் நில அமைப்புப் பெயரடைகளின் அடிப்படையில் அமைந்த ஊர்கள் உள்ளன. எனவே, ஒரு பெயரடைகுப்

---

6. அகநானூறு - பாடல் : 160 - 8
7. ,, ,, 172-14
8. ,, ,, 182-18

பொருந்துமாறு அமைப்புடைய ஊர்கள் எங்கெல்லாம் உள்ளன வோ அங்கெல்லாம அதே பெயரடை, ஊர்ப்பெயரில் அமைந் துள்ளது. எடுத்துக்காட்டாக, எங்கெல்லாம் குன்றுகள் உண்டோ, அங்கெல்லாம் அப்பெயரடை ஊர்ப்பெயரில் அமைந் துள்ளது.

நிலஅமைப்பில், இயற்கையாகவே அமையும் பெயர்களும் உண்டு; செயற்கையாகப் பின்பு அமைக்கப்படும் பெயர்களும் உண்டு. மலை, காடு, மேடு, பள்ளம், வண்டல் போன்ற பெயர்களெல்லாம் இயற்கையாகவே அமைவது. சோலை, தோட்டம், கழனி போன்ற பெயர்கள் செயற்கையாகப் பின்பு அமைக்கப்படுவது. செங்கைமாவட்டத்தில் இவ்விருவகையான பெயரடைகளையும் ஊர்ப்பெயர்களில் காணமுடிகிறது. எனி னும் இயற்கையான நில அமைப்புப் பெயரடைகளே மிகுதி.

இனி, இருவகையிலும் பெயரடைகளாக அமைந்த ஊர்ப் பெயர்களை இங்குக் காணலாம்.

குன்றத்தூர்
காட்டூர்
இல்லத்தூர்
கோட்டூர்
வண்டலூர்
செய்யூர்
மலைவையாவூர்
கானலூர்
பாலையூர்
கரம்பனூர்
மணலூர்
பாலேஸ்வரம்
செங்கல்பட்டு
குன்னம்பட்டு
கல்பட்டு
பருக்கிப்பட்டு
மலைப்பட்டு
பள்ளிக்காரணை

காட்டுப்பாக்கம்
கழனிப்பாக்கம்
கல்பாக்கம்
மணல்பாக்கம்
இஞ்சியம்பாக்கம்
பள்ளம்பாக்கம்
காணியம்பாக்கம்
கோட்டுப்பாக்கம்
மலைப்பாக்கம்
குன்னவாக்கம்
காட்டுவாக்கம்
கண்டிவாக்கம்
புழுதிவாக்கம்
மடக்குப்பம்
பள்ளியறைக்குப்பம்
செம்மண்சேரி
அணைக்கட்டுச்சேரி
பாரேரி

| | |
|---|---|
| கல்குளம் | பள்ளவேரி |
| சுண்ணாம்புக்குளம் | குழிபள்ளம் |
| மணல்மேடு | கோடிப்பள்ளம் |
| குன்னக்காடு | நத்தப்பேட்டை |
| முட்டுக்காடு | ஒரக்காட்டுப்பேட்டை |
| பட்டிக்காடு | ப்ளேஸ்பாளையம் |
| வெளிக்காடு | மேட்டுப்பாளையம் |
| கோட்டைக்காடு | சாட்டுக்காரணை |
| தோட்டக்காடு | காட்டுத்தோப்பு |
| மாகழனி | காட்டுக்கோட்டை |
| காட்டகரம் | அடவிவிளாகம் |
| குன்றப்பள்ளி | கிடங்குக்கரை |
| காட்டுப்பள்ளி | கல்வாய் |
| கோட்டுவளி | குன்னவலம் |

நில அமைப்புப் பெயராக இடம்பெற்ற இம்மாவட்ட ஊர்ப் பெயர்களில் பல இயற்கையாக அமைந்த நில அமைப்பையே பெற்றுள்ளன என்பது மட்டுமன்றி அப்பெயர் அடைகளே பன் முறை பல பொதுக்கூறுகளிலும் இடம் பெற்றுள்ளது. செயற்கை யமைப்பைப் பெற்ற ஊர்கள் ஆங்காங்கு அருகிக் காணப்படு கின்றனவேயன்றிப் பல்வேறு ஊர்களாக அவை அமையவில்லை. மேலும், இம்மாவட்டத்தில் இடம்பெற்றுள்ள ஊர்ப்பெயர்களின் பொதுக்கூறுகளில் பெரும்பாலானவை நில அமைப்புப் பெயரடை களையே பெற்றுள்ளன.

சிறப்புக் கூறுகளில் இடம் பெற்றுள்ள பெயரடைகளில் வேண்டுமானால் தாவரம், விலங்கு, பறவை, ஆட்பெயர்கள் போன்ற பெயரடைகள் மிகுந்து காணப்படலாம். ஆனால் பொதுக்கூறுகளில் இடம் பெற்றுள்ள பெயரடைகள் என்று நோக்கும்போது இம்மாவட்ட ஊர்ப்பெயர்களில் பெரும்பாலும் நில அமைப்புப் பெயர்களையே காணமுடிகிறது. அதனால், சிறப்புக் கூறுகளில் நில அமைப்புப் பெயரடைகள் மிகுதியாக இடம் பெறவில்லையே என்று எண்ண வேண்டியதில்லை. பொதுக்கூறுகளில் இடம் பெற்றுள்ள நில அமைப்புப் பெயரடை கள் சில சிறப்புக் கூறுகளிலும் இடம் பெற்றுள்ளன. அங்கு இடம் பெறாதன சிலவும் இங்கு இடம் பெற்றுள்ளன.

குன்று, காடு, பாலை, மணல், கரம்பை, வண்டல், கல், சுண்ணாம்பு, பள்ளம், மேடு, செம்மண், குழி, நத்தம், கிடங்கு போன்ற நில அமைப்புப் பெயரடைகள் இயற்கையான அமைப்பைப் பெற்றவை. இவைகளில் குன்று, காடு போன்ற பெயரடைகள் பல பொதுக்கூறுகளில் இடம்பெற்று, பல ஊர்ப் பெயர்களாகியுள்ளன. குன்று, மலை, குன்னம் போன்ற வேறு சில பெயர்களிலும் குன்று என்ற பெயர் அடைச்சொல் வழங்கப் படுகிறது. இவ்வாறு இடம் பெற்றுள்ள ஊர்ப் பெயர்களே நில அமைப்புப் பெயர்களில் மிகுதி எனலாம்.

காடு, கான், கிடங்கு, அடவி போன்ற பல்வேறு பெயர் களில் காடு என்ற பெயர் வழங்கப்படுகிறது. அவ்வாறு அமைந்த ஊர்ப்பெயர்களும் மிகுதியாக உள்ளன. பல்வேறு பொதுக்கூறுகளிலும் காடு என்ற பெயர்அடை அமைந்துள்ளது. ஒவ்வொரு பொதுக்கூறிலும் இச்சிறப்புக்கூறு பெற்றுப் பல ஊர் கள் அமைந்துள்ளன. எடுத்துக்காட்டாகக் காட்டுப்பாக்கம் என்ற பெயரில் பல ஊர்கள் இம்மாவட்டத்தில் உள்ளன. ஒரு ஊர் மட்டுமே இங்கு எடுத்துக் காட்டப்படுகிறது. குன்று என்ற பெய ரடைக்கும் இது பொருந்தும். குன்றத்தூர் என்ற பெயருடைய ஊர்கள் பல இருப்பினும் ஒரு ஊர் மட்டுமே இங்குக் குறிப்பிடப் படுகிறது.

வண்டல், கரம்பை, மணல், செங்கல், பருக்கை, கல், சுண் ணாம்பு, செம்மண், புழுதி போன்ற பெயர் அடைகள் மண்ணின் தன்மையை எடுத்துக்காட்டும் விதத்தில் அமைந்துள்ளன. இம் மாவட்டத்தில் எத்தகைய மண்வளம் அமைந்துள்ளது என்று செய்யப்படும் ஆராய்ச்சிக்கும் கூட ஊர்ப்பெயர்கள் துணை செய்கின்றன. அன்று சூட்டப்பட்ட ஊர்ப்பெயர்களுக்கு இன்றும் அப்பெயர் பொருந்துமாறு அதே மண்வளம் இன்றும் இம்மாவட்ட ஊர்களில் காணப்படுகிறது.

செய், பட்டி, வெளி, கழனி, இஞ்சி, காணி, கோட்டை, கண்டி, அணைக்கட்டு, தோப்பு போன்ற பெயர் அடைகள் செயற்கையாக அமைக்கப்பட்ட நில அமைப்பைப்புலப்படுத்தும். இவ்வாறு பெயர் அடைகளைப் பெற்றுள்ள ஊர்கள் இயற்கை நில அமைப்பால் பெயர் பெற்றுள்ள ஊர்களைக் காட்டிலும் காலத்தால் பிந்தியவைகளாகவே இருத்தல் வேண்டும். மலை, காடு போன்றவை இயற்கையாகவே அமைந்தவை. அவைகள் உள்ள இடங்களில் அப்பெயர்களை உடனேயே சூட்டியிருப்பர்.

கோட்டை, இஞ்சி, கழனி, தோட்டம் போன்றவை மனித முயற்சியால் பின்னர் உருவாக்கப்படுபவை. அவ்வாறு உருவாக்கிய பின்பு அப்பெயர்களை ஊர்களுக்குச் சூட்டியிருப்பர் என்பதனால் அப்பெயர்கள் சிறிது காலம் பின் தங்கியே தோன்றியிருக்க வேண்டும்.

இல்லம், மடம், பள்ளியறை, பள்ளி போன்ற பெயர் அடைகள் குறிப்பிட்ட இடத்தைச் சுட்டும் விதத்தில் அமைந்திருந்தாலும் அவைகளும் நில அமைப்பின் அடிப்படையிலேயே அமைந்துள்ளன. குறிப்பிட்ட நிலத்தில் செயற்கையாக அமைக்கப் பட்டவைகளே அவை. தோட்டம், கழனி என்பன ஊர்ப்புறத்தே செயற்கையாக அமைக்கப்படுவன என்றால் இல்லம், மடம் என்பன ஊர்களுக்குள்ளே செயற்கையாக அமைக்கப்படுவன. இவ்வடிப்படையில் நோக்கினால் ஒவ்வொரு ஊரிலும் உள்ள அனைத்து வீடுகளும் நில அடிப்படையில் அமைந்தவை தானே என்று ஐயுறக் கூடும். ஊர்களுக்குப் பெயர் சூட்டுவதற்கு குன்று, காடு போன்ற இயற்கையமைப்புப் பெயர்களோ, அல்லது தோட்டம் கழனி போன்ற செயற்கையமைப்புப் பெயர்களோ பொருந்தி அமையாத போது, பெயர் சூட்டுவதற்குக் காரணமாக வீடு, மடம், பள்ளி போல்வன அமையும் இடங்களுக்கே இவை பொருந்தும் எனலாம். அணைக்கட்டு என்ற பெயரடையும் இவ்வாறே அமைந்துள்ளது.

பல்வேறு வகைப்பட்ட இயற்கை, செயற்கையான நிலஅமைப்புப் பெயரடைகள் இம்மாவட்ட ஊர்ப்பெயர்களில் சிறப்புக் கூறுகளாக அமைந்துள்ளதால் இம்மாவட்ட ஊர்ப்பெயர்களின் நிலையை உணர்வதுடன் பல்வேறுவகைப்பட்ட நிலத்தின் தன்மைகளையும் உணரமுடிகிறது. அவ்வகையில் இப்பெயரடைகள் பெரிதும் துணை செய்கின்றன எனலாம்.

## 4. நீர் நிலைப் பெயரடைகள் :

நில அமைப்புப் பெயரடைகளைப் போன்றே நீர் நிலைப் பெயரடைகளும் காலத்தால்முந்தித் தோன்றிய ஊர்ப்பெயர்களையேயுணர்த்தும். சங்க இலக்கியங்களிலேயே நீர் நிலைகளைத் தலைவனுடையஊர்பற்றிய செய்திகளுடன் இணைத்துக் கூறும் முறைஇருந்துள்ளதைக்காணமுடிகிறது. பெரும்பாலான தலைவர்களுடையஊர் பற்றிக்குறிப்பிடும் போது அவ்வூர் அமைந்துள்ள குன்றம் அல்லது கானம் பற்றியும் கூறியுள்ளனர். அக்குறிப்பில், அக்குன்றிலுள்ள அருவி, கானிலுள்ள ஆறு பற்றியும் கூறப்

பட்டுள்ளது. சுருங்கச் சொல்வதெனில் அங்குள்ள நீர் நிலைகளின் தன்மைகளுக்கேற்பவே குன்றமோ அன்றிப் பிற இடங்களோ சிறப்புப் பெற்றுள்ளன.

''அருவி ஆன்ற உயர் சிமை''[9]
''வயங்கு வெள்ளருவிய குன்றம்''[10]
''வைகு கடல் அம்பியில் தோன்றும்
மைபடு மாமலை''[11]

என்றெல்லாம் நீர் நிலைகள் சிறப்பித்துக் கூறப்பட்டிருக்கும் இடங்களைச் சங்கப் பாடல்களில் காணமுடிகிறது. நில அமைப்புப் பெயர்களும் கூட நீர் நிலைகள் அமைவதற்கேற்பவே அமைகின்றன. நீர் நிலைகள் இல்லாத இடங்கள் வரண்டபாலை வனமாகவோ, உயர்ந்த மலைப் பகுதிகளாகவோ தான் காணப்படும்.

அருவி, ஆற்று வெள்ளம், குளம் பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியப்பாடல்களில் ஊரை உணர்த்தும் அடையாளங்களாக அமைந்துள்ளன. அந்நிலையே காலப்போக்கில் வளர்ச்சி பெற்று ஊர்ப்பெயர்களுக்குச் சிறப்புக்கூறுகளாக அமையத் தொடங்கி விட்டன. நில அமைப்பின் அடிப்படையில் ஊர்ப்பெயர்கள் சூட்ட முடியாத இடங்களில் நீர் நிலைப்பெயரடையின் அடிப்படையில் சூட்டியிருக்கலாம். அல்லது, அருவி, ஆறு, ஏரி, குளம் போல்வன குறிப்பிட்டுக் கூறப்படும் அளவிற்குச் சிறப்புடையதாக அமையும் போது அவ்விடங்களில் தோன்றும் ஊர்களும் அப்பெயர்களையே பெற்றிருக்கலாம். செங்கைமாவட்ட ஊர்ப் பெயர்களில் காணப்படும் நீர் நிலைகளின் அடைச்சொற்களும் இவ்வடிப்படையிலேயே அமைந்திருக்க வேண்டும்.

இம்மாவட்ட ஊர்ப்பெயர்களையுணர்த்தும் பொதுக்கூறுகளிலேயே நீர் நிலைகளைக்குறிக்கும் சில பொதுக்கூறுகளும் காணப்படுகின்றன. ஏரி, குளம், கடல், சமுத்திரம் போன்ற பொதுக் கூறுகளில் பல்வேறு பெயரடைகள் இடம் பெற்றிருக்கலாம். நில

---

9. அகநானூறு - பாடல் : 185-10
10. ,, ,, 202-1
11. ,, ,, 187-23, 24

அமைப்பு, தாவரம், விலங்கு, ஆட்பெயர்கள் போன்ற அடிப் படையில் சிறப்புக்கூறுகள் அமைந்திருக்கலாம். ஆனால், அச் சிறப்புக் கூறுகளால் உணர்த்தப்படும் பெயரடைகள் அனைத்தும் நீர் நிலைகளையே உணர்த்தும்.

அரனேரி என்பதில் சிறப்புக்கூறு இறைவனையும், பள்ளவேரி என்பதில் சிறப்புக்கூறு நில அமைப்பையும் உணர்த்தலாம். ஆனால் இரண்டு சிறப்புக் கூறுகளாலும் உணர்த்தப்படுவது ஏரி யாகிய நீர் நிலையேயாகும். இவ்வெடுத்துக்காட்டு பிற பொதுக் கூறுகளுக்கும் பொருந்தி அமையும்.

இம்மாவட்டத்தின் பொதுவான அமைப்பும் இங்கு நீர் நிலைகள் மிகுதி என்பதைப் புலப்படுத்தும். சில பகுதி கடற் கரையைச் சார்ந்தும், வேறுசில பகுதிகள் ஏரி, ஆறு போன்ற நீர் நிலைகளைச் சார்ந்துமே அமைந்துள்ளன. பாலாறு, சேயாறு, பம்பையாறு போன்ற பெரிய ஆறுகளும் வேறு சில சிற்றாறுகளும் இம்மாவட்டத்தில் பாய்ந்து வளப்படுத்துகின்றன. செம்பரம்பாக்கம், மதுராந்தகம் போன்ற ஏரிகள் இன்றும் பெரிய நீர் நிலைகளாகக் கருதப்படுகின்றன. இத்தகைய சூழ் நிலைகள் இயற்கையாகவே இம்மாவட்டத்தில் அமைந்துள்ள தால் ஊர்ப்பெயர்களில் நீர்நிலைகள் பற்றிய பெயரடைகள் மிகுந்து காணப்படுகின்றன எனலாம்.

இம்மாவட்ட ஊர்ப்பெயர்களில் நீர் நிலை பற்றிய பெயரடைகளைப் பெற்றுள்ள ஊர்களாவன :

| | |
|---|---|
| ஆத்தூர் | ஏரிப்பட்டு |
| குளத்தூர் | குளச்சேரி |
| நீர்வளூர் | கடல்மங்கலம் |
| கடலூர் | கூவந்தாங்கல் |
| பாலூர் | வெள்ளந்தாங்கல் |
| பொய்கையூர் | நீர்க்குன்றம் |
| துறையூர் | வெள்ளவேடு |
| சென்குளத்தூர் | ஊத்துக்கோட்டை |
| பெண்ணையூர் | வெள்ளாற்றுக்கோட்டை |
| சொளப்பாக்கம் (குளம்) | நாராயண சமுத்திர அக்ரஹாரம் |
| ஏரிப்பாக்கம் | |
| காவேரிப்பாக்கம் | தண்ணீர்க்குளம் |

| | |
|---|---|
| கயப்பாக்கம் | ஏரிவாய் |
| ஆத்துப்பாக்கம் | திருநீர்மலை |
| வெள்ளம்பாக்கம் | நீர்ப்பேர் |
| ஏரிவாக்கம் | தெள்ளகரம் |
| முகலிவாக்கம் | ஒழுகரை |

பொதுக்கூறுகளின் அடிப்படையில் சில ஊர்கள் மட்டுமே இங்கு எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. குறிப்பிட்ட ஒரு பொதுக் கூறில் ஒன்றுக்கு மேற்பட்ட ஊர்கள் உள்ளன. பயனின்மை நோக்கி அவைகள் இங்குக் குறிப்பிடப்படாவிட்டாலும் நீர் நிலை களின் பொதுக்கூறுகளைப் பெற்ற ஊர்கள் இன்னும் உண்டு என்பது நினைத்தற்குரியது.

ஏரி, குளம், ஆறு போன்ற பெயரடைகளைப் பெற்ற ஊர்ப் பெயர்களே இம்மாவட்டத்தில் மிகுதியாகக் காணப்படுகின்றன. ஏரிப்பாக்கம், ஏரிவாக்கம், ஏரிப்பட்டு, ஏரிவாய் என்ற ஊர்ப் பெயர்கள் பல்வேறு விதமான இயற்கையமைப்புடைய ஊர்களி லும் ஏரிகள் அமைந்துள்ளன என்பதைப் புலப்படுத்துகின்றன.

குளத்தூர், சென்குளத்தூர், குளப்பாக்கம், குளச்சேரி ஆகிய ஊர்கள் பல்வேறு இயற்கையமைப்பிலும் குளங்கள் உள்ளன என்பதை எடுத்துக்காட்டும். பாக்கம் என்று முடியும் பொதுக்கூறு கடற்கரையைச்சார்ந்துள்ள ஊர்களைக் குறிக்கும். எனவே, நீர் நிலை தொடர்பான பெயர் அடைகள் பெரும்பாலும் பாக்கம் என்ற பொதுக்கூறு பெற்று முடியும். பாக்கம் போன்றே சேரி என்ற பொதுக்கூறும் நீர் நிலையைச் சார்ந்தே அமையுமாதலால் அப்பொதுக்கூறு பெற்றுள்ள ஊர்களிலும் மிகுதியான ஊர்கள் நீர் நிலையின் பெயரடைகளைப் பெற்றே அமையும். கயம், பொய் கை போன்ற பெயர் அடைகளும் குளத்தையே உணர்த்தும்.

ஆத்தூர், ஆத்துப்பாக்கம், வெள்ளாற்றுக்கோட்டை, பெண் ணையூர், முகலிவாக்கம், பாலூர் ஆகியஊர்கள் ஆற்றின் பெயர்த் தொடர்பால் அமைந்த ஊர்களாகும். ஆறு என்ற பொதுவான பெயர் அடையைப் பெறுவதுடன் வெள்ளாறு, தென் பெண்ணை யாறு, திருமுகலியாறு, பாலாறு, காவிரியாறு ஆகிய வெவ்வேறு ஆற்றின் பெயர்களையும் பெற்று ஊர்ப்பெயர்கள் அமைந்துள் ளன. இங்கு அடைச்சொல் வரிசையில் இடம் பெறாத வேறு சில ஆறுகளும் இம்மாவட்டத்தில் பாய்கின்றன என்பது முன்னர்க் கூறப்பட்டது. கூவம் என்பது கூட ஒரு ஆறாகவே கருதப்படுகிறது.

ஆற்றின் பெயரடைகளைப் பெற்றுள்ள ஊர்கள் அனைத்தும் இம்மாவட்டத்தில் காணப்பட்டாலும் ஊர்ப்பெயர்களில் இடம் பெற்றுள்ள சில ஆறுகள் உண்மையில் இப்பகுதியில் பாயவில்லை. தமிழ்நாட்டின் வேறு மாவட்டங்களில் அவ்வாறுகள் பாய்ந்தாலும் அவ்வாறுகளைச் சிறப்பிக்கும் விதத்தில் சில ஊர்ப்பெயர்களுக்கு அவ்வாறுகளின் பெயர்கள் சூட்டப்பட்டுள்ளன என்பதையுணர முடிகிறது. வேறு மாவட்ட ஊர்ப்பெயர்களின் பெயரிலும் கூட இம்மாவட்டத்தில் சில ஊர்கள் அமைந்துள்ளன. அது போன்றே பிற மாவட்டங்களில் பாயும் ஆறுகளின் பெயர்களில் இம்மாவட்டத்தில் ஊர்ப்பெயர்கள் அமைந்துள்ளதாகும்.

கடலூர், கடல் மங்கலம், நாராயண சமுத்திர அக்ரஹாரம் ஆகிய ஊர்ப்பெயர்கள் கடலை உணர்த்தும் விதத்தில் அமைந்துள்ளன. கடல் என்ற பொதுக்கூறும் உண்டு; அதுபோல் சமுத்திரம் என்ற பொதுக்கூறும் இம்மாவட்டத்தில் உண்டு. வடமொழியாளர் செல்வாக்கு இப்பகுதியில் பரவியபோது, கடல் என்பதற்குப் பதில் சமுத்திரம் என்ற பொதுக்கூறு தோன்றியுள்ளது. அப்பொதுக்கூறு பெற்றுள்ள ஊர்ப்பெயர்கள் யாவும் குறிப்பிட்ட அந்தச் சூழ்நிலையில் தோன்றியவைகளேயாகும்.

நீர்வளூர், நீர்க்குன்றம், திருநீர்மலை, நீர்ட்பேர் ஆகிய ஊர்களும், வெள்ளம்பாக்கம், வெள்ளந்தாங்கல், வெள்ளவேடு ஆகிய ஊர்களும் நீர்வளம் மிகுந்துள்ள இடங்களில் தோன்றிய ஊர்களாகும். 'வயங்கு வெள்ளருவிய குன்றம்' என்று சங்க இலக்கியத்தில் கூறப்பட்ட குன்றத்தின் நிலையே நீர்க்குன்றம், நீர்மலை என்று பின்னர்க் கூறப்பட்டுள்ளது. அருவி என்பதையே நீர் என்று ஊர்ப்பெயர்களில் குறிப்பிட்டுள்ளனர். வெள்ளம் என்பதும், நீர் என்பதையே உணர்த்தும். இன்று அச்சொல், மிகுதியாகப் பெருகெடுத்து ஓடிவரும் நீரைக் குறிக்கும் சொல்லாகியுள்ளது. பிற ஊர்ப்பெயர்களும் நீர் நிலையினையே உணர்த்தும்.

ஊற்று நீரால் பெயர் பெற்ற ஊர் ஊத்துக்கோட்டை, ஆற்றுநீர், ஊற்றுநீர், ஏரி, குளம், கடல் ஆகிய நீர் நிலைகளால் கிடைக்கும் நீர் என்று பல்விதமான நீர்வளமும் இம்மாவட்டத்தில் உள்ளதை ஊர்ப்பெயர்களால் உணர முடிகிறது.

**5. ஒப்புமைக்கூறுப் பெயரடைகள்:**

நில அமைப்புப் பெயர்கள், நீர்நிலைப் பெயர்களையடுத்தே ஒப்புமைக்கூறுப் பெயர்களும் தோன்றியிருக்க வேண்டும். ஒரு

தன்மையை விளக்குதற்கு ஒரு பொருளைப் படைக்கும் மனிதன் தனது முயற்சியால் மேலும் ஒரு பொருளை அதே தன்மையை விளக்குதற்குப் படைக்கின்றான். அப்போது முன்னர்க் கண்ட பொருளுடன் பின்னர்க் காணப்பட்ட பொருள் ஒப்பு நோக்கப் படுகிறது. வெவ்வேறு தன்மையை விளக்கும் வெவ்வேறு பொருள்கள் ஒப்பு நோக்கப்படமாட்டா. ஊர்ப்பெயர்களின்பெயர் அமைப்பிற்கும் இவ்விதி பொருந்தும். ஏற்கெனவே உள்ள ஊருக்கு மேற்கே ஒடுஊர் புதிதாகத் தோன்றும் போது புதிதாகத் தோன்றும் ஊர்ப்பெயரில் மேல் அல்லது மேற்கு என்ற அடைச்சொல் சேர்கிறது. சிறிது காலத்திற்குப்பிறகு பழைய ஊருக்குக் கிழக்கிலும் வேறோர் புதுஊர் தோன்றுகிறது. அப்போது புதிதாகத் தோன்றும் ஊர்ப்பெயருடன் கீழ் அல்லது கிழக்கு என்ற அடைச்சொல் சேர்கிறது. மேற்கே தோன்றிய ஊருக்கும் கிழக்கே தோன்றிய ஊருக்கும் ஏதேனும் ஒருவகையில் பொருத்தம் இருக்கும். இவ்வாறு பல ஊர்கள் தோன்றியுள்ளன.

தாவரம், விலங்கு, நில அமைப்பு, நீர் நிலை ஆகிய பல காரணங்களின் அடிப்படையில் ஊர்ப் பெயர்கள் புதிது புதிதாகத் தோன்றுகின்றன என்பது முன்னர் எடுத்துக்காட்டப் பட்டது புதிதாகத் தோன்றும் ஊருக்கு இக்காரணங்கள் ஏதும் பொருந்தி வராத போது ஒப்புமைக் கூறுப்பெயர்கள் அமையத் தொடங்குகின்றன. அல்லது, இக்காரணங்களைப் பற்றியெல்லாம் கவலைப்படாது புதுமுறையில் பெயர் சூட்டவிரும்பியதன் பயனாகவும் இவ்வூர்ப்பெயர்கள் தோன்றியிருக்கலாம். அல்லது, எல்லைப் பெயர்கள், நிறப்பெயர்கள், அளவுப் பெயர்கள் போன்றனவற்றை ஒப்புமை நோக்கில் ஊர்களுக்குப் பெயர் சூட்டுவதை ஒரு முறையாகவும் பின்பற்றியிருக்கலாம். புதிது புதிதாகப் பல பெயர்கள் சூட்டுவதைவிட ஏற்கெனவே உள்ள ஊர்ப்பெயருடன் அதற்கு எத்திசையில் புதிய ஊர் தோன்றுகிறதோ அத்திசைப் பெயரை மட்டும் அடைச் சொல்லாகச் சேர்த்தால் போதும் என்றும் எண்ணியிருக்கலாம். இக்காரணங்களால் புதிதாகத் தோன்றிய ஊர்கள் வெவ்வேறு புதிய பெயர்களைப் பெறாமல், பழைய ஊர்ப்பெயர்களுக்கு ஒப்புமைப் பெயர்களாகவே அமைந்துள்ளன.

செங்கைமாவட்ட ஊர்ப்பெயர்களில் ஒப்புமைக்கூறுப்பெயர்களாக அமைந்த ஊர்கள் பல உள்ளன. பல பொதுக்கூறுகளில் ஒப்புமைக்கூறுப்பெயர் அடைகளைக் காணமுடிகிறது. சிறிய என்ற அடைச்சொல் ஒரு பொதுக்கூறில் காணப்பட்டால்

பெரிய என்ற அடைச்சொல்லும் உறுதியாகக் காணப்படுகிறது. அது போன்றே கீழ், மேல் என்ற ஒப்புமை அடைச் சொற்களும் அமையப் பெற்றுப் பல ஊர்கள் தோன்றியுள்ளன

ஒப்புமைக்கூறுகள் பலவகையில், பல அடிப்படையில் அமையும். ஆனால், செங்கைமாவட்ட ஊர்ப்பெயர்களில் முக்கியமாக மூன்று வகையிலான ஒப்புமைக் கூறுகளை ஊர்ப்பெயர்களின் அடைச்சொற்களில் காண முடிகிறது. அவையாவன :

1. கீழ், மேல் போன்ற எல்லையடிப்படையில் அமைந்த ஒப்புமைக் கூறுகள்

2. சிறிய, பெரிய போன்ற அளவடிப்படையில் அமைந்த ஒப்புமைக்கூறுகள்

3. கருமை, செம்மை போன்ற நிறவடிவப் படையில் அமைந்த ஒப்புமைக்கூறுகள்.

மூவகையினவாக ஒப்புமைக்கூறுகள் காணப்பட்டாலும் ஒவ்வொருவகைக்கும் சான்றாகச் சில ஊர்களையேகாணமுடிகிறது. அதனால் இம்மூவகையில் அடங்கும் ஊர்ப்பெயர்களைத் தனித்தனியாக நோக்காமல் ஒப்புமைக்கூறுப் பெயரடைகள் என்ற பொதுத்தலைப்பிலேயே நோக்கியறியலாம்.

ஒப்புமைக்கூறுப் பெயரடைகளைப் பெற்று இம்மாவட்டத்தில் அமைந்துள்ள ஊர்கள் பின்வருமாறு ;

| | |
|---|---|
| கீழக்கோட்டூர் | புத்தூர் |
| மேலக்கோட்டூர் | கருப்பூர் |
| மேலமெய்யூர் | அல்லூர் |
| அழகூர் | மேல்பட்டு |
| அச்சிறுபாக்கம் | நடுப்பட்டு |
| கரும்பாக்கம் | கீழ்ப்பட்டு |
| கேளம்பாக்கம் | மேலப்பட்டு |
| நல்லம்பாக்கம் | புதுப்பட்டு |
| புதுப்பாக்கம் | இருள்பட்டு |
| செம்பாக்கம் | விளக்குப்பட்டு |
| செம்பரம்பாக்கம் | |

தென்பாக்கம்
பெரும்பாக்கம்
மேல்பாக்கம்
கீழ்ஒட்டிவாக்கம்
புத்தேரி
தென்னேரி
நன்மங்கலம்
செங்குன்றம்
சிறுகுன்றம்
நெடுங்குன்றம்
கீழ்க்காரணை
தென்காரணை
புதுப்பட்டணம்
தென்பட்டணம்
வடபட்டணம்
கீழ்கால்பட்டடை
மேல்கால்பட்டடை
கருவேளம்பூண்டி
செம்பூண்டி
பெரியவாயல்
புதுவாயல்
புத்தகரம்
மேலகரம
கீழகரம்
சிறுவேடல்
வடநெம் மிலி
வடகால்
தென்கால்
சிறுகடல்
பெருங்கடல்
பெருங்கல்
சிறுகல்
வெங்கல்
மேலக்குப்பம்
மேட்டுக்குப்பம்
புதுக்குப்பம்
புதுச்சேரி
சிறு அப்பனஞ்சேரி
கீழச்சேரி
மேலச்சேரி
பெரும்பேடு
சின்னப்பேடு
கீழவேடு
புதுப்பாளையம்
மேட்டுப்பாளையம்
பெரிய பாளையம்
பெருந்தண்டலம்
பெரியதோட்டம்
கீழ்விளாகம்
மேல்விளாகம்
கீழ்தேவதானம்
மேல்தேவதானம்
மேலப்பூண்டி
கீழப்பூண்டி
வடகரை
தென்கரை
நடுக்கரை
செங்கரை
பெருநகரம்
சிறுநகரம்
மேல்கழனி
கீழ்க்கழனி
பெருங்கோழி
கீழ்மேனி
பெருவேலி
சிறுவேலி

| | |
|---|---|
| கீழ்வலம் | கருங்குழி |
| மேல்வலம் | வெங்குழி |
| பெரும்பேர் | கீழ்வசலை |
| | மேல்வசலை |
| | புதுப்பேர் |

ஒப்புமையடிப்படையில் இங்கு எடுத்துக்காட்டப்பட்ட ஊர்ப்பெயர்கள் அனைத்தும் பெரும்பாலும் ஒரு ஊர்ப்பெயருடன் மற்றது ஒப்புமைப்படுத்திப் பார்க்கும் விதத்திலேயே அமைந்துள்ளன. ஒப்புமைப்பெயர்களின் அடிப்படையில் எல்லாப் பொதுக்கூறுகளிலும் ஊர்கள் இடம்பெறவில்லை. ஆனால் இடம்பெற்ற பொதுக்கூறுகளிலெல்லாம் பெரும்பாலும் ஒப்புமைப்படுத்திக் காணும் விதத்திலேயே ஊர்ப்பெயர்கள் அமைந்துள்ளன.

மூவகை ஒப்புமைக்கூறுகளின் அடிப்படையிலும் ஊர்ப்பெயர்கள் அமைந்திருந்தாலும் கீழ், மேல், தெற்கு, வடக்கு போன்ற எல்லையடிப்படையில் அமைந்த ஊர்ப்பெயர்களே இம்மாவட்டத்தில் மிகுதி. அதற்கு அடுத்தநிலையில் சிறிய, பெரிய போன்ற அளவடிப்படையில் அமைந்த ஊர்ப்பெயர்கள் அமைந்துள்ளன. கருமை, செம்மை போன்ற நிற அடிப்படையில் அமைந்த ஊர்ப்பெயர்கள் முன்னிரண்டுவகைகளைக் காட்டிலும் குறைவாகவே உள்ளன.

புது என்ற அடைச்சொல்லைப் பெற்றுப் பல ஊர்கள் இம்மாவட்டத்தில் உள்ளன. ஆனால், அதனுடன் ஒப்பிடுமாறு அதற்கு மாறுபட்ட தன்மையாகிய பழைய என்ற அடைச்சொலலைப் பெற்று ஒரு ஊர்கூட இம்மாவட்டத்தில் இடம்பெறவில்லை. பிறமாவட்ட ஊர்ப்பெயர்களில் இல்லாத புதுமை என்று இதனைக் குறிப்பிடலாம். இவ்வாறு இடம் பெறாமைக்குக் காரணத்தையும் கருதமுடிகிறது. ஒரு பகுதியில் புதிதாக ஓர் ஊர் தோன்றும் போது அதனைப் புது என்ற அடைச்சொலலுடன் குறிப்பிடுகிறோம். அதனைச் சார்ந்து பிறிதோர் ஊர் பினபு தோன்றும் போது அதற்குவேறோர் பெயர்தான் சூட்டவேண்டும். அதற்குப் 'பழைய' என்ற அடைச்சொல் சேர்த்துக் கூறுவதோ, அன்றி, ஏற்கெனவே தோன்றி வழக்கில் உள்ள ஊரை, அது முன்பு தோன்றிய ஊர் என்பதுகருதிப் 'பழைய, என்ற அடைச்சொல்லைச் சேர்த்துக் கூறுவதோ

இயலாது. எனவேதான் பொதுவாகப் பழைய என்ற அடைச் சொல் பெற்ற ஊர்களை மிகுதியாகக் காணமுடியவில்லை.

இம்மாவட்டத்தில் புது என்ற அடைச் சொல்லைப் பெற்றுப் பல ஊர்கள் உள்ளன. புத்தூர், புதுப்பாக்கம், புத்தேரி, புதுப் பட்டணம், புதுவாயல், புத்தகரம், புதுப்பட்டு, புதுக்குப்பம், புதுச்சேரி, புதுப்பாளையம், புதுப்பேர் ஆகிய ஊர்கள் புது என்ற அடைச் சொல்லைப் பெற்றுக் காணப்படுகின்றன. இவ்வெல்லா ஊர்களும் பிற்காலத்தில் தோன்றிய ஊர்களாகவே இருத்தல் வேண்டும்.

கீழக்கோட்டூர்→மேலக்கோட்டூர், மேல்பாக்கம்→கீழ்ஒட்டி வாக்கம், கீழ்க்காரணை→தென்காரணை, தென்பட்டணம்→வட பட்டணம், கீழ்கால் பட்டடை→மேல்கால் பட்டடை, மேல கரம்→கீழகரம், வடகால்→தென்கால், மேல்பட்டு→நடுப்பட்டு→ கீழ்ப்பட்டு, கீழச்சேரி→மேலச்சேரி, கீழ்விளாகம்,→மேல்விளாகம், கீழ்தேவதானம்→மேல்தேவதானம், மேலப்பூண்டி→கீழப்பூண்டி, வடகரை→தென்கரை→நடுக்கரை, மேல்கழனி→கீழ்க்கழனி, மேல் வலம்→கீழ்வலம், மேல்வசலை→கீழ்வசலை என்ற அடிப்படை யில் ஒப்புமைக் கூறுகளைப் பெற்று ஊர்ப்பெயர்கள் அமைந் துள்ளன.

பெரும்பாலும் எல்லையடிப்படையில் அமைந்த ஊர்கள் ஒன்றிற்கு மாறுபட்ட பிறிதோர் எல்லையைப் பெற்றே அமைந் துள்ளன. அவ்வாறு ஊர்ப்பெயர்களைச் சூட்டுவதை ஒரு முறை யாகவே அமைத்துள்ளனர் என்று தெரிகிறது. எல்லையடிப்படை யில் அமைந்த ஊர்களில் பல அதற்கு மாறுபட்ட பிறிதோர் எல்லைப் பெயரையும் பெற்றே அமைந்துள்ளன. ஒரு சில ஊர்ப் பெயர்களே இவ்வகையில் விதிவிலக்காக அமைந்துள்ளன. அவ் வெல்லைகளுக்கும் மாறுபட்ட எல்லைப் பெயர்களையுடைய ஊர்கள் தோன்றிப் பின்பு வழக்காறு அற்றுப் போயிருக்கலாம். அல்லது, புதிய ஊர்கள் தோன்றுவதற்கு வாய்ப்பு இல்லாமல் போயிருக்கவேண்டும். தெற்குபாக்கம், தென்னேரி என்ற ஊர்ப் பெயர்களைக் காணமுடிகிறது. ஆனால் வடபாக்கம், வடவேரி என்ற ஊர்ப்பெயர்களைக் காணமுடியவில்லை. கடற்கரையை ஒட்டியும், ஏரியை ஒட்டியும் முன்னிரண்டு ஊர்களுக்கு மாறுபட்ட திசையாகிய வடக்கில் புதிய ஊர்கள் தோன்றாமல் போயிருக்க லாம்; தோன்றுவதற்குரிய இயற்கைச் சூழல் அப்பகுதியில்

இல்லாதிருந்திருக்கலாம். இப்படிப்பட்ட நிலையில் உள்ள சில எல்லைப் பெயர்களைத் தவிர பிற எல்லைப் பெயர்கள் மாறுபட்ட ஒப்புமைக் கூறுகளைப் பெற்றே அமைந்துள்ளன.

இங்கு எல்லையடிப்படையில் இடம் பெற்றுள்ள ஊர்ப் பெயர்களை நோக்கும் போது வேறோர் உண்மையும் புலப்படுகிறது. பெரும்பாலும் நில அமைப்பின் அடிப்படையில் இடம் பெற்ற ஊர்ப் பெயர்களிலேயே எல்லையடிப்படையில் அமைந்த ஒப்புமைக் கூறுகளைக் காணமுடிகிறது. நில அடிப்படையில்தான் எல்லைகளை வகைப்படுத்தமுடியும். இவ்வுண்மை, எல்லையடிப்படையில் அமைந்த ஊர்ப்பெயர்களின் சிறப்புக்கூறுகளால் புலப்படுகின்றன. மேலும், சில இடங்களில் இரண்டு ஒப்புமைக் கூறுகளுக்கு இடையில் வேறோர் புதிய ஊர் தோன்றும்போது, அது 'நடு' என்ற அடைச்சொல்லைப் பெறுகிறது. நடுப்பட்டு, நடுக்கரை ஆகிய ஊர்ப்பெயர்களை இவ்வகைக்குச் சான்று காட்டலாம்.

அச்சிறுபாக்கம் → பெரும்பாக்கம், சிறுகுன்றம் → நெடுங்குன்றம், சிறுகடல் → பெருங்கடல், சிறுகல் → பெருகல், பெரும்பேடு சின்னப்பேடு, பெருநகரம் → சிறுநகரம், பெருவேலி → சிறுவேலி ஆகிய ஊர்கள் ஒப்புமைப்படுத்திப் பார்க்கும் விதத்தில் அமைந்துள்ளன.

ஒப்பிட்டுப் பார்க்கும் விதத்தில் வேறோர் ஊர் இடம் பெறாமலும் பல சிறப்புக்கூறுகளை அளவடிப்படையில் பெற்றுள்ள இன்னும் சில ஊர்களும் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. பெரிய வாயல், சிறுவேடல், சிறுளப்பணஞ்சேரி, பெரியபாளையம், பெருந்தண்டலம், பெரிய தோட்டம், பெருங்கோழி ஆகிய ஊர்கள், ஒப்பிட்டுப் பார்க்கும் விதத்தில் பிற ஊர்ப்பெயர்களைப் பெறாமலேயே அமைந்துள்ளன.

அளவடிப்படையில் ஒப்புமைப்படுத்திப் பார்க்குமாறு அமைந்தஊர்கள் நிலம், நீர் போன்ற பல அடிப்படையிலும் அமைந்துள்ளன. எல்லாப்பொதுக்கூறுகளிலும் ஒப்புமைப்படுத்திப்பார்க்குமாறு ஊர்கள் அமைதல் இயலாது. அளவடிப்படையில் எவற்றையெல்லாம் ஒப்பிடமுடியுமோ அவற்றின் அடிப்படையிலேயே ஊர்ப்பெயர்கள் அமைந்துள்ளன.

கருப்பூர், அல்லூர் → அழகூர்
கரும்பாக்கம் → செம்பாக்கம், செம்பரம்பாக்கம்

கருவேம்பூண்டி→செம்பூண்டி
வெங்கல்→செங்கல்பட்டு
இருள்பட்டு→விளக்குப்பட்டு
கருங்குழி→வெங்குழி

ஆகிய ஊர்ப்பெயர்கள் நிற அடிப்படையில் ஒப்புமைப்படுத்திப் பார்க்குமாறு அமைந்துள்ளன. செங்குன்றம், செங்கரை போன்ற சில ஊர்ப்பெயர்களுக்கு ஒப்புமைப்படுத்திப் பார்க்குமாறு பிற ஊர்ப்பெயர்கள் இடம் பெறவில்லை. அதற்குக் காரணமும் உண்டு. குன்றம், கரை போல்வன கறுமையாக இருப்பது இயல்பு. எனவே, இயல்பான தன்மையைப் புலப்படுத்தும் விதத்தில் ஊர்ப்பெயர்கள் அமையும் என்று எதிர்பார்க்க முடியாது. ஆனால் குன்றம், கரை போல்வன செம்மை நிறமுடையனவாகக் காணப்பட்டால் அதில் புதுமையுண்டு. அப்புதுமையை உணர்த்தும் விதத்திலேயே செங்குன்றம், செங்கரை ஆகிய ஊர்ப்பெயர்கள் அமைந்துள்ளன.

இம்மாவட்ட ஊர்ப்பெயர்களில் பல பொதுக்கூறுகள் காணப்பட்டாலும் நிற அடிப்படையில் ஒப்புமைப்படுத்திக் காணத்தகுந்த பொதுக்கூறுகளை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு ஊர்ப்பெயர்கள் அமைந்துள்ளன. அதிலும், கறுமை, செம்மை ஆகிய நிறங்களின் அடிப்படையிலேயே பல ஊர்கள் அமைந்துள்ளன. வெண்மை என்ற நிறத்தின் அடிப்படையில் ஓர் ஊர் மட்டுமே காணப்படுகிறது.

ஊர் அமைப்புப்பற்றிய சிந்தனையில் ஒப்புமைக்கூறுகளின் அடிப்படையில் அமைந்துள்ளவிதம் ஓர் வளர்ச்சிப்படியென்றே கூறவேண்டும். நிலம், நீர் போன்ற அடிப்படையில் ஊர்ப்பெயர்களைச்சூட்டியது முதற்கட்டப்பணி என்றால், அந்நிலத்தின் எல்லைப்பகுதி, அளவு, நிறம் முதலியனவற்றையும் பகுத்துணர்ந்து, அப்பகுப்பின் அடிப்படையிலும் ஊர்ப்பெயர்களை அமைத்துள்ள விதம் இரண்டாம் கட்டப்பணி என்று கூறலாம். இப்படிப்பட்ட, ஒப்புமைக்கூறுகளின் அடிப்படையில் ஊர்ப்பெயர்கள் தோன்றிய நிலை பிற்காலத்தில் அமைந்ததேயாகும். இப்பகுப்பின் மூலமாக இம்மாவட்ட நிலம், நீர் தொடர்பான பல செய்திகளை உணர்ந்து கொள்ள முடிகிறது எனலாம்.

பிறவகைப் பெயரடைகள்:

முன்னர்க் குறிப்பிடப்பட்ட ஆட்பெயர் அடைகள், விளக்கப் பெயர் அடைகளில் இடம்பெறாத வேறு பிற அடைச்சொற்

களின் அடிப்படையிலும் சில ஊர்கள் இம்மாவட்டத்தில் காணப் படுகின்றன. பல்வேறு அடிப்படையில் அவ்வூர்கள் அமைந்துள் ளன. உறுப்புப்பெயர்கள், உலோகப் பெயர்கள், எண்ணுப் பெயர் கள், விண்மீனைக் குறிக்கும் பெயர்கள், அமுதத்தை உணர்த்தும் ஊர்ப்பெயர்கள், பிற ஊர்ப்பெயர்களையே அடைச்சொற்களாகப் பெற்று அமைந்துள்ள புதிய ஊர்கள் என்று பிறவகைப் பெய ரடைகள் பல வகைப்படும்.

ஒவ்வொரு பகுதியிலுமாக இவ்வடிப்படையில் அமைந்துள்ள ஊர்கள் சிலவே எனினும் இம்மாவட்ட ஊர்ப்பெயர்கள் எந்தெந்த அடிப்படையில் எல்லாம் அமைந்துள்ளன என்பதை உணர்வதற்கு இவ்வகைப் பெயரடைகளைப் பற்றி அறிவதும் அவசியமாகிறது. சில புதுமையான அடைச்சொற்களின் அடிப்படையில் அமைந்த ஊர்ப்பெயர்களையும் இப்பகுதியில் காணலாம்.

**உறுப்புப் பெயரடைகள்:**

இயற்கைப் பொருட்களின் பெயரடைகள் மற்றும் ஆட்கள் தொடர்பான பல்வேறு அடிப்படையில் அமைந்த பெயரடைகள் முதலியவற்றின் அடிப்படையில் ஊர்ப்பெயர்கள் அமைந்துள்ள விதம் முன்னர் எடுத்துக்காட்டப்பட்டது. ஆனால், ஆட்களின் உடல் உறுப்புப் பெயர்களை அடைச் சொற்களாகப் பெற்றும் சில ஊர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. இவ்வாறு ஊர்ப்பெயர்களை அமைக்கும் புதிய முயற்சிகள் பிற்காலத்தில் தோன்றியவைகளாகவே இருத்தல் வேண்டும்.

இடையூர்
மெய்யூர்
முடையூர் (முடம்)
அளகூர் (அளகம்)
காலூர்
விரலூர்
கண்ணூர்
மடியூர்

ஆகிய ஊர்ப்பெயர்கள் உடல் உறுப்புப் பெயர்களை அடைச் சொற்களாகப் பெற்று அமைந்துள்ளன. இம்மாவட்ட ஊர்ப் பெயர்கள் பல பொதுக்கூறுகளின் அடிப்படையில் அமைந்திருந்

தாலும் 'ஊர்' என்ற ஒரு பொதுக்கூறின் அடிப்படையிலேயே உறுப்புப் பெயரடைகள் இடம்பெற்றுள்ளன என்பது எண்ணுதற்குரியது. இப்பொதுக்கூறு பிற பொதுக்கூறுகளினும் காலத்தால் முந்தியதாகும். ஊர்ப்பெயர்களின் தோற்றக் காலத்திலேயே இப்பொதுக்கூறு அமைந்துள்ளதாகையால் உறுப்புகளை அடைச்சொற்களாகப் பெற்று ஊர்கள் அமைந்துள்ள முறையும் மிகப் பழையதாகவே இருத்தல் வேண்டும்.

மனிதர்களின் பெயர்ச் சொற்கள் ஊர்ப்பெயர்களில் அடைச்சொற்களாக இடம் பெறுவதற்கு முன்பாகவே மனிதர்களது உடல் உறுப்புப் பெயர் அடைகள் ஊர்ப்பெயர்களில் இடம் பெற்றிருக்க வேண்டும். பொது நிலையில் உறுப்புப் பெயரடைகள் ஊர்ப்பெயர்களில் இடம் பெற்ற நிலை பின்னர் மாற்றம் பெற்று, தனிப்பட்ட முறையில் தனிமனிதர்களின் பெயர்களே ஊர்ப்பெயர்களில் இடம் பெறத் தொடங்கிவிட்டன.

இடை, உடல், அளகம், கால், விரல், கண், மடி போன்ற உடலின் பல்வேறு உறுப்புப் பெயர்களையும் அடைச் சொற்களாகப் பெற்றிருப்பதுடன், முடம் என்ற உடலின் மாறுபட்ட அமைப்பைக் குறிக்கும் அடைச் சொல்லையும் ஊர்ப்பெயரில் காணமுடிகிறது. இங்குக் குறிப்பிடப்பட்ட உறுப்புப் பெயர்கள் உருவகம், உவமை போன்ற அடிப்படையில் அமைந்துள்ளனவா அல்லது, இயல்பாகவே எவரது உறுப்புப் பெயரையேனும் உணர்த்துமாறு அமைந்துள்ளனவா என்பது விளங்கவில்லை.

எண்ணுப் பெயரடைகள் :

உறுப்புப் பெயர்களைப் போன்று எண்ணுப் பெயர்களை அடைச்சொற்களாகப் பெற்றும் சில ஊர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. இம்முறை, பெருவழக்காகப் பின்பற்றப்படாததால் எண்ணுப்பெயர் அடைகளைப் பெற்ற ஊர்ப்பெயர்களாகச் சிலவற்றையே காணமுடிகிறது.

அஞ்சூர்
எண்ணூர்
கோடிப்பள்ளம்
முக்கூடல்
மும்மல்பட்டு
மூவரசுப்பட்டு
கோடிந்தண்டலம்

ஆகிய ஊர்களே எண்ணுப்பெயர்களைப் பெற்றுள்ளன. முக்கூடல் என்ற ஊர்ப்பெயர், மூன்று ஆறுகள் கூடும் காரணத்தால்

அமைந்தது என்பது முன்னர் விளக்கப்பட்டது. மூவரசு என்ற பெயரடை, மூவேந்தர்களைக் குறிப்பிடும் விதத்தில் அமைந்திருக்கவேண்டும். மும்மல்பட்டு என்ற ஊர்ப்பெயரும் மூன்று பேரை உணர்த்தும் விதத்திலேயே அமைந்துள்ளது. கோடி என்பது எல்லைப் பொருளை உணர்த்துமாறு அமைந்திருந்தாலும் கோடி என்ற எண்ணையும் உணர்த்துமாறு அமைந்துள்ளதனையும் உணரலாம். அஞ்சூர் என்பது ஐந்து என்ற எண்ணையும், எண்ணூர் என்பது எட்டு என்ற எண்ணையும் குறிப்பிடுமாறு அமைந்துள்ளது.

மூக்கூடல் என்ற ஊருக்குக் காரணம் கூற முடிந்தது போல் அஞ்சூர், எண்ணூர் போன்ற ஊர்களுக்குக் கூறமுடிவதில்லை. ஐந்து ஊர்கள், எட்டு ஊர்கள் அடங்கிய பகுதிகளாக அவை இருந்திருக்கக் கூடுமோ என்று ஐயுற வேண்டியுள்ளது. ஆங்காங்கு சில வீடுகள் மட்டுமே அடங்கிய ஐந்து பகுதிகள், எட்டுப் பகுதிகள் சேர்ந்திருந்திருக்கக்கூடும். அச்சிறுபகுதிகளை உள்ளடக்கி ஒரு ஊர்ப்பெயர் சூட்டமுற்பட்டிருக்கலாம். அதன் விளைவால் அமைந்த ஊர்களே அஞ்சூர், எண்ணூர் என்று பெயர் பெற்றுள்ளன என்று கருத வேண்டியுள்ளது.

எண்ணுப்பெயர் அடிப்படையில் ஊர்ப்பெயர்கள் அமைந்தது ஆரம்பகால முயற்சி என்றே எண்ணவேண்டியுள்ளது. பிற்காலத்தில் பல்வேறு புதுக்காரணங்களால் புதிய ஊர்கள் தோன்றத் தொடங்கிவிட்டன. அதனால் எண்ணுப்பெயர் அடைகளைப் பெற்றுப் பிற்காலத்தில் ஊர்கள் அமையவில்லை.

**உலோகப் பெயரடைகள் :**

தங்கம், வெள்ளி, இரும்பு போன்ற உலோகங்களின் பெயர் அடைகளைப் பெற்றும் சில ஊர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. இப்படிப்பட்ட அடைச் சொற்களைப் பெற்ற ஊர்கள் ஒரு சிலவே உள்ளன.

உறுப்புப்பெயரடைகள், எண்ணுப்பெயரடைகளைப்போன்று தெளிவான காரணம் ஏதும் கருத முடியாத நிலையிலேயே உலோகப்பெயர்களும் அமைந்துள்ளனவா, அல்லது எவ்வவ்விடங்களில் என்னென்ன உலோகங்கள் கிடைத்தனவோ அதன் அடிப்படையில் ஊர்ப்பெயர்கள் அமைந்துள்ளனவா என்பது தெளிவாகப் புலப்படவில்லை. உலோகங்கள், நிலத்துடன் தொடர்புடையனவாக அமைந்துள்ளதால் ஊர்ப்பெயர்கள் அமை

வதற்கும் அவை காரணமாக இருந்திருக்குமோ என்று ஐயுற வேண்டியுள்ளது.

| | |
|---|---|
| களிம்பூர் | கடம்பாக்கம் |
| காயத்தூர் | பொலம்பாக்கம் |
| லாடகாரணை எண்டத்தூர் | மணிப்பாக்கம் |
| வெள்ளியூர் | அயம்பாக்கம் |
| பொன்னேரி | பொன்னான்குளம் |
| மணிமங்கலம் | வெள்ளிவாயல் |
| மோதிரம் பேடு | வெள்ளியகரம் |
| கனகம்பாக்கம் | |

பொன், வெள்ளி, இரும்பு போன்ற உலோகப் பெயர்களுடன் மணியையும் பெயர் அடையாகப் பெற்றுப் பல ஊர்கள் இம்மாவட்டத்தில் அமைந்துள்ளன. பொன், கனகம், பொலம் போன்று பொன்னைக் குறிக்கும் பல பெயர்கள் ஊர்ப்பெயர்களில் அடைகளாக அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும். நிலப் பெயர்களுக்கு அடைச்சொல்லாகப் பொன் அமைந்திருப்பதுடன் ஏரி, குளம் போன்ற நீர்நிலைப் பெயர்களுக்கும் அடைச்சொல்லாகப் பொன் அமைந்துள்ளது. ஏரி, குளம் முதலியன அமைந்துள்ள இடங்களில் பொன் காணப்பட்டதா அல்லது அவ்விடங்களின் சிறப்பு நோக்கி அவ்வாறு கூறப்பட்டதா என்பது விளங்கவில்லை.

வெள்ளி, இரும்பு போன்ற உலோகப் பெயர்களை அடைச் சொற்களாகப் பெற்று ஊர்ப்பெயர்கள் அமைந்திருப்பதுடன், அவ்வுலோகங்களுடன் தொடர்புடைய களிம்பையும், இரும்பால் செய்யப்படும் லாடத்தையும் கூடப் பெயர் அடையாகப் பெற்று ஊர்கள் அமைந்துள்ளன. அதுபோன்றே, பொன்னால் செய்யப் படும் மோதிரம், கடம் போன்ற அணிகலன்களின் பெயரையும் அடைச் சொல்லாகப் பெற்று ஊர்கள் அமைந்துள்ளதையும் காணமுடிகிறது.

ஊர் பாக்கம் என்ற பொதுக்கூறுகளைக் கொண்ட பல உலோகப்பெயரடைகளையுடைய ஊர்கள் அமைந்துள்ளன. இவ்விரு பொதுக்கூறுகளும் காலத்தால் முந்தியமைந்தவை. எனவே, உலோகப் பெயர்களை அடையாகப் பெற்று ஊர்கள் அமைந்துள்ள நிலை காலத்தால் முந்திய நிலை என்றே கூறவேண்டும்.

நிலம், நீர் முதலியவற்றின் அடிப்படையில் ஊர்ப்பெயர்கள் தோன்றியகாலத்திலேயே உலோகப் பெயர் அடைகளைப் பெற்றும் ஊர்கள் தோன்றியிருக்கவேண்டும். சாவரம், விலங்கு போன்ற பெயர் அடைகளைச் சூட்டமுடியாத இடங்களில் உலோகப் பெயர்களைச் சூட்டியிருக்க வேண்டும். அவ்வவ்விடங்களில் கிடைத்த உலோகங்களின் அடிப்படையில் ஊர்களின் பெயர்கள் அமைந்துள்ளன என்று எண்ணுவது சில ஊர்ப் பெயர்களுக்கேனும் பொருந்தும் என்பது உறுதி.

## உணவுப் பொருட் பெயரடைகள் :

மரப்பெயர், செடிப்பெயர், நீரில் வாழும் உயிரினப் பெயர் ஆகியவற்றின் பெயர் அடைகளைப் பெற்று அமைந்துள்ள ஊர்களைப்பற்றி முன்னர் எடுத்துக்காட்டப்பட்டது. அப்பெயர்களில் பல உணவுப் பொருளாகவும் அமைந்திருந்தது. அப்பெயர்கள் மட்டுமேயன்றி வேறுசில உணவுப் பெயர் அடைகளைச் சிறப்புக்கூறாகப் பெற்றும் சில ஊர்கள் இம்மாவட்டத்தில் அமைந்துள்ளன. இப்பெயர் அடைகளில் சில புதுமையாகவும், பிற்காலத்தில் தோன்றிய உணவு வகைகளைக் குறிப்பிடுவனவாகவும் அமைந்துள்ளன. ஊர்ப்பெயர்களின் அமைப்பில் உணவுப் பொருள்களின் பெயர் அடைகளைச் சிறப்புக்கூறுகளாகக் குறிப்பிடும் முறை சிறிது வேறுபட்டது அதிலும், அமுதம் போன்ற அரிய உணவுப் பொருள்களால் ஊர்கள் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

வட்டூர்
பாலூர்
தேனூர்
பழமத்தூர்
கள்ளூர்
அமுதூர்
அப்பாவரம்
கடுகுப்பட்டு
நெல்பட்டு
நெற்குன்றம்
நெல்வாய்

தேனம்பாக்கம்
சோற்றுப்பாக்கம்
தினைப்பாக்கம்
பாயசம்பாக்கம்
நெய்யாடுவாக்கம்
அன்னதானவாக்கம்
பாலபுரம்
அமுதமேடு
அமிர்தமங்கலம்
மதுரமங்கலம்
மதுரவாயல்
பழவேலி

ஆகிய ஊர்கள் உணவுப் பொருட்பெயர் அடைகளைப் பெற்று அமைந்துள்ளன. பால், பழம், தேன், கள், அமுது, நெய் போன்ற உணவுப் பொருட்களின் பெயர் அடைகள் ஊர்ப்பெயர்களில் அமைந்துள்ளதுடன் நெல், தினை, கடுகு போன்ற பெயர் அடைகளும் இடம் பெற்றுள்ளன. நெய் என்பது நெல் என்பதன் திரிபாகவும் இருத்தல் கூடும்.

அமுது, அமிர்தம் என்ற பெயர் அடைகளைப் பல ஊர்ப் பெயர்களில் காணமுடிகிறது. சோறு என்ற அடையையும் ஓர் ஊர் பெற்றுள்ளது. இவ்விரு நிலைகளையும் ஒப்பு நோக்கும் போது நமக்கோர் உண்மை புலப்படும். அமுது, அமிர்தம் என்றெல்லாம் சிறப்பாகக் குறிப்பிடப்பட்டிருப்பது சோற்றையே யாகும். பிறருக்குச் சோறிடுவது அன்னதானம் எனப்படும். அச்செயலை உணர்த்துமாறும் ஓர் ஊர் அமைந்துள்ளது. அவ்வாறு அன்னதானம் நடை பெற்ற பிற இடங்களே அமுது, அமிர்தம் போன்ற பெயர் அடைகளைப் பெற்றுள்ளன என்று எண்ண வேண்டியுள்ளது. பிறருக்குத் தானமாக வழங்கப்பட்ட சோறு, அமுது என்று போற்றப்பட்டுள்ளது என்று கருதலாம்.

இன்று சமுதாயத்தினரால் விலக்கப்படுவதற்குரிய உணவுப் பொருளாகக் கருதப்படுவது கள். அதன் பேரிலும் சில ஊர்கள் இம்மாவட்டத்தில் அமைந்திருப்பதை நோக்கினால், கள்ளையும் ஓர் உணவுவகையாகச் சமுதாயம் கருதிய பழைய காலத்தில் இவ்வூர்கள் தோன்றியிருக்க வேண்டும் என்று எண்ண வேண்டியுள்ளது.

லட்டு, பாயசம், அப்பளம் என்பன பிறமொழிச் சொற்பெயர்களாகும். இடைக்காலத்தில் வேற்று மொழியினர் ஆட்சி இம்மண்ணில் காலூன்றியபோது தமிழ் நாட்டவர் பேச்சு வழக்கில் இடம் பெற்ற சொற்கள் இவை. இச்சொற் பெயரடைகளைப் பெற்று ஊர்களும் தோன்றியிருப்பது இம்மாவட்ட ஊர்ப்பெயர்களின் அமைப்பில் குறிப்பிடத்தக்க அம்சம் எனலாம். தேன், பால் போன்ற தமிழ்ச்சொற் பெயரடைகளைப் பெற்றுப் பல ஊர்கள் அமைந்திருப்பது போன்று லட்டு, பாயசம் போன்ற பெயரடைகளைப் பெற்றும் பல ஊர்கள் அமையாமலிருப்பது இச்சொற்கள் இம்மாவட்ட மக்களிடம் பெரு வழக்காக இடம் பெறவில்லை என்பதை உணர்த்தும்.

மதுரம் என்பது இனிமை என்ற பொருள் தரும். சிறப்பு மிக்க சோற்றுணவு அமுது என்று கூறப்பட்டது போன்று, சிறப்பிற்குரிய

தேன், பால், நெய் போல்வன அதன் இனிமை கருதி மதுரம் என்று கூறப்பட்டிருக்கலாம்.

உணவுப் பொருட் பெயரடைகளைப் பெற்றுள்ள ஊர்ப் பெயர்களில் பல ஊர், பாக்கம் என்ற பொதுக்கூறுகளையே பெற் றுள்ளமையால், இம்முறை மிகப்பழங்காலந் தொட்டே அமைந் திருக்கவேண்டும் என்பது தெளிவாகிறது. ஆனால், பாயசம், லட்டு, அப்பளம் போன்ற பெயரடைகளைப் பெற்றுள்ள ஊர்கள் பிற் காலத்திலேயே தோன்றியிருக்க வேண்டும். இம்முறை அவ்வள வாகச் செல்வாக்குப் பெறவில்லை என்பதையே இம்மாவட்ட ஊர்ப்பெயர்களால் உணர முடிகிறது.

**பிற ஊர்ப் பெயரடைகள்:**

பல்வேறு அடிப்படையில் பல விதப் பெயரடைகள் சிறப்புக் கூறுகளாக ஊர்ப்பெயர்களில் இடம் பெற்றுள்ள விதம் இதற்கு முன்னர் எடுத்துக்காட்டப்பட்டது. அப்பெயரடைகள் பல்வேறு காலச்சூழ்நிலைகளைப் பிரதிபலித்துக்காட்டுமாறு அமைந்துள்ள விதமும் விளக்கப்பட்டது. சிலபெயரடைகள் இம்மாவட்டத்திற்கு மட்டுமே உரியனவாகவும், பல்வேறு பெயரடைகள் வேறு மா வட்ட ஊர்களுக்கும் உரியனவாகவும் அமைந்துள்ளன. மாவட்ட அளவில் சிற் சில வேறுபாடுகள் காணப்பட்டாலும் பொதுவாகத் தமிழகம் என்ற நிலையில் பல்வேறு சிறப்புக்கூறுகளின் அடிப்படை யில் ஒருமைப்பாடே காணப்படுவதால் இம்மாவட்ட ஊர்ப்பெயர் களில் பல, வேறு மாவட்டங்களிலும் காணப்படுதல் இயல்பே.

பல்வேறு பெயரடைகள் ஊர்களுக்குச் சிறப்புக் கூறுகளாக இடம் பெறுதல் இயல்பு. ஆனால் வேறு மாவட்டத்தில் உள்ள ஊர்ப்பெயர்களையும், இதே மாவட்டத்தில் உள்ள வேறு சில ஊர்ப்பெயர்களையும் அடைச் சொல்லாகச் சிறப்புக் கூறில் அமையப் பெற்றும் சில ஊர்கள் இம்மாவட்டத்தில் காணப்படு வது புதுமையாகும். குறிப்பிட்ட சில பொதுக்கூறுகளைப் பெற்றுள்ள ஊர்ப்பெயர்களில் இம்முறையை மிகுதியாகக் காண முடிகிறது.

| | |
|---|---|
| காங்கேய நல்லூர் | காங்கேயன் குப்பம் |
| கோவைப்பாக்கம் | அண்ணாமலைச்சேரி |
| கோட்டயம்பாக்கம் | ஓரகடமகாதேவிமங்கலம் |
| கூடல்பாக்கம் | பத்தலசெங்கம் நாயுடு கண்டிகை |

| | |
|---|---|
| மதுராபுரம் | பிக்கிசாணிசெங்கம் நாயுடு கண்டிகை |
| அசனாபாத் பட்டடை | சித்தலகுண்ட கண்டிகை |
| அஸ்தகிரி பட்டடை | கவுணிபுரம் பத்ராஜு கண்டிகை |
| செங்கல்வபுரம் அக்ரஹாரம் | கவுணிபுரம்சின்னசுப்பராஜு கண்டிகை |
| நாகமுடி அக்ரஹாரம் | காபூல் கண்டிகை |
| நெக்கினி அக்ரஹாரம் | கொண்டாகிரி வெங்கடமுனி கண்டிகை |
| இராமாபுர அக்ரஹாரம் | கோரகை வெங்கட நம்பி கண்டிகை |
| சென்களத்தூர் அக்ரஹாரம் | கொத்தூர் ராமையா கண்டிகை |
| செங்கல்புத்தூர்அக்ரஹாரம் | நல்லூர் வெங்கட்டராஜு கண்டிகை |
| சித்தூர் நத்தம் | பட்டணம் சேஷய்யா கண்டிகை |
| அத்தியூர் துளி | பெரும்காஞ்சி நரசிம்மலு கண்டிகை |
| செஞ்சியகரம் | இராயசம் வெங்கடகிருஷ்ண கண்டிகை |
| | வேலூர் கிருஷ்ண நாயுடு கண்டிகை |

ஆகிய ஊர்ப்பெயர்களில் பிற ஊர்ப்பெயர் அடைகளையே சிறப்பு கூறுகளில் காணமுடிகிறது. சிறப்புக்கூறுகளில் இடம் பெற்றுள்ள ஊர்ப்பெயர் அடைகளைப் பொதுவாக மூன்று பிரிவுகளில் பகுத்துக்காணலாம்.

1. இம்மாவட்டத்தில் உள்ள ஊர்ப்பெயர்களையே பெயர் அடையாகப் பெற்று அமைந்த ஊர்கள்

2. தமிழ் நாட்டில், பிற மாவட்டங்களில் உள்ள ஊர்ப் பெயர்களை அடையாகப் பெற்று அமைந்த ஊர்கள்

3. பிற மாநிலங்களில் உள்ள ஊர்ப்பெயர்களை அடை ாயகப்பெற்று அமைந்த ஊர்கள்

என்று பகுத்துக் காண்பது தெளிவாக அமையும். அப்படிநோக்கி னால் முதற்பிரிவைக் காட்டிலும் எஞ்சிய இரண்டு பிரிவுகளிலும் அடங்கும் ஊர்களே மிகுதியாகச் காணப்படுகின்றன பெரும் பாலான ஊர்கள் மூன்றாம் பிரிவில் அடங்குமாறே உள்ளன

செங்கல்வபுரம், இராமாபுரம், காஞ்சீபுரம் போன்ற சில ஊர்கள் இம்மாவட்ட ஊர்களாகும். காங்கேயம், கோவை, கூடல், அண்ணாமலை, வேலூர, செஞ்சி போன்ற சில ஊர்கள் பிற மாவட்டங்களில் காணப்படும் ஊர்களாகும, எஞ்சிய ஊர்களில் பெரும் பாலானவை பிற மாநிலங்களில் உள்ள ஊர்களேயாகும்.

குறிப்பிட்ட சில பொதுக்கூறுகளையுடைய ஊர்களில் பிற ஊர்ப்பெயர்கள் காணப்பட்டாலும் கண்டிகை, அக்ரஹாரம் ஆகிய இரண்டு பொதுக்கூறுகளையுடைய ஊர்களிலேயே மிகுதி யாகப் பிற ஊர்ப்பெயர்களைக் காணமுடிகிறது இவ்விரண்டு பொதுக்கூறுகளும் பிற பொதுக்கூறுகளிலிருந்தும் வேறுபட்டவை என்பது முன்னர் விளக்கப்பட்டது. கண்டிகை என்ற பொதுக்கூறு தெலுங்கு மொழி பேசப்படும் திருத்தணி வட்டத்திலேயே மிகுதி யாகக் காணப்படுவதோடு, தனியனிதப் பெயர்கள், சாதிப்பெயர் களை ஊர்ப்பெயர்களுடன் சேர்த்துச் சிறப்புக் கூறாகப்பெற்று அமைந்துள்ளது. இப்பொதுக்கூறின் முன் ஒட்டாக இடம் பெற் றுள்ள ஊர்ப்பெயர்களிலேயே பெரும்பாலும பிற மாநிலப்பெயர் களாக இடம் பெற்றுள்ளன இவ்வகையில இப்பொதுக்கூறு பிற பொதுக்கூறுகளிலிருந்து வேறு பட்டதாகக்காணப்படுகிறது.

அக்ரஹாரம் என்ற பொதுக்கூறு பெற்றுள்ள ஊர்கள் அந்தணர்கள் குடியிருப்பாக அமைந்தவையாகும். பெரும்பாலும் பிற மாநிலங்களிலிருந்தும, பிற மாவட்டங்களிலிருந்தும் இம் மாவட்டத்திற்கு வந்து அவர்கள் குடியேறியிருக்கக்கூடும். அதனால் எந்த ஊரிலிருந்து வந்தார்களோ அவ்வூர்களின் பெயர்கள் இம்மாவட்டத்தில் புதிதாக அமைந்த அக்ர ஹாரங்களுக்கு முன் ஒட்டாகிய சிறப்புக்கூறாக அமைந்துள்ளது. சில அக்ரஹாரங்கள் இம்மாவட்டத்தில் ஏற்கெனவே உள்ள ஊர் களுக்கு அருகில் பின்னர் தோற்றுவிக்கப்பட்டதால் பழைய ஊர்ப்பெயர்களைச் சிறப்புக்கூறுகளில் பெயர் அடைகளாகப் பெற்று அமைந்துள்ளன.

வேறுசில பொதுக்கூறுகளிலும் முன்ஒட்டாக ஊர்ப்பெயர்கள் இடம் பெற்றுள்ளனவெனினும் அவ்வாறு இடம் பெற்ற ஊர்கள்

மிகச்சிலவேயாகும். அப்பொதுக்கூறுகளில் பெயர் அடையாக இடம்பெற்றுள்ள ஊர்கள் தமிழகத்தின் பிற மாவட்டங்களில் உள்ள ஊர்களேயாகும் என்பது குறிப்பிடத்தக்கதாகும். பட்டடை என்ற பொதுக்கூறு மட்டும் சிறிது வேறுபட்டுக் காணப் படுகிறது.

பிற ஊர்ப்பெயர்களை அடையாகப் பெற்று அமைந்துள்ள ஊர்கள் யாவும் பிற்காலத்தில் தோன்றியவைகளாகவே இருத்தல் வேண்டும். ஏனெனில், முன்னர்த் தோன்றிய ஊர்ப்பெயர் களையே இவ்வூர்கள் பெயர் அடைகளாகப் பெற்றுள்ளன. அதனால் இவ்வூர்ப்பெயர்களில் முன் ஒட்டாகிய சிறப்புக்கூறு களாக இடம் பெற்றுள்ள ஊர்கள் தோன்றிப்பல்லாண்டுகளுக்குப் பின்னர் தான் இப்புது ஊர்கள் தோன்றியிருத்தல் வேண்டும். கண்டிகை, அக்ரஹாரம் என்ற இரண்டு பொதுக்கூறுகளையும் நோக்கினால் சாதிகளின் செல்வாக்கு ஓங்கியிருந்த சூழ்நிலையிலே யே இவ்வூர்கள் தோன்றியுள்ளன என்பது புலப்படும். சில ஊர்கள் இந்நிலைக்கு விதிவிலக்காகவும் அமையலாம்.

**வேறு சில பெயரடைகள் :**

இதுகாறும் பல்வேறு அடிப்படையில் பலவிதப் பெயரடை கள் ஊர்ப்பெயர்களில் சிறப்புக் கூறுகளாக எவ்வாறு இடம் பெறு கின்றன என்பது விரிவாக எடுத்துக்காட்டப்பட்டன. அப்பெயர டைகளில் காணப்பட்ட ஒற்றுமைக்கூறுபாடுகளின் அடிப்படையில் அவை வகைப்படுத்திக் காட்டப்பட்டன. அப்பாகுபாடுகளில் இடம் பெறாத வேறு சில பெயரடைகளும் இம்மாவட்ட ஊர்ப் பெயர்களில் இடம் பெற்றுள்ளன. வகைப்படுத்திக்காண முடியா தவாறு தனித்தனிப் பெயரடைகளாக அவை இருப்பினும் சிறப்புக்கூறுகளைப்பற்றிய ஆய்வில் அப்பெயரடைகளைப் பற்றி யும் காண்பது அவசியமாகிறது. எனவே, அப்பெயரடைகளில் இன்றியமையாதவை இங்கு எடுத்துக்காட்டப்படுகின்றன.

| | | |
|---|---|---|
| பரணி (விண்மீன்) | — | பரணிபுத்தூர் |
| பரன் | — | பரனூர் |
| போர் | — | போரூர் |
| வழு | — | வழுதூர் |
| ஆவல் | — | ஆவலூர் |
| தாம்பு | — | தாம்பூர் |

| | | |
|---|---|---|
| உத்திரம் | — | உத்திரமேரூர் |
| வலம் | — | வலத்தூர் |
| மண்டு | — | மாமண்டூர் |
| மடம் | — | மடயத்தூர் |
| ஒற்று | — | ஒற்றியூர் |
| புரை | — | புரையூர் |
| சாலை | — | சாலையூர் |
| சேலை | — | சேலையூர் |
| மையல் | — | மையலூர் |
| மடி | — | மடியூர் |
| கதவு | — | கதலூர் |
| கவசம் | — | கவசநல்லாத்தூர் |
| தை | — | தையூர் |
| கொழுந்து | — | கொழுந்தலூர் |
| வேதங்கி | — | வேதங்கிநல்லூர் |
| வெண்மனம் | — | வெண்மனம்புதூர் |
| புலவன் | — | புலவநல்லூர் |
| சிட்டர் | — | சிட்டரம்பாக்கம் |
| குடி | — | குடிபெரும்பாக்கம் |
| ஓணம் | — | ஓணம்பாக்கம் |
| பிரளயம் | — | பிரளயம்பாக்கம் |
| மடி | — | மடிப்பாக்கம் |
| மஞ்சம் | — | மஞ்சம்பாக்கம் |
| தீ | — | தீயம்பாக்கம் |
| ஆவணம் | — | ஆவணம்பாக்கம் |
| காலம் | — | காலவாக்கம் |
| முரசு | — | முரசவாக்கம் |
| பாண்டம் | — | பாண்டவாக்கம் |
| அண்டம் | — | அண்டவாக்கம் |
| தனு | — | தனுபுரம் |
| தைலம் | — | தைலாவரம் |
| ராயல் | — | ராயல்பட்டு |
| சயனம் | — | சயனவரம் |
| பிராயம் | — | பிராயம்பட்டு |
| கோயில் | — | கோயில்பட்டு |
| அடையாளம் | — | அடையாளஞ்சேரி |
| குண்டுமணி | — | குண்டுமணிச்சேரி |
| கூலம் | — | கூலங்கச்சேரி |
| மணம் | — | மணஞ்சேரி |
| பாடி | — | பாடிசேரி |

| | |
|---|---|
| உப்பு | உப்புக்குளம் |
| திருவீதி | திருவீதிபள்ளம் |
| மஞ்சம் | மஞ்சமேடு |
| தாலி | தாலிமங்கலம் |
| காரியம் | காரியமங்கலம |
| விண் | விண்ணமங்கலம் |
| அனந்தம் | அனந்தமங்கலம் |
| சத்தியம் | சத்தியமங்கலம் |
| சேமம் | சேமந்தாங்கல் |
| ஆட்டம் | ஆட்டந்தாங்கல் |
| புண்யம் | செட்டிபுண்யம் |
| உமி | உமிப்பேடு |
| வளம் | வளத்தோட்டம் |
| ஆட்சி | ஆட்சிவிளாகம் |
| சித்திரம் | சித்திரவாடி |
| உப்பு | உப்புவாயல் |
| சூலை | சூலைமேனி |
| முத்து | முத்தவேடு |
| கோயில் | கோயிலந்தாங்கல் |

மேற்கண்ட பெயர் அடைகளைப் பெற்ற ஊர்களேயன்றி வேறு சில ஊர்களும் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. அப்பெயர் அடைகளில் சில தெளிவானபொருளைப்புலப்படுத்தாமையால் அவைகள் ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்படவில்லை. ஒருவேளை அவ்வூர்ப் பெயர்களில் காணப்படும் பெயர் அடைகளின் மூல வடிவங்கள் காலப்போக்கில் மாற்றம் பெற்றிருத்தல் கூடும். சிலபெயரடைகள் புதிய செய்திகள் எதனையும் உணர்த்தாமல் வேறுபெயரடைகள் உணர்த்திய செய்திகளையே சிறிது மாறுபட்டுக்கூறுவதால் அவைகளும் இங்கு எடுத்துக் கொள்ளப்படவில்லை. மாவட்ட நிலை, மக்கள் வாழ்க்கை முதலியனவற்றை உணரத் துணை செய்யும் பெயர் அடைகள் மட்டுமே இங்கு எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

ஒரு சில பெயர் அடைகளைத் தவிர எஞ்சிய பெயர் அடைகள் அனைத்தும் தனித்தனிப்பெயர் அடைகளாகவே காணப்படுகின்றன. இம்மாவட்டத்தின் பல்வேறு நிலைகளையும் இப்பெயரடைகள் எடுத்துக்காட்டுகின்றன. மாவட்டத்தில் காணப்பட்ட பல்வேறு பொருள்கள், இயற்கை வளம், உற்பத்திப்பொருள், கோயில்கள், இங்குள்ள வீதிகள்,குளங்கள், ஆவணம், அறச்செயல் புரியும் இடங்கள் ஆகியவற்றை இங்கு எடுத்துக் காட்டப்பட்ட பெயரடைகள் நன்கு தெளிவு படுத்துகின்றன.

இம்மாவட்ட மக்களது பல திறப்பட்ட அறிவு நிலை, அவர்களது வலிமை, வெற்றி, ஆவல் முதலியனவற்றை உணர்த்துவதுடன் குறைபாடுகளையும் பெயர் அடைகள் சுட்டிக்காட்டுகின்றன. வழு, புரை, மடி என்ற அடைச்சொற்கள் யாவும் மக்கள் மனத்தின் குறைபாடுகளையே உணர்த்துகின்றன. அதே சமயம், தூய மனமாகிய வெண்மனத்தை அடைச்சொல்லாகப் பெற்றும் ஓர் ஊர் அமைந்துள்ளது. சத்தியம், புண்யம் போன்ற அடைச்சொற்கள் இம்மாவட்ட மக்களது உயர்ந்த உள்ளச் சிறப்பைப் புலப்படுத்தும்.

புலவர், சிட்டர் போன்ற பெயர் அடைகளிலும் ஊர்கள் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது. ஓணம் என்பது கேரள மாநிலத்தில் கொண்டாடப்படும் ஓர் விழா. அவ்விழாவை உணர்த்தும் விதத்திலும் ஓர் ஊர் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றது. பிரளயம், அண்டம், அனந்தம், விஸ், பரணி போன்ற பெயர் அடைகளைப் பெற்றும் ஊர்கள் காணப்படுவது இம்மாவட்ட மககளின் தத்துவ, சமய, வானியல் அறிவு நுட்பத்தைப் புலப்படுத்துகின்றன. மக்கள் நல்வாழ்வு வாழ்ந்த நிலையினை வளம், சேமம் எனற அடைச்சொற்கள் உணர்த்துகின்றன. தாலிகட்டும் பழக்கம் இந்நாட்டில் எப்போது தோன்றியது என்பதை எடுத்துக் காட்டும் விதத்தில் தாலிமங்கலம் என்ற ஊர் அமைந்துள்ளது. இவ்வாறு இம்மாவட்ட மக்களது பண்பாட்டு நிலையினையும், வாழ்வு முறைகளையும் இப்பெயரடைகள் தெளிவுபடுத்துகின்றன.

**நிறைவுரை:**

ஊர்ப்பெயர்களைப்பற்றிய ஆய்வில் பொதுக்கூறுகள் அடிப்படைச் செய்திகளைத் தருமென்றால. மக்களின் பல்வேறுவகைப் பட்ட வாழ்க்கை, நிலைகள், தொழில்கள் போனற தெளிவான விளக்கங்களைச் சிறப்புக்கூறுகளே எடுத்துக் காட்டுகின்றன. எனவே, பொதுக்கூறுகளால் மாவட்டங்களுக்கிடையில பெரிதும ஒப்புமை காணப்பட்டாலும், சிறபபுக்கூறுகளால வேற்றுமையே பெரிதும் காணப்படும்.

செங்கை மாவட்ட ஊர்ப்பெயர்களில் காணப்படும் சிறப்புக் கூறுகள் இம்மாவட்டத்தின் தனித்தன்மைகளையும் சிறப்பியல்புகளையும் நமக்கு தெளிவு படுத்துகின்றன. காலத்தின் தேவைக் கேற்பப் புதுப்புது சிறப்புக் கூறுகள் தோன்றிக் கொணடே இருக்கும்.

# பின்னிணைப்பு-1

## செங்கை மாவட்ட ஊர்ப்பெயர்கள்

(பொதுக்கூறுகள் அடிப்படையில் வகைப்படுத்தப்பட்டவை)

### மாவட்டத்தில் உள்ள வட்டங்களின் குறுக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| செங் | — | செங்கற்பட்டு |
| மது | — | மதுராந்தகம் |
| உத்திர | — | உத்திரமேரூர் |
| காஞ்சி | — | காஞ்சிபுரம் |
| பொன் | — | பொன்னேரி |
| ஸ்ரீபெரும் | — | ஸ்ரீபெரும்புதூர் |
| சைதை | — | சைதாப்பேட்டை |
| ஊத்து | — | ஊத்துக்கோட்டை |
| கும்மி | — | கும்மிடிப்பூண்டி |
| பள்ளி | — | பள்ளிப்பட்டு |
| திருவள் | — | திருவள்ளூர் |
| திருத் | — | திருத்தணி |

# ஊர்

அஞ்சூர் (செங்)
அஞ்சூர் (காஞ்)
அத்தியூர்
அம்பத்தூர்
அம்மனூர் (மது)
அம்மனூர் ,,
அம்மையப்பநல்லூர்
அல்லாலூர்
அல்லூர்
அன்னாத்தூர்
அதங்கிகாவானூர்
அதிகத்தூர்
அதிகமநல்லூர்
அமிதாநல்லூர்
அமுதூர்
அயநல்லூர்
அரசூர்
அரியலூர்
அரியானூர்
அரும்புலியூர்
அழகூர்
அழிசூர்
அளவூர்
ஆட்டுப்புத்தூர்
ஆத்தூர் (செங்)
ஆத்தூர் (மது)
ஆத்தூர் (பொன்)
ஆப்பூர்
ஆகூர்
ஆசானபுதூர்
ஆசூர்
ஆதனூர்
ஆமூர் (செங்)
ஆமூர் (பொன்)
ஆயகுளத்தூர்
ஆயத்தூர்
ஆயலூர்
ஆரியத்தூர்
ஆலத்தூர்
ஆலந்தூர் (சைதை)
ஆலந்தூர் ,,
ஆவலூர்
ஆலூர்
ஆனூர்
இந்தலூர்
இல்லத்தூர்
இல்லலூர்
இடையாத்தூர்
இடையூர் (செங்)
இடையூர் ,,
இரும்புலியூர்
இருசாமநல்லூர்

இலுப்பூர் (செங்)
இலுப்பூர் (சைதை)
இலுப்பூர் (திருவள்)
இளையனார் வேலூர்
ஈகூர்
உத்தமநல்லூர்
உத்திரமேரூர்
உள்ளாவூர்
உரத்தூர்
எச்சூர்
எண்டத்தூர்
எண்ணூர்
எல்லாட்டூர்
எடையம்பத்தூர்
எருமையூர்
எரவநல்லூர்
எரையூர்
எலிமியான்கோட்டூர்
எழிச்சலூர்
எறையூர்
ஏட்டாடூர்
ஏகாட்டூர்
ஏடூர்
ஏரணவூர்
ஏனாத்தூர்
ஏனாவூர்
ஒத்தியூர்
ஓரத்தூர் (மது)
ஓரத்தூர் (சைதை)
ஓரத்தூர் (திருவள்)
ஒழலூர்

ஓங்கூர்
ஓழையூர்
ஓழையூர்
கச்சூர்
கண்ணூர் (பொன்)
கண்ணூர் (திருவள்)
கப்பான் கொட்டூர்
கன்னூர்
கசவணளத்தூர்
கடம்பத்தூர்
கடம்பூர் (செங்)
கடம்பூர் (மது)
கடலூர்
கடுகநல்லூர்
கதவூர்
கரடிப்புத்தூர்
கருப்பூர்
கரும்பூர்
கவசநல்லாத்தூர்
களத்தூர் (மது)
களந்தூர் (ஊத்)
களிப்பத்தூர்
களியனூர்
களியானூர்
காக்கலூர்
காக்கனூர்
காங்கேயநல்லூர்
காட்டலூர்
காட்டாங்கொளத்தூர்
காட்டானூர் (திருவள்)
காட்டாலூர் (பள்ளி)

காட்டுப்புத்தூர்
காட்டு கூடலூர்
காட்டூர் (செங்)
காட்டூர் (பொன்)
காத்தலூர்
காந்தூர்
காடகநல்லூர்
காயநல்லூர்
காலூர்
காவனூர் (ஸ்ரீபெரும்)
காவனூர் ,,
காவனூர் (திருவள்)
காவான்கொளத்தூர்
காவாலூர்
கானத்தூர்
கிளக்கோட்டூர்
கீரநல்லூர்
கீவலூர்
கீழ்ப்புத்தூர்
கீழ்நல்லாத்தூர்
கீழ்மருவத்தூர் (மது)
கீழ்மருவத்தூர் ,,
கீழகாமனூர்
கிழனூர்
கீழாமூர்
கீழூர்
குண்ணத்தூர்
குண்டூர்
குத்தனூர்
கும்பனூர்
குன்னத்தூர்
குன்னத்தூர் (செங்)
குன்னத்தூர் (திருவள்)
குளத்தூர் (மது)
குளத்தூர் ,,
குளத்தூர் ,,
கூடலூர்
கூடலூர் (செங்)
கூடலூர் (மது)
கூவத்தூர்
கூனூர்
கேளந்தலூர்
கைவந்தூர்
கொட்டையூர்
கொப்பூர்
கொள்ளத்தநல்லூர்
கொள்ளனூர்
கொன்னூர்
கொசப்பூர்
கொடமநல்லூர்
கொடுங்கையூர்
கொடூர் (மது)
கொடூர் (பொன்)
கொரட்டூர்
கொளத்தூர் (செங்)
கொளத்தூர் ,,
கொளத்தூர் (காஞ்சி)
கொளத்தூர் (மது)
கொளத்தூர் (பொன்)
கொளத்தூர் (சைதை)
கொளத்தூர் ,,
கொளத்தூர் (ஸ்ரீபெரும்)
கொளத்தூர் (பள்ளி)
கோட்டூர்
கோபரசநல்தூர்
கோலூர்

கோனூர்
சந்தவேலூர்
சம்பாதிநல்லூர்
சலையனூர்
சாணாபுத்தூர்
சாலையூர்
சித்தன்னாகாவூர்
சித்தமனூர்
சித்தரசூர்
சித்தரத்தூர்
சித்தாதூர் (மது)
சித்தாதூர் (காஞ்சி)
சித்தாதூர் (மது)
சித்தாமூர் ,,
சித்தாமூர் ,,
சித்தாமூர் (உத்தி)
சித்திமன்னூர்
சித்தூர்
சின்னபுரியூர்
சின்னவெப்பத்தூர்
சிருதாமூர்
சிருவனூர்
சிறுகளத்தூர் (மது)
சிறுகளத்தூர் (ஸ்ரீபெரும்)
சிறுகளத்தூர் ,,
சிறுகளத்தூர் (திருவள்)
சிறுகளத்தூர் (ஊத்து)
சிறுகாவூர்
சிறுதாமூர்
சிறுதாவூர்
சிறுநல்லூர்
சிறுநாகலூர்
சிறுநின்றவூர்
சிறுபினாயூர்
சிறுமாத்தூர்
சிறுமைலூர்
சிறுமைலூர்
சிறுவஞ்சூர்
சிறுவள்ளூர்
சிறுவேனூர்
செங்காட்டூர்
செய்யூர்
செல்லாத்தூர்
சின்னகடம்பூர்
சின்ன கள காட்டூர்
செருக்கனூர்
சேம்பூர்
சேலையூர்
சேவூர்
சொக்க நல்லூர்
சோளிங்க நல்லூர்
சோனல்லூர்
தச்சூர்
தத்தலூர்
தத்தனூர்
தாசிரி குன்னத்தூர்
தாடஅரசூர்
தராவூர்
தாழம்பூர்
திம்மூர்
தின்னலூர்
திருக்கச்சதூர்
திருப்போரூர்
திருபந்தியூர்
திருபாசூர்
திருவள்ளூர்
திருவான்மியூர்
திருவாதவூர்

திருவெற்றியூர்
திரூர்
துரநல்லூர்
துறையூர்
தெக்கனூர்
தேவானூர்
தேவானூர்
தேனூர்
தொண்டமானலூர்
தொழுதலூர்
தொரூர் (திருவள்)
தொரூர் ,,
நங்க நல்லூர்
நத்தா நல்லூர்
நல்லன்காவூர்
நல்லாத்தூர் (செங்)
நல்லாத்தூர் (உத்திர)
நல்லாரூர்
நல்லூர் (செங்)
நல்லூர் ,,
நல்லூர் (காஞ்சி)
நல்லூர் (மது)
நல்லூர் ,,
நல்லூர் (பொன்)
நல்லூர் (பள்ளி)
நல்லூர் (ஸ்ரீபெரும்)
நல்லூர் (திருத்)
நரியூர்
நாங்கடத்தூர்
நாவலூர்
நாவலூர் (செங்)
நாவலூர் ,,
நாவலூர் (ஸ்ரீபெரும்)
நாவலூர்
நீர்வனூர்
நெடிகல்லூர்
நெரும்பூர்
நேசனூர்
நேமனூர்
நொளப்பூர்
பண்டிகாவனூர் (திருவள்)
பண்டிகாவனூர் (பள்ளி)
பகம்பூர்
படூர் (செங்)
படூர் ஸ்ரீபெரும்)
பரந்தூர்
பரசநல்லூர்
பரணிபுத்தூர்
பரனூர்
புவுஞ்சூர் (மது)
பவுஞ்சூர் (ஸ்ரீபெரும்)
பழமத்தூர்
பழயலூர் (செங்)
பழயனூர் (மது)
பழவநல்லூர்
பழவூர்
பனங்கோட்டூர்
பனையூர் (மது)
பனையூர் (ஸ்ரீபெரும்)
பாக்கூர்
பாண்டூர்
பாத்தூர்
பாப்பநல்லூர்
பாடியநல்லூர்
பாலநல்லூர்
பாலூர் (செங்)

பாலூர் (மது)
பாவையூர்
பிரவல்லூர்
பிளாப்பூர்
புங்கத்தூர்
புட்ளூர்
புத்தூர்
புள்ளலூர்
புதுவள்ளூர்
புதூர் (பொன்)
புதூர் ,,
புதூர் (ஊத்து)
புரையூர்
புலவநல்லூர்
புலியூர் (செங்)
புலியூர் (காஞ்சி)
புலியூர் (திருவள்)
புலியூர் ,,
பூதனூர்
பூதூர் (செங்)
பூதூர் (மது)
பூவனூர்
பெண்ணாலூர்
பெத்தகடம்பூர்
பெத்தகளக்காட்டூர்
பெரண்டூர்
பெரம்பநல்லூர்
பெரியகடம்பூர்
பெரியகரும்பூர் (காஞ்சி)
பெரியகரும்பூர் (பொன்)
பெரியபுலியூர்
பெரியவெம்பத்தூர்
பெருங்களத்தூர்
பெருங்காலூர்
பெருமநல்லூர்
பேரத்தூர்
பேரமனல்தூர்
பேரனகாபூர்
பேரனூர்
பேனூர்
பையனூர்
பொய்கையூர்
பொன்விளைந்தகளத்தூர்
பொன்னனூர்
பொடலூர்
பொடலூர்
பொழிச்சலூர்
போத்தூர்
போத்தூர்
போந்திகாவனூர்
போந்தூர் (மது)
போந்தூர் (சைதை)
போரூர் (மது)
போரூர் (சைதை)
மண்ணூர்
மத்தூர்
மன்னூர்
மசூர்
மடயத்தூர்
மடியூர்
மணலூர்
மலைவையாலூர்
மாமண்டூர்
மாத்தூர் (செங்)
மாத்தூர் (மது)
மாத்தூர் (சைதை)

மாவூர்
மாறிபுத்தூர்
முள்ளிகுளத்தூர்
முகப்பூர்
முதுகூர்
முடிச்சூர்
முடையூர்
மீஞ்சூர்
மெய்யூர் (மது)
மெய்யூர் (ஸ்ரீபெரும்)
மெய்யூர் (திருவள்)
மெய்யூர்
மெதூர்
மெரட்டூர்
மெனல்லூர்
மேப்பூர்
மேல்நல்லாத்தூர்
மேல்புத்தூர்
மேல்மருவத்தூர்
மேலக்கரம்பனூர்
மேலக்காட்டூர்
மேலந்தூர்
மேலமெய்யூர்
மேலானூர்
மேலூார்
மேனல்லூர்
மைலாப்பூர்
மொகையூர்
மொனச்சூர்
மோசூர்
மோவூர்
லட்டூர்
வங்கனூர்
வண்டலூர்
வல்லூர்
வன்னியூர்
வடக்கநல்லூர்
வடக்குப்புத்தூர்
வடக்குவாயலூர்
வடுகிநல்லூர்
வதட்டூர்
வதியூர்
வயலாநல்லூர்
வயலூர்
வலத்தூர்
வழுவதூர்
வளையத்தூர்
வாடாவூர்
வாயர்க்காவூர்
வாயலூர் (காஞ்சி)
வாயலூர் (மது)
வாயலூர் (பொன்)
வாயலூர் (ஊத்து)
விச்சூர்
வில்வராயநல்லூர்
விடையூர்
விரலூர்
விராணத்தூர்
விளங்கனூர்
விளம்பூர்
விஜயநல்லூர்
விரகநல்லூர்
வெங்கத்தூர்
வெங்கூர்
வெண்மனப்புதூர்
வெள்ளப்புத்தூர்
வெள்ளனூர்
வெள்ளாட்டூர்
வெற்றியூர்
வேட்டூர்
வேம்பனூர்
வேதங்கிநல்லூர்
வேலூர்
வேளியூர்
வையாவூர் (காஞ்சி)
வையாவூர் (செங்)

## பாக்கம்

அக்கரப்பாக்கம்
அங்கப்பாக்கம்
அச்சரப்பாக்கம் (மது)
அச்சரப்பாக்கம் (செங்)
அட்சம்பாக்கம்
அம்மணம்பாக்கம் (செங்)
அம்மணம்பாக்கம் ,,
அம்மணம்பாக்கம் ,,
அம்மணம்பாக்கம் (மது)
அம்மணம்பாக்கம் ஸ்ரீபெரும்
அம்மணம்பாக்கம் (திருவள்)
அம்மம்பாக்கம்
அமையப்பாக்கம்
அயப்பாக்கம்
அயினம்பாக்கம்
அரக்கம்பாக்கம்
அரியப்பாக்கம்
அரும்பாக்கம் (திருவள்)
அரும்பாக்கம் (திருத்)
அரும்பாக்கம் (கும்மி)
அரையப்பாக்கம் (மது)
அரையம்பாக்கம் ,,
ஆட்டுப்பாக்கம்
ஆத்துப்பாக்கம்
ஆம்பாக்கம்
ஆர்ப்பாக்கம்
ஆதம்பாக்கம் (பொன்)
ஆதம்பாக்கம் (சைதை)
ஆதவப்பாக்கம்
ஆயப்பாக்கம்
ஆரம்பாக்கம் (செங்)
ஆரம்பாக்கம் (பொன்)
ஆரம்பாக்கம் (ஸ்ரீபெரும்)
ஆரியப்பெரும்பாக்கம்
ஆரியம்பாக்கம்
ஆலப்பாக்கம் (காஞ்சி)
ஆலப்பாக்கம் (திருவள்)
ஆலப்பாக்கம் (கும்மி)
ஆவணம்பாக்கம்
ஆனம்பாக்கம்
இலுப்பாக்கம்
ஈஞ்சம்பாக்கம் (காஞ்சி)
ஈஞ்சம்பாக்கம் (சைதை)
உத்திரப்பாக்கம்
ஊதைப்பாக்கம்
ஊரப்பாக்கம்
எடையார்பாக்கம்
ஏனம்பாக்கம்
ஏனாதிமேல்பாக்கம்
ஒக்கியம்பாக்கம்
ஒக்கியம்தூரம்பாக்கம்
ஒட்டியம்பாக்கம்
ஓணம்பாக்கம்
கல்பாக்கம் (செங்)
கல்பாக்கம் (பொன்)
கடப்பாக்கம் (மது)
கடப்பாக்கம் (பொன்)
கடப்பாக்கம் (சைதை)
கயப்பாக்கம்
கரலப்பாக்கம்
கர்லப்பாக்கம்
கரளாம்பாக்கம்
கரும்பாக்கம் (செங்)
கருப்பாக்கம் (காஞ்சி)
கரும்பாக்கம் (மது)
கருமாறப்பாக்கம்
கழனிப்பாக்கம் (செங்)
கழனிப்பாக்கம் (மது)

கனகம்பாக்கம் (பொன்)
கனகம்பாக்கம் (கும்மி)
காட்டுப்பாக்கம் (ஸ்ரீபெரும்
காட்டுப்பாக்கம்
காட்ரம்பாக்கம்
காணியம்பாக்கம்
காரப்பாக்கம்
காரப்பாக்கம்
காரப்பாக்கம் (பள்ளி)
காரப்பாக்கம் (சைதை)
காரம்பாக்கம்
காவணிப்பாக்கம்
கான்றம்பாக்கம்
கிளாப்பாக்கம்
கிளாம்பாக்கம் (திருவள்)
கிளாம்பாக்கம் (கும்மி)
கீரப்பாக்கம் (செங்)
கீரப்பாக்கம் ,,
கீரப்பாக்கம் (பொன்)
குடிபெரும்பாக்கம்
குத்தம்பாக்கம்
குமரசிறுவப்பாக்கம்
குமாரபாக்கம்
கூடப்பாக்கம் (மது)
கூடப்பாக்கம் (கும்மி)
கூத்திரம்பாக்கம்
கெருகம்பாக்கம்
கேளம்பாக்கம்
கேளாம்பாக்கம்
கொள்ளபாக்கம்
கொளப்பாக்கம்
கோட்டயப்பாக்கம்

கோடம்பாக்கம்
கோயம்பாக்கம்
கோயிலம்பாக்கம்
கோவைப்பாக்கம்
சரவணம்பாக்கம்
சாஸ்டரம்க்கம்பா
சிட்டரம்பாக்கம் (செங்)
சிட்டரம்பாக்கம் (உத்தி)
சிட்டலப்பாக்கம்
சிட்டியம்பாககம்
சித்தம்பாக்கம்
சித்தரியம்பாக்கம்
சித்தளப்பாக்கம்
சித்தாளப்பாக்கம்
சித்திரப்பாக்கம்
சிறுகாவேரிப்பாக்கம்
சிறுவிளப்பாக்கம்
சிறுவிளம்பாக்கம்
சிலாம்பாக்கம்
சின்னகாட்டுப்பாக்கம்
சின்னசோழியம்பாக்கம்
சின்னமதுரப்பாக்கம்
செம்பரம்பாக்கம் (ஸ்ரீ)
செம்பரம்பாக்கம் (காஞ்சி)
செம்பாக்கம்
செம்பாக்கம் (சைதை)
செய்யம்பாக்கம்
சென்ரம்பாக்கம்
செவிட்டுப்புனப்பாக்கம்
செதுல்பாக்கம்
சேரப்பாக்கம்
சோத்துப்பாக்கம்

தலையில்லாபெரும்பாக்கம்
தாமரப்பாக்கம்
தியம்பாக்கம்
தும்பாக்கம்
தென்பாக்கம்
தேவரியப்பாக்கம்
தேனம்பாக்கம் (காஞ்சி)
தேளம்பாக்கம் (சைதை)
தைப்பாக்கம்
நந்தம்பாக்கம் (சைதை)
நந்தம்பாக்கம் (கும்மி)
நந்தியம்பாக்கம்
நம்பாக்கம்
நல்லம்பாக்கம்
நயப்பாக்கம்
நரப்பாக்கம்
நரியம்பாக்கம் (காஞ்சி)
நரியம்பாக்கம் (சைதை)
நாரப்பாக்கம்
நுங்கம்பாக்கம்
நெசப்பாக்கம்
நெட்ரம்பாக்கம்
நெடுவரம்பாக்கம்
நேத்துப்பாக்கம்
பச்சரம்பாக்கம்
பள்ளம்பாக்கம் (மது)
பள்ளம்பாக்கம் (பொன்)
பள்ளம்பாக்கம் (ஊத்து)
பணப்பாக்கம் (பொன்)
பணப்பாக்கம் (ஸ்ரீபெரும்)
பணப்பாக்கம் (திருவள்)
பனங்காட்டுபாக்கம்
பனப்பாக்கம்
பாப்பரம்பாக்கம்
பாயசம்பாக்கம்
பானம்பாக்கம்
பிள்ளைப்பாக்கம்
பிரளயம்பாக்கம்
புல்லம்பாக்கம்
புள்ளப்பாக்கம் (மது)
புள்ளப்பாக்கம் (பொன்)
புள்ளப்பாக்கம் (உத்திர)
புள்ளரம்பாக்கம்
புதுப்பாக்கம் (செங்)
புதுப்பாக்கம் ,,
புதுப்பாக்கம் (பொன்)
புலிப்பாக்கம் (செங்)
புலிப்பாக்கம் (காஞ்சி)
புலியம்பாக்கம்
பூரியம்பாக்கம்
பெரியகாட்டுபாக்கம்
பெரியசோழியம்பாக்கம்
பெரியமதுரம்பாக்கம்
பெரும்பாக்கம் (காஞ்சி)
பெரும்பாக்கம் (மது)
பெரும்பாக்கம் ,,
பெரும்பாக்கம் (சைதை)
பொலம்பாக்கம் (மது)
பொலம்பாக்கம் (பொன்)
மஞ்சம்பாக்கம்
மணப்பாக்கம்
மடிப்பாக்கம்
மடையம்பாக்கம்
மதுரப்பாக்கம்
மலையம்பாக்கம்
மனப்பாக்கம்
மாம்பாக்கம் (ஸ்ரீபெரும்)
மாம்பாக்கம் (செங்)

மாம்பாக்கம்
மாடப்பாக்கம்
மாடம்பாக்கம்
மாதர்பாக்கம்
முக்கரம்பாக்கம்
முள்ளிப்பாக்கம்
முரம்பாக்கம்
முருக்கம்பாக்கம்
மீனம்பாக்காம்
மேல்பாக்கம் (சைதை)
மேல்பாக்கம் (ஸ்ரீபெரும்)
மேல்பாக்கம் (கும்மி)
மேல்மணப்பாக்கம்
மேலேரிப்பாக்கம்
வட்டம்பாக்கம்
வல்லப்பாக்கம்
வள்ளுவப்பாக்கம்
வடபெரும்பாக்கம்
வடமணிப்பாக்கம்
வடமேல்பாக்கம்
விஞ்சியம்பாக்கம்
வில்லியம்பாக்கம்
விரால்பாக்கம்
விருகம்பாக்கம்
விளாங்காடுப்பாக்கம்
விளாப்பக்கம்
விளிஞ்சம்பாக்கம்
வெங்கம்பாக்கம் (சைதை)
வெங்கப்பாக்கம் (ஊத்து)
வெண்பாக்கம்
வெள்ளம்பாக்கம்
வெண்பாக்கம்
வேம்பாக்கம்
வேன்பாக்கம்
வேலப்பாக்கம்

## வாக்கம்

அச்சரவாக்கம்
அண்டவாக்கம்
அத்திவாக்கம் (காஞ்சி)
அத்திவாக்கம் (மது)
அத்திவாக்கம் (சைதை)
அத்திவாக்கம் (திருவள்)
அன்னதானவாக்கம்
அதிவிவாக்கம்
அரியவாக்கம்
அவுரிவாக்கம்
அழிஞ்சிவாக்கம்
அளிஞ்சிவாக்கம் (திருவள்)
அளிஞ்சிவாக்கம் ,,
ஆரியவாக்கம்
ஏரிவாக்கம் (காஞ்சி)
ஏரிவாக்கம் (மது)
ஏரிவாக்கம் (ஸ்ரீபெரும்)
ஒட்டிவாக்கம்
ஒத்திவாக்கம்
கண்டிவாக்கம்
கப்பிவாக்கம்
கரிகலவாக்கம்

கவுவொக்கம்
காக்கவாக்கம்
காஞ்சிவாக்கம்
காட்டவாக்கம் (காஞ்சி)
காட்டவாக்கம் ,,
காலவாக்கம்
கீழ்அத்திவாக்கம்
கீழ்வொட்டி
குண்ணவாக்கம் (காஞ்சி)
குண்ணவாக்கம் ,,
குன்னவாக்கம் (செங்)
குன்னவாக்கம் ,,
குன்னவாக்கம் (மது)
கூத்தவாக்கம் (செங்)
கூத்தவாக்கம் (ஸ்ரீபெரும்)
கொட்டவாக்கம்
கொட்டிவாக்கம் (சைதை)
கொட்டிவாக்கம் (மது)
கொண்டிவாக்கம்
கோழிவாக்கம்
சடச்சிவாக்கம்
சிங்காடிவாக்கம்
சின்னிவாக்கம்
சென்டிவாக்கம்
சென்னிவாக்கம்
தொழுதவாக்கம்
நெய்யாடிவாக்கம்
பட்டரவாக்கம் (செங்)
பட்டரவாக்கம் (சைதை)
பன்னிவாக்கம்
பருத்திவாக்கம்
பாண்டவாக்கம்
பாலவாக்கம்
பிஞ்சிவாக்கம்
புழுதிவாக்கம் (மது)
புழுதிவாக்கம் (பொன்)
பூசிவாக்கம்
பெருங்குடிவாக்கம்
பேரீட்டிவாக்கம்
பொந்தவாக்கம்
பொருத்தவாக்கம் (செங்)
பொருந்தவாக்கம் ,,
பொருந்தவாக்கம் (சைதை)
போந்தவாக்கம்
போளிவாக்கம்
மன்னிவாக்கம்
மாளிவாக்கம்
முகலிவாக்கம்
முரசரவாக்கம்
மூட்டவாக்கம்
மேல்ஒட்டடிவாக்கம்
மேடவாக்கம்
மோசிவாக்கம்
மௌனவாக்கம்
வட்சிவாக்கம்
வன்னிவாக்கம்
வளசரவாக்கம்
வில்லிவாக்கம்
விஷ்ணுவாக்கம்
வேண்டிவாக்கம்
வேடவாக்கம்

## புரம்

அக்கமாபுரம்
அட்சன்புரம்
அஸ்னாபுரம்
அஸ்வரேவந்தபுரம்
அமிர்தாபுரம்
அலுமேலுமங்காபுரம்
ஆஞ்சநேயபுரம்
ஆஞ்சநேயபுரம்
ஆப்ரஹாம்புரம்
ஆதிவராஹாபுரம்
ஆனந்தவல்லிபுரம்
இப்ரஹாம்புரம்
இரங்காபுரம்
இரகுநாதபுரம்
இராமச்சந்திராபுரம் (திருத்)
இராமச்சந்திராபுரம் ,,
இராமச்சந்திராபுரம் ,,
இராமலிங்காபுரம் (திருத்)
இராமலிங்காபுரம் ,,
இராமாபுரம் ,,
இராமாபுரம் ,,
இராஜகலஹாபுரம்
இராஜபத்மாபுரம்
இராஜரத்தினபுரம்
கந்தபுரம்
கம்பராசபுரம்
கல்யாணபுரம்
கன்னிகாபுரம்
கன்னிகாம்பாபுரம்
கவுணிபுரம் (திருத்)
கவுணிபுரம் ,,
கனகவல்லிபுரம் (பொன்)
கனகவல்லிபுரம்(திருவள்)
கனகபுரம்
சஸ்பாபுரம்
காஞ்சீபுரம்
கார்த்திகேயபுரம்
காசிநாதபுரம்
காவேரிராஜபுரம்
காவேரிராஜபுரம்
கிருஷ்ணாபுரம் (திருவள்)
கிருஷ்ணாபுரம் (பொன்)
குமாரபொம்மராஜபுரம்
குருபுரம்
கூர்மபுரம்
கேவலராஜபுரம்
கொண்டாபுரம் (திருத்)
கொண்டாபுரம் ,,
கொண்டாபுரம் ,,
கோதண்டராமபுரம் (திருத்)
கோதண்டராமபுரம் (பள்ளி)
கோபாலபுரம்
கோபாலகிருஷ்ணபுரம்
கோவத்சபுரம்
சத்குருசயபுரம்
சந்தானகோபாலபுரம்
சந்தான வேணு கோபாலபுரம்
சந்திரவிலாசபுரம்
சன்னகாபுரம்
சகஸ்ரபத்மாபுரம்
சவுண்டாபுரம்

சிக்சராயபுரம்
சிங்கராஜபுரம்
சித்தாந்திபுரம்
சின்னராமபுரம்
சிவபுரம் (பொன்)
சிவபுரம் (ஸ்ரீபெரும்)
சித்தாபுரம்
சீதாபுரம் (காஞ்சி)
சீதாபுரம் (மது)
சீதாராமபுரம்
சீமாபுரம்
சுபிரமணியபுரம்
சு. வீரசேவேரிபுரம்
சுரேயபொம்மராஜபுரம்
செங்கல்வபுரம்
சௌனகாபுரம்
தரணிவராஹபுரம்
தனுஷ்யபுரம்
தாயமாம்வாபுரம்
திம்மாபுரம்
திம்மபூபாலபுரம்
திருமால்ராஜபுரம்
திருமலராஜபுரம்
திருவெங்கலநாதபுரம்
துவாரகாபுரம்
தேசேனாபுரம்
தேவகிபுரம்
தேவனாம்பாபுரம்
தௌளசாபுரம்
நரசிங்கபுரம் (திருவள்)
நரசிங்கபுரம் (ஸ்ரீபெரும்)
நரசிங்காபுரம் (பொன்)
நாஞ்சிபுரம்
நாராயணபுரம் (திருத்)
நாராயணபுரம் ,,
பஞ்சகண்பிணிநாநபுரம்
பட்டாபிராமாபுரம்
பத்மாபுரம் (திருத்)
பத்மாபுரம் ,,
பர்வதராஜ்புரம்
பரசாபுரம்
பரபயங்கரபுரம்
பாணாபுரம் (திருத்)
பாணாபுரம் ,,
பாலகிருஷ்ணாபுரம (திருத்)
பாலகிருஷ்ணாபுரம் ,,
பாலாபுரம்
பிரதாப உத்தண்ட மகா ராசபுரம்
புண்டீகபுரம்
பெத்தராமாபுரம்
பொம்மராஜபுரம்
மச்சவிலாசபுரம் (திருத்)
மச்சவிலாசபுரம்
மகான்காளிபுரம்
மகாராஜபுரம்
மடபுரம்
மதனந்தாபுரம்
மதுராபுரம்
மருதவல்லிபுரம்
மஹாபலிபுரம்
மாகமாம்பாபுரம்
மிஸ்ரகண்டாபுரம்
முத்துகொண்டாபுரம்
மேதினிபுரம்
மோகிபுரம்
மோனோபுரம்
ரங்காபுரம்
ராமபுரம்

ராமானுஜபுரம்
லட்சுமிநாராயணபுரம்
லஷ்மிபுரம் (ஊத்து)
லஷ்மிபுரம் (திருத்)
லஷ்மிநரசிம்மபுரம்
லஷ்மிவிலாசபுரம்
வல்லிபுரம்
வள்ளியம்மாபுரம்
வசுவபுரம்
வரதராஜபுரம்
வரதராஜபுரம்
வளரபுரம்
விட்டிலாபுரம்
வியாசபுரம்
வினாயகாபுரம்
வீரகாவேரிராஜபுரம்
வீரராகவபுரம் (ஸ்ரீபெரும்)
வீரராகவபுரம் (திருவள்)
வீரராகவபுரம் (திருத்)
வீராபுரம் (செங்)
வீராபுரம் ,,
வெங்கடபெருமாள்ராஜ புரம்

வெங்கடாபுரம் (செங்)
வெங்கடாபுரம் (ஸ்ரீபெரும்)
வெங்கடாபுரம் (திருத்)
வெங்கடாபுரம் ,,
வெங்கடாபுரம் ,,
வேணுகோபலபுரம்
வேணுகோபாலகிருஷ்ண புரம்
வேதநாராயணபுரம்
வேலகாபுரம்
வேலாயுதபுரம்
ஹரிச்சந்திராபுரம்
ஹனுமந்தபுரம்
ஹஸ்னாபுரம்
ஜப்திசுரோத்திலயம் ராமாபுரம்
ஜானகிபுரம் (செங்)
ஜானகிபுரம் (மது)
ஜெகன்னாதபுரம்
ஸ்ரீகாளிகபுரம்
ஸ்ரீகிருஷ்ணாபுரம்
ஸ்ரீனிவாசபுரம் (திருத்)
ஸ்ரீனிவாசபுரம் (பள்ளி)
ஸ்ரீனிவாசபுரம். ( ,, )

## வரம்

அப்பாவரம்
அப்ளாவரம்
இஸ்ஸாபல்லாவரம்
சயனாவரம்
சானூர்மல்லவரம்
செம்பிலிவரம் (மது)

செம்புலிவரம் (பொன்)
சென்றாவரம்
சென்னாவரம் (பொன்)
சென்னாவரம் (திருவள்)
சோழவரம்
திருநாகேஸ்வரம்

